# அக இலக்கியத்தில் (சங்க இலக்கியம்) அச்சம் – ஓர் ஆய்வு

மதுரை காமராசர் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காக
அளிக்கப்பெறும் ஆய்வேடு

*ஆய்வாளர்*

**அ. அமல்ராஜன்,** எம்.ஏ., எம்ஃ.பில்.,
(பதிவு எண்: P9053)

*மேற்பார்வையாளர்*

முனைவர் **சு. செயராம்,** எம்.ஏ., எம்ஃ.பில்., பிஎச்.டி.,
இணைப்பேராசிரியர் & மேனாள் தமிழ்த்துறைத் தலைவர்,
விருதுநகர் இந்து நாடார் செந்திக்குமார நாடார் கல்லூரி,
விருதுநகர்.




**தமிழியற்புலம்**
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை – 625 021

நவம்பர் – 2020

முனைவர் **சு. செயராம்,** எம்.ஏ., எம்ஃ.பில்., பிஎச்.டி.,
இணைப்பேராசிரியர் & மேனாள் தமிழ்த்துறைத் தலைவர்,
விருதுநகர் இந்து நாடார் செந்திக்குமார நாடார் கல்லூரி,
விருதுநகர்.

## மேற்பார்வையாளர் சான்றிதழ்

**"அக இலக்கியத்தில் (சங்க இலக்கியம்) அச்சம் – ஓர் ஆய்வு"** என்னும் தலைப்பில் மதுரை காமராசர் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்கான இவ்ஆய்வு, என் மேற்பார்வையில் **திரு. அ. அமல்ராஜன்** அவர்கள் தம் சொந்த முயற்சியில் தன்னியலாகச் செய்யப்பட்டது என்றும், இவ்வாய்வின் மீது ஆய்வாளருக்கு வேறு எந்தப் பட்டமும் அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

(முனைவர் **சு. செயராம்)**
மேற்பார்வையாளர்

இடம் : விருதுநகர்
நாள் :

**அ. அமல்ராஜன்**
பதிவு எண்: P9053
(பகுதி நேர முனைவர் பட்ட ஆய்வாளர்)
தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர்,
ஆறுமுகம்பிள்ளை சீதை அம்மாள் கல்லூரி,
திருப்பத்தூர் – 630 211,
சிவகங்கை மாவட்டம்.

## ஆய்வாளர் உறுதிமொழி

**“அக இலக்கியத்தில் (சங்க இலக்கியம்) அச்சம் – ஓர் ஆய்வு”** என்னும் தலைப்பில், மதுரை காமராசர் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காகச் செய்யப்பட்ட இவ்வாய்வு எனது சொந்த முயற்சியால் உருவானதேயாகும். இவ்வாய்வு, இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப் பெறவில்லை என்று உறுதியளிக்கின்றேன்.

**(அ. அமல்ராஜன்)**
ஆய்வாளர்

இடம் : மதுரை
நாள் :

**உறுதிக்கையொப்பம்**

**(முனைவர் சு. செயராம்)**

# நன்றியுரை

**“அக இலக்கியத்தில் (சங்க இலக்கியம்) அச்சம் – ஓர் ஆய்வு”** என்னும் தலைப்பில் பகுதி நேர முனைவர் பட்ட ஆய்வு மேற்கொள்ள அனுமதியளித்த மதுரை காமராசர் பல்கலைக்கழகத்திற்கு நன்றி. கல்லூரியில் பணியாற்ற வாய்ப்பு நல்கி, தொடர்ந்து ஆய்வு மேற்கொள்வதற்கும் அனுமதியளித்த **திருப்பத்தூர், ஆறுமுகம்பிள்ளை சீதை அம்மாள் கல்லூரி நிர்வாகத்தினர் மற்றும் கல்லூரி** முதல்வர் ஆகியோருக்கும் எனது நெஞ்சார்ந்த நன்றிகளை உரித்தாக்குகின்றேன்.

ஆய்வில் என்னை முழுமையாக ஈடுபடுத்தி இலக்கியத்தில் முனைவர் பட்டம் பெற முறையாக நெறிப்படுத்தி, வழிநடத்திய என் ஆய்வு நெறியாளர் விருதுநகர் இந்து நாடார் செந்திக்குமாரநாடார் கல்லூரியின் தமிழ்த்துறை மேனாள் இணைப்பேராசிரியர் **முனைவர் சு. செயராம்** அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றி என்றும் உரித்தாகுக.

ஆய்விற்கு அவ்வப்போது உதவிபுரிந்த, உடன் பணியாற்றிவரும் தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் அனைவருக்கும் என் நன்றியை உரித்தாக்குகின்றேன். ஆய்வுக்குத் தேவையான தகவல்களையும், ஆலோசனைகளையும் வழங்கி உதவி புரிந்த மதுரை, தியாகராசர் கல்லூரியின் தமிழ்த்துறை இணைப்பேராசிரியர் **முனைவர் சு. காந்திதுரை** அவர்களுக்கு உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

முனைவர் பட்டப்படிப்பு வரை பயிலச்செய்த என்னைப் பெற்றெடுத்த தாய், தந்தையருக்கும், முனைப்போடு ஆய்வுசெய்து முடிப்பதற்கு முழு ஒத்துழைப்புக் கொடுத்த பாசமிகு மனைவி **ரா. கோகிலா**, குழந்தைச் செல்வங்கள் **அ.கோ. ஆகாஷ், அ.கோ. ஆராதனா** ஆகியோர்களுக்கும் நெஞ்சார்ந்த நன்றிகளைக் காணிக்கையாக்குகின்றேன். உயர்கல்வி பெற இலட்சிய உணர்வுகளை அளித்த என் மாமா, அத்தை **திரு. ச. ராஜசேகரன் – ரா. செல்லாயி** ஆகியோருக்கு நன்றி.

ஆய்வேட்டைப் பொறுமையுடன் கணினித் தட்டச்சு செய்து கொடுத்த அன்பு நண்பர் **மு. மாடசாமி** அவர்களுக்கு நெஞ்சார்ந்த நன்றி.

**அ. அமல்ராஜன்**

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகத்.நூ.எ. | – | அகத்திணையியல் நூற்பா எண் |
| கள.நூ.எ. | – | களவியல் நூற்பா எண் |
| தொல்.கள.நூ.எ. | – | தொல்காப்பியக் களவியல் நூற்பா எண் |
| கற்.நூ.எ. | – | கற்பியல் நூற்பா எண் |
| பொருள்.நூ.எ. | – | பொருளியல் நூற்பா எண் |
| மெய்.நூ.எ. | – | மெய்ப்பாட்டியல் நூற்பா எண் |
| உவ.நூ.எ. | – | உவமவியல் நூற்பா எண் |
| செய்யு.நூ.எ. | – | செய்யுளியல் நூற்பா எண் |
| வீரசோழி.நூ.எ. | – | வீரசோழியம் நூற்பா எண் |
| இ.வி.நூ.எ. | – | இலக்கண விளக்கம் நூற்பா எண் |
| தொன்.வி.நூ.எ. | – | தொன்னூல் விளக்கம் நூற்பா எண் |
| முத்து.வீ.நூ.எ. | – | முத்துவீரியம் நூற்பா எண் |
| சுவாமி.நூ.எ. | – | சுவாமிநாதம் நூற்பா எண் |
| இறை.கள.நூ.எ. | – | இறையனார் களவியல் நூற்பா எண் |
| நம்பி.அகம்.நூ.எ. | – | நம்பியகப்பொருள் நூற்பா எண் |
| நம்பி.கள.நூ.எ. | – | நம்பியகப்பொருள் களவியல் நூற்பா எண் |
| நம்பி.வரைவு.நூ.எ. | – | நம்பியகப்பொருள் வரைவியல் நூற்பா எண் |
| நம்பி.ஒழி.நூ.எ. | – | நம்பியகப்பொருள் ஒழிபியல் நூற்பா எண் |
| தமிழ்.விள.நூ.எ. | – | தமிழ்நெறி விளக்க நூற்பா எண் |
| கள.காரி.நூ.எ. | – | களவியல் காரிகை நூற்பா எண் |
| மாறன்.நூ.எ. | – | மாறனகப்பொருள் நூற்பா எண் |
| தண்டி.நூ.எ. | – | தண்டியலங்காரம் நூற்பா எண் |
| மாறன்.நூ.எ. | – | மாறனகப்பொருள் நூற்பா எண் |
| மாறன்.அல.நூ.எ. | – | மாறனலங்காரம் நூற்பா எண் |
| குறுந். பா.எ. | – | குறுந்தொகை பாடல் எண் |
| நற். பா.எ. | – | நற்றிணை பாடல் எண் |
| அகநா.பா.எ. | – | அகநானூறு பாடல் எண் |
| ஐங்.பா.எ. | – | ஐங்குறுநூறு பாடல் எண் |

| | | |
|---|---|---|
| கலித்.பா.எ. | – | கலித்தொகை பாடல் எண் |
| அகத். | – | அகத்திணை |
| அகநா. | – | அகநானூறு |
| உ.ஆ. | – | உரை ஆசிரியர் |
| உ.வி. | – | உரை விளக்கம் |
| உ.வே.சா. | – | உ.வே. சாமிநாதய்யர் |
| த.உ. | – | தமிழ் உரை |
| வி.உ. | – | விளக்க உரை |
| தொல். | – | தொல்காப்பியம் |
| நூற்.எ. | – | நூற்பா எண் |
| நூ.ஆ. | – | நூல் ஆசிரியர் |
| ப. | – | பக்கம் |
| ப.ஆ. | – | பதிப்பு ஆசிரியர் |
| பக். | – | பக்கங்கள் |
| பா.எ. | – | பாடல் எண் |
| மெய்ப். | – | மெய்ப்பாடு |
| மேலது. | – | மேலே உள்ள நூல் |

# பொருளடக்கம்


| இயல் | தலைப்பு | பக்கம் |
|---|---|---|
| | முன்னுரை | 1 – 7 |
| 1. | அக இலக்கணங்களில் அச்சம் | 8 – 61 |
| 2. | சங்க அக இலக்கியத்தில் தலைவன் கூற்றில் அச்சம் | 62 – 110 |
| 3. | சங்க அக இலக்கியத்தில் தலைவி கூற்றில் அச்சம் | 111 – 181 |
| 4. | சங்க அக இலக்கியத்தில் தோழி கூற்றில் அச்சம் | 182 – 273 |
| 5. | சங்க அக இலக்கியத்தில் பிற மாந்தர்கள் கூற்றில் அச்சம் | 274 – 295 |
| | முடிவுரை | 296 – 300 |
| | துணைநூற்பட்டியல் | i – x |
| | பிற்சேர்க்கை | xi – xiv |

# முன்னுரை

சங்க இலக்கியமென்று நாம் பேசத்தொடங்கும்போது திணை சார்ந்த சிந்தனைகள் தவிர்க்க முடியாது. மனிதன் வாழ்வியல் ஒழுக்கத்திற்கு ஏற்றவாறு, இயற்கையாகக் கிடந்த நிலத்தைத் தன்னுடைய பாகுபாட்டிற்குக் கொண்டு வருகிறான். மனிதர்களுக்கு முன்னே பஞ்சபூதமாக இயற்கை பறந்து விரிந்து கிடக்கிறது. இவ்வியற்கையைத் தன்னுடைய ஆளுகைக்குக் கீழ் கொண்டு வர முடியும் என்று நம்பினான். அதன் அடிப்படையில் நிலத்தையும் வாழ்வியலையும் கட்டமைப்புக்கான முயற்சியாகத்தான் திணையை மையமாகக்கொண்டு புலவர்கள் கவி புணைந்துள்ளார்கள்.

ஐம்பெரும் பூதமும் மனிதர்களின் வாழ்வியலுக்கு வந்து அணுக்கமாகவே இருக்கின்றன. மனிதன் கூட்டாக வாழக்கூடிய சமூக விலங்கு. ஆகவே, இயல்பான அச்சம் தரும் விலங்குகளிடம் இருந்தும், கூட்டமாகக் குழுவாக வாழத் தலைப்பட்டான். இக்கூட்டு வாழ்க்கை முறைதான் மனிதனுக்கு சமூகமாக, இனக்குழுச் சமூகமாக வாழ வழிவகை செய்தாலும், அடிப்படையில் பயம்தான் முதன்மையானக் காரணமாகக் கருதலாம். மனிதன் உணர்ச்சிவசப்படக்கூடியவன். தனிமை மனிதனுக்கு அச்ச உணர்வை ஊட்டுகிறது. மனிதன் அச்சத்தில் இருந்து விடுபடப் பெரும்பாலும் சமூகமாகக் கூடியே வாழும் வாழ்க்கையைப் பெரிதும் விரும்பினார்கள். இவ்விருப்பம் குடும்பம், உறவுமுறை, நட்புமுறை, சமூக உறவுகள் என விரிவடையத் தொடங்கின. மனிதன் என்னதான் குடும்ப உறவுகள் சமூக உறவுகள் எனப் பிறரைப்போல வாழ்ந்தபோது அச்ச உணர்வு இல்லா மனிதனே இல்லை. நாடோடியாக ஓடியே, மரக்கிளையில் உறங்கிப் பழக்கப்பட்டவன். கூட்டமாக, குடிகளாக, சமூகமாக வாழ்ந்தாலும் இயல்பான அச்ச உணர்வு அகலவில்லை. தனக்கு மேம்பட்ட சக்தி ஒன்று நம்பிக்கொண்டு அச்சத்தில் இருந்து விடுபடவில்லை.

இரசக்கோட்பாடு என 'ஓம்பான் சுவையை' வடநூலார்கள் குறிப்பிட்டபோதும், தமிழ்ச்சமூகம் அவை மெய்பாடுகள் எட்டே என்று விதந்துப் போற்றி வந்தன. இவ்வெட்டுமே எல்லாவற்றிற்கும் மூலமாகவும், மற்றவைகள் தன் கிழமையாக, பிறிதியின் கிழமையாக, நிலைக்களன்களாக மாறி விரிகின்றன. ஆனால் இதில் தொல்காப்பியர் மெய்ப்பாட்டியலில் சுட்டுகின்ற எட்டில் ஐந்தாவதாக 'அச்ச உணர்வை' பேசுகிறார்கள். இவ்வுணர்வு எல்லா உயிரினங்களிலும் அதன் நிலைப்பாட்டிற்கு ஏற்ப மாறுபடும். ஆனால், மனிதன் தன் அகவாழ்வியல் அச்ச உணர்வை எவ்வாறெல்லாம் தம் பங்கைச் செலுத்தி, எவ்வாறெல்லாம் நிலைக்கொள்கின்றன. அவை சங்க இலக்கிய அகப்பாடல்களில் இதன் செயல்பாடுகளை ஆராய்வதாகவே இவ்வாய்வு மேற்கொள்ளப்பட்டுள்ளது.

## ஆய்வுத்தலைப்பு

**'அக இலக்கியத்தில் (சங்க இலக்கியம்) அச்சம் – ஓர் ஆய்வு'** என்பது ஆய்வின் தலைப்பாக எடுத்துக் கொள்ளப்பெற்றுள்ளது.

## ஆய்வு நோக்கம்

சங்க இலக்கியங்கள் மனித வாழ்க்கையை சமூக உறவுகளை உள்ளடக்கியதாகும். இதில் தனி மனித ஒழுக்கத்தையும், அது தொடர்பாக வெளிப்படுத்துகிற அச்ச உணர்வை அக மாந்தர்களிடமும் காண முடிகின்றது. சமூக வாழ்க்கைக்கு அச்சமே வழிகாட்டுவனவாகும். இதில் அகமாந்தர்களின் வழியாக அச்ச உணர்வை இயல்பாகவேக் காண முடிகின்றது.

சங்க அகப்பாடல்களில் தொகைநூல்களைத் தொல்காப்பிய மெய்ப்பாட்டியலில் 'அச்சம்' குறித்தப் பதிவுகளை விளக்குகிறது. தொல்காப்பிய மெய்ப்பாட்டியல் சங்க அகப்பொருள் மரபில் தனிப்பட்ட கவிதைகளில் அகமாந்தர்களில் தலைவன், தலைவி, தோழி, செவிலித்தாய், நற்றாய் மற்றும் இவர்களுக்குத் துணை நிற்கும் இணை மாந்தர்களின் இயல்புகளைச் சுட்டிக்காட்டி, இதில் அச்ச உணர்வு

மேலோங்கி நிற்பதை எங்ஙனம் பதிவாகியிருக்கிறது என்பதை ஆராய்ந்து வெளிப்படுத்துவதே இந்த ஆய்வின் நோக்கமாகும்.

**ஆய்வு எல்லை**

எட்டுத்தொகையில் அகப்பாடல்களான ஐங்குறுநூறு, குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு, கலித்தொகை ஆகிய அக நூல்கள் ஐந்தும் ஆய்வு எல்லையாக அமைகின்றன.

**கருதுகோள்**

சங்க இலக்கியத்தில் அகமாந்தர்களின் உள்ளத்து உணர்வுகளை வெளிப்படுத்த அவர்களைச் சுற்றிலுமுள்ள இயற்கை உயிரினங்களின் உயிரோட்டமான நிகழ்வில், அகமாந்தர்களின் இயல்பான அச்ச உணர்வு ஒழுக்கத்தைச் சார்ந்த நிலையில் இருந்தன. இத்தகைய சூழலில் அகமாந்தர்களின் அச்ச உணர்வு ஒழுக்கத்தில் பெரிய மாற்றங்களை நிகழ்த்தவில்லை. அவை ஒழுக்கம் சார்ந்து சீராகச் செல்ல அச்ச உணர்வு இருந்தது என்பதே இவ்வாய்வின் கருதுகோளாக வைத்து ஆராய முற்பட்டுள்ளது.

**ஆய்வு அணுகுமுறை**

சங்க அகப்பாடல்களை ஆராயுமிடத்து விளக்குமுறைத் திறனாய்வும் (Descriptive Approach), பகுப்பாய்வு அணுகுமுறையும் பின்பற்றப்பட்டுள்ளது. மனித வாழ்வியல் நோக்கில் ஆராய்வதால் சமூகவியல் அணுகுமுறையும் (Social Approach) அகப்பாடல்களில் அகவொழுக்கம் சார்ந்த உணர்வுகளை அச்சத்தை முதன்மைப்படுத்தி நோக்குகிற நிலையில் உளவியல் அணுகுமுறையும் (Psychological Approach) மேற்கொள்ளப்பட்டுள்ளன.

**ஆய்வு முன்னோடிகள்**

தனிப்பட்ட நிலையில் சங்க இலக்கியங்களைப் பற்றி ஆய்வுகள் பல வெளிவந்து இருப்பினும், சங்க இலக்கியத்தில் அகமாந்தர்களின்

நிகழ்வுகளை உள்ளடக்கிய நிலையில், அதாவது அக இலக்கியத்தில் அகமாந்தர்களின் உணர்வு நிலையில் ஏற்படுகின்ற 'அச்சத்தை' முன்னிலைப்படுத்துகின்ற வகையில் இதுவரை ஆய்வுகள் மேற்கொள்ளப்படவில்லை. அந்த வகையில் இவ்வாய்வுக்குரிய முன்னோடிகளாக, இ. அப்துல்சத்தார், 'சங்க இலக்கியத்தில் பெருமிதம்', வி. சீனிவாசன், 'சங்க இலக்கியத்தில் அவலச் சுவை', ஏ. முகமது கவுஸ், 'கபிலர் பாடல்களில் அவலம் ஓர் ஆய்வு', மு. பொன்னுச்சாமி, 'சங்க இலக்கியத்தில் காதல் மெய்ப்பாடு', க.அல்லிராஜன், 'சங்க இலக்கியத்தில் நகை (தலைவன் கூற்று)' ஆகிய சங்க இலக்கிய மெய்ப்பாடு சார்ந்த ஆய்வுகள் அமைகின்றன.

### ஆய்வுச் சான்றுகள்

சங்க அக இலக்கியங்களில் அச்சம் மெய்ப்பாடு எனும் தலைப்பிலான ஆய்வுக்குரிய களமாக அமைகின்ற எட்டுத்தொகை அக இலக்கியங்கள் முதன்மை ஆதாரங்களாகவும் தொல்காப்பிய மெய்ப்பாட்டோடு அச்ச உணர்வை முதன்மைப்படுத்துவதால் இலக்கண இலக்கியங்கள் துணைமை ஆதாரங்களாகவும் வகைப்படுத்தப்படுகின்றன.

### முதன்மை ஆதாரங்கள்

எட்டுத்தொகையில் அக இலக்கியங்களான ஐங்குறுநூறு, குறுந்தொகை, நற்றிணை, அகநானூறு, கலித்தொகை ஆகிய ஐந்து நூல்கள் மட்டும் முதன்மைத் தரவுகளாகக் கொள்ளப்பெற்றுள்ளன.

### துணைமை ஆதாரங்கள்

அச்சம் மெய்ப்பாட்டு விளக்கங்களுக்கு அடிப்படையாகத் திகழ்கின்ற தொல்காப்பிய மெய்ப்பாட்டியல் உரைவளம், மெய்ப்பாடு சார்ந்த கருத்துக்களைத் தருவிக்கின்ற ஐந்திலக்கண நூல்கள், அகப்பொருள் இலக்கண நூல்கள், திறனாய்வு நூல்கள், ஆய்விதழ் கட்டுரைகள், ஆய்வேடுகள், கலைக்களஞ்சியங்கள் ஆகியன துணைமை ஆதாரங்களாகக் கொள்ளப்பெறுகின்றன.

**ஆய்வுப்பகுப்பு**

இந்த ஆய்வேடானது, முன்னுரை, முடிவுரை நீங்கலாக ஐந்து இயல்களாகப் பகுக்கப்படுகின்றது. அவை,

1. அக இலக்கணங்களில் அச்சம்
2. சங்க அக இலக்கியத்தில் தலைவன் கூற்றில் அச்சம்
3. சங்க அக இலக்கியத்தில் தலைவி கூற்றில் அச்சம்
4. சங்க அக இலக்கியத்தில் தோழி கூற்றில் அச்சம்
5. சங்க அக இலக்கியத்தில் பிற மாந்தர்கள் கூற்றில் அச்சம்

ஆகியனவாகும்.

'**அக இலக்கணங்களில் அச்சம்**' என்னும் முதல் இயலில், தொல்காப்பிய பொருளதிகாரத்தின் அகத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல், மெய்ப்பாட்டியல், உவமையியல், செய்யுளியலில் 'அச்சம்' என்ற மெய்ப்பாட்டிற்கு கூறப்பட்டுள்ள கருத்துக்கள் எடுத்துரைக்கப்படுகிறது. தொல்காப்பியத்திற்குப் பின்வந்த ஐந்திலக்கண நூல்களில் 'அச்சம்' மெய்ப்பாடு உணர்த்தப்பட்டிருப்பதை விளக்கப்படுகிறது. இதனையடுத்து பொருளிலக்கண நூல்கள், அணியிலக்கண நூல்கள், அகராதிகளில் கூறப்பட்டுள்ள அச்சம் மெய்ப்பாட்டிற்கான விளக்கம் எடுத்துரைக்கப்படுகிறது. பின்னர் நிகண்டுகள் எடுத்துரைக்கின்ற அச்சம், மெய்ப்பாடு பற்றிய சிந்தனைகள் விளக்கப்படுகின்றது.

'**சங்க அக இலக்கியத்தில் தலைவன் கூற்றில் அச்சம்**' எனும் இரண்டாவது இயலில், தலைவன் களவு ஒழுக்கம் புரிகின்றபோது, தலைவியிடமும், தோழியிடமும், நெஞ்சிடமும் கூற்று நிகழ்த்துகின்ற சூழலில் அமைந்த களவுப்பாடல்களில் உணர்த்தப்பட்டிருக்கின்ற அச்சம் மெய்ப்பாடு பற்றி விளக்கப்படுகிறது. கற்பொழுக்கம் பூணுகின்றபோது தலைவியிடமும், தோழியிடமும் தேர்ப்பாகனிடமும் நெஞ்சிடமும் உழையரிடமும் கூற்று நிகழ்த்துகின்றான். இச்சூழலில் அணங்கு, விலங்கு, கள்வர், இறை போன்ற நிலைக்களன்களினால் 'அச்சம்' தோன்றும் பாடல்கள் தரவுகளாக சேகரிக்கப்பட்டு பகுத்து ஆராயப்பட்டுள்ளது.

‘**சங்க அக இலக்கியத்தில் தலைவி கூற்றில் அச்சம்**’ எனும் மூன்றாவது இயலில், களவு வாழ்க்கையின்போது மாந்தர்களிடம் கூற்று நிகழ்த்துகின்ற சூழலில் தலைவிக்கு உண்டாகும் அச்சம் கூறப்பட்டுள்ள பாடல்கள் விளக்கப்படுகின்றது. இதேபோல் கற்பு வாழ்க்கையின்போது தலைவன், தோழி, பாணன் போன்றோர் முன் கூற்று நிகழ்த்தும்பொழுது எங்ஙனம் நிலைக்களன் வழியும் சமூகத்தால் உண்டாகும் அச்சம் மெய்ப்பாடு பற்றி விரிவாக எடுத்துரைக்கப்படுகிறது.

‘**சங்க அக இலக்கியத்தில் தோழி கூற்றில் அச்சம்**’ எனும் நான்காவது இயலில், தலைவன் தலைவியரின் களவு வாழ்க்கையின்போது கூற்று நிகழ்த்தும் காலங்களில் நிலைக்களன்களால் இருவருக்கும் அச்சம் தோன்றுமிடங்கள் தோழியின் மூலம் எங்ஙனம் உணர்த்தப்படுகிறது என்பதை விளக்கப்படுகிறது. கற்பு வாழ்க்கையின்போது தலைவனிடமும், தலைவியிடமும் அதிகமாக கூற்று நிகழ்த்துகிறாள். இவற்றில் அச்சம் மெய்ப்பாடு அமைந்திருக்குமாற்றை விரிவாக ஆராயப்படுகிறது.

‘**சங்க அக இலக்கியத்தில் பிறமாந்தர்கள் கூற்றில் அச்சம்**’ எனும் ஐந்தாவது இயலில், நற்றாய், செவிலித்தாய், கண்டோர் கூற்றுக்களிலான களவுப்பாடல்களில் நிலைக்களன்கள் வழி அச்சம் மெய்ப்பாடு தோன்றும் உணர்வுகள் விளக்கப்படுகின்றது. கற்பு பாடல்களில் பாணன், பரத்தை, காமக்கிழத்தி போன்றோர் கூற்றுக்களில் அமைகின்ற அச்சம் மெய்ப்பாட்டுணர்வு வெளிப்படுவது விளக்கப்படுகிறது.

‘**முடிவுரை**’ என்னும் பகுதியில் மேற்கண்ட ஐந்து இயல்களிலும் ஆராய்ந்து கண்டு உணரப்பட்ட கருத்துக்கள் ஆய்வு முடிவுகளாகத் தொகுத்தளிக்கப்பட்டுள்ளன.

**துணைநூற்பட்டியலில்** ஆய்வுக்குத் துணை நின்ற நூல்கள் அகர வரிசைப்படுத்தப்பட்டுத் தொகுத்துத் தரப்பட்டுள்ளன.

பின்னிணைப்பாக இவ்வாய்வு தொடர்பான மற்றும் ஆய்வுக்கு அரண் சேர்க்கின்ற கருத்துப்படங்களும், அட்டவணைகளும் வரிசைப்படுத்தி,

1. 'அச்சம்' மெய்ப்பாடு அமைந்துள்ள களவுப் பாடல்கள்
2. 'அச்சம்' மெய்ப்பாடு அமைந்துள்ள களவுப் பாடல்களை விளக்கும் கருத்துப்படம்
3. 'அச்சம்' மெய்ப்பாடு அமைந்துள்ள கற்புப் பாடல்கள்
4. 'அச்சம்' மெய்ப்பாடு அமைந்துள்ள கற்புப் பாடல்களை விளக்கும் கருத்துப்படம்
5. 'அச்சம்' மெய்ப்பாடு உணர்த்தும் களவுப் பாடல்கள்
6. 'அச்சம்' மெய்ப்பாடு உணர்த்தும் கற்புப் பாடல்கள்

முதலிய தலைப்புகளில் இடம்பெற்றுள்ளன.

## இயல் – 1

# அக இலக்கணங்களில் அச்சம்

### முன்னுரை

சமூகப் பிணைப்போடு கூடிய வாழ்க்கையையே மனிதர்கள் விரும்புகின்றனர். 'இவ்வாறு வாழும் காலத்தில் அச்சம் அஞ்சத்தகுவனவற்றான் பிறப்பது' என்பது இளம்பூரணரின் கருத்தாகும். சில நம்பிக்கைகளையும், பழக்கவழக்கங்களையும் கொண்டு மனிதன் வாழ்ந்து வருகிறான். காட்டு மிராண்டியாய் வாழ்ந்த மனிதன் இன்று பல யுகங்களைக் கடந்து மனிதனாய் வாழும் நிலை வந்தும், அச்சத்தின் எச்சங்களாக விரவிக் கிடக்கின்றன. மக்கள் எவ்வெவ்வற்றைக் கண்டு அஞ்சினர் என்பது வெளிப்படுகின்றது. அச்சம் அன்றைய மக்களின் நம்பிக்கைகளையும், பழக்கவழக்கங்களையும் பண்பாடுகளையும் அறியப் பயன்படுகின்றது.

சங்க கால மக்களின் செம்மாந்த வாழ்வியல் பண்புகளை இன்றளவும் போற்றும் வண்ணம் உயர்த்திக்காட்டும் உணர்வுகளின் பதிவுகளாகத் திகழ்வது இலக்கண இலக்கியங்களாகும். சங்க அகமாந்தர்களின் அன்பு நிலையினை முதன்மைப்படுத்தி பாடல்களைப் புனைந்துள்ளனர். மாந்தர்களின் காதல் வாழ்க்கையை இரு பகுதிகளாக வரையறைப்படுத்திக் களவு, கற்பு என விளக்கப்படுகிறது. சங்க கால மாந்தர்களின் களவு வாழ்க்கையின் நெறியினை, ஒழுக்கங்களை செம்மைப்படுத்திக்காட்டும் புலவர்கள் அவர்கள் வாழ்கின்ற நிலப் பின்புலத்தைக் களமாக்கிக் காட்டுகின்றனர். அவர்கள் தம் வாழ்கின்ற சூழலின் தன்மையே காதல் ஒழுக்கத்தில் அவர்களை மேன்மையடையச் செய்கிறது. அகமாந்தர்களின் காதல் ஒழுக்கத்தை செம்மைப்படுத்த முதல், கரு, உரிப்பொருள்களைப் பாடலுக்குள் புலப்பாட்டு உத்தியாகக் கையாண்டிருந்தான். தொல்காப்பியர் முதலாகப் பிற இலக்கண ஆசிரியர்கள் பார்வையிலும், உரையாசிரியர்களின் உரை விளக்கங்களிலும் மெய்ப்பாட்டியலில் குறிப்பிட்டுள்ள 'அச்ச உணர்வை' எவ்வாறெல்லாம்

விளக்குகிறார்கள். மேலும், அகராதிகளிலும், நிகண்டுகளிலும் அச்ச உணர்வை எவ்வாறு எடுத்துரைக்கின்றன, இலக்கியங்களிலும், திறனாய்வாளர்கள், உரையாசிரியர்கள் தரும் அச்சத்திற்கான விளக்கத்தை இவ்வியலில் ஆராயப்பட்டுள்ளது.

### ***தொல்காப்பியத்தில் அச்சம்***

நமக்குக் கிடைக்கும் முதல் இலக்கண நூல் தொல்காப்பியம். தொல்காப்பியப் பொருளதிகாரத்தில் அச்சம் தோன்றும் சூழல் குறித்தும் அச்ச உணர்வை வெளிப்படுத்தும் சொற்கள் குறித்தும் ஆராய்வதாக இப்பகுதி அமைகிறது.

தொல்காப்பியம் பொருளதிகாரத்தில் புறத்திணையியலில் போர் மரபுகளைக் கூறும்போது, அச்சம் வெளிப்படுவனவற்றை ஆய்வில் எடுத்துக் கொள்ளப்படவில்லை. அக உணர்வு சார்ந்த இலக்கணங்களைக் கூறும் அகத்திணையியல், களவியல், கற்பியல், மெய்ப்பாட்டியல் ஆகிய பகுதிகளில் அச்சம் என்னும் உணர்வு பற்றியும், அச்சம் தோன்றும் சூழல் குறித்தும் விளக்கப்படுகிறது.

தொல்காப்பியர் பொருளதிகார அகத்திணையியலில் அச்ச உணர்வு குறித்துக் கூறுகிறார். அகத்திணையியலில் நற்றாய், கண்டோர் மற்றும் அகமாந்தர்கள் உள்ளத்தில் உருவாகும் அச்ச உணர்வு தோன்றக்கூடிய சூழலைச் சொல்கிறார். இதனை,

"***தன்னும் அவனும் அவளுஞ் சுட்டி***
***மன்னும் நிமித்தம் மொழிப்பொருள் தெய்வம்***
***நன்மை தீமை அச்சம் சார்ந்தலென்று***
***அன்னபிறவும் அவற்றொடு தொகைஇ***
........................................................"[1] (அகத்., நூ.எ. 39)

என்னும் நூற்பா உணர்த்துகிறது. இவற்றில், 'தன்னையும் தலைவனையும் அவனுடன் சென்ற தன் மகளையும் குறித்துப் பேசுதல், தொன்றுதொட்டுப் பார்க்கும் பழக்கமான நிமித்தம் (சகுனம், நற்சொற்கேட்டல் அசிரீரி), தெய்வக் குறி பார்த்தல் என்பனவற்றால் விளையும் நன்மைகளையும்,

தீமைகளையும் அச்சத்தையும், எப்பொழுது மீள்வர் என்பதையும், அவற்றோடு பிறவற்றையும் சேர்த்து 'என்ன நேருமோ' என்ற கவலையில் தாய் ஆராய்வாள்' என்று கூற்றுநிலை கூறப்படுகிறது.

நன்மைகளையும், தீமைகளையும் அதன் சார்ந்த சூழல் அச்ச உணர்வைத் தருவதாகக் கொள்ள முடிகிறது. தலைவி, தலைவனுடன் உடன் போகிறாள். இவ்வாறு செல்லும்போது அவர்களுக்கு ஏற்படக்கூடிய தீமைகளின் விளைவினை நற்றாய் நினைக்கும்போது 'அச்சம் உணர்வு' உள்ளத்திற்குள் உருவாகிறது என்பது புலனாய்கிறது.

ஒருவருக்கு ஏற்படக்கூடிய புறத்தீமையினை மனதில் நினைத்துப் பார்ப்பதனால் உண்டாகும் ஒருவித உணர்ச்சி அச்சம் என்றாகிறது. 'சார்தல்' என்பது நன்மை, தீமை இரு பண்புகளாலும் உருவாகக்கூடிய ஒரு உணர்வு என்பதையும் உய்த்துணர முடிகிறது. இதேபோல், 'கண்டோர் கூற்றில்' அச்சம் உருவாகும் சூழலைக் கூறுகின்றார். இதனை,

"***பொழுதும் ஆறும் உட்குவரத்தோன்றி***
***வழுவின் ஆகிய குற்றங் காட்டலும்***
***.......................................................***"[2] (அகத்., நூ.எ. 43)

எனத் தொடரும் நூற்பாவில் உணரலாம். உடன்போக்கில் மாந்தர்கள் பாலை வழியில் தனியே போவதால், வழியிடையே துன்பம் நேரலாம். நேரமல்லா நேரத்தில் இடையூறு கூடிய ஆபத்துக்களை எடுத்துக் கூறுவர். கண்டோர் என்பது மேற்காணும் நூற்பா விளக்கமாகும். பொழுதும் ஆறும் என்பது கண்டோர் கூறக்கூடிய ஆறு சூழல்களில் காதலர்கள் செல்லும்பொழுதில் (நாள் முழுதும்) ஏதேனும் துன்பம் விளையக்கூடும் என்பதை எடுத்துரைப்பதில் 'அச்சம்' சூழலை (தீங்கினை) முன்கூட்டியே யோசித்ததாலும், 'அச்சம்' (மனதில் உருவாகும் பயம்) உருவாகும் என்பதை மேற்காணும் நூற்பாவில் 'உட்கு' என்ற சொல்லாட்சி உணர்த்துவதை உணர முடிகிறது. இதன்வழி பிறருக்கு உருவாகப்போகும் ஒரு துன்பச் சூழலை நினைப்பதன்வழி அச்சம் உருவாகும் என்பது கருத்து.

**களவியல்**

'களவு' என்பது இன்பம் கருதி பொருளால் சிறப்புற்று அறவழி நடப்பது. இருவரின் ஒத்த அன்பு சார்ந்தது. ஐந்திணையுள் காமக்கூட்டமாகிய களவை ஆராயுமிடத்து அது மறையோர் வழக்காகிய நூல்களில் எட்டு வகை மணத்துள் இசைத்துறை வல்ல யாழை ஏந்திய, என்றும் பிரியாத சோடிகளாகிய காந்தருவரது மணம் போன்றதாகும். காந்தருவ மணத்தை ஒத்தது களவு என்று களவு ஒழுக்கம் குறித்து கூறுகிறார் தொல்காப்பியர். இதனை,

"***இன்பமும் பொருளும் அறனும் என்றாங்கு***
***அன்பொடு புணர்ந்த ஐந்திணை மருங்கின்***
***காமக்கூட்டம் காணுங் காலை***
***மறையோர் தேஎத்து மன்றல் எட்டனுள்***
***துறையமை நல்வாழ்த் துணைமையோர் இயல்பே***"[3] (கள., நூ.எ. 1)

என்னும் நூற்பாவில் குறிப்பிடுகிறார். ஆக, வயது ஒருமித்த தலைவன், தலைவி இருவரும் அன்புடன் பழகும் சூழல்களைக் கூறுவதே களவு ஒழுக்கம் என்பதாகும். இந்தக் களவு ஒழுக்கத்தின்போது தலைவன், தலைவி இருவரும் முதன்முதலாகச் சந்திக்கும்போது தலைவிக்கு அவளது முகத்தில் அச்சம் தோன்றுவதை,

"***வண்டே இழையே வள்ளி பூவே***
***கண்ணே அலமரல் இமைப்பே அச்சமென்று***
***அன்னவை பிறவும் ஆங்கண் நிகழ***
***நின்றவை களையுறு கருவி என்ப***"[4] (கள., நூ.எ. 4)

என்னும் நூற்பாவில் அச்சம் என்பதற்கு, 'ஆண்மகனைக் கண்டு அஞ்சுதல்' என்கிறார் இளம்பூரணர். 'அலமரல்' என்பதற்கு, 'கண்டறியாத வடிவு கண்ட அச்சத்தால் பிறந்த தடுமாற்றம்' என்றும், "***ஆண்மகனைக் கண்டுழி மனதில் பிறக்கும் அச்சம்***"[5] என்றும், விளக்கம் தருகிறார் நச்சினார்க்கினியர்.

"***தலைமகள் கூந்தலில் அணிந்த மாலையில் மொய்த்த வண்டுகளும், அவளணிந்த அணிகலன்களும், மேனியிற் கோலம்***

***செய்யப்பெற்ற வள்ளிக்கொடியும், நறுமலரும், கண்ணிமைத்தலும், தடுமாற்றமும், அச்சமும் அத்தன்மைய பிறவும் (தலைமகனுள்ளத்தே தோன்றிய) ஐயத்தினைக் களைதற்குரிய கருவியாகும்***”[6] என்று வெள்ளைவாரணர் கூறுகிறார்.

தலைவி களவு ஒழுக்கத்தில் தலைவனைத் திடீரென பாாக்கும்போது, அதாவது தன்னுடைய இல்லறச் சூழலிலிருந்து விடுபட்டு பிறர் அறியாது சந்திப்பதால் உண்டாகின்ற உணர்வைக் குறிக்கின்றது. இக்கருத்திற்கு, “***கண்கள் மருட்சியால் சுழலும், இமைக்கும் முகத்தில் அச்சம் தோன்றும்***”[7] என்ற தமிழண்ணல் உரைக்கருத்து அரணாகிறது.

ஆடவர்கள் பண்புகளை விளக்கும் தொல்காப்பியர்,

“***பெருமையும் உரனும் ஆடூஉமேன***”[8] (கள., நூ.எ. 7)

என்கிறார். இதற்கு உரைதரும் இளம்பூரணர், ‘பழிபாவம் அஞ்சுதல்’ என்கிறார். இதனை நச்சினார்க்கினியர், “***அறிவும் ஆற்றலும் புகழும் கொடையும் ஆராய்தலும் பண்பும் நண்பும் பழிபாவம் அஞ்சுதலும் முதலியனவாய் மேற்படும் பெருமைப் பகுதியும்***”[9] என்று கூறுகின்றார். ஆனால், புலவர் குழந்தை, “***அறிவு ஆற்றலும் ஆராய்ச்சி கொண்ட புகழ் பண்பு பழிபாவங்களுக்கு அஞ்சுதல் முதலியவற்றில் மேம்படுதல்***”[10] என்று நச்சினார்க்கினியர் உரையொற்றியே குறிப்பிடுகின்றார்.

தலைமகளின் பண்புகளைக் கூறுமிடத்து அச்ச உணர்வுடையவளாகத் தொல்காப்பியர் கூறுகிறார். பெண்களுக்கான குணப்பண்புகளில் ஒன்று அச்சம் என்பதை,

“***அச்சமும் நாணும் மடனும் முந்துறுதல்***
***நிச்சமும் பெண்பாற்குரிய என்ப***”[11] (கள., நூ.எ. 8)

என்ற நூற்பாவில் குறிப்பிடுகிறார். ‘அச்சமும், நாணும், பேதமையும் இம்மூன்றும் நாடோறு முந்துறுதல் பெண்டிர்க்கு இயல்பு’ என்று இளம்பூரணர் விளக்குகிறார். “***அன்பு காரணத்திற்றோன்றிய உட்கும்***”[12] என்று கூறும் நச்சினார்க்கினியர் விளக்கமும், “***அன்பு காரணமாகத் தோன்றும் அச்சமும், அதாவது தலைவனிடம் தான் கொள்ளும் அன்பை***

***யாராவது கண்டுகொள்வார்களோ என அஞ்சுதல், இதற்கு முன் நடவாத புது வழியாதலால் தலைவி அஞ்சுவது இயல்பு***”[13] என்ற புலவர் குழந்தை கருத்தும் அரணாகிறது. சி.இலக்குவனார், “***காதலில் தலைப்படும் போது ஆண்களைவிடப் பெண்களே அஞ்சுதற்குரியவர்கள். ஆண்களுக்கு காதல் முறிவு ஏற்பட்டால் வேறு பெண்களைக் காதலித்துக் கொள்ளலாம். ஆனால் பெண்கள் நிலையோ வேறுபட்டது. அவர்கள், வாழ்வில் ஒரு முறைதான் காதலித்தல் கூடும். ஆதலின் பின் விளைவையறியாது என்ன நிகழுமோ என்று அஞ்சி அஞ்சிக் காதல் துறையில் நுழைய வேண்டியவராவார்***”[14] என்று விளக்கம் தருகின்றார். இதன்வழி யாரேனும் தன் ஒழுக்கத்தை முன்னிறுத்தி கூறி விடுவார்களோ? என்ற பண்பு காலங்காலமாக பெண்களுக்குரியன என்பதை அறிய முடிகிறது. தலைவி ஒரு ஆண் மகனிடம் காதலின் காரணமாக முதன்முதலில் சந்திக்கிறாள். இதனால் மனதிற்குள் பயம் தோன்றுகிறது. ஏனெனில், ஒரு புதுமையான செயலில் ஈடுபடும்போது தன்னைப் பற்றி பிறர் குறை கூறக் கூடாது என்ற இயல்பான குணத்தாலானவள் என்பதால் அச்சம் தோன்றும் என்ற சிந்தனையை உணர முடிகிறது.

மேலும், தலைவன் தலைவியை முன்னிலைப்படுத்தித் தன் பேச்சை அவள் செவிசாய்த்துக் கேட்டு நடக்குமாறு செய்வான். ‘அச்சம்’ என்னும் இயல்பான குணம் உடையவள் நீ என்று உணர்த்துவார்.

“***முன்னிலை யாக்கல் சொல்வழிப் படுத்தல்***
***நன்னயம் உரைத்தல் நகைநனி உறாஅ***
***அந்நிலை யறிதல் மெலிவுவிளக் குறுத்தல்***
***தன்னிலை யுரைத்தல் தெளிவகப் படுத்தலென்று***
***இன்னவை நிகழும் என்மனார் புலவர்***”[15] (கள., நூ.எ. 10)

இந்நூற்பாவில், ‘காம குறிப்புண்மை அறிந்த தலைமகன் வேட்கையாற் சாரநினைத்த வழித் தலைமகளும் வேட்கை குறிப்புடையாளாயினும் குலத்தின்வழி வந்த இயற்கையன்மையான் நாணமும் அச்சமும் மீதூர அக்குறிப்பில்லாதாரைப் போல் நின்ற வழி அவளை முன்னிலையாகப்படுத்திச் சில கூறுதல்’ என்கிறார் இளம்பூரணர்.

“***முன்னிலையாகாத வண்டு நெஞ்சு முதலியவற்றை முன்னிலையாக்கிக் கோடல்***”[16] என்று நச்சினார்க்கினியரும், “***தனியிடத்தே தலைமகளை எதிர்ப்பட்ட தலைமகன் தனது வருகையும் உரனும் நீங்க வேட்கை மீதூர்தலால் மெய்யுற புணர்ச்சியை வேண்டினாயினும் தலைமகள்பால் இயல்பாகத் தோன்றும் அச்சமும் நாணம் மடனும் அதற்குத் தடையாய் முந்துற்று நிற்பனவாதலின் அத்தடைகள் நீங்குதற்பொருட்டுத் தலைமகளை முன்னிலைப்படுத்திச் சில மொழிகளைக் கூறுதலும்***”[17] என்று வெள்ளைவாரணரும் உரை விளக்கம் தருகின்றனர்.

களவிற்கூட்டம் நிகழும்போது தலைவன் கூற்றில் அச்ச உணர்வு குறித்து தொல்காப்பியர்,

“***...........................................***

***கேடும் பீடுங் கூறலும் தோழி***

***நீக்கலி னாகிய நிலைமையும் நோக்கி***

***மடல்மா கூறும் இடனுமா ருண்டே***”[18] (கள., நூ.எ. 11)

என்பர். இந்நூற்பாவில், நீக்கலினாகிய நிலைமை என்பதற்கு, ‘அஞ்சி அச்சுறுத்தலென ஓதப்பட்டது’ என இளம்பூரணர் விளக்குகிறார். “***தோழி இவ்விடத்துக் காவலர் கடியரெனக் கூறிச் சேட்பட நிறுத்தலிற்றனக்கு உண்டாகிய வருத்தத்தையும் பார்த்து***”[19] என்று நச்சினார்க்கினியர் உணர்த்துகிறார். மேலும், முன்னதாக மெய் தொட்டுப் பயிறலுக்கு உரைவிளக்கம் தரும்போது ஆயத்தாருள்ளே வருவான் கொல் என்னும் அச்சங்கூறவும் வாரான்கொல் என்னும் காதல் கூறவும் என்ற நச்சினார்க்கினியர் உரை விளக்கத்திற்கு தோழியர் கூட்டத்துள் வருவானாயின் நம் களவு வெளிப்பட்டு விடும். வந்தால் அவனை ஒருமுறை கண்டு மகிழலாம் என்ற காதல் உணர்வும் தலைமகள் உள்ளத்தில் தோன்றும் என்கிறார். இதில் ‘நீக்கலினாகிய’ என்ற சொல்லில் அச்சம் உணர்த்தப்பட்டுள்ளது.

தலைவியின் வேட்கைக் குறிப்பை வெளிப்படுத்தும்போது அச்சம் வெளிப்படுவதை உரையாசிரியர் விளக்கத்தின் வழி அறிய முடிகிறது. இதனை,

"***காமத் திணையில் கண்நின்று வரூஉம்***
***நாணும் மடனும் பெண்மைய ஆகலின்***
***குறிப்பினும் இடத்தினும் அல்லது வேட்கை***
***நெறிப்பட வாரா அவள்வயின் ஆன***"[20] (கள., நூ.எ. 18)

என்னும் நூற்பா உணர்த்துகிறது. இவற்றில், 'காமத்திணை என்பதனை குறிப்பு என்பதற்கு முன்னே கூட்டியுரைக்க அச்சமும் இயல்பன்றோவெனின் அதுவும் வேட்கைக் குறிப்பினான் நீங்குமென்ப அச்சமுள்வழி வேட்கை நிகழாமையின், வேட்கையுள்வழி நாணும் மடனும் நீங்காவோ எனின், அது வருகின்ற சூத்திரத்தால் கூறுப' என்று இளம்பூரணர் கூறும் விளக்கம் தெளிவாகிறது. இதனைப் பின்தொடரும் நச்சினார்க்கினியர், "***அப்பருவத்தே தோன்றிய காம ஒழுக்கங்காரணமாக அவை கண்ணின்கண் நின்று குறிப்பினும் வரும் அன்றி வேட்கைத் தன்றன்மை திரியாது வழிபடுதலே கரும் நிகழ்ச்சியின் கண்ணும் வரும். அவ்வீரிடத்துமல்லது அவை வாரா***"[21] என்று உரை தருகிறார்.

"***காமத்திணையாகிய அன்பின் ஐந்திணை ஒழுகலாற்றில் கண்ணின் குறிப்புடன் ஒன்றி வெளிப்படும் நாணும் மடனுமாகிய இவை பெண்மைக்குரிய நீங்காப் பண்புகளாதலின் தலைவியின் வேட்கை குறிப்பினானும் இடத்தினானும் அன்றிக் கூற்றினால் வெளிப்படும் அளவிற்குத் தலைவி மாட்டு மிக்குத் தோன்றுதல் இல்லை***"[22] என வெள்ளைவாரணர் விளக்கம் தருகிறார்.

'குறிப்பு' என்பது தலைவியானவள் தன் வேட்கையை முன்கூட்டியே உரைக்கத் தயங்குவதை அச்சம் என்று இளம்பூரணர் உரை விளக்கம் தருகின்றார். பெண்களுக்கே உரிய, அவர் உள்ளத்தில் உருவாகும் சிறு பயம் என்பதை உணர்த்துகிறார் என்பதை உணர முடிகிறது. தம் வேட்கையைத் தலைவனிடம் எடுத்த எடுப்பிலேயே சொன்னால் ஏதேனும்

ஒழுக்கக் குறைவு தனக்கு உண்டாகுமோ? எனத் தன் மனதிற்குள் எண்ணும்போது உருவாகும் ஒருவித உணர்வுதான் சிறு பயம், தயக்கம், அச்சம் என்பதை உய்த்துணர முடிகிறது.

தலைவி கூற்றில் பின்னர் வரும் துன்ப உணர்வைக் கூறுமிடத்து,

"***மறைந்தவற் காண்டல் தற்காட் டுறுதல்***
***நிறைந்த காதலில் சொல்லெதிர் மழுங்கல்***
***.........................................................***
***இட்டுப்பிரி விரங்கினும் – அருமைசெய் – தயர்ப்பினும்***
***வந்தவழி எள்ளினும் விட்டுயிர்த் தழுங்கினும்***
***நொந்துதெளி வொழிப்பினும் அச்சம் நீடினும்***
***.........................................................***
***வெறியாட் டிடத்து வெருவின் கண்ணும்***
***.................................................................***"[23] (களா., நூ.எ. 21)

என்னும் நூற்பா வரிகள் உணர்த்துகிறது. இந்நூற்பாவில், இட்டுப்பிரிவு இரங்கினும் என்பதற்கு, 'தலைவன் இட்டுவைத்து பிரிவன் என அஞ்சியதற்கு இரக்கமுரினும்' என்றும், 'வந்தவழி எள்ளினும்' என்பதற்கு, 'தலைவன் வந்தவிடத்து அலராகுமென்றஞ்சி இகழ்ந்த வழியும்' என்றும், 'அச்சம் நீடினும்' என்பதற்கு, 'தலைவன் வருகின்ற இடையீடாக அச்சம் மிக்குழியும்' என்றும் வெளியாட்டிடத்து வெருவின் கண்ணும்' என்பதற்கு 'தலைவி வேறுபாடு எற்றினாயிற் றெனச் செவிலி வெறியாட்டுவிக்க வரும் அச்சத்தினாலுங் குறிவழிச் செல்லாளாம்' என்று இளம்பூரணர் விளக்குகிறார்.

நச்சினார்க்கினியர், "***சேணியிடையின்றி இட்டதாகப் பிரிந்துழி தலைவி இரங்கினும்' என்றும், பெரியதாகிய இடைக்காட்டினுள் அரிதாகத் தலைவன் வந்த ஞான்றும் பெறாத ஞான்றைத் துன்பமிகுதியாற் பெற்றதனையுங் கனவு போன்று கொண்டு இகழ்ந்திருப்பினும்' என்றும், 'தெய்வம் அச்சூளுறவிற்கு அவனை வருத்துமென்றுந் தந்தை தனையர் அறிகின்றாரோ வென்றுங்கூட முன்மை உணர்ந்த தோழிக்கு உண்மை***

***கூறுவதற்கும் அஞ்சிய அச்சம் நீடிப்பினும் என்றும், 'தலைவி வேறுபாடு ஏற்றினானாயிற்றென்று வேலவனை வினாய் வெறியாட்டு எடுத்துழித் தலைவி அஞ்சும் அச்சத்தின் கண்ணும்***"[24] என்றும் விளக்குகிறார்.

வெள்ளைவாரணர் தம் ஆய்வுரையில், "***தலைவன் தன்னைச் சிறிது காலம் பிரிந்த நிலையில் உளதாகிய இரக்கத்தின் கண்ணும்', அவன் தன்னைக் காண வந்த காலத்து விரும்பாது தவிர்ந்த நிலையிலும்' தலைவன் வருகின்ற வழியிடையேயுள்வாகும் இடையூறுகளை நினைத்து தன் மனத்தே அச்சம் மிகுந்த நிலையிலும் தலைவிக்கு இவ்வுடல் மெலிவு எதனால் ஏற்பட்டது எனச் செவிலி வேலனைக் கொண்டு வெறியாட்டு நிகழ்த்துவிக்க வரும் அச்சத்தின் கண்ணும்***"[25] என்று விரிவான விளக்கம் தருகிறார்.

தலைவன் காட்டிடையே வருவதை எண்ணிய தலைவிக்கு, அக்காட்டிடையே தலைவனுக்கு நேரிடக் கூடும் துன்பத்தை நினைத்து அவளின் மனதிற்குள் உண்டாகும் துன்ப உணர்வே 'அச்சம்' என்பது புலனாகிறது. அதேபோல், ஊரார் பழிதூற்றும் 'அலர்' உணர்வினை நினைத்து உண்டாகும் உணர்வே அச்சம்' என்பதையும் உணர முடிகிறது.

தலைவன், தலைவியைப் பார்க்க பிறர் அறியாது இரவு நேரத்தில் காட்டிடத்தே வருகின்றான். இது தலைவிக்கு மட்டும் தெரிகிறது. தலைவன் காட்டினிடையே வருகின்றபோது, காட்டிலுள்ள கொடிய உயிரினங்களால் ஏதேனும் தீங்கு நேரிடக்கூடும் என்பதை யோசித்து தன் மனதிற்குள் பயம் உண்டாகிறது. மேலும், ஊரார் பலர் தலைவனைப் பற்றி தவறாகப் பேசிடக்கூடும் என்பதையும் தலைவி உணர்கிறாள். தலைவனுக்கு இந்நிலையானது தன்னால்தான் உருவாகிறது என்பதை உணர்ந்தும், இதனால் தலைவன் எந்த அளவில் மன வேதனையுறுவான் என்பதை உணர்ந்தும் மனப்பதற்றம் உருவாகிறது. இதுபோன்ற சிந்தனைகள் மேற்காணும் நூற்பாவழி உணர முடிகிறது.

களவு ஒழுக்கத்தில் தோழிக்குரிய கூற்று நிகழும்போது அச்சம் உருவாகும் சூழல் உணர்த்தப்பட்டுள்ளது. இதனை,

"***நாற்றமும் தோற்றமும் ஒழுக்கமும் உண்டியும்***
***செய்வினை மறைப்பினும் செலவினும் பயில்வீனும்***
***..................................................................***
***முன்னுறு புணர்ச்சி முறைநிறுத் துரைத்தலும்***
***அஞ்சியச் சுறுத்தலும் உரைத்துழிக் கூட்டமோடு***
***........................................................***
***பாங்குற வந்த நாலெட்டு வகையினும்***
***தாங்குஅருஞ் சிறப்பின் தோழி மேன***"[26] (கள., நூ.எ. 24)

என்னும் நூற்பா வரிகள் சுட்டுகிறது. இந்நூற்பாவில், 'தான் அச்சமுற்ற அஞ்சின தன்மையைத் தலைவற்கு அறிவித்தலும் என்றவாறு, அது யாய்வருவ ளென்றானும் தமையன்மார் வருவ ரென்றானும் காவலர் வருவ ரென்றானும் கூறுதல்' என்று இளம்பூரணர் விளக்குகிறார். இதனை 'அஞ்சி அச்சுறுத்தலும்' என்னும் நூற்பா வரியில் உணர்த்தப்பட்டுள்ளதை அறிய முடிகின்றது.

மேற்காணும் நூற்பாவிற்கு, "***அங்ஙனம் ஆற்றுவித்துங் கடிது குறை முடியாமையைக் கருதுந் தோழி குரவரைத் தான் அஞ்சித் தலைவியும் அவரை அஞ்சுவளெனக் கூறலும்***"[27] என்று விளக்கம் தருகிறார் நச்சினாாக்கினியர்.

"***இக்களவொழுக்கம் தந்தை தன்னையர்க்குப் புலனாயின் யாதாய் விளையுமோ என அஞ்சியவளாய் அவ்வச்சத்தினைத் தலைவனுக்கு அறிவுறுத்தலும்***"[28] என்று விளக்குகிறார் வெள்ளைவாரணர்.

தலைவி, அகவொழுக்கத்தில் தலைவனுக்கும், தனக்கும் சமூகத்தில் ஒரு குறைபாடான ஒழுக்கம் நிகழ்ந்து விடக்கூடாது என வருத்தப்படக்கூடிய சூழல் பயம், அச்சம் என்ற உணர்வுகளாகப் பதிவு செய்யப்பட்டுள்ளதைக் களவியல் வழி உணர முடிகிறது.

மேலும், பின்னர் நிகழும் சூழல்களின் தன்மையை உணரும்போது அதனைத் தன்னால் மனதளவில் தாங்க முடியாது என்பதாலேயே பயம் உருவாகிறது.

பெண்களுக்கே உரிய குணங்களில் ஒன்றான உணர்வாகவே 'அச்சம்' என்பதை வரையறை செய்துள்ளதை உணர்ந்துகொள்ள முடிகிறது.

**கற்பியல்**

கற்பியலில் அச்சம் உணர்வு கூறப்பட்டுள்ளது. தலைவன் கூற்றிற்கு இலக்கணம் கூறுமிடத்தும், தலைவிக்குரிய இலக்கணம் வகுத்துக் கூறுமிடத்தும் அச்ச உணர்வு வெளிப்படுவதை அறியலாம். தலைவன் கூற்று முப்பத்திரண்டு இடங்களில் வருகின்றவற்றைத் தொகுத்துக் கூறும் நூற்பாவில் அச்ச உணர்வு புலப்படுவதை கீழ்வரும் நூற்பாவில் காண முடியும். இதனை,

"***கரணத்தின் அமைந்து முடிந்த காலை***
***நெஞ்சுதளை அவிழ்ந்த புணர்ச்சிக் கண்ணும்***
***எஞ்சா மகிழ்ச்சி இறந்துவரு பருவத்தும்***
***அஞ்சவந்த உரிமைக் கண்ணும்***
***…………………………………………………***
***அழியல் அஞ்சல் என்று ஆயிரு பொருளினும்***
***…………………………………………………***
***பிரிவின் நீக்கிய பகுதிக் கண்ணும்***
***நின்றுநனி பிரிவின் அஞ்சிய பையுளும்,***
***………………,,,,,,,,,…………………………***
***காமத்தின் வலியும், கைவிடின் அச்சமும்***
***……………………,,,,,,,,,,……………………***
***பண்ணமை பகுதி முப்பதினொரு மூன்றும்***
***எண்ணருஞ் சிறப்பிற் கிழவோன் மேன***"[29] (கற்., நூ.எ. 5)

என்ற நூற்பா வரிகளில் சுட்டுகிறது.

இந்நூற்பாவில், ‘அஞ்சவந்த உரிமை கண்ணும்’ என்பதற்கு, ‘தலைவன் தானும் பிறரும் அஞ்சும் படியாகத் தலைவிமாட்டு உளதாகிய கற்பாகிய உரிமைக்கண்ணும்’ என்றும், ‘அழியல் அஞ்சலென் றாயிரு பொருளினும்’ என்பதற்கு, ‘அழியல் அஞ்சல் என இயற்கைப் புணர்ச்சிக்குக் கூறிய அவ்விரு பொருளைப் பிழைத்த காலத்தினும் தலைவன் கண் கூற்று நிகழும்’ என்றும், ‘நின்றுநனி பிரிவன் அஞ்சிய பையுளும்’ என்பதற்கு ‘நிலை நிற்க மிக்கப்புரியும் பிரிவின்கண் அஞ்சிய நோயின் கண்ணும் கூற்று நிகழும்’ என்றும், ‘காமத்தின் வலியுங் கைவிடின் அச்சமும்’ என்பதற்கு, ‘தலைவியைக் கைவிட்ட வழி அவனது உயிர்ப் பொருட்டு அஞ்சுதற் கண்ணும்’ கூற்று நிகழும்’ என்றும் இளம்பூரணர் தரும் விளக்கத்திலிருந்து தலைவன் கூற்றில் அச்சம் தோன்றுமிடத்தை உணர முடிகிறது.

நச்சினார்க்கினியர், “ ***‘தலைவனும் பிறரும் அஞ்சும்படி தலைவிக்கண் தோன்றிய உரிமைகளிடத்தும்’ என்றும், ‘வந்த குற்றம் நினக்கு உளதென்று அழியலெனவும் எனக்குளதென்று அஞ்சலெனவுஞ் சொல்லப்படும் அவ்விரு பொருண்மைக் கண்ணும்’ என்றும், ‘முன்னில்லாதொரு சிறைப்போய் நின்று நீட்டித்துப் பிரிவினால் தலைவன் அஞ்சிய நோயின் கண்ணும்’ என்றும், ‘தலைவி தான் உணர்த்தவும் உணராமல் தன்னை கைவிட்டுப் பிரியாமல் தான் அவளை நீங்குவதற்கு அஞ்சிய அச்சத்தின் கண்ணும்***”[30] என்றும் தலைவன் கூற்றில் அச்சம் வரும் உணர்வு குறித்து விளக்கம் தருகிறார்.

மேற்காணும் உரையாசிரியர்களின் கருத்திற்கு, ‘***அஞ்சும்வண்ணம் தலைமகளிரிடத்தே உளதாகிய நிலத்தின் கண்ணும்’ என்றும், ‘வழியில் நிகழும் பல்வேறு இடையூறுகளையெண்ணி அஞ்சுதற்கேதுவாகிய களவு காலத்து உண்டு’ என்றும், ‘நாடிடையீட்டுப் பிரியும் நெடுவழிப் பிரிவின்கண் அஞ்சிய வருத்தத்தின் கண்ணும்’ என்றும் தலைவியைப் பிரிந்தவழி அவளுக்கு நேரும் துயர் கருதி அஞ்சிய நிலையிலும்***”[31] என்று தம் ஆய்வுரையில் விளக்கம் தருகிறார் வெள்ளைவாரணர்.

வரைவிற்குப் பின்பு தலைவிக்குக் குடும்பத்தின் கடமைகள் அதிகமாகிறது. குடும்பத்தை நிர்வகிக்கும் பெண் என்பதால் தலைவன் அவளிடம் சிறிது அஞ்சி நடக்கிறான். இச்சூழலில் தலைவன், தன் மனைவியிடம் கோபத்துக்கு ஆளாகக் கூடும் என தன் மனத்திற்குள் உருவாகக் கூடிய ஒரு உணர்வைப் பயம் என்பதைப் புலப்படுத்துகிறது. ஏனெனில் தலைவன் சில நேரங்களில் மனைவியிடம் ஊடல் கொண்டு பரத்தையிடம் சென்று வருவான். அந்த நேரத்தில் ஏதேனும் தன்னைப் பற்றி குறை கூறுவாள் என எண்ணும் உணர்வில் அச்சம் தோன்றலாகிறது.

தலைவன், தலைவியை விட்டு நீண்ட நாட்கள் பிரிகிறான். தன்னைச் சார்ந்து வாழக்கூடிய மனைவிக்குப் பிரிவுக் காலத்தில் ஏதேனும் தீங்கு நேரிடக்கூடுமோ? என எண்ணும்போது உருவாகக்கூடிய வேதனையுடனான உணர்வே தலைவனுக்குண்டான அச்சம் என்பதாகிறது.

களவுக்காலங்களில் நிகழ்ந்தவற்றை அதாவது, தலைவியிடம் ஏதேனும் கூறியதன்வழி உருவாகக்கூடிய பொய்மைப் பண்பு பற்றி தலைவனுக்குப் பயம் உருவாகிறது. ஏனெனில், கற்புக் காலங்களில் இருவரும் நேருக்கு நேர் உறவாடி மகிழ்ந்து வாழக்கூடிய சூழல் கட்டாயம் ஏற்படுகிறது. பழைய கால நிகழ்வுகளை நினைத்துப் பேசுகின்றபோது தலைவிக்கு தலைவன் பற்றிய உண்மை நிலைகள் தென்படக்கூடும். அப்போது தலைவன் தம் இருவருக்குள் மனக்கசப்பு உருவாகிவிடுமோ எனச் சிந்திக்கும்போது பயம் உருவாகும் என்பதை நூற்பாவில் உய்த்துணர முடிகின்றது.

தலைமகன் தன்னைச் சந்திக்க வரும்போது காட்டிடையே நிகழ்ந்ததைக் கூறும்போது அச்சூழலின் தன்மையை நினைத்து வருத்தமுற்று தலைவி அச்சமுறுவாள்' என்று கூறப்படுகிறது. இதனை,

"***புணர்ந்துடன் போகிய கிழவோண் மனையிருந்***
***திடைச்சுரத் திறைச்சியும் வினையும் சுட்டி***

*அன்புறு தக்க கிளத்தல் தானே*

*கிழவோன் செய்வினைக்கு அச்சமாகும்*"[32] (கற்., நூ.எ. 7)

என்னும் நூற்பா உணர்த்துகிறது. இந்நூற்பாவிற்கு இளம்பூரணர், 'களவிற்புணர்ந்து உடன் போகிய தலைமகள் கற்புக்கடன் பூண்டொழுகிய காலத்து மனைக்கணிந்த தான் முன்னர் இடைச்சுரத்தில் தலைவனுடன் கண்ட கருப்பொருள் முதலியவற்றையும் அவற்றின் தொழிலையும் குறித்துக் கிழவன் அஞ்சும் அச்சமாகும்' என விளக்குகிறார்.

நச்சினார்க்கினியர், "***களவுக்காலத்துப் புணர்ந்து உடன் போகிய தலைவி கற்புக்காலத்து இல்லின்கண் இருந்து இடைச்சுரத்து இறைச்சியும் அன்புறுதக்க வினையுஞ்சுட்டிக் கிளத்தல் தானே. தான் போகிய காலத்துக் காட்டின் கண்ட கருப்பொருள்களையுந் தலைவன் தன்மேல் அன்பு செய்தற்குத்தக்க கருப்பொருளினைத் தொழில்களையும் கருதிக் கூறுதல்தானே. கிழவோன் செய்வினைக்கு அச்சம் ஆகும். தலைவன் எடுத்துக்கொண்ட காரியத்திற்கு முடித்தலாற்றான் கோலென்று அஞ்சும் அச்சமாகும்***"[33] என விளக்கம் தருகிறார்.

"***களவொழுக்கத்தில் தலைவனுடன் கூடி, உடன்போக்கில் சென்ற தலைவி, பின்னர் மனையறக் கடமைபூண்டு மனைக்கண் இருந்து சுரத்திடையே தலைவனொடு சென்றபோது தான் முன்பு கண்ட கருப்பொருள்களையும் அவற்றின் தொழில்களையும் சுட்டித் தலைவன் தன் மேல் அன்புகூர்தற்குத் தக்கவற்றைக் கூறுதலே தலைவன் பிரிந்து சென்று செய்யும் வினைக்கண் அஞ்சும் அச்சத்திற்குக் காரணமாகும்***"[34] என க. வெள்ளைவாரணர் கூறுகிறார்.

களவுக்காலத்து உடன்போக்கு நிகழ்வில் இருவரும் பேசிக்கொள்ளுகின்றபோது அவ்வழியில் கருப்பொருள்களின் வாயிலாக தனக்கு ஏற்பட்ட துன்பத்தை எடுத்துச் சொல்லும்போது அச்சம் தோன்றும் என்பதை உணர முடிகிறது.

**பொருளியல்**

வரைவுகடாதலும் அதன் முறைமையும் கூறுமிடத்து தலைவனுக்கு ஏற்படும் துன்பம் குறித்து தலைவிக்கு வரும் அச்ச உணர்வு பற்றி நூற்பா விளக்குகிறது. இதனை,

"***பொழுதும் ஆறும் காப்புமென் றிவற்றின்***
***வழுவி னாகிய குற்றங் காட்டலும்***
***தன்னை யழிதலும் அவணூ றஞ்சலும்,***
***.......................................................***
***வரைதல் வேட்கைப் பொருள என்ப***"[35] (பொருள்., நூ.எ. 207)

என்னும் நூற்பா உணர்த்துகிறது. 'பொழுது ஆறும் காப்புமென்று இவற்றின் வழுவினாகிய குற்றங்காட்டலும், தன்னையழிதலும், அவனுறு அஞ்சலும் இரவினும் பகலினும் நீ வா என்றலும்' என்ற விளக்கத்தில் தலைவனுக்கு உண்டாகிய துன்பச் சூழலைக் கூறும்போது அவற்றைத் தன் மனதிற்குள் நினைத்துப் பார்ப்பதனால் அச்சம் உருவாகிறது என்பதை அறிய முடிகிறது. இதில் 'அவனூறு அஞ்சலும்' என்பதற்கு "***அவ்வரியிடத்துத் தலைவற்கு வரும் ஏதமஞ்சலும்***"[36] என்று விளக்கம் தருகிறார் நச்சினார்க்கினியர். தலைவியைச் சந்திக்க நேரிடும்போது தலைவனுக்கு உண்டாகிய துன்பம் உணர்வை தலைவி உள்ளம் பதறக்கூடிய நிலையைக் காணலாம்.

களவின்கண் தலைமகளுக்குரிய பண்புகளை வரையறுத்துக் கூறுமிடத்து அச்சம் தோன்றுவதை,

"***ஒருதலை உரிமை வேண்டினும் மகடூஉப்***
***பிரித லச்சம் உண்மை யானும்***
***அம்பலும் அலரும் களவுவெளிப் படுக்குமென்று***
***அஞ்ச வந்த ஆங்கிரு வகையினும்***
***நோக்கொடு வந்த இடையூறு பொருளினும்***
***போக்கும் வரைவும் மனைவிகண் தோன்றும்***"[37] (பொருள்., நூ.எ. 221)

என்னும் நூற்பாவில் உணர்த்தப்பட்டுள்ளது. இவற்றில் 'மகடூஉப் பிரிதல் அச்சம் உண்மையானும்' என்பதற்கு, 'பிரிதற்கண் வரும் அச்சம்

பெண்பாற்கு இயல்பாகும்' என்றும், அஞ்சவந்தவாங் கிருவகையினும்' என்பதற்கு, 'களவொழுக்கத்தை வெளிப்படுத்த அஞ்சும்படியாக கண்ணும்' என்றும் விளக்கம் தருகிறார் இளம்பூரணர்.

நச்சினார்க்கினியர், "***ஆள்வினைக் குறிப்புடைமையின் ஆண்மக்கள் பிரிவரென்று அஞ்சும் அச்சம் மகளிர்க்குண்டாகையினாலும்' என்றும், அக்களவொழுக்கத்திடத்தே அம்பலும் அலரும் இக்களவைப் பிலப்படுக்குமென்று அஞ்சும்படி தோன்றிய இருவகைக் குறிப்பானும்***"[38] என உரை விளக்கம் தருகிறார்.

வெள்ளைவாரணர், "***வினை நிகழ்த்துதலில் விருப்புடைய ஆண்மக்கள் தம்மை விட்டுப் பிரிவர் என்னும் அச்சம் பெண்டிர்க்கு இயல்பாதலானும், களவொழுக்கத்தைப் புறத்தார்க்கு வெளிப்படுத்தும் என்று அஞ்சும்படி தோன்றிய அம்பலும் அலரும் ஆகிய இருவகைக் குறிப்பினாலும்***"[39] என்றும் விளக்குகிறார்.

தொல்காப்பியர் அச்சம் 'பிரிதல் அச்சம், அஞ்ச வந்த' எனும் சொற்களில் தலைவியின் பய உணர்வை உணர்த்துகிறார்.

'அம்பல்', 'அலர்' என்பது தலைவன் தலைவியின் காதல் ஒழுக்கங்களை ஊரார் பலரும் பேசிக்கொள்வதால் மனம் வேதனை அடைகின்றது. பலரும் பலவிதமாகப் பேசக் கூடும் என்பதை நினைத்தும், பேசக்கூடியவர்களிடம் தான் எதிர்படும்போது மனவுறுத்தல் உருவாகும் என்பதை நினைக்கும் சூழல் அச்சத்தை உருவாக்குகிறது.

தலைவிக்குரிய இயல்பு கூறுமிடத்து 'அச்சம்' உருவாகக்கூடிய சூழலைத் தொல்காப்பியர்,

"***செய்பொரு ளச்சமும் வினைவயிற் பிரிவும்***
***மெய்பெற உணர்த்துங் கிழவிபா ராட்டே***"[40] (பொருள்., நூ.எ. 228)

என்னும் நூற்பாவில் சுட்டுகிறார்.

'செய்பொருள் அச்சமும்' என்பதற்கு இளம்பூரணர், 'தலைமகன் பொருள்வயிற் பிரியுமிடத்து ஆறின்னாமையான் உளதாகிய அச்சமும்' என்கிறார். இவற்றிற்கு நச்சினார்க்கினியர், "***யாஞ் செய்யக் கருதிய பொருட்கு இவள் இடையூறாவாள்கொலென்று தலைவன் எஞ்சிய அச்சத்தையும்***"[41] என்று கூறுகின்றார். இவற்றிற்கு குறிப்புரை தரும் வெள்ளைவாரணர், "***தலைவன் தான் பிரிந்து சென்று பொருள் ஈட்டுதற்குத் தலைவி தடை செய்வாளோ எனத் தன் உள்ளத்தில் கொண்ட அச்சமாகும்***"[42] எனக் குறிப்பிடுகிறார்.

தலைவன் தலைவி இருவரிடையே அச்சம் சார்ந்து பேசும் மரபு குறித்து,

"***உயர்மொழிக் கிளவி உறழுங் கிளவி***
***ஐயக் கிளவி ஆடுவிற் குரித்தே***"[43] (பொருள்., நூ.எ. 234)

எனத் தொல்காப்பியர் உணர்த்துகிறார்.

இவற்றிற்கு உரை தரும் இளம்பூரணர், 'உயர்த்திச் சொல்லுதற்குரிய கிளவி தலைமகற்குந் தலைமகட்கும் ஒத்தகிளவி, ஐயக்கிளவி தலைமகற்கே உரித்தென்ற வாறு' என்கிறார்.

"***ஐயக்கிளவி தலைமகற்கே உரித்தென்றவாறு' என்ற இளம்பூரணர் உரைக்கு விளக்கம் தரும் வெள்ளைவாரணர், 'தலைவி ஐயுறுமிடத்து தெய்வமோ? என்று ஐயுறுதல் வேண்டும். அங்ஙனம் அணங்கு (தெய்வம்) என்று ஐயுற்றால், அவளது உள்ளத்தே அச்ச உணர்வு தோன்றுமல்லது***"[44] என்று குறிப்பிடுகின்றார்.

இவ்வாறு ஐயத்துடன் பேசுவது தலைவன்தான் என்பது தெரிகிறது. ஏனெனில் அச்சம் தோன்றினால் தலைவிக்கு காம உணர்ச்சி இல்லாது போய்விடும். இதன் காரணமாகத் தலைவனுக்கு ஐயக் கிளவி தோன்றும் என்கிறார் என்பதை உணர முடிகிறது.

இங்கு தலைவன் பிரியுமிடத்து வழியிடையே நேரும் துன்பங்களை எண்ணி தலைவி அஞ்சுவதாக இளம்பூரணரும், தலைவன் பிரிந்து செல்லுமிடத்துத் தலைவி தடை செய்வாளோ எனத் தலைவன் அஞ்சுவதாக நச்சினார்க்கினியரும் குறிப்பிடுகின்றனர். இவ்வாறு தலைவனின் மனத்திற்குள்ளேயும் அச்ச உணர்ச்சி ஏற்படும் என்பதை அறிய முடிகிறது.

**மெய்ப்பாட்டியல்**

எண் வகை மெய்ப்பாட்டில் ஐந்தாவது மெய்ப்பாடாக, அச்சம் குறித்து கூறுகிறார் தொல்காப்பியர். இதனை,

"***நகையே அழுகை இளிவரல் மருட்கை***
***அச்சம் பெருமிதம் வெகுளி உவகையென்று***
***அப்பால் எட்டாம் மெய்ப்பாடு என்ப***"[45] (மெய்., நூ.எ. 3)

என்ற நூற்பாவில் குறிப்பிடுகிறார். இவற்றில் எட்டுவகை மெய்ப்பாட்டில் அச்ச மெய்ப்பாடு ஐந்தாவதாக அமைந்துள்ளது.

மெய்ப்பாடு என்பது பற்றி உரையாசிரியரான இளம்பூரணர் "***அச்சமுற்றான் மாட்டு நிகழும் அச்சம், அவன்மாட்டுச் சத்துவத்தினாற் புறப்பட்டுக் காண்போர்க்குப் புலனாகும் தன்மை மெய்ப்பாடு எனக் கொள்ளப்படும். மெய்யின்கண் தோன்றுதலின் மெய்ப்பாடாயிற்று***"[46] என்கிறார். மேலும், மெய்ப்பாடு குறித்து, பேராசிரியர், "***மெய்ப்பாடென்ப பொருட்பாடு, அஃதாவது உலகத்தார் உள்ள நிகழ்ச்சி ஆண்டு நிகழ்ந்தவாறே, புறதார்க்குப் புலப்படுவதோர் ஆற்றான் வெளிப்படுதல் மெய்ப்பாடு***"[47] என விளக்குகிறார். சோமசுந்தர பாரதியார் "***மெய்ப்பாடு என்பது அக உணர்வுகளை ஆழ்ந்து ஆராயாமலே யாவரும் இனிதரிய புலப்படுத்தும் இயற்புறவுடற் குறியாம்***"[48] என்று கூறுகிறார். க.வெள்ளைவாரணர், "***மனத்தினால் உயர்துணிரினல்லது ஐம்பொறிகளால் உணர்ந்து முடியாது பொருள்கள் சிலவற்றை மேல்பொருளியல் இறுதியில் தொகுத்தோதினார். வடிவமில்லாதனவாகிய அப்பொருள்களையும் பொறிவாயிலாக மனங்கொள்ளுதற்கு ஏதுவானவை மெய்ப்பாடுகளாகும்***

***என்பார். உலகத்தாரது உள்ள நிகழ்ச்சி அவரது உடம்பின்கண் கண்ணீரரும்பல், மெய்மயிர் சிலிர்த்தல், வியர்த்தல், நடுக்கம் முதலிய புறக்குறிகளால் காண்போர்க்குப் புலனாகும் தன்மை மெய்ப்பாடு என்பதும்***"[49] அவ்வாசிரியர் கருத்து.

தொல்காப்பியர் எண்வகை மெய்ப்பாடுகளுள் 'அச்சம்' ஐந்தாவதாகச் சுட்டியுள்ளார். இவ்வச்சத்தைப் பற்றி உரையாசிரியர்களான இளம்பூரணர், "***அஞ்சத் தகுவனவற்றாய் பிறப்பது***"[50] என்று விளக்குகிறார். பேராசிரியர் "***அச்சம் என்பது பயம்***"[51] என்று கூறியுள்ளார். சோமசுந்தர பாரதியார், "***ஒன்றைக் கண்டு அஞ்சுவது***"[52] எனச் சுட்டுகிறார். க.வெள்ளைவாரணார், "***அணங்கு முதலியன கண்டு அவற்றொடு முரணி நிற்குங் காலத்து அச்சம் தோன்றுவதில்லை அவற்றொடு முரணிற்கும் திறமில்லாதார் உள்ளத்திலேயே அச்சம்***"[53] என்று விளக்குகிறார்.

மேலும், அச்சம் மெய்ப்பாடு தோன்றுவதற்கான நிலைக்கலன்கள் எவை என்பதை,

"***அணங்கே விலங்கே கள்வர்தம் இறையெனப்***
***பிணங்கல் சாலா அச்சம் நான்கே***"[54] (மெய்., நூ.எ. 8)

என்ற நூற்பாவில், மெய்ப்பாடு எட்டு வகையானது என்பதும் அவற்றில் அச்சம் என்னும் மெய்ப்பாடு அணங்கு, விலங்கு, கள்வர், இறை ஆகிய நான்கின் அடிப்படையில் பிறக்கும். அணங்கு முதலாகச் சொல்லப்பட்ட நான்கினும் பிறக்கும் மாறுபடுதல் அமையாத அச்சம் நால்வகைப்படும். 'பிணங்கல் சாலுமாயின் நடுக்கம் முதலாயின உளவாகா, அவை பிணங்கல் சாலாக வழியே உளதாவதென்று கொள்க' என்று விளக்கம் கூறுகிறார் இளம்பூரணர்.

"***அணங்கென்பன பேயும் பூதமும் பாம்பும் ஈறாகிய பதினெண்கண்ணும் நிரயபாலரும் பிறரும் அணங்குதற்றொழிலராகிய சவந்தின் பெண்டிர் முதலாயினாரும் உருமிசைத் தொடக்கத்தனவுமெனப்படும். விலங்கென்பன அரிமா முதலாகிய அஞ்சுதக்கன. கள்வரென்பார் தீத்தொழில் புரிவார், இறையெனப்படுவார்***

***தந்தையரும் ஆசிரியரம் அரசரும் முதலாயினார். பிணங்கல்சாலா அச்சமென்றதனான் முன்னையபோல இவை தன்கட் டோன்றலும் பிறன்கட்டோன்றலு மென்னுந்தடுமாற்றமின்றிப் பிறிது பொருள் பற்றியே வருமென்பது்***''[55] என்று அச்சம் தோன்றும் நிலைக்களன்களுக்கு பேராசிரியர் விளக்கம் தருகிறார்.

சோமசுந்தர பாரதியார், 'காட்சியளவில் காரணங் காணொணாவிடத்துக் கடவுள்மேல் ஏற்றிக்கூறு முலகியலில், துன்புறுத்தும் 'சூர்' அதாவது இயவுளாக் கொள்வதை அணங்கென்பது பழவழக்கு கள்வர், அலைத்துப் பொருள் வெளவுவோர். 'இறை' குற்றங்கடிந்தொறுக்கும் வேந்து. குடிக்குற்றம் ஒறுத்தோங்கும் அறம் பிறர்க்கின்மையின் மிறைகடியும் ஒறுப்பச்சம் தரும் வேந்தைத் 'தம்மிறை' எனச் சுட்டிய பெற்றியறிக. அச்ச ஏதுவாம் தம் மிறையை (துவற்றை)யும் அதற்குரிய ஒறுப்பாலச்சுறுத்தும் தம் இறையையும், ஒருங்கே 'தம்மிறை' எனச் சுருக்கி இரட்டுற மொழிதலாகச் செவ்வியுணர்க. இனி, பிணங்கல் மாறுபடல்; நெருங்குதலுமாம். காரணத்தோடு மாறுபடுவதோ நெருங்குவதோ கூடுவதெதுவும் அஞ்சப் படாதாதலின், ''***பிணங்கல் சாலா அச்சம் நான்கே என்றிற் நான்கன் பொதுவியல் விளக்கப்பெற்றது எனவும், ஏகாரங்களுள் முன்னவையும் எண்குறிக்கும் ஈற்றேகாரம் தேற்றம், அசையுமாம்***''[56] என்று நிலைக்களன் குறித்து குறிப்புரை தருகிறார்.

அச்சத்திற்குரிய நிலைக்களன்கள் குறித்த தம் ஆய்வுரையில், அணங்கு, விலங்கு, கள்வர், தம் இறைவன் என மாறுபாடுதலில்லாத அச்சம் நான்கு வகைப்படும்.

''***அணங்கு என்பன எதிர்ப்பட்டாரை வருத்தும் இயல்பினவாகிய பேய் பூதம் முதலியன. விலங்காவன அரிமா, புலி முதலாகவுள்ள கொடிய விலங்குகள். கள்வராவார் சோர்வு பார்த்துப் பிறரை வஞ்சித்துக் கொடுந்தொழில் புரிவோர். தம் இறையென்றது தந்தை, ஆசிரியன், அரசன், வழிபாடு தெய்வம் என இவ்வுரிமை முறையிற்பணிகொண்டு தம்மை ஆளும் தலைவரை, அஞ்சத்தக்கனவாகிய இவற்றைக் கண்ட***

***நிலையில் உள்ளம் நடுக்கமுற்று அஞ்சுதல் இயல்பு. இவ்வாறு நடுங்காது பிணங்கி எதிர்நிற்பாரது உள்ளத்தில் அச்சந்தோன்றாது என்பார். 'பிணங்கல் சாலா அச்சம்' என அடைபுணர்த் தோதினார். அச்சத்திற்குக் காரணமாகிய இவை நான்கும் தன்கண் தோன்றுவன பிறர்கண் தோன்றுவன என இருபாற்படாது பிறிது பொருள் என ஒருபாற்பட்டே நிற்பனவாம்***"[57] என க.வெள்ளைவாரணர் விளக்குகிறார்.

எண்வகை மெய்ப்பாடுகள் தவிர, மெய்ப்பாட்டியல் வேறு சில பொதுவான மெய்ப்பாடுகளாக அக, புற மெய்ப்பாடுகள் பற்றியும், அகத்திணைக்குரிய மெய்ப்பாடுகள் பற்றியும், பெருந்திணைக்குரிய மெய்ப்பாடுகள் பற்றியும் கூறுகின்றன.

அக, புற ஒழுக்கத்திற்குரிய மெய்ப்பாட்டு நிலைக்களன்களாக முப்பத்து இரண்டை உணர்த்துகிறார். இவற்றை,

"***ஆங்கவை ஒருபால் ஆக வொருபா லா***
***உடைமை இன்புறல் நடுவுநிலை யருளல்***
.........................................................
***முனிதல் நினைதல் வெரூஉதல் மடிமை***
.....................................................
***வியர்த்தல் ஐயம் மிகைநடுக் கெனாஅ***
***அவையும் உளவே அவையலங் கடையே***"[58] (மெய்., நூ.எ. 12)

என்ற நூற்பாவில் சுட்டுகிறார். இவற்றில், 'வெரூஉதல்' என்பதற்கு, 'அச்சம் போல நீடுநில்லாத கதுமெனத் தோன்றி மாய்வதோர் குறிப்பு' என்கிறார் இளம்பூரணர். "***விலங்கும் புள்ளும் போல வெருவிநிகழும் உள்ள நிகழ்ச்சி, அஃது அஞ்ச வேண்டாதன கண்டவழியும் கடிதிற் பிறந்து மாறுவதோர் வெறி***"[59] என்று பேராசிரியரும், "***பிரிவும் ஊறும் அஞ்சுதல்***"[60] என்று சோமசுந்தர பாரதியாரும் விளக்கம் தருகின்றனர்.

மேலும், 'நடுக்கம்' என்பதற்கு "***யாதானும் ஒரு பொருளை இழக்கின்றோமென வரு மனநிகிழ்ச்சி***"[61] என்று இளம்பூரணரும், "***அன்பும் அச்சமும் முதலாயின உடம்பிற புலம்படுமாற்றன் உள்ள நடுங்குதல்***"[62]

என்று பேராசிரியரும், "***காதலர்க்கு உணர்வு மிகையானாம் பனிப்பு***"[63] என்று சோமசுந்தர பாரதியாரும் சுட்டுகின்றனர்.

உரையாசிரியர்களின் உரை விளக்கத்தின் வழி, 'வெருஉதல்' என்பது பிறர் பயமுறுத்துவதால் சில கணப்பொழுது மனமும், உடலும் பயமுற்று மீளும் உணர்வேயாகும் என்பது புலனாகிறது. ஏதோ ஒன்றை தான் இழக்கும்பொருட்டு அதனால் பயந்த உணர்வை உடல் சுய கட்டுப்பாட்டுக்கு கொண்டு வர முடியாது வெளிப்படுத்தும் ஒரு அதீத உணர்ச்சியே நடுக்கம் என்பதை அறிய முடிகிறது.

முதல் அவத்தையின்கண் பெண்பாலுக்கு வரும் மெய்ப்பாடு பற்றி,

"***புதுமுகம் புரிதல் பொறிநுதல் வியர்த்தல்***
***நகுநய மறைத்தல் சிதைவுபிறர்க் கின்மையொடு***
***தகுமுறை நான்கே ஒன்றென மொழிப***"[64] (மெய்., நூ.எ. 13)

என்னும் இந்நூற்பாவில், 'பொறிநுதல் வியர்த்தல்' என்னும் கிளவிக்கு, 'அவ்வழி முகம்புக்கு அவனைப் பொருந்திய தலைமகள் உட்கும் நாணும் வந்துழி வரும் நுதல் வியர்ப்பு' என்கிறார் இளம்பூரணர். "***தலைமகன் தன்னை நோக்கியவழி உட்கும் நாணும் ஒருங்கு வந்தடைதலின் வியர்பொறித்த நுலளாதனும்***"[65] என்கிறார் பேராசிரியர். "***காதலால் நோக்கெதிர்ந்த தலைவி தனக்கியல்பாய அச்சமும் நாணும் அலைக்க அவள் நெற்றியின் பொறிவியர் பொடித்தல்***"[66] என்கிறார் சோமசுந்தர பாரதியார். இங்ஙனம் "***தலைவன் தலைவியை விரும்பி நோக்கிய நிலையில் அச்சமும் நாணும் ஒருங்கு வந்தடைதலால் வியர்வை யரும்பிய நெற்றியை யுடையவளாதல் 'பொறிநுதல் வியர்த்தல்' என்னும் மெய்ப்பாடாகும்***"[67] என்றும் வெள்ளைவாரணர் அச்ச உணர்வுடனான மெய்ப்பாடு குறித்து விளக்கம் தருகிறனர்.

தலைவி, தலைவனை எதிரில் பார்க்கிறாள். அவனும் அவளை நோக்குகிறான். அச்சூழல், முதன்முதலாக ஒரு ஆடவனை நோக்குவதைப் பிறர் அறிந்துகொள்வரோ, அறிந்தால் தன்னைக் குறைவான ஒழுக்கமுடையவள் என நினைத்துவிடுவரோ என்றும் சந்தித்த நேரத்தில்

உருவாகக் கூடிய சிறு பயத்தால், உணர்ச்சியால், நெற்றியில் வியர்க்கிறது என்பதை உணர முடிகிறது. இதேபோல் பெண்பாற்குரிய ஐந்தாம் அவத்தைக்கண் வரும் மெய்ப்பாடு வரையறுத்துக் கூறுமிடத்து, உரையாசிரியர் விளக்கத்தின் வழியாக அச்ச உணர்வு கூறுவதை,

"***தெரிந்துடம் படுதல் திளைப்புவினை மறுத்தல்***
***கரந்திடத் தொழிதல் கண்டவழி உவத்தலொடு***
***பொருந்திய நான்கே ஐந்தென மொழிப்***"[68] (மெய்., நூ.எ. 17)

என்பர். இதில் 'கரந்திட தொழிதல்' என்பதற்கு 'தலைமகனைக் காண்டல் வேட்கையால் ஒழித்துப் படத்தினின்று மொழிதல்' என்று இளம்பூரணர் உரை தருகிறார். பேராசிரியர், "***அக்காலத்து இற்செறிக்கப்படுதலால்தான் அவனை மறுத்த ஏதத்திற்கு நாணியும் அஞ்சியும் அவற்கு வெளிப்படாதொழுகுதலை உடையளாதலும்***"[69] என்று உணர்த்துகிறார். "***சுரந்தெழு காதலைக் கரந்தழிதலைவி தனிமையில் வினையெலாம் தவிர்தலைச் சுட்டும்***"[70] என்கிறார் சோமசுந்தர பாரதியார். வெள்ளைவாரணர், "***தலைமகள் பெற்றோரால் இற்செறிக்கப்படுதல் காரணமாகத்தான் தலைவனது கூட்டத்தை மறுத்த குற்றத்திற்கு அஞ்சியும் நாணியும் அவன் முன்னர் வெளிப்படாது மனையகத்தே மறைந்தொழுகிங் கருத்துடையளாதல் கரந்திடத் தொழிதல்***"[71] என்னும் மெய்ப்பாடாகும் என்று கூறுகிறார்.

தான் ஒழுகி வந்த காதல் ஒழுக்கமானது, பெற்றோருக்குத் தெரிந்து விட்டதைத் தலைவன் உணர்ந்தானெனில் தன் மீது வருத்தம் கொள்வானெனத் தலைவி தன் மனதிற்குள் அச்சமுற்றுத் திகழும் பண்பை எடுத்துரைக்கின்றனர்.

நடுவன் ஐந்திணைக்குரிய மெய்ப்பாடுகள் கூறுமிடத்து அச்சம் தோன்றுவதை,

"***முட்டுவயிற் கழறல் முனிவுமெய்ந் நிறுத்தல்,***
***அச்சத்தின் அகறல் அவன்புணர்வு மறுத்தல்,***
***தூதுமுனி வின்மை துஞ்சிச் சேர்தல்,***

***காதல் கைம்மிகல் கட்டுரை இன்மை யென்***

***றாயிரு நான்கே அழிவில் கூட்டம்***"[72] (மெய்., நூ.எ. 23)

என வரும் நூற்பாவில், 'அச்சத்தின் அகறல்' எனும் கிளவிக்கு விளக்கம் தரும் இளம்பூரணர், 'இவ்வொழுக்கம் பிறர்க்குப் புலனாம் எனக் கூட்டத்தின் அகன்றொழுகல்' என்கிறார். அச்சத்தின் அகறல் குறித்து பேராசிரியர், "***தலைமகன்கண் வரும் ஏதமஞ்சி அவனை நீங்கும் குறிப்பும்***"[73] என்று கூறுகிறார். சோமசுந்தர பாரதியார், "***அலரும் தலைவன் ஆற்றூறும் அஞ்சி அவனணுகாது சேட்படுதல்***"[74] என்பார்.

க. வெள்ளைவாரணர், "***இவ்வொழுக்கம் பிறர்க்குப் புலனாகும் என்ற அச்சம் காரணமாகத் தலைவனை நீங்கியொழுகுதலும்***"[75] என்று விளக்கம் தருகிறார்.

அகம், புறத்தார்க்குத் தெரிந்துவிடக்கூடாது. இதனால் தலைவனை நீங்கிவிடக்கூடும் என்ற எண்ணத்தால் அச்சம் தோன்றுகிறது. அழிவில் கூட்டத்திற்கு மெய்ப்பாடுகளாக,

"***தெய்வம் அஞ்சல் புரையறந் தெளிதல்***

***இல்லது காய்தல் உள்ள துவர்த்தல்***

***புணர்ந்துழி யுண்மை பொழுது மறுப் பாதல்***

***.......................................................***

***சிறந்த பத்துஞ் செப்பிய பொருளே***"[76] (மெய்., நூ.எ. 24)

என்று குறிப்பிடுமிடத்து அச்சம் சுட்டப்படுகிறது. இதில் தெய்வம் அஞ்சல் என்பதற்கு இளம்பூரணர், 'தெய்வத்தினை அஞ்சுதல்' என்கிறார்.

பேராசிரியர், "***தலைமகற்குத் தொழுகுலமாகிய தெய்வமும் அவற்கு ஆசிரியராகிய தாபதரும் இன்னாரென்பது அவனானுணர்த்தப்பட்டு உணர்ந்த தலைமகள் அத்தெய்வத்தினை அஞ்சி ஒழுகும் ஒழுக்கம் அவட்கண் தோன்றும், அங்ஙனம் பிறந்த உள்ள நிகழ்ச்சியைத் தெய்வமஞ்சலென்றா னென்பது மற்றுத் தனக்குத் தெய்வம் தன் கணவனாதலான் அத்தெய்வத்தினைத் தலைகளஞ்சுதல் ஏற்றுக்கெனின், அவனின் தான் வேறல்லளாக மந்திரவதியிற் கூட்படினமையின் அவனான்***

***அஞ்சப்படும் தெய்வம் தனக்கும் அஞ்சப்படுமென்பது அல்லதூஉந் தலைவற்கு ஏதம் வருகெனவும் அஞ்சுவளென்பது***"[77] என்கிறார் சோமசுந்தர பாரதியார். "***சூள்பொய்த்தல் பரத்தையர் கூட்டம் முதலிய தலைவன் தவறுகளுக்குக் கடவுள் அணங்குமெனத் தலைவி அஞ்சுவதாம்***"[78] என்றும் வெள்ளைவாரணர், "***தலைவனுக்குத் தொழுகுலமாகிய தெய்வத்தினைத் தலைமகள் அஞ்சியொழுகுங் குறிப்பு***"[79] என்றும் விளக்கம் கூறுகின்றனர்.

வாழ்நாளில் கண்ணால் பார்க்காத ஒரு உருவத்தைக் கண்டு தன் மனத்தால் பயங்கொள்வது, மேலும், தான் வணங்கும் குலதெய்வத்திற்கு கட்டுப்பட்டு அஞ்சுவதும் என்பதை எண்ண முடிகிறது.

**உவமையியல்**

பெருமையும் சிறுமையும் மெய்ப்பாடு எட்டின் வழியே தோன்றுவதை,

"***பெருமையும் சிறுமையும் மெய்ப்பாடு எட்டன்***
***வழிமருங் கறியத் தோன்று மென்ப***"[80] (உவம., நூ.எ. 25)

என்ற நூற்பா குறிப்பிடும். இந்நூற்பாவிற்கு இளம்பூரணர், 'பெருக்கவுஞ் சிறுக்கவுங் கூறுதல் மெய்ப்பாட்டன் வழித் தோன்றும்' என்பர்.

தொல்காப்பியர் மெய்ப்பாட்டியலில் நகை முதலாக உவகை ஈறாக உள்ள எட்டு மெய்ப்பாடும் நான்கு நிலைக்களன்களை அடிப்படையாகக் கொண்டு தோன்றும் எனக் கூறுகின்றார். ஆனால், அவர் உவமையியலில் எட்டு மெய்ப்பாடும் (நான்கு நிலைக்கலன்களோடு) பெருமையும் சிறுமையும் இவற்றோடு சேர்ந்து தோன்றுகிறது.

இவற்றால் அச்சம் என்னும் மெய்ப்பாடு அணங்கு, விலங்கு, கள்வர், இறை என்னும் நிலைக்களன்களோடு பெருமையும், சிறுமையும் சேர்ந்து தோன்றும் என்பது பெறப்படுகிறது.

**செய்யுளியல்**

செய்யுள் உறுப்புகளுள் ஒன்றாக மெய்ப்பாடு சுட்டப்பட்டுள்ளதைத் தொல்காப்பியர்,

"*மாத்திரை யெழுத்தியல் அசைவகை எனாஅ*
*யாத்த சீரே அடியாப் பெனாஅ*
*மரபே தூக்கே தொடைவகை எனாஅ*
*நோக்கே பாவே அளவியல் எனாஅ*
*திணையே கைகோள் பொருள்வகை எனாஅ*
*கேட்போர் களனே காலவகை எனாஅ*
*பயனே மெய்ப்பா டெச்சவகை எனாஅ*
*..............................................................*
*பொருந்தக் கூறிய எட்டொடுந் தொகைஇ*
*நல்லிசைப் புலவர் செய்யு ளுறுப்பென*
*வல்லிதிற் கூறி வகுத்துரைத் தனரே*"[81] (செய்யு., நூ.எ. 1)

என்னும் நூற்பாவில் சுட்டுவர். மேலும், இம்மெய்ப்பாட்டினை,

"*உய்த்துணர் வின்றித் தலைவரு பொருண்மையின்*
*மெய்ப்பட முடிப்பது மெய்ப்பா டாகும்*"[82] (செய்யு., நூ.எ. 196)

என்று சுட்டுவதோடு அம்மெய்ப்பாட்டின் வகையை,

"*எண்வகை இயனெறி பிழையா தாகி*
*முன்னுறக் கிளந்த முடிவின தததுவே*"[83] (செய்யு., நூ.எ. 197)

என்று குறிப்பிடுகின்றார். இவற்றில் மெய்ப்பாடு எட்டு வகை நெறியில் தோன்றுகிறது.

## ஐந்திலக்கண நூல்களில் அச்சம்

### வீரசோழியம்

ஐந்திலக்கண நூல்களுள் தொல்காப்பியத்தை அடுத்து தோன்றிய நூல் வீரசோழியம். இந்நூல் கி.பி.11ம் நூற்றாண்டில் புத்தமித்திரர் என்பவரால் இயற்றப்பட்டது. இது எழுத்து, சொல், பொருள், யாப்பு, அலங்காரம் எனும் ஐந்து அதிகாரங்களாக அமைந்துள்ளது. இந்நூலில் பொருளதிகாரம் அகம், அகப்புறம், புறம், புறப்புறம் என்று நான்காகப் பகுக்கப்பட்டுள்ளது. இதில் அச்சம் பற்றி கூறுமிடத்தில் பொருளதிகாரம் பொருட்படலத்தில் உரையின் வகை இருபத்தேழில் ஒன்றாக மெய்ப்பாடு சுட்டப்படுவதை,

"*சட்டக மேதினை கைகோள் நடைசுட் டிடங்கிளவி*
*ஒட்டிய கேள்வி மொழிவகை கோளுட் பெறுபொருளென்று*
*இட்டிகச் சொற்பொருள் எச்ச மிறைச்சி பயன்குறிப்புக்*
*கட்டக மெய்ப்பாடு காரணங் காலம் கருத்தியல்பே.*
*ஏற்றம் விளைவொ டுவம மிலகிண மேய்ந்ததொல்லோர்*
*போற்றும் புடையுரை யேமொழி சேர்தன்மை மேயுமன்றி*
*ஆற்றும் பொருளடை வென்றா முறையல் லவற்றினுக்கு*
*மாற்று முறையும் வகுக்கு முறையு மதித்தறியே*"[84]

(வீரசோழி., நூ.எ. 88, 89)

என்ற நூற்பாவில் உணர்த்துகிறார். இதில் மெய்பாடு என்பதற்கு 'மெய்ப்பாட்டியல் வகை மேதக விரிப்பின் மெய்க்கண்பட்டு விளங்கிய தோற்றம் செவ்விதில் தெரிந்து செப்பல்மற்ற றதுவே' என்கிறார் வீரசோழிய உரைகாரர்.

அலங்காரப்படலத்தில், மெய்ப்பாடு தனியாக விளக்கப்படவில்லை. இதன் உரையாசிரியர் பெருந்தேவனார் 'நிரனிறை மகிழ்ச்சி, சுவை, ஊக்கம், பரியாயம்' என்னும் அலங்காரங்கள் என்பர்.

"*நிரனிறை யாவது சொல்லும் பொருளு நிரனிறுத்தல்*
*விரவு மகிழ்ச்சி யுளநிக ழார்வம் விளம்புமொழி*
*உரிய சுவைதா னிரதமேம் பாட்டுரை யூக்கமென்ப*
*பரியாய மோர்பொருள் தோன்றப் பிறிது பகர்தலென்னே*"[85]

(வீரசோழி., நூ.எ. 168)

என்னும் நூற்பாவிற்கு, 'சொல்லையாவது பொருளையாவது நிரையே நிறுத்தல் நிரனிறை என்னும் அலங்காரமாம், உளநிகழ் ஆர்வங் கூறுமொழி மகிழ்ச்சியாம், இரத வசனம் சுவையாம், ஊக்கமாவது, தம் மேம்பாட்டுரையாம், பரியாயம் தான் கருதிய பொருளைப் பிற மொழியாற் பகர்தலாம்' என விளக்கம் தருகிறார்.

இவற்றில் சுவை என்பது ஒன்பது என்று குறிப்பிட்டு அச்சுவையில் அச்சத்தை மூன்றாவதாக உணர்த்துகிறார்.

**இலக்கண விளக்கம்**

கி.பி.17ம் நூற்றாண்டில் வைத்தியநாத தேசிகரால் எழுதப்பட்டது. எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்து இயல்களைக் கொண்டுள்ளது. இவற்றில் பொருளதிகாரத்தில் அச்சம் சுட்டப்பட்டுள்ளது. அகப்பாட்டின் பன்னிரு உறுப்புகளைக் கூறுமிடத்து 'மெய்ப்பாடு' என உணர்த்தியிருப்பதை,

"***திணையே கைகோள் கூற்றே கேட்போ***

***ரிடனே கரணம் பயனே முன்ன***

***மெய்ப்பா டெச்சம் பொருள்வகை துறையென***

***வப்பா லாகுமவ் வாறிரு வகையே***"[86] (இ.வி., நூ.எ. 564)

என வரும் நூற்பாவில் மட்டும் உணர்த்துகிறார். கற்பொடு புணர்ந்த கவ்வையின் விரி இருபத்திரண்டு வரையறுத்துக் கூறுமிடத்து அச்சத்தை,

"***வினவிய பாங்கியி னுணர்ந்த காலை***

***யினைய லென்பேர்க் கெதிரழிந்து மொழிதலுந்***

**...................................................**

***மச்சத் தன்மைக் கச்சமுற் றிரங்கலு***

***மாகிய வைந்தும் போகிய விறைமக***

**...............................................**

***கற்பொடு புணர்ந்த கவ்வையின் விரியே***"[87] (இ.வி., நூ.எ. 538)

என்னும் நூற்பாவில் உணர்த்துகிறார். நம்பியகப்பொருள் வழியிலேயே அகப்பாட்டு உறுப்பை வகைப்படுத்தி கூறுவதை உணர்ந்துகொள்ள முடிகிறது.

மெய்ப்பாட்டினையும், அவற்றின் வகையையும் கூறுவதனை,

"***உய்த்துணர் வின்றித் தலைவரு பொருளின்***

***மெய்ப்பட முடிப்பது மெய்ப்பா டதுதா***

***னகையே யழுகை மிளிவரன் மருட்கை***

***யச்சம் பெருமிதம் வெகுளி யுவகையென்***

***றப்பா லெட்டா அவ்வகை யெட்டு***

***மெள்ள விளமை பேதைமை மடமே***

*யிளிவே யிழவே யசைவே வறுமை*

*..........................................................*

*மணங்கே, விலங்கே களவர்தம் மிறையே*

*..........................................................*

***மென்று கூறுப வியல்புணர்ந் தோரே***"[88] (இ.வி., நூ.எ. 578)

என்னும் நூற்பா குறிப்பிடுகிறது. 'உய்த்துணர்ச்சியின்றி அவ்விடத்து வந்த பொருளானே சொல்லப்படும் பொருள் தானே வெளிப்பட்டாங்குக் கண்ணீரரும்பல், மெய்ம்மயிர் சிலிர்த்தல் முதலாகிய சத்துவம் படுமாற்றன் வெளிப்படச் செய்வது மெய்ப்பாடென்னும் உறுப்பாம். அம்மெய்ப்பாட்டு உறுப்புத்தான் வகையானே நகை முதலாக உவகை ஈறாகக் கிடந்த அப்பகுதியெட்டாம். அப்பகுதியெட்டும் விரியானே எள்ளல் முதலாக விளையாட்டு ஈறாக இயைபுபடத் தோன்றாநின்ற பொருட்பகுதிகளான் ஒன்றை நான்காகச் செய்துமாறே, முப்பதிரண்டாமென்று கூறுவர் அவற்றின் தன்மையை அறிந்தோர்' என இதற்கு விளக்கமளிப்பார் இலக்கண உரைகாரர்.

"***அச்சம் என்பதற்கு பயம்***"[89] என்று பேராசிரியர் உரை விளக்கத்தை உரைகாரர் குறிப்பிடுகிறார்.

தொல்காப்பியம், மெய்ப்பாடு பற்றியும், அதன் வகை பற்றியும் பதினொரு நூற்பாக்களில் விளக்கியுள்ளது. ஆனால், இலக்கண விளக்கம் இவற்றை ஒரே நூற்பாவில் விளக்கி அவர் வழியிலேயே அச்சத்தை ஐந்தாவதாகச் சுட்டுகிறது. இது தவிர அகத்திணைக்குரிய மெய்ப்பாடுகளாக "***ஒருசார் மெய்ப்பாடுகள்***"[90] என்ற நூற்பா செய்திகளைக் கூறுமிடத்து, தொல்காப்பியர் வழியிலேயே கூறி பேராசிரியர் வழியிலேயே உரை விளக்கம் தருமிடத்து அச்சம் கூறப்படுகிறது.

தலைமகன், தலைமகளின் பண்புகள், அறத்தொடு நிற்குமிடம், துணிவிற்கு இலக்கணம், பாங்கியிற் கூட்டத்தின் விரி, ஒரு சார் ***பகற்குறியின் விரி, வரைதல் வேட்கை வகை, வரைதல் வேட்கையின் விரி, வரைவுகடாதலின் விரி***"[91] ஆகிய தலைப்பின்கீழ் வருகின்ற

நூற்பாக்களில் அச்சம் இடையிடையே உணர்த்தப்பட்டுள்ளது. நம்பியகப்பொருள் வழியிலேயே நூற்பா செய்திகளை உணர்த்தி அச்சத்தை கூறுகின்றதை அறிய முடிகிறது.

**தொன்னூல் விளக்கம்**

வீரமாமுனிவர் கி.பி.17ம் நூற்றாண்டில் எழுதிய ஐந்திலக்கண நூல்களில் ஒன்று தொன்னூல் விளக்கமாகும். இது எழுத்து, சொல் பொருள், யாப்பு, அணி எனும் ஐந்து அதிகாரங்களை உடையது. இதில் பொருளதிகாரம், அணியதிகாரம் என்னும் இரண்டு இயல்களிலும் அச்சம் குறிப்பிடப்பட்டுள்ளது.

பொருளதிகாரத்தில் 'உரிமை' என்ற தலைப்பில் பற்றுதல் உரிமையாக 'வெறுப்பு, உவப்பு, இரக்கம், வெகுளி, நாணம், திறத்துணிவு, அச்சம், தேறாமயல்' என்று குறிப்பிடுமிடத்து அச்சம் சுட்டப்படுகின்றதைக் கீழ்க்காணும் நூற்பா உணர்த்துகிறது.

"***வெறுப்பு வப்பிரக்கம் வெகுளி நாணம்***
***திறத்துணி வச்சம் தேறா மயலவாப்***
***பலவு மக்கள் பல பற்று என்ப***
***பற்று உறும் வழியும் பற்று உற்றார்க்கு***
***பற்றுறும் வழியும் பற்றற்றார்க்கு***
***மற்றுறு மியற்கையும் பற்றிறு வகைத்தே***"[92] (தொன்.வி., நூ.எ. 188)

தொன்னூல் விளக்கம், அணியதிகாரத்தில் சுவையணியைச் சுட்டுமிடத்து மெய்ப்பாட்டின் வழியே அச்சத்தைக் குறிப்பிடுகின்றது. இதனை,

"***சுவையணி யென்ப கடுஞ்சினங் காமம்***
***வியப்ப வலமிழிவச் சம்வீர நகையென***
***வெண்மெய்ப் பாட்டி னியைவன கூறி***
***யுண்மெய்ப் பாட்டை யுணர்த்தித் தோற்றலே***"[93]

(தொன்.வி., நூ.எ.354)

என்னும் நூற்பா சுட்டும். சினம், காமம், வியப்பு, அவலம், இழிவு, அச்சம், வீரம், நகை என்னும் எண்வகை மெய்ப்பாடுகளையும் உணர்த்தி வருவது சுவையணி என்கிறது இது.

தொல்காப்பியர் மெய்ப்பாடுகளை நகை முதலாக உவகை ஈறாக வரிசைப்படுத்தி அச்சத்தை ஐந்தாவதாக குறிப்பிடுகிறார். ஆனால் தொன்னூல் விளக்கம் எண்வகை மெய்ப்பாடுகளை சினம் முதலாக நகை ஈறாக வரிசைப்படுத்தி அச்சத்தை ஆறாவதாகச் சுட்டுகிறது.

**முத்துவீரியம்**

முத்துவீரியம் அணியதிகாரத்தில் மெய்ப்பாட்டினையும், அவற்றின் வகையையும், அதன்வழி அச்சத்தையும் குறிப்பிடுகின்றது. தொல்காப்பியர் அச்சத்தை ஐந்தாவதாகக் குறிப்பிடுமிடத்து இதன் ஆசிரியர் முதலாவதாக குறிப்பிட்டுள்ளார்.

பொருளதிகாரம் களவொழுக்கவியலில் தலைவனின் குணங்களாக, "***பெருமையு முரனு மாடூஉ மேன***"[94] (முத்துவீ., நூ.எ. 831) என்று கூறுகின்றார். இதில் பெருமையென்பதற்கு 'அறிவும் ஆற்றலும் புகழும் கொடையும், ஆராய்தலும், பண்பும், நண்பும் பழிபாவம் அஞ்சல் முதலியனவாகிய மொழி மேற்படும் பெருமைப்பகுதியும் கடைப்பிடியும் நிறையும் கலங்காது துணிதலும் முதலிய வலியானது பகுதியுந் தலைவனிடத்ததாம்' என்று முத்துவீர உரைகாரர் நச்சினார்க்கினியர் வழியிலேயே உரை விளக்கம் தருமிடத்தில் அச்சம் குறித்து உணர்த்தியிருப்பதை அறிய முடிகின்றது.

தலைமகளுக்குரிய குணமாக,

"***அச்சமும் நாணு மடனுமுந் துறுத்த***
***நிச்சமும் பெண்பாற் குரிய வெண்ப***"[95] (முத்துவீ., நூ.எ. 832)

என்னும் நூற்பா செய்திகளைக் கூறுமிடத்து அச்சத்தை உணர்த்தியிருக்கின்றது. இவற்றில் 'அச்சம்' என்பதற்கு, 'அன்புகாரணத்திற் தோன்றிய அச்சமும்' என்கிறார் உரைகாரர்.

இவ்வாறு தலைவியின் பண்புகளைத் தொல்காப்பியர் வழியிலேயே சுட்டி, நச்சினார்க்கினியர் வழியிலேயே உரை விளக்கம் தருகிறார். மேலும், பகற்குறியின் வகை முப்பத்திரண்டையும் தொகுத்து சொல்லுமிடத்து அச்சத்தை,

"*குறியிடங் கூறலு மாடிடம் படர்தலும்*
*குறியிடைச் சேறலு மிடத்துய்த்து நீங்கலும்*
*..........................................................*
*வருத்தங் கூறலும் தாயச்சங் கூறலும்*
*.........................................................*
*சொன்னாநா லெட்டுந் தோன்று மியற்கை*
***மன்னிய பகற்குறி வகையா கும்மே***"[96] (முத்துவீ., நூ.எ. 847)

எனச் சுட்டுகிறார். இந்நூற்பாவில் 'தாயச்சம் கூறலும்' என்பவற்றில் அச்சம் சுட்டப்படுகின்றது. 'தாயச்சம் கூறலும்' என்ற நூற்பா வரிக்கு தாயச்சங்கூறி வரைவுகடாதல் என்றும் 'வருத்தங்கூறி வரைவுகடாய தோழி, எம்முடைய வன்னை அவள் முலைமுதிர்வுகண்டு, இவள் சிற்றிகைக்கொரு பற்றுக் கண்டிலேமென் றஞ்சா நின்றாள், இனி மகட் பேசுவார்க்கு மறாது கொடுக்கவுங் கூடுமெனத் தாயச்சங்கூறி வரைவுகடாதல்' என்றும் உரைகாரர் குறிப்பிடுகிறார். இதேபோல், இரவுக்குறி வகையாக,

"*.............................................*
*ஆறுபார்த் துற்ற வச்சக் கிளவியும்*
*...........................................*"[97] (முத்துவீ., நூ.எ. 848)

என்ற நூற்பா வரியில், 'இரவுக்குறி வேண்டல், வழியருமை கூறி மறுத்தல், இரவுக்குறி நேர்தல், உட்கோள் வினாதல், காமமிக்க கழிபிடர்கிளவி, ஆறுபார்த்துற்ற அச்சக்கிளவி, அலரறிவுறுத்தல்' என்ற முப்பத்து மூன்றையும் வரையறுத்துக் கூறுகின்றார். இதில் ஆறுபார்த்துற்ற அச்சக்கிளவி என்பவற்றில் அச்சம் வெளிப்படுகின்றது.

பிற அகப்பொருள் நூல்களும், ஐந்திலக்கண நூல்களும் 'ஆறுபார்த்துற்ற அச்சக்கிளவி' என்ற நூற்பா வரியை வரைவுகடாதலில்

குறிப்பிடுமிடத்து, இவை இரவுக்குறியின் வகையில் குறிப்பிட்டு அச்சத்தைச் சுட்டுகின்ற உணர்வை அறிய முடிகிறது.

அணியதிகாரத்தில் இரண்டாவது பகுதியான பொருளணியில் 'சுவையணி' என்னும் தலைப்பில் மெய்ப்பாடு அவற்றின் வகைகளுள் ஒன்றாக அச்சத்தைக் கூறுவதை,

"***புந்தியி னிகழ்திறன் புறத்துப் புலனாய்***
***விளங்க லெண்வகை மெய்ப்பாட் டானும்***
***ஒழுகல் சுவையென வுரைக்கப் படுமே***"[98] (முத்துவீ., நூ.எ. 1241)

என்னும் நூற்பா குறிப்பிடுகின்றது. மேலும், அவை மெய்ப்பாட்டின் வகையினை,

"***அவைதாம்***
***அச்சமும் வீரமு மவலமுங் காமமும்***
***இழிப்பும் வியப்பு மெழில்படு நகையும்***
***உருத்திர மும்மென வுரைக்கப் படுமே***"[99] (முத்துவீ., நூ.எ. 1242)

என்கிறது நூற்பா. இதில் எட்டு மெய்ப்பாடுகளின் வரிசையும் பெயரும் அறியத்தக்கதாகும். அச்சம், நகை ஆகியவற்றைத் தவிர மற்ற பெயர்கள் மாறியுள்ளன. இந்நூற்பா அழுகையை அவலம் என்றும், இளிவரலை இழிப்பு என்றும், வெகுளியை உருத்திரம் என்றும், மருட்கையை வியப்பு என்றும், பெருமிதத்தை வீரம் என்றும், உவகையைக் காமம் என்றும் குறிப்பிடுவதை உணர்ந்துகொள்ள முடிகிறது.

**சுவாமிநாதம்**

ஐந்திலக்கண நூல்களில் ஒன்று சுவாமிநாதம். இது கி.பி.19ம் நூற்றாண்டு சாமிகவிராசர் என்பவரால் இயற்றப்பட்டது. இது எழுத்ததிகாரம், சொல்லதிகாரம், பொருளதிகாரம், யாப்பதிகாரம், அணியதிகாரம் என்று ஐந்து பிரிவுகளை உடையது. இவற்றில் பொருளதிகாரம், அணியதிகாரம் எனும் இரண்டிலும் அச்சம் குறிப்பிடப்பட்டுள்ளது.

பொருளதிகாரம் கைக்கோள் மரபில் அகப்பாட்டு உறுப்பில் ஒன்றாக மெய்ப்பாட்டினையும், அவற்றின் வகைகளில் ஒன்றாக அச்சத்தையும் கூறுவதனை,

“***அருங்குறியாள் பொருள்தோன்ற முடிப்பதுமெய்ப்பாடாம்***
***அழுகை நகை மருட்கை அச்சம் பெருமிதமே யுவகை***
***உடன்சினமே இளிவரல் எட்டால் அதுதான் விரியும்***”[100]

(சுவாமி., நூ.எ. 127)

என்ற நூற்பா எடுத்துரைக்கிறது. ‘அறிந்துகொள்ள முடியாதார் அவ்விடத்து தோன்றும் குறிவாய் பொருள் தெரிந்து கொள்ள வைப்பது மெய்ப்பாடு எனப்படும் என்றும் அவை அழுகை, நகை, மருட்கை, அச்சம், பெருமிதம், உவகை, சினம், இளிவரல் என எட்டு வகைப்படும்’ என்று விரித்துரைக்கின்றது.

சுவாமிநாதம் எட்டுவகை மெய்ப்பாடுகளில் அழுகை முதலாக இளிவரல் ஈறாக என்று மாற்றி வரிசைப்படுத்துக்கிறது. இதில் அச்சத்தை நான்காவதாக சுட்டுகின்றது. மேற்கூறப்பட்ட தொன்னூல் விளக்கமும் முத்துவீரியமும் மெய்ப்பாடுகளின் பெயர் முறைகளை மாற்றி வரிசைப்படுத்திக் காட்டியது. ஆனால் தொல்காப்பிய உரையாசிரியர் எட்டுவகை (நகை முதலாக உவகை ஈறாக) மெய்ப்பாடுகளை வரிசைப்படுத்தியமைக்கு இயைபு காட்டுவர். ஆனால் பின்வந்த இலக்கண நூலார் அதைக் கருத்தில் கொள்ளாமல் வேறுபட்ட வரிசைகளில் கூறியுள்ளமையை அறிய முடிகிறது.

### பொருள் இலக்கண நூல்களில் அச்சம்

தொல்காப்பியம், இறையனார் அகப்பொருள், புறப்பொருள், வெண்பாமாலை, தண்டியலங்காரம், வீரசோழியம், நம்பியகப்பொருள், மாறன் அகப்பொருள், மாறனலங்காரம், தமிழ்நெறி விளக்கம், களவியற் காரிகை, இலக்கண விளக்கம், தொன்னூல் விளக்கம், முத்து வீரியம், சுவாமிநாதம், அறுவகை இலக்கணம் ஆகிய இலக்கணங்களில் அச்சம் இடம் பெற்றுள்ளன.

**இறையனார் அகப்பொருள்**

தொல்காப்பியத்தை அடுத்து இறையனார் அகப்பொருள் கி.பி.8 ஆம் நூற்றாண்டில் எழுந்த இலக்கணமாகும். இது ஐந்திலக்கணங்களையும் ஒன்றாகச் சொல்லும் முறையிலிருந்து வேறுபட்டு, பொருளிலக்கணத்தை மட்டும் அறுபது நூற்பாக்களில் எடுத்துப் பேசும் தனி இலக்கண நூலாக தோன்றியதாகும். இதில் அச்சம் சுட்டப்பட்டுள்ளது.

களவும் கற்பும் பற்றி வருகின்ற மெய்ப்பாட்டினை வரையறுத்துக் கூறுமிடத்து மெய்ப்பாடு சுட்டப்படுவதை,

"***திணையே கைகோள் கூற்றே கேட்போர்***

***இடனே காலம் எச்சம் மெய்ப்பாடு***

***பயனே கோளென் றாங்கப் பத்தே***

***அகனைந் திணையும் உரைத்தல் ஆறே***"[101] (இறை.கள., நூ.எ. 56)

என்று வகைப்படுத்தப்படுகிறது. அவை, நகை, அழுகை, இளிவரல், மருட்கை, உவகை, அச்சம், பெருமிதம், வெகுளி என்பதோடு, அவற்றுள் இன்னதோர் மெய்ப்பாடு வந்ததென்று அறிவது' என்று கூறுகின்றார் நக்கீரர்.

தொல்காப்பியர் மெய்ப்பாட்டின் வகையை நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என வரிசைப்படுத்தி அச்சத்தை ஐந்தாவதாகக் குறிப்பிடுகின்றார். ஆனால், இந்நூலாசிரியர் அச்சத்தை ஆறாவதாகக் குறிப்பிடுகிறார். "***நாண், மடம், அச்சம், பயிர்ப்பு***"[102] (இறை.கள., நூ.எ. 2) என்பன அவற்றுள் தலைமகளின் குணங்களை வரையறுத்துக் கூறுகின்றது. ஆனால், தொல்காப்பியர் அச்சம், நாண், மடம், என்ற மூன்றையுமே பெண்ணின் குணமாகக் கூறுவார். இருப்பினும் இது பயிர்ப்பையும் ஒரு குணமாகப் போற்றி உரைக்கின்றது. தொல்காப்பியர் அச்சத்தை முதலில் சுட்டுமிடத்து, இவர் மூன்றாவதாக சுட்டுவது எண்ணத்தக்கதாகும். இவ்வாறு பெண்ணுக்குரிய பண்புகளைச் சுட்டுமிடத்து அச்சம் வெளிப்படுகின்றது.

இதில் 'அச்சம்' என்பதற்கு நக்கீரர், "***பெண்மையின் தான் காணப்படாத பொருள் ஒன்றைக் கண்ட இடத்து அஞ்சுவது***"[103] என்கிறார்.

இவற்றால் 'புதிய ஒரு பொருளைக் கண்டு அஞ்சுவது' அச்சமாகும் என்பது புலப்படுகின்றது.

பிரிவச்சம் உணர்த்துமிடத்து அச்சத்தை அறியலாம். இதில் பிரிவச்சம் என்பதற்கு "***தான் பிரிவு அஞ்சிற்றும் பிரிவச்சம். அவளைப் பிரிவு அஞ்சுவித்தலும் பிரிவச்சம் ஆகலின் பிரிவச்சம் எனப்பட்டது***"[104] என்று கூறுவர் நக்கீரர். இதேபோல், அறத்தொடு நிற்கும் இடம் உணர்த்துமிடத்து அச்சத்தை இறையனார்,

"***காப்புக் கைமிக்குக் காமம் பெருகினும்***

***..................................................***

***அவனூ றஞ்சுங் காலம் ஆயினும்***"[105] (இறை.கள., நூ.எ. 29)

என்று சுட்டுவர். இந்நூற்பாவில் 'அவன் ஊறு அஞ்சும் காலம் ஆயினும்' என்பதற்கு 'அவற்கு நிகழும் ஏதும் அஞ்சின இடத்தும்' என்பர் நக்கீரர். இவற்றில் அஞ்சின இடத்தும் என்ற அச்சம் உணர்வு கூறப்படுகிறது. இதேபோல், வரைவுகடாதலின் இலக்கணம் எல்லாம் தொகுத்து கூறுமிடத்து அச்சத்தை,

"***காம மிக்க கழிபடர் கிளவியும்***

***காப்புச் சிறைமிக்க......***

***ஆறுபார்த் துற்ற அச்சக் கிளவியும்...***

***................................................***"[106] (இறை.கள.நூ.எ. 30)

என்று உணர்த்துகிறது. இதில் 'ஆறுபார்த்தற்ற அச்சக் கிளவியும்' என்பதற்கு நக்கீரர் 'அச்சம் என்பது குறிப்பின்றியே தோன்றும் நடுக்கம்' என்பார். தலைமகளின் இலக்கணம் கூறுமிடத்து,

"***ஆறின் னாமையும் ஊறும் அச்சமும்***

***தன்னை அழிதலும் கிழவோற் கில்லை***"[107] (இறை.கள., நூ.எ. 31)

எனத் தலைமகளின் இலக்கணம் நான்கும் கூறுமிடத்து அச்சம் சுட்டப்படுவதை அறியலாம். நக்கீரர், 'அச்சம்' என்பதற்கு 'அஞ்சப்படுவன

கண்டவிடத்து மனக்குறிப்பின்றியே அஞ்சுவது, அச்சமும் இவன்கணில்லை யென்றவாறு' என்கிறார்.

**நம்பியகப் பொருள்**

தொல்காப்பியம், இறையனார் களவியலுரை அடுத்து அகப்பொருளைத் தனியே விளக்கும் இலக்கண நூல் அகப்பொருள் விளக்கமாகும். இதனை இயற்றியவர் நாற்கவிராச நம்பி ஆவார். ஆதலால் இஃது இயற்றியோரின் பெயரையும் சேர்த்து நம்பியகப் பொருள் என்று அழைக்கப்படும். இது அகத்திணையியல், களவியல், வரைவியல், கற்பியல், ஒழிபியல் என ஐந்து இயல்களைக் கொண்டுள்ளது. இதில் அச்சம் சுட்டப்பட்டுள்ளது. மெய்ப்பாட்டினையும், மெய்ப்பாட்டின் வகையினையும் ஒழிபியல் வரையறுத்து கூறுகின்றது. மெய்ப்பாட்டினை அகப்பாட்டுறுப்பின் பாகுபாடு உணர்த்துமிடத்து அச்சம் வெளிப்படுகின்றது. இதனை,

"***திணையே கைகோள் கூற்றே கேட்போர்***
***இடனே காலம் பயனே முன்னம்***
***மெய்ப்பா டெச்சம் பொருள்வகை துறையென்று***
***அப்பால் ஆறிரண் டகப்பாட் டுறுப்பே***"[108] (நம்பி.ஒழி., நூ.எ. 211)

என்ற நூற்பா சுட்டும். மெய்ப்பாட்டின் வகையினை,

"***நகை முதலாமிரு நான்குமெய்ப் பாடும்***
***நிகழ் பொருள் மெய்ப்பட நிற்பமெய்ப் பாடே***"[109]

(நம்பி.ஒழி., நூ.எ. 231)

என்று குறிப்பிடுகிறது. இதனை நகையும், அழுகையும், இளிவரலும் மருட்கையும், அச்சமும் பெருமிதமும், உவகையும், வெகுளியும் என்னும் எட்டு வகை மெய்ப்பாடும், அவ்விடத்து நிகழும் பொருளைக் கேட்டோர் மெய்யின்கண்ணே வெளிப்பட நிற்பன மெய்ப்பாடு என்னும் உறுப்பு என்று விளக்குவர் நம்பியாசிரியர். இதில் நம்பியகப்பொருள் நகை முதலாக வெகுளி ஈறாக என வரிசைப்படுத்தி அவற்றுள் தொல்காப்பியர் வழியிலேயே அச்சததை ஐந்தாவதாகக் குறிப்பிடுவதை உணர முடிகிறது.

தலைவன், தலைவியின் பண்புகள் கூறுமிடத்து, தொல்காப்பியர் கூறுவது போன்று நம்பியும் தலைவனின் குணங்காளாக பெருமையும் உரனும் என்றும், தலைவியின் குணங்களாக அச்சமும், மடமும் எனக் கூறுவதை,

"*பொருவிறந் தோற்குப் பெருமையும் உரனும்*
*நன்னுதற் கச்சமும் நாணும் மடனும்*
*மன்னிய குணங்க ளாதலின் முன்னம்*
*உள்ளப் புணர்ச்சி யுரிய தாகும்*"[110] (நம்பி.அகம்., நூ.எ. 35)

என்ற நூற்பா சுட்டும். இவற்றுள், பெருமையென்பதற்கு 'பழியும் பாவமும் அஞ்சுதல்' என்று நச்சினார்க்கினியர் வழியிலும், அச்சம் என்பதற்கு 'காணாததொன்று கண்டாற் பெண்டிரிடத்த நிகழ்வது' என்று நம்பியகப் பொருளாசிரியர் உரை விளக்கம் கூறுகிறார். தொல்காப்பியம் தனித்தனி நூற்பாவில் கூறியதை, நம்பியகப்பொருள் ஒரே நூற்பாவில் கூறுகின்றது. இவ்வாறு நம்பியகப்பொருள், தலைவன் தலைவியின் பண்புகளை வரையறுத்துக் கூறுமிடத்து அச்சம் மெய்பாடு கூறுவதை அறிய முடிகின்றது. மேலும், அறத்தொடுநிலை நிகழும் இடத்தை உணர்த்துமிடத்து அச்சத்தை,

"*ஆற்றூறு அஞ்சினும் ..........*
*............... காப்புக்கை மிகினும்*
*ஆற்றத் தோன்றும் அறத்தொடு நிலையே*"[111] (நம்பி.அகம்., நூ.எ. 47)

என்ற இந்நூற்பாவில் 'ஆற்றூறு அஞ்சினும்' என்பதற்கு 'தலைமகன் வரும் வழியில் உண்டாகும் ஏதத்திணை அஞ்சியவிடத்தும்' என்று கூறுவர் நம்பியாசிரியர். துணிவு நிகழ்தற்கு ஏதுவானவையாக,

"*எழுதிய வல்லிந் தொழில்புனை கலனும்,*
*வாடிய மலரும் கூடிய வண்டும்*
*நடைபயில் அடியும் புடைபெயர் கண்ணும்*
*அச்சமும் பிறவும் அவன்பா னிகழுங்*
*கச்சமில் ஐயங் கடிவன வாகும்*"[112] (நம்பி.அகம்., நூ.எ. 121)

என ஏழும் வரையறுத்து கூறுமிடத்து 'அச்சம்' சுட்டப்பட்டுள்ளதை அறிய முடிகிறது. இதேபோல், இரந்துபின் நிற்றலும் சேட்படையின் கிளவி இருபதும் வரையறுத்து உணர்த்துமிடத்து அச்சத்தை,

"***தலைவ னுட்கோள் சாற்றலும் பாங்கி***

***குலமுறை கிளத்தலும்............***

***பாங்கி யஞ்சியச் சுறுத்தலும் ஆங்கவன்***

***............ சேட்படுத் தறகும்***

***பெருத்துவ என்மனார் தெரிந்திசி னோரே***"[113] (நம்பி.கள., நூ.எ. 144)

என்று குறிப்பிடும். இவற்றில் 'பாங்கி அஞ்சியச் சுறுத்தலும்' என்பவற்றில் அச்சத்தை உணர்த்துகின்றன. மேலும், பகற்குறியின் விரியாக

"***கிழவோன் பிரிந்துழிக் கிழத்தி மாலையம்***

***பொழுதுகண் டிரங்கலும் பாங்கி புலம்பலும்***

***தலைவன் நீடத் தலைவி வருந்தலும்***

***பாங்கியச் சுறுத்தலும் ........................***

***........................ நெஞ்சோடு கிளத்தலும்***

***என்றவீ ரேழும் எல்லுக்குறி விரியே***"[114] (நம்பி.கள., நூ.எ. 154)

என்று நம்பியகப்பொருள் கூறுகின்றது. 'பாங்கி அச்சுறுத்தலில்' அச்சத்தை அறிய முடிகிறது. இதில் 'பாங்கி அச்சுறுத்தல்' என்பதற்கு 'தலைவியை பாங்கி அச்சுறுத்தலும்' என்பர் நாற்கவிராசர். இதேபோல், வரைதல் வேட்கையின் வகையைச் சொல்லுமிடத்து அச்சத்தை,

"***அச்ச முவர்த்த லாற்றா மையென***

***மெச்சிய வரைதல் வேட்கைமூ வகைத்தே***"[115] (நம்பி.கள., நூ.எ. 163)

என்னும் நூற்பாவில் உணர்த்துகிறார்.

வரைதல் வேட்கையின் விரிவாக பதினெட்டில்,

"***..............................................***

***அலர்பார்த் துற்ற வச்சக் கிளவியும்,***

***ஆறுபர்த் துற்ற வச்சக் கிளவியும்***"[116] (நம்பி.கள., நூ.எ. 164)

என்பவற்றில் அச்சம் உணர்த்தியிருப்பதை அறிய முடிகிறது.

வரைவு கடாதலின் விரி இருபதும் வரையறுத்துகூறுமிடத்து அச்சத்தை,

"*...............................................*

*வெறியச் சுறுத்தலும் ..................*

*ஆறுபார்த் துற்ற அச்சம் கூறலும்*

*.......................................................*

*வரைவு கடாதல் விரியெனப் படுமே*"[117] (நம்பி.வரைவு., நூ.எ. 166)

என்ற நூற்பா எடுத்துரைக்கிறது. 'வெறியச்சுறுத்தல், ஆறுபார்த்துற்று அச்சம் கூறல்' என்பவற்றில் அச்சம் சுட்டப்பட்டுள்ளதை அறிய முடிகின்றது. மேலும், நாற்கவிராசநம்பி அனைமருட்சியின் விரியாக,

"*..................................................................*

*நிமித்தம் போற்றலும் சுரந்தணி வித்தலும்*

*.......................................................*

*இளமைத் தன்மைக் குளமெலிந் திரங்கலும்*

*அச்சத் தன்மைக் கச்சமுற் றிரங்கலும்*"[118] (நம்பி.அகம்., நூ.எ. 186)

என்று வரையறை கூறுமிடத்து 'அச்சத் தன்மைக்கு அச்சமுற்று இரங்கல்' என்பவற்றில் அச்சம் குறிப்பிட்டிருப்பதை அறியலாகிறது.

**தமிழ்நெறி விளக்கம்**

கி.பி.12ம் நூற்றாண்டில் எழுந்தது இப்பொருளியல் என்னும் பெயருடன் களவு, கற்பு இடம் பெற்றுள்ளது. இவற்றில் களவியல் இரண்டு இடங்களில் அச்சம் இயற்கைப் புணர்ச்சியைக் கூறுமிடத்து சுட்டப்படுவதை,

"*தன்னயந் தெளிதலுந் தலைப்பிரி வச்சமும்*

*இன்னியல் வன்பொறை யெய்துத லருமையும்*

*உயிரெனக் கூறலு மாற்றினன் பெயர்தலும்*

*செயிர்தபு காதற றெய்வப் புணர்ச்சி*"[119] (தமிழ்.விள., நூ.எ. 15)

எனக் குறிப்பிடும். இதில் 'பிரிவச்சம்' என்பவற்றில் அச்சம் உள்ளதை அறியலாம். மேலும், வரைவுகடாதலுக்குரிய காரணங்களை வரையறுத்ததை,

“***வருநெறி நினைந்து கூறுமிடத்து வாரலென்றலும்***

***.................................................................***

***டுரியன கிளந்த பிறவுந் தொகைஇ***

***வரைவு கடாத பொரு மென்மனார்***”[120] (தமிழ்.விள., நூ.எ. 19)

என்னும் நூற்பாவழி அறிய முடிகிறது.

வருநெறி நினைந்து என்பதற்கு ‘ஆறுபார்த்துற்ற அச்சக்கிளவி’ என்று விளக்கம் தருவார் உ.வே.சா. இதில் தலைவன் வருவழி காரணங்காட்டியுள்ளார்.

**களவியற்காரிகை**

இதில் களவுப்பகுதியே பெரிதும் விரித்துக் கூறப்பட்டுள்ளது. இதில் அச்சம் பற்றி குறிப்பிடப்பட்டுள்ளதை,

“***உடன்படு தோழி யயிர்த்தன்***

***.......................................***

***அச்சக் கிளவியும்***”[121] (கள.காரி., நூ.எ. 31)

என்னும் நூற்பாவின்வழி அறிய முடிகிறது.

களவுப் பகுதியில் வரைதல் வேட்கை பதினொன்றை வரையறுத்து கூறுமிடத்து “***ஆறுபார்த்துற்ற அச்சக்கிளவி***”[122] என்பதற்கு ‘தலைமகன் வரும் வழியினுள்ள அச்சத்தைச் சொல்லி வரவு விலக்குதல்’ என்று கூறுகின்றார் உரையாசிரியர்.

**மாறன் அகப்பொருள்**

திருக்குருகைப் பெருமாள் எழுதிய மாறன் அகப்பொருள் கி.பி.17ம் நூற்றாண்டு என்பதாகும். அகப்பொருள் இலக்கணங்களையெல்லாம் முறைப்படத் தொகுத்து பகுத்தும், புதியனவாக வேண்டுவனக் கூட்டி விரித்தும், அகத்திணையியல், களவியல், வரைவியல், கற்பியல், ஒழிபியல் எனும் ஐந்து இயல்களுடன் இயற்றப்பட்டதொரு நூலாகும்’ என்பர் சி. இராகவையங்கார். இவற்றில் களவியலில் அச்சம் இடம்பெற்றுள்ளது.

களவிற்குரிய கிளவித்தொகையைத் தொகுத்துக் கூறுமிடத்து அச்சத்தை,

"***அலம் வரல் கண்ணிமைப்பு அச்சம் உகக்கு***
***மலருயிர்ப்பு தனில்வாடு தல்வெயர்த்த***
***லொளிர்கலன் வளி வண்டு டனிரவிடுத***
***வடிநிலத்தோய் தலவணி கழையங்***
***கடிவனவாகுங் காவலன்றனக்கே***"[123] (மாறன்.அகப்., நூ.எ. 9)

என்று குறிப்பிடும். இதில் 'அச்சம்' மூன்றாவதாக சுட்டப்பட்டுள்ளதை அறியலாம். பாங்கியிற் கூட்டமாக, "***குலமகனுடகோள் கூறல், பாங்கி குலமுறைகிளத்தல், தலைவன் தலைவியை யுயர்த்திக்கூறல், பாங்கி தலைவியை யறிவாள்போல் வினாதல், பாங்கி அஞ்சி அச்சுறுத்தலும் பாங்கி தலைவனை ஆற்றுவித்தல்***"[124] என இருபதும் வரையறுத்து கூறுமிடத்து 'பாங்கி அஞ்சியச்சுறுத்தல்' என்பவற்றில் அச்சத்தை பெறலாம்.

ஒருசார் பகற்குறியின் விரி பதினான்கும் வரையறுத்து கூறுமிடத்தில், 'பாங்கியச்சுறுத்தல்' என்றும், "***அச்சம் உவர்ப்பு, ஆற்றாமை***"[125] என்றும் வரைதல் வேட்கை மூன்றையும் கூறுமிடத்தும், வரைதல் வேட்கை விரி பத்தொன்பதையும் தொகுத்து உணர்த்துமிடத்து "***அலர்பார்த்துற்ற அச்சக்கிளவி, ஆறுபார்த்துற்ற அச்சக்கிளவி***"[126] என்பவற்றிலும், வரைவுகடாதல் பத்தொன்பதையும் வரையறுத்துச் சொல்லுமிடத்து "***வெறியச்சுறுத்தல், ஆறுபார்த்துற்ற அச்சக் கிளவி***"[127] என்று அச்சம் சுட்டப்படுகின்றது.

இறையனார் அகப்பொருள், நம்பியகப்பொருள், அகப்பொருள் நூல்களை அப்படியே கையாண்டு அச்சத்தை உரைக்கின்றன.

### அணி இலக்கண நூல்களில் அச்சம்

#### தண்டியலங்காரம்

தண்டி என்பவரால் கி.பி.8 ஆம் நூற்றாண்டு எழுதப்பட்ட நூலாகும். இதில் பொருணியிலுள்ள சுவயணியில் மெய்ப்பாட்டினையும், அவற்றின் வகைகளுள் ஒன்றாக அச்சத்தையும் குறிப்பிடுகின்றது.

சுவையணிக்குள் மெய்ப்பாட்டினைக் கூறுவதை,

"***உண்ணிகழ் தன்மை புறத்துத் தோன்ற***

***எண்வகை மெய்ப்பாட்டி னியல்வது சுவையே***"[128] (தண்டி., நூ.எ. 69)

என்றும், அவற்றின் வகையை,

"***அவைதாம்***

***வீர மச்ச மிழிப்பொடு வியப்பே***

***காம மவல முருத்திர நகையே***"[129] (தண்டி., நூ.எ. 70)

என்றும் குறிப்பிடுகிறது. இந்நூற்பாவில் மெய்ப்பாடுகளின் வரிசையும் பெயரும் மாறியுள்ளமை நோக்கத்தக்கதாகும். தொல்காப்பியர் அச்சத்தை ஐந்தாவதாக குறிப்பிடுமிடத்து இதன் ஆசிரியர் இரண்டாவதாக குறிப்பிடுகின்றார். நகை, அச்சம், ஆகியவற்றைத் தவிர மற்ற பெயர்கள் அனைத்தும் மாறியுள்ளன. இந்நூல், அழுகையை 'அவலம்' என்றும், இளிவரலை 'இழப்பு' என்றும், மருட்கையை 'வியப்பு' என்றும், பெருமிதத்தை 'வீரம்' என்றும், வெகுளியை 'உருத்திரம்' என்றும் உவகையைக் 'காமம்' என்றும் குறிப்பிடுகின்றது. மேலும், மெய்ப்பாட்டைச் சுவை என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

**மாறனலங்காரம்**

அகப்பொருளை அடுத்து திருக்குருகைப் பெருமாள் கவிராயர் கி.பி.17ம் நூற்றாண்டில் மாறனலங்காரம் என்னும் அணியிலக்கணத்தை இயற்றினார். அவற்றுள் சுவையணிக்குள் மெய்ப்பாட்டினையும் அவற்றில் ஒன்றாக அச்சத்தையும் கூறியுள்ளார். இதனை,

"***பொறியுணர்வொடும் மொருபொருளினை யெதிர்ந்த்***

***நெறியுடை மனத்து னிகழ்தரு பான்மை***

***யயலவ ருறப்புறத்தாய்ப் பொரு ளெட்டின்***

***இயல்வது சுவை யென்று றியம்பினார் புலவர்***"[130]

(மாறன்.அல., நூ.எ. 197)

என்ற நூற்பாவில் விளக்குகிறார். அயலவர் உணர்ந்து கொள்ளத்தக்கவாறு மெய்ப்பாடு எட்டின் வழித் தோன்றுவது சுவையணியாகும் என்று இது

விளக்கிச் சொல்கிறது. இந்நூல் மெய்ப்பாட்டினை 'பொருட் எட்டு எனச் சுட்டுகிறது.

இவற்றால் பொருள் எட்டு என்பவற்றில் அச்சம் ஒன்று என்பதை இதன் மூலம் அறியலாம்.

### அகராதிகளில் 'அச்சம்'

அச்சம் என்பதற்கு தமிழ் அகராதி, "***அகத்தி, அஞ்சிக்கை, இலேசு, கோரைப்புல், தகடு, பயம்***"[131] என்று பொருள் கூறுகின்றது. தமிழ்ப் பெயரகராதி, "***அகத்தி, இலேசு, பயம்***"[132] என்று பொருள் தருகிறது. தமிழ்ச் சொல்லகராதி, "***அகத்தி மரம்***"[133] என்கிறது. பெரும் சொல்லகராதி "***அச்சம் – பயம், அச்சம், நொய்மை, இலேசானது. அச்சம் காய்ச்சற்பாடாணம் என்னும் சரக்கு அச்சம் – கோரைப்புல், ஈசுரப்புல், அச்சம், அகத்திமரம், அச்சம், தெளிவு, அச்சம், பளிங்கு அச்சம், சரியொப்பு, அச்சம் – கரடி, அச்சம், அன்னை***"[134] என்று பொருள் தருகின்றது. அகராதிகள் அச்சம் என்பதற்கு அகத்தி, இலேசு, பயம், கோரைப்புல் என்று விளக்கம் தருகின்றன.

### களஞ்சியங்களில் 'அச்சம்'

"***அச்சம் என்பது இன்னல் தரும் சூழ்நிலைகளின் காரணமாக எல்லா உயிரினங்களிடமும் இயல்பாகத் தோன்றும் ஒரு மனவெழுச்சி***"[135] என்று வாழ்வியற்களஞ்சியம் உணர்த்துகின்றது. கலைக்களஞ்சியம், "***அபாயம் அல்லது ஆபத்தான சூழ்நிலையிலிருந்து தப்புவதற்காக எல்லா உயிரினங்களும் இயல்பாக எழும் ஒருவித அடிப்படை உள்ளக்கிளர்ச்சி (Primary Emotion)***"[136] என்று கூறுகின்றது. அறிவியல் களஞ்சியம், "***குறிப்பிட்ட உயிரினங்களுக்கோ சூழ்நிலைகளுக்கோ அளவுக்கு அதிகமாக அச்சம் கொள்ளுதலே அச்சமாகும் (Phobia)***"[137] என்று பொருள் தருகின்றது. அச்சம் ஒருவகை நரம்புத்தளர்ச்சி நோயாகும். அச்சம் அல்லது பயம் (Fear) பெரும்பாலும் மனநோய்களின் ஓர் அறிகுறியாக அமைவதுண்டு. எனினும் அதுவே அளவிற்கு அதிகமாக, முழு

அறிகுறியாகத் தவித்துத் தோன்றும்போது அச்ச நோயாக மாறிவிடுகிறது என்று விளக்கம் கூறுகின்றது.

**நிகண்டு நூல்களில் ‘அச்சம்’**

திவாகர நிகண்டு அச்சம் என்னும் சொல்லிற்கு, “***அதிர்ப்பு, கம்பலை, வெருவு, அஞர், அழுங்கல், பொதிர்ப்பு, துணுக்கம், இரிதல், கூசுதல், வெடிப்பு, துளக்கம், கரிப்பே, தெருமரல், விதிர்ப்பு, பனித்தல், அலமரல், வெம்மை, வெறி, புலம்பு, பீதி, கவலை, சூர், பிறக்கம், நடுக்கம், இடும்பை, இறையே, உலைதல்***”[138] என்ற பல்வேறு சொற்களைத் தருகின்றது.

**பிங்கால நிகண்டு**

இதனையே பிங்கல நிகண்டு “***உரும், உருவு, உட்டு, பனிப்பு, வெருவு, புலம்பு, வெறி, யாம், பிறப்பு, கொண், பேம், நாம், வெறுப்பு, சூர், பீர், வெடி, கவலை, அடுப்பு, கலக்கம் என்றும், மேலும் அகத்தியம், பயம்***”[139] என்று கூறுகின்றது. சூடாமணி நிகண்டு அகத்தி, ஐம்பை, அஞ்சல் என்கிறது. அச்சம் என்பதை,

“***அச்சமென்பது வேயஞ்சலு மகத்தியும்***
***ஐமையுமென வேயமைக்குமுப்பேரே***”[140]

என்று சுட்டுகின்றது. இவற்றில் அச்சம் என்பதற்கு பெரு, பயம், சூர், அகத்தி, கவலை, ஐம்மை என்று விளக்கம் தருகின்றது.

# தொகுப்புரை

தொல்காப்பியப் பொருளதிகாரத்தின் அகத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல், செய்யுளியல் ஆகிய இயல்களின் நூற்பாக்களில் அச்சம் என்ற பொருள்தரும் சொற்களைக் கூறுகின்றார். இவற்றிற்கு உரையாசிரியர்கள் தரும் விளக்கத்தை நோக்கும்போது அச்சம் தொடர்பாக விரிவான விளக்கம் கிடைக்கின்றது. தொல்காப்பியர் மெய்ப்பாட்டியலில் மெய்ப்பாடு என்பது பற்றியும் அவற்றின் வகைகளையும் குறிப்பிடுகிறார். மெய்ப்பாடு எண்வகைப்படுத்தி, ஐந்தாவது மெய்ப்பாடாக அச்சத்தையும், அவை தோன்றும் நிலைக்களன்களையும் உணர்த்துகிறார்.

களவியலில் மாந்தர்களின் கூற்றுகளில் அச்சம் தோன்றுவதை உணர்த்தும்போது, தலைவன், தலைவி இருவர் மனநிலைகளை, அச்சம் தோன்றும் நிலைக்களன்களாகக் குறிப்பிடுவதை அறிய முடிகிறது. தோழிக்கு, தலைவியின் காதல் நிலைகள் ஊராருக்குத் தெரிந்துவிடக் கூடுமோ என்ற புறநிலைக் காரணங்களால் ‘அச்சம்’ தோன்றுகிறது.

‘அச்சம்’ என்பதை அகமாந்தர்களின் காதல் ஒழுக்க விதிகளிலிருந்து உணர்ந்துகொள்ள முடிகின்றது. உடன்போக்கின்போது கருப்பொருள்களின் இயல்பினை நினைத்துப் பயங்கொள்கின்றனர். அம்பல், அலர் போன்ற நிகழ்வில் அச்சம் தோன்றுகிறது. இழுக்கு ஏற்படுமோ எனத் தனக்குத்தானே நினைக்குந்தோறும் ‘சிறு பயம்’ உண்டாகும் என்பதை உரையாசிரியர் உணர்த்துகின்றனர். ஒரு பொருளை இழக்கும்போது உண்டாகும் மனநிலை அச்சம் சார்ந்தது என்பதும் புலப்படுகின்றது.

தொல்காப்பிய இலக்கணத்தைச் சார்ந்து பின்வந்த ஐந்திணை இலக்கண நூல்களில் ஒருசில நூற்பாக்களில் ‘அச்சம்’ என்றும் அச்சம் தரக்கூடிய பிற சொல்லையும் குறிப்பிட்டு உணர்த்துகின்றனர்.

பொருள் இலக்கண நூல்களான இறையனார் அகப்பொருள், புறப்பொருள் வெண்பாமாலை போன்ற நூல்களில் ‘அச்சம்’ என்ற சொல்லை நூற்பாக்களில் பயன்படுத்தி விளக்கம் தருகின்றவற்றை அறிய முடிகின்றது.

அகராதிகள், நிகண்டுகள், களஞ்சியங்களில் ‘அச்சம்’ என்பதற்கு வேறு வகையான சொற்களை மிகுதியாகக் கூறுகின்றன. உரையாசிரியர் அச்சத்தகனவற்றிற்குப் பயப்படுவதே அச்சம் என்று உணர்த்துகின்றனர்.

தலைவன், தலைவி, மனத்திற்குள் உண்டாகும் ஓர் இழப்பு, பயம் இவற்றாலும் அச்சம் உண்டாகும். தொல்காப்பியர் உணர்த்தும் நிலைக்களன்களுக்கு அப்பாற்பட்டதாக உள்ளவற்றை எண்ண முடிகிறது. காலந்தோறும் சூழல்கள் மாறுவதால், இலக்கணங்களுக்கு அப்பாற்பட்ட நிலைக்களன்களாலும் ‘அச்ச’ உணர்ச்சி தோன்றும் என்பது உறுதியாகிறது.

## குறிப்புகள்

1. மு. அருணாசலம்பிள்ளை, தொல்காப்பியம் பொருளதிகாரம் அகத்திணையியல் உரைவளம், ப. 353.
2. மேலது., ப. 410.
3. க.வெள்ளைவாரணர், தொல்காப்பியம் களவியல் உரைவளம், ப. 6.
4. மேலது., பக். 29–30.
5. மேலது., ப. 31.
6. மேலது., ப. 32.
7. தமிழண்ணல், தொல்காப்பியம் மூலமும் கருத்துரையும், ப. 339.
8. க.வெள்ளைவாரணர், தொல்காப்பியம் களவியல் உரைவளம், ப. 37.
9. மேலது., 38.
10. புலவர் குழந்தை, தொல்காப்பியர் காலத் தமிழர், ப. 131.
11. க. வெள்ளைவாரணர், தொல்காப்பியம் களவியல் உரைவளம், பக். 39–40.
12. மேலது., ப. 41.
13. புலவர் குழந்தை, தொல்காப்பியர் காலத் தமிழர், ப. 132.
14. சி. இலக்குவனார், தொல்காப்பிய ஆராய்ச்சி, ப. 166.
15. க.வெள்ளைவாரணர், தொல்காப்பியம் களவியல் உரைவளம், ப. 46.
16. மேலது., ப. 49.
17. மேலது., ப. 53.
18. மேலது., ப. 54.
19. மேலது., ப. 77.
20. மேலது., ப. 108.
21. மேலது., ப. 110.
22. மேலது., ப. 111.
23. மேலது., ப. 118.
24. மேலது., பக். 131, 133, 134.
25. மேலது., பக். 151, 153, 154.

26. மேலது., பக். 163–164.

27. மேலது., ப. 186.

28. மேலது., ப. 207.

29. க.வெள்ளைவாரணர், தொல்காப்பியம் கற்பியல் உரைவளம், பக்.18–20.

30. மேலது., பக். 35–48.

31. மேலது., பக். 59, 60–61.

32. மேலது., ப. 98.

33. மேலது., ப. 99.

34. மேலது., ப. 100.

35. க.வெள்ளைவாரணர், தொல்காப்பியம் பொருளதிகாரம் பொருளியல் உரைவளம், பக். 51–52.

36. மேலது., ப. 53.

37. மேலது., ப. 94.

38. மேலது., ப. 96.

39. மேலது., ப. 97.

40. மேலது., ப. 116.

41. மேலது., ப. 117.

42. மேலது., ப. 117.

43. மேலது., ப. 134.

44. மேலது., ப. 135.

45. க.வெள்ளைவாரணர், தொல்காப்பியம் மெய்ப்பாட்டியல் உரைவளம், ப. 25.

46. மேலது., ப. 27.

47. பேராசிரியர், தொல்காப்பியம் பொருளதிகாரம் மெய்ப்பாட்டியல், ப. 1.

48. க.வெள்ளைவாரணர், தொல்காப்பியம் மெய்ப்பாட்டியல் உரைவளம், ப. 9.

49. மேலது., பக். 17–18.

50. மேலது., ப. 26.

51. மேலது., ப. 27.

52. மேலது., ப. 29.

53. மேலது., ப. 31.
54. மேலது., ப. 62.
55. மேலது., ப. 63.
56. மேலது., ப. 65.
57. மேலது., பக். 65–66.
58. மேலது., ப. 78.
59. மேலது., ப. 92.
60. மேலது., ப. 99.
61. மேலது., ப. 87.
62. மேலது., பக். 92–93.
63. மேலது., ப. 102.
64. மேலது., ப. 104.
65. மேலது., ப. 107.
66. மேலது., ப. 109.
67. மேலது., ப. 113.
68. மேலது., ப. 134.
69. மேலது., ப. 135.
70. மேலது., ப. 138.
71. மேலது., ப. 139.
72. மேலது., ப. 186.
73. மேலது., ப. 188.
74. மேலது., ப. 192.
75. மேலது., ப. 197.
76. மேலது., ப. 198.
77. மேலது., பக். 202–203.
78. மேலது., ப. 208.
79. மேலது., ப. 214.
80. க.வெள்ளைவாரணர் (உ.ஆ.), தொல்காப்பியம் உவமையியல் உரைவளம், ப. 38.

81. க.வெள்ளைவாரணர் (உ.ஆ.), தொல்காப்பியம் செய்யுளியல் உரைவளம், ப. 1.
82. மேலது., ப. 955.
83. மேலது., ப. 957.
84. பெருந்தேவனார் (உ.ஆ), பொன் பற்றி காவலர் புத்தமித்திரனார் இயற்றிய வீரசோழியம், ப. 90.
85. மேலது., ப. 256.
86. கோபாலையர், தி.வே. (ப.ஆ.), திருவாரூர் வைத்தியநாத தேசிகன் இயற்றிய இலக்கண விளக்கம் பொருளதிகாரம் அகத்திணையியல் மூலமும் உரையும், ப. 252.
87. மேலது., பக். 206–207.
88. மேலது., ப. 267.
89. மேலது., ப. 268.
90. மேலது., ப. 282.
91. மேலது., ப. 33, 40, 79, 124–126, 144, 166, 167, 173.
92. வீரமாமுனிவர், தொன்னூல் விளக்கம், ப. 127.
93. மேலது., ப. 258.
94. திரிசிரபுரம் உறையூர் வித்துவான் முத்துவீர உபாத்தியார், முத்துவீரியம், ப. 231.
95. மேலது., ப. 232.
96. மேலது., ப. 285.
97. மேலது., பக். 298–299.
98. மேலது., ப. 543.
99. மேலது., ப. 544.
100. செ.வை. சண்முகம் (ப.ஆ.), சுவாமிநாதம், ப. 218.
101. நக்கீரர் (உ.ஆ), களவியல் என்ற இறையனார் அகப்பொருள், ப. 198.
102. மேலது., ப. 33.
103. மேலது., ப. 34.
104. மேலது., ப. 44.
105. மேலது., ப. 139.

106. மேலது., ப. 143.

107. மேலது., ப. 152.

108. கார. கோவிந்தராச முதலியார் (ப.ஆ.), அகப்பொருள் விளக்கம் பழைய உரையுடன், ப. 271.

109. மேலது., ப. 279.

110. மேலது., ப. 26.

111. மேலது., ப. 31.

112. மேலது., ப. 62.

113. மேலது., ப. 102.

114. மேலது., பக். 131–132.

115. மேலது., ப. 163.

116. மேலது., பக். 163–164.

117. மேலது., ப. 173.

118. மேலது., ப. 226.

119. உ.வே.சாமிநாதையர், தமிழ்நெறி விளக்கம் மூலமும் உரையும், ப. 10.

120. மேலது., ப. 31.

121. இரா. இளங்குமரன் (ப.ஆ.), களவியற்காரிகை, ப. 50.

122. மேலது., ப. 109.

123. இராமானுஜ ஐயங்கார் (ப.ஆ.), திருக்குருகைப் பெருமாள் கவியராயர் இயற்றிய மாறன் அகப்பொருளும் திருப்பதிகைக்கோவையும், ப. 31.

124. மேலது., ப. 52.

125. மேலது., ப. 68.

126. மேலது., ப. 92.

127. மேலது., ப. 101.

128. சுப்பிரமணிய தேசிகர் (உ.ஆ.), இராமலிங்கத் தம்பிரான் (ப.ஆ.), தண்டியாசிரியர் இயற்றிய தண்டியலங்காரம், ப. 144.

129. மேலது., ப. 144.

130. நாராயணையங்கார் (உ.ஆ.), திருக்குருகைப் பெருமாள் கவிராயர் இயற்றிய மாறனலங்காரம், ப. 299.

131. கழக புலவர் குழுவினர், தமிழ் அகராதி, ப. 11.

132. சந்தியா நடராஜன், தமிழ்ப் பெயரகராதி, ப. 3.

133. ஸ்ரீ. கதிரைவேற்பிள்ளை, தமிழ்ச் சொல்லகராதி, ப. 48.

134. பெரும் சொல்லகராதி, பக். 66–67.

135. நா. பாலுச்சாமி (ப.ஆ.), வாழ்வியல் களஞ்சியம், பக். 122–123.

136. நா. பாலுச்சாமி (ப.ஆ.), கலைக்களஞ்சியம், ப. 45.

137. அறிவியல் களஞ்சியம், பக். 92–93.

138. திவாகர முனிவர், திவாகர நிகண்டு, ப. 185.

139. பிங்கல முனிவர், பிங்கல நிகண்டு, ப. 19.

140. நாராயணன் ஐயங்கார், அகராதி நிகண்டு, ப. 8.

## இயல் – 2

# சங்க அக இலக்கியத்தில் தலைவன் கூற்றில் அச்சம்

### முன்னுரை

சங்க இலக்கியம் அகம், புறம் என்ற இரு பகுப்புகளை உடையதாகும். அகம் என்பதற்கு, "***ஒத்த அன்பான் ஒருவனும் ஒருத்தியும் கூடுகின்ற காலத்துப் பிறந்த பேரின்பம், அக்கூட்டத்தின் பின்னர் இவ்விருவரும் ஒருவருக்கொருவர் தத்தமக்குப் புலனாக இவ்வாறிருந்ததெனக் கூறப்படாததாய் யாண்டும் உள்ளத் துணர்வே நுகர்ந்த இன்பமுறுவேதோர் பொருளாதலின் அதனை அகம் என்றார். எனவே. அகத்தே நிகழ்கின்ற இன்பத்திற்கு அகமென்றது ஓர் ஆகுபெயராம்***"[1] என்று நச்சினார்க்கினியர் விளக்கம் தருகிறார். எட்டுத்தொகையில் நற்றிணை, குறுந்தொகை, ஐங்குறுநூறு, கலித்தொகை, அகநானூறு ஆகிய நூல்களில் அக மாந்தர்களின் கூற்றுக்களாகவே கருத்துக்கள் புலப்படுத்தப்பட்டுள்ளன. இவ்வகமாந்தர்கள் களவு, கற்பு என்ற இருநிலைகளில் கூற்றுக்களை நிகழ்த்துவதன் வழியிலேயே அச்சம் உணர்வு எவ்வாறு வெளிப்படுவதை ஆய்வதே இவ்வியலின் நோக்கமாகும்.

### களவுப் பாடல்களில் அச்சம்

#### களவியல் விளக்கம்

தலைவனும் தலைவியும் ஒத்த உள்ளத்தோடு எதிர்ப்பட்டு புணர்தல் களவாகும். இந்த 'துய்ப்பு இப்படித்தான் இருந்தது' என்று எவருக்கும் புலப்படுத்த முடியாதது. "***களவு என்பதற்குப் பிறர்க்குரிய பொருளை மறையிற் கோடல்***"[2] என்று இளம்பூரணரும், "***ஒருவரையொருவர் தாமே விரும்பிப் பிறரறியாமல் தம்முள் கூடி இன்புறும் உறவாகும்***"[3] என்று இறையனார் களவியல் உரையும் கூறுகின்றது.

**கூற்று விளக்கம்**

ஒருவர் பிறரோடு நேரடியாகவே உரையாடுவது கூற்று. 'கூறுதல்' என்ற வினையில் இருந்து தோன்றி உரைப்பதையும் கேட்பதையும் ஒரே சொல்லால் சுட்டுவது 'கூற்று' ஆகும். கூற்றைப்பற்றி உரையாசிரியர்கள் 'கூற்று வகை என்பது, அச்செய்யுள் கேட்டாரை இது சொல்லுகின்ற இன்னாரென உணர்வித்தல்' எனப் பேராசிரியரும், "***கூற்றுவகை என்றது அச்செய்யுள் கேட்டோரைக் கூறுகின்றோர் இன்னாரென அறிவித்தல்***"[4] என்று நச்சினார்க்கினியரும் விளக்குகின்றனர்.

**தலைவன் → தலைவியிடம் கூற்று**

இயற்கைப்புணர்ச்சியில் தலைவியைக் கூடி நீங்கும் தலைவனின் கூற்றில் அச்சம் மெய்ப்பாடு வெளிப்படுகின்றது. தலைவன் தன்னை விட்டுப் பிரிவானோ என அஞ்சும் தலைவிக்குப் பிரியேன் என உறுதி வழங்கும் தலைவனின் மொழியாக வருகின்ற,

"***மெல் இயல் அரிவை! நின் நல் அகம் புலம்ப,***
***..........................................................................***
***நின் துறந்து அமைகுவென் ஆயின்என் துறந்து***
***இரவலர் வாரா வைகல்***
***பல ஆகுக! யான் செலவுறு தகவே***"[5] (குறுந்., பா.எ. 137)

என்னும் இப்பாடலில், 'மென்மையான இயல்பினையுடைய அரிவையே, நின்னுடைய நல்ல உள்ளம் தனிமையால் வருந்த நின்னைப் பிரிந்து சென்று, பிரிந்த இடத்தில் உயிருடன் இருப்பேனாயின், யான் செல்லுதல், உற்ற தகுதியை உடையதாகும். அவ்வாறு நின்னைப் பிரிந்து யான் உயிருடன் வாழும் நாள் ஒவ்வொன்றும், என்னை நீங்கி இரவலர் வாராது, வசை விளைவித்து நிற்கும் பல நாள்கள் போல் துன்பமே தருவதாகுக' எனக் கூறுவதில் அச்சம் தோன்றுகிறது. இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தலைமகன் பிரிவச்சமும் வன்புறையும் கூறியதாகின்ற,

"..........................................................................
***'நீயே, 'அஞ்சல்' என்ற என்சொல் அஞ்சலையே;***
***யானே, குறுங்கால் அன்னம் குவவுமணல் சேக்கும்***

***கடல் சூழ் மண்டிலம் பெறினும்,***

***விடல் சூழலன் யான், நின்னுடை நட்பே***"[6] (குறுந்., பா.எ.300: 5–8) இவ்வடிகளில், 'இயல்பாகவே குவளைமலரின் மணம் வீசுகின்ற, திரட்சியையுடைய கரிய கூந்தலையும், ஆம்பல் மலரின் மணம் வீசுகின்ற இனிமை பொருந்திய பவளம் போன்ற வாயினையும், ஆழமான நீரில் பூத்துள்ள தாமரையின் தாது போன்ற நுண்ணிய பலவாகிய தேமலையும் உடைய மாமை நிறம் உயைவளே. அஞ்சாதே, நீ அஞ்சுதலை உடையை, குறிய காலினையுடைய அன்னப்பறவை, குவிந்த மணற்பரப்பில் தங்கியிருக்கும், கடலால் சூழப்பட்ட இந்நில உலகமே நின்னைப் பிரிந்து பெறுவதாயினும், யான் நின்னை உடைமையாகக் கொள்ளுதற்குக் காரணமாகிய நட்பினை விட்டு விடுதலை நினையேன்' என்பதில் அச்சம் தோன்றுகிறது. 'இயற்கைப் புணர்ச்சி புணர்ந்த தலைவன் பிரிவச்சம் உரைத்தது' என உ.வே.சாமிநாதையர் கூறுகிறார். அவர் "***பிரிவென்பதொன்று உண்ட என்றும், அஃது அஞ்சுதற்கு உரியதென்றும் தோன்ற உணர்த்தியது***"[7] என்கிறார். இப்பாடலில் தலைவியின் அச்சமும் அதைத் தலைவன் நீக்குகின்ற களவு செயல்பாடும் வெளிப்படுகிறது.

தலைவியின் களவொழுக்கத்தை ஏற்று அவளுடைய உறவினர் வரைவிற்கு இசையாத போது தலைவன் தலைவியை உடனழைத்துக் கொண்டு செல்வான் அவ்வாறு செல்லுதல் உடன்போக்கு எனப்படும். இதனைத் தொல்காப்பியர் 'கொண்டு தலைக் கழிதல்' என்பார். தலைவன் தலைவியை உடன் அழைத்துச் செல்லும் பொழுது இடைச்சுரத்தின்கண் பாலையின் தன்மை எடுத்துக்கூறி வருந்துமிடத்து அச்சம் வெளிப்படுகின்றது.

உடன்போக்கின்போது தலைவன் தலைவியிடம், 'வேற்படை போலும் இலையையுடைய இம்மரத்தினுடைய நிலத்திலே படாது தொங்குகின்ற நெடியவிழுது வைகறையில் மேல்காற்று வீசுந்தோறும் ஊசலாடுதல் போன்று கீழே துயிலுகின்ற பிடியானை மீது புரளா நிற்கும் பாலையின்

அருகே செல்லுதல் நினக்குப் பொருந்தாது. ஆகவே, நீ அஞ்சுவாய் என்பதை,

"*மனை உறை புறவின் செங் காற் பேடைக்*
*காமர் துணையொடு சேவல் சேர*
*புலம்பின்று எழுதரு புன்கண் மாலைத்*
*தனியே இருத்தல் ஆற்றேன்' என்று, நின்*
*பணி வார் உன்கண் பைதல கலுழ,*
*'தும்மொடு வருவல்' என்றி : எம்மொடு –*
*பெரும் பெயர்த் தந்தை நீடு புகழ் நெடு நகர்*
*யாயொடு நனி மிக மடவை! — முனாஅது*
*வேனில் இற்றித் தோயா நெடு வீழ்*
*வழி நார் ஊசலின், கோடை தூக்குதொறும்,*
*துஞ்சுபிடி வருடும் அத்தம்*
*வல்லை ஆகுதல் ஒல்லுமோ, நினக்கே*"[8] (நற்., பா.எ. 162)

என்ற பாடலடிகள் குறிப்பிடும். இப்பாடலில், 'மிக்க புகழை உடைய தந்தையின் புகழ்மிக்க பெரிய மாளிகையில் தாயோடு பிரியாது வாழ்கின்ற மிக்க இளமையுடைய தலைவியே! முன்னர் 'மனையிடத்து உறைகின்ற சிவந்த காலை உடைய அழகிய புறாவின் பேடையோடு அதன் ஆண் துணையாகிய சேவல் கூடி மகிழும், அவற்றைக்கண்டு வருத்தம் மிகுகின்ற துன்பம் உண்டாக்கும் மாலைப்பொழுதில், யான் நின்னைப் பிரிந்து தனியே இருப்பதற்கு ஆற்றேன்' என்று கூறினை. நின் நீர் வடிகின்ற மையுண்ட கண்கள் துன்புற்றுக் கலங்கின. இந்நிலையில் நீ எம்மைநோக்கி 'நும்மொடு வருவேன்' என்று கூறினை. வேனிற்காலத்தில் இத்திமரத்தின் நெடிய விழுது நிலத்தில் தோயாது தொங்க அதன்மீது நாராற்பிணித்த ஊசலைப்போல மேல் காற்று வீசும்போதெல்லாம் அவ்விழுது ஆடும். அவ்விழுது காற்று வீசுந்தோறும், அம்மரத்தின் கீழே துயிலும் பெண்யானை மீது புரளும். இத்தகு பாலையின் கண்ணே செல்லுவது என்பது உனக்குப் பொருந்தாததாகும். ஆகவே நீ என்னோடு வரவேண்டா' என்பதிலிருந்து அச்சம் வெளிப்படுகிறது. இதில் நீரும் நிழலுமின்றி முள்ளும்பாலும் நிரம்பிய பாலை அக்கொடிய பாலையில்

வருவதற்கு நீ அஞ்சுவாய் என்று தலைவன் குறிப்பாக பாலையின் தன்மையை புலப்படுத்தி உடன்போக்கை மறுக்குமிடத்து அச்சம் சுட்டப்படுகின்றது. இதனை, ‘வல்லை ஆகுதல் ஒல்லுமோ’ என்ற அடி உணர்த்துகிறது.

உடன்போக நின்ற தலைவிக்கு தலைவன், ‘பகற்பொழுதில் சுரத்தின் கண்ணே பரற்கல் பொருந்திய சிலம்பினை அணிந்த நின்சிறிய அடிகள் சிவக்க எம்முடன் ஒரு நெறியில் பொருந்தி……….. நடத்தல் வன்மையுடைய ஆகின்றாய்’ என்கிறான். இதனை உறையூர் தாமோதரனார்,

“***வேனிற் பாதிரிக் கூனி மாமலர்***
***நறைவாய் வாடல் நாறும் நாள், சுரம்***
***அரிஆர் சிலம்பின் சீறடி சிவப்ப,***
***எம்மொடு ஓர்ஆறு படீஇயர், யாழநின்***
***பொம்மல் அதி பொதுள வாரி***
***அரும்பு அற மலர்ந்த ஆய்பூ மராஅத்துச்***
***சுரும்புசூழ் அலரி தைஇ, வேய்ந்தநின்***
***தேம்பாய் கூந்தல் குறும்பல மொசிக்கும்***
***வண்டுகடிந்து ஓம்பல் தேற்றாய் அணிகொள***
***நுண்கோல் எவ்வளை தெளிர்க்கும் முன்கை***
***மெல்இறைப் பணைத்தோள் விளங்க வீசி,***
***வல்லுவை மன்னால் நடையே – கள்வர்***
***பகைமிகு கவலைச் செல்நெறி காண்மார்,***
***மிசைமரம் சேர்த்திய கவைமுறி யாஅத்து***
***நார்அரை மருங்கின் நீர்வரப் பொளித்து,***
***களிறு சுவைத் திட்ட கோதுடைத் ததரல்***
***கல்லா உமணர்க்குத் தீமூட்டு ஆகும்,***
***துன்புறு தகுவன ஆங்கண், புன்கேட்டு***
***அரில் இவர் புற்றத்து அல்குஇரை நசைஇ,***

***வெள்அரா மிளிர வாங்கும்***

***பிள்ளை எண்கின் மலைவயி னானே***"[9] (அகநா., பா.எ. 257)

என்று உரைப்பார். இப்பாடலில், 'குறுமகளே! ஆறலை கள்வராகிய பகைவர் மிகுந்த கவர்த்த வழிகளில், பின்வரும் வழிப்போவார் தாம் செல்லுதற்குரிய வழி இதுவெனக் காணும்பொருட்டு, முன்செல்வார் யாமரத்தின் மேலே ஏணியைச் சார்த்திவிட்டுச் செல்வர். அத்தகைய தளிர்களையுடைய கவர்த்த கிளைகளைக் கொண்ட யாமரத்தின் அடிப்பகுதியில், களிறானது நாரினை நீர் வருமாறு உரித்துச் சுவைத்துப் போட்ட சக்கையாகிய சிதைந்த மரப்பட்டைகள் அவ்வழி வரும் கல்வி அறிவிலா உப்பு வணிகர்க்குத் தீமூட்டும் சுள்ளிகளாகப் பயன்படும். துன்பம் மிகுந்த அவ்விடங்களில், இரவு நேரத்து இரையினைப் பெற விரும்பிய கரடிக் குட்டிகள், சிறு தூறுகள் படர்ந்த புற்றின்கண், வெண்ணிறப் பாம்புகள் நெளியும் படியாகப் புற்றாஞ் சோற்றினை அகழ்ந்தெடுக்கும் அத்தகைய மலைப்பகுதியில், பாதிரியின் தேன் பொதிந்த வாடற் பூக்கள் மணக்கின்ற வேனிற்காலத்தின் பகற்பொழுதில், பரல்கற்கள் ஒலி செய்யும் சிலம்பணிந்த நின் சிற்றடிகள் சிவக்குமாறு எம்முடன் இணைந்து நடந்து வருகின்றாய், தழைத்து வளர்ந்த பொலிவு பெற்ற நின் கூந்தலை நெருக்கமாக வாரிக் கொண்டாய். வெண் கடம்பின் அரும்பே இலையாகப் பூத்துக் குலுங்கும் வண்டுகள் மொய்க்கும் அழகிய மலர்களைத் தொடுத்துச் சூடிக் கொண்டாய். அவ்வாறு மொய்க்கும் வண்டுகளைக் கடிந்து ஓட்டி நீ உன்னைப் பாதுகாத்துக் கொள்ளுதலையும் அறியாது போனாய்! ஒளி பொருந்திய வளையல்கள் ஒலி செய்யும் திரண்ட முன்கையினையுடைய மெல்லிய சந்துக்களைக் கொண்ட மூங்கிலைப் போன்ற தோள்களை விளக்கமுற வீசி நடக்கும் வலிமையையும் பெற்றுவிட்டாய். நின் அன்பு இருந்தவாறு என்னே' என்பதிலிருந்து அச்சம் உணர முடிகிறது.

இவற்றில் தலைவன் உடன்வர விரும்பும் தலைவியின் மென்மை தன்மைக்கு அஞ்சி அவளது இளமை பொருந்திய விருப்பத்தையும், அவளுக்கு ஏதேனும் துன்பம் வந்து விடக்கூடுமே என்ற சிறு பயமும்

வருமிடத்து அச்சம் வெளிப்படுகின்றது. இவற்றில் நிலைக்களன்களில் ஒன்றான விலங்குகளினால் உண்டாகும் அச்சமாகிறது.

இவ்வாறாக, களவு வாழ்க்கையில் ஈடுபடும் தலைவனும் தலைவியும் களவினைக் கற்பாக்கும் முயற்சியில் உடன்போக்கு மேற்கொள்கின்றபோது வழியின் இயல்பு கண்டு அஞ்சுதல், தலைவியின் மென்மைத் தன்மைக்கு ஏதேனும் துன்புறும் அச்சம் அடைதல் போன்ற அச்ச நிகழ்வுகள் நிகழ்கின்றன.

**தலைவன் → தோழியிடம் கூற்று**

தலைவன் பாங்கர் கூட்டத்தின் பின்னர் மீண்டும் கூட்டம் பெறுவதற்காகத் தோழியைக் கூடுவது பாங்கியற் கூட்டம் எனப்படும். அவன் தோழியை நாடிச் சென்று குறையிரப்பான். அதாவது தலைவியால் விரும்பப்பட்ட அவளின் உயிர்த் தோழியை அணுகித் தலைவியை அடைய உதவுமாறு வலியுறுத்தி இரத்தல். இதனை தொல்காப்பியர்,

"***பெட்ட வாயில்பெற் றிரவுவலி யுறுப்பினும்***"[10]

என்பர். இக்குறைநயத்தலை இறையனார் அகப்பொருள்,

"***புணர்ந்த பின்றை யாங்ஙனம் ஒழுகாது***
***பணிந்த மொழியால் தோழி தேஎத்து***
***இரந்துகுறை யுறுதலுங் கிழவோன் மேற்றே***"[11]

என்று உரைக்கின்றது. தோழியின்பால் தலைவன் குறையுற்று நிற்க, அவன் உள்ளக்கருத்தினை அறிந்து தோழி தலைவிக்கும் தலைவனுக்குமிடையே கூட்டமென்பதனை உணர்வாள். இதனை 'குறையுற உணர்தல்' என்பார் தொல்காப்பியர். இவ்வாறு தலைவன் தன்னுடைய குறைகளை தோழியிடம் உணர்த்துவான். அத்தோழி அக்குறை உணர்தலை ஏற்றும், மறுத்தும் நிற்பாள். அவள் மறுத்து கூறுமிடத்து தலைவனுக்கு அச்சம் வெளிப்படுகின்றது. தலைவன் தோழியிடம் குறைவேண்டி நிற்க அத்தோழி அதனை மறுக்குமிடத்து தலைவன் மடலேறுவதாக வலியுறுத்துகின்றான். "***மடல் என்பது காமம் மிக்க தலைவன் பனைமடலால் குதிரையைப் போல ஓர் உருவம் அமைத்து***

***அதன் கழுத்தில் மணி, மாலை முதலியவற்றைப் பூட்டித் தன் உருவத்தையும் தலைவியின் உருவத்தையும் ஒரு படத்தில் எழுதி கையில் ஏந்தி அதன்மேல் யாவரும் அறிய வருதலை மடல் ஏறுதல் என்பர். இம்மடலேறுவதாகக் கூறுவது – ஒரு வகையில் அச்சுறுத்தல் – மிரட்டல் ………… இரண்டாம் நிலை மடலேறுதல் ………. பனைக்கருக்கால் குதிரை போலச் செய்து அதில் தலைவியின் பெயரை எழுதி அதன் மீதி ஏறி இருப்பது மடலேறுதல் அதாவது தலைவியோடு தான் கொண்டிருந்த உடலுறவைச் சூட்சுமமாகப் பனைக்கருக்கு மீது ஏறியிருந்து, தலைவன் ஊருக்கு அம்பலப்படுத்துவதே இந்த மடலேற்றச் செயல்***"[12] என்பர் எஸ்.ஆராக்கியநாதன். மடலேறுதல் என்பது ஒருவகை அச்சுறுத்தல் அல்லது அம்பலப்படுத்துதல் அதன் நிகழ்வைத் தோழி தலைவியிடம் எடுத்துரைக்கின்றபோது அவளுக்கு சமூகத்தின் காரணமாக அச்சப்படுவாள் என்பது புலப்படுகிறது.

பாங்கியினாற் குறைமறுக்கப்பட்ட தலைவன் பாங்கியிடம் கூறுவதனை, 'அமுதத்தின் இனிமை நிரம்பிய செவ்விய நாவானது அஞ்சும்படி கூர்மையாகிய பற்களையும் சிலவாகிய சொற்களையும் உடைய தலைவியை நான் மடன்மா ஏறுதலாற் பெறுவேனாக. பெற்ற பின்பு இந்த ஊரில் உள்ளார் அறிவராக பலர் வீதியின் இந்த நல்லாளுடைய தலைவன் இவன் என்று சொல்லி நிற்க நாம் சிறிது நாணுவேம்' என்று குறிப்பிடுகிறான். இதனை,

"***அமிழ்துபொதி செந்நா வஞ்ச வந்த***
***வார்ந்திலங்கு வையெறிற்றுச் சின்மொழி யரிவையைப்***
***பெறுகதில் லம்ம யானே பெற்றாங்***
***கறிகதில் லம்மவிவ் வூரே மறுகில்***
***நல்லோள் கணவ னிவனெனப்***
***பல்லோர் கூறயா நாணுகஞ் சிறிதே***"[13] (குறுந்., பா.எ. 14)

என்ற பாடல் உணர்த்துகிறது. இதில் தலைவன் 'நான் மடலேறுதியாவது தலைவியை பெறுவேன்' என்று பாங்கியிடம் குறிப்பாக அச்சுறுத்துவதை அறிய முடிகின்றது.

மேலும், தன் குறையை நிறைவேற்ற உடன்படாத தோழியை நோக்கிய தலைவன் கூறுவதை,

"*மாவென மடலு மூர்ப பூவெனக்*

*குவிமுகி ழெருக்கங் கண்ணியுஞ் சூடுப*

*மறுகி னார்க்கவும் படுப*

*பிறிது மாகுப காமங்காழ்க் கொளினே*"[14] (குறுந்., பா.எ. 17)

என்ற பாடலடிகள் விளக்கும். 'காம நோயானது முதிர்வுற்றால் பனை மடலையும் குதிரை எனக்கொண்டு ஆடவர் அதனை உணர்வர். குவிந்த அரும்பை உடைய எருக்கம்பூ மாலையையும் அடையாள மாலைபோல தலையில் அணிந்துகொள்வார். வீதியில் பிறர் தம்மைக் கண்டு ஆராவரிக்கவும்படுவர். தம் கருத்து முற்றாதாயின் காதலுக்குரிய வரை பாய்தல் முதலிய வேறு செயலை உடையவரும் ஆவர்' என்று இவற்றில் தலைவன், தோழியிற் கூட்டத்தால் தலைவியைப் பெற மேற்கொண்ட உத்தியே 'மடலேறுதல்' என்பதாகும்.

பாங்கியிற் கூட்டத்தில் குறைமறுத்தவிடத்து தலைவன் தோழியிடம், 'யான் தலைவியைப் பிரிய நேருமாயின் அவளை அடையும் பொருட்டு மடலேறினால் தலைவி பழிக்குக் காரணமாகும். அது செய்யாது உயிரோடு வாழ்ந்திருத்தலும் பழிக்குக் காரணமாகும்' என்று அஞ்சி தலைவன் மடலேற எண்ணியிருக்கும் காரணத்தை கூறுவதை அள்ளூர் நன்முல்லையார்,

"*காலையும், பகலுங், கையறு மாலையும்,*

*உர் துஞ்சு யாமமும், விடியலும், என்று இப்*

*பொழுதுஇடை தெரியின் பொய்யே காமம்;*

*மா என மடலொடு மறுகில் தோன்றித்*

*தெற்றெனத் தூற்றலும் பழியே;*

*வாழ்தலும் பழியே பிரிவு தலைவரினே*"[15] (குறுந்., பா.எ. 32)

என்று குறிப்பிடுவார். இவற்றில், 'செயலறவு தோன்றாத காலைப் பொழுதும், பகற்பொழுதும் செயலறவினை உண்டாக்கும் மாலைப் பொழுதும், ஊரார் உறங்குகின்ற நள்ளிரவுப் பொழுதும், ஒருவரும் துஞ்சாத

விடியற்பொழுதும் என இவ்வைந்து பொழுதுகளின் இயல்புகளை ஆராய்ந்து நோக்கும்போது, காமம், பொய் என்பதே பொருந்துவதாகும். காமக் கூட்டத்திற்கு இத்தகைய பொழுதுகளானும், இடத்தானும், பிரிவு நேர்ந்து இடையீடு பட்டுழி, குதிரை என்று பார்க்கின்றவர்கள் இகழுமாறு மடலேர்தலால், தெருக்களில் பலர்முன் தோன்றி, அனைவரும் அறிய என்குறையை எடுத்துரைத்தலும் அவட்குப் பழியைத் தருவதாகும். அங்ஙனம் ஊர்ந்து என் குறையைக் கூறாமல் உயிர் வாழ்தல் எனக்குப் பழியைத் தருவதாகும்' என்பதிலிருந்து அச்சம் உணரப்படுகிறது. இவற்றில் ஊரார் பழி தூற்றக்கூடிய அலர்க்கு அஞ்சக்கூடிய நிலையினைப் பாடல் உணர்த்துகிறது. இவற்றினால் சமூகத்தில் பழிதூற்றுதல் காரணமாக அச்சம் தோன்றக்கூடும் என்பதை பாடல்வழி உணர முடிகிறது.

**தலைவன் → நெஞ்சிடம் கூற்று**

மடலேறுதல் துறையிலமைந்த பாங்கியிற் கூட்டத்தில் தோழியினால் குறைமறுக்கப்பட்ட தலைவன் நெஞ்சிடம், 'தலைவியை நினைக்குந்தோறும் அதனால் எமக்குக் காமநோய் மிகுகின்றது. அது தீர தொடுத்த மாலை அணிந்து இடமகன்ற வைப்புக்களையுடைய நாடுகள் தோறும் ஊர்கள் தோறும் சென்று ஒள்ளிய நெற்றியையுடைய அவளது அழகைச் சிறப்பித்துக்கூறி மடலேறுதல் செய்து உயிர்துறந்தொழில் நலனன்றோ? என்று கூறுவதனை,

"***மடல் மா ஊர்ந்து மாலை சூடி***
***கண் அகன் வைப்பின் நாடும் ஊரும்***
***ஒள் நுதல் அரிவை நலம் பாராட்டி***
***பண்ணல் மேவலமாகி அரிது உற்று***
***அது பிணி ஆக, விளியலம் கொல்லோ***
***அகல் இரு விசும்பின் அரவும் குறைபடுத்த***
***பசுங் கதிர் மதியத்து அகல் நிலாப் போல***
***அளகம் சேர்ந்த திருநுதல்***
***கழறுபு மெலிக்கும் நோய் ஆகின்றே***"[16] (நற்., பா.எ. 377)

என்னும் பாடல் உணர்த்துகிறது. இவற்றில், 'அகன்ற கரிய வானத்திடத்தே அரவு விழுங்குதலால் குறைவுபட்ட பசியகதிரை உடைய திங்களின் பலவாகிய ஒளியைப்போல ஒளிவீசும், கூந்தல் சேர்ந்த சிறிய நெற்றியை உடையவள் தலைவி. அவளை யாம் நினைத்து மொழியும் போதெல்லாம் எம்மெதிரே தோன்றி எம்மை வினாவி மெலியச் செய்வாள். அதனால் எமக்குக் காமநோய் மிகுந்தது. அந்நோய் தீரப் பனைமடலாலே செய்த குதிரையினை ஊர்ந்து பலமலர்களால் ஆகிய மாலையினைச் சூடிக் கொண்டு இடமகன்ற வைப்புகளை உடைய நாடுகளிலும் ஊர்களிலும், ஒளி பொருந்திய நெற்றியையுடைய தலைவியினது நலம் பாராட்டிச் செல்லுதலை யாம் மேற்கொள்ள மாட்டேன். அவ்வாறு போகமாட்டாத நிலையில் எம் நெஞ்சத்தை அரிதாக நிலைநிறுத்தி அது நோயாகப் பெருகும் நிலையில் இறந்துபோக மாட்டேமா? மடலேறுதலினும் உயிர்விடுதல் எமக்கொத்த செயலாகுமன்றோ?' என்பதில் அச்சம் தோன்றுகிறது. இதில் தோழி குறை மறுக்குமிடத்து தலைவன் மடலேறி நான் உயிர் துறப்பேன் என்று அச்சுறுத்துவதன் மூலம் அச்ச உணர்வு வெளிப்படுவதை அறியமுடிகின்றது.

தலைவன் தலைவியை திருமணம் செய்யும் பொருட்டு பொருள்தேடப் பிரிவது வரைவிடை வைத்துப் பொருள் வயிற்பிரிவு எனப்படும். "***ஒரு தலைவன் ஒரு தலைவியை மணப்பதற்குக் குறித்த காலத்தினுள் மிக்க பொருளினைத் தானே சென்று தேடி வரும் ஆற்றலான் என்பதை அவன் செய்கையிற் செய்து காட்ட வல்லனாதல் வேண்டும். இதுவே வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிதல் என்பதாகும்***"[17] என மு.இராகவையங்கார் குறிப்பிட்டுள்ளார். இப்பிரிவில் வருந்தும் தலைவனிடத்து அச்சம் வெளிப்படுகின்றது.

வரைவிடைப் பிரிவின்போது, தலைவன் 'சங்கினிடத்தே பிறக்கும் முத்துக்களைக் கொணர்ந்து ஏனை நிலத்து வாழ்வார்க்கு விற்கும் கடல் பொருந்திய கொண்கனுடைய அன்பு மிக்க மகள் நீங்குதற்கரிய

துயரத்தைத் தந்து களைபடுதலாகிய இனிய துயிலலைக் கவர்ந்துகொண்டாள்' என்று தன்னுள்ளே கூறுவதனை,

"...............................................................

***கடல்கெழு கொண்கன் காதன் மடமகள்***

***கெடலருந் துயற நல்கிப்***

***படலின் பாயல் வெளவி போளே***"[18] (ஐங்., பா.எ. 95)

என்னும் பாடலடிகள் உணர்த்தும். இதில், 'தோழியே! நீ வாழி! மந்தியின்கணவனான, இயல்பாகவே குரங்குச் சாதிக்குரிய திறன்கள் யாவும் படைத்த ஆண் குரங்கு, ஒள்ளிய நிறம் படைத்த வலிமை சான்ற புலி முழங்குதலால், மிக விரைந்து உயர்ந்த மலைப்பக்கத்திற்குத் தப்பிச் செல்லுதற்கு இடனான மலைநாடன் என்னைத் தனித்து விட்டுச் சென்றனன். அவ்வாறு செல்கையில் என் மெல்லிய தோள்களின் அழகையும் என் உறக்கத்தையும் உடன் கொண்டு போனான்' என்பதில் தலைவன் தலைவியை விட்டுப்பிரிந்து நீங்குதலால் யான் கண் துயிலாமல் இருக்கின்றேன் என்று தன் ஆற்றாமையைப் புலப்படுத்துமிடத்துத் தலைவன் பிரிவிற்காக அஞ்சி வருந்துகின்ற உணர்வை அறியமுடிகின்றது.

களவொழுக்கத்தில் ஆற்றானாக தலைவன் நெஞ்சிடத்து, 'மணல்மிக்க இம்மூதூரின்கண் உள்ள அகன்ற நெடிய தெருவிலே கூகையின் சேவல் அதன் பெண் பறவையோடு சென்று மக்களியங்காத பெரிய நாற்சந்தி கூடுமிடத்தில் யாவர்க்கும் அச்சமுண்டாகும்படி சூழ நிற்கும், பேய்களும் வெளிப்பட்டு உலவாநிற்கும் ஒருவரையொருவர் அறிதற்கியலாது மயங்கிய இருள்மிக்க அத்தகைய இரவு நடுயாமத்தில் கொல்லிப்பாவை போன்ற பலரும் ஆராயும் அழகையும், அகன்ற மெல்லிய பரந்த தோளையுமுடைய மடப்ப மிக்க இளமடந்தையினது தேமல் படர்ந்த அழகிய கொங்கையை முயங்குதல் மீன்களுறங்கும் இராப்பொழுதெல்லாம் நான் கண் உறங்கிலேன் என்று தலைவியை பிரிந்து வருந்தும் தலைவன் குறிப்பாக அஞ்சி தன் ஆற்றாமை புலப்படுத்துவதை,

“*......................................... வனப்பின்*

*தடமென் பணைத்தோள் மடமிகு குறுமகள்*

*சுணங்கனி வனமுலை முயங்கல் உள்ளி*

*மீண்கண் துஞ்சம் பொழுதும்*

*யான்கண் துஞ்சிலன் யாதுகொல் நிலையே*”[19] (நற்., பா.எ.319:7–11)

என்ற பாடல் சுட்டுகிறது.

உடன்போக்கின்போது தலைவன் நெஞ்சிடம் கூறுகின்ற,

“*அழிவில முயலு மார்வ மாக்கள்*

*வழிபடு தெய்வம் கண்கண் டாஅங்,*

*கலமரல் வருத்தம் தீர, யாழநின்*

*னலமென் பணைத் தோள் எய்தினம்; ஆகலின்,*

*பொரிப் பூம் புன்கின் அழுற் தகை ஒண் முறி*

*கணங்கு அணி வன முலை அணங்கு கொளத் திமிரி*

*நிழல் காண்தோறும் நெடிய வைகி,*

*மணல் காண்தோறும் வண்டல் தைஇ,*

*வருந்தாது ஏகுமதி – வால் எயிற்றோயே!*

*மா நனை கொழுதி மகிழ் குயில் ஆலும்*

*நறுந் தண் பொழில, கானம்*

*குறும் பல் ஊர, யாம் செல்லும் ஆறே*”[20] (நற்., பா.எ. 9)

‘வழிச்செல்வார்க்குத் துன்பத்தைச் செய்யும் மழவரது சாகாடு கிழித்து சென்ற சுவடாகிய நெறியிலே செல்லும் சாத்திரது சோறு பொதிந்த வெள்ளிய பனை ஓலையாலான குடையினை மிக்க விசையினையுடைய சூறாவளி தூக்கலின் எழுந்த ஒலியினை தனது பிணையினது குரலென எண்ணி அஞ்சிய மானேறு அப்பிணையை அழைத்திடும் இடங்களையுடைய காட்டின் கண்ணே..... நம்முடன் மென்மை வாய்ந்த தோளையுடைய தலைவி வரும் என்பர். ஆகலின் நாம் நகையுடையவராய் நின்றோம்’ என்று கூறுகின்றான். இதில் கொடிய பாலை வழியில் தலைவி வருவது தகாது என்று குறிப்பாகத் தலைவன் அஞ்சுவதை அறியமுடிகின்றது.

## கற்பு பாடல்களில் அச்சம்

சங்க அகமாந்தர்களின் அக வாழ்க்கையில் கற்பு வாழ்க்கை சிறந்த முறையில் அமைந்துள்ளது என்பதை சங்கப் பாடல்கள் உணர்த்துகின்றன. அகமாந்தர்கள் களவு ஒழுக்கங்களில் தனக்கு உகந்த இடங்களில் சந்தித்துப் பழகிப் பின் வரைவு செய்தபின் கற்பு வாழ்க்கையைத் துவங்குகின்றனர். வரைவிற்குப் பின்னர் நிகழக்கூடிய வாழ்க்கைச் சூழலை விளக்குகின்ற சங்கப் பாடல்களில் அச்சம், மெய்ப்பாடு அமைந்திருக்கின்றது.

கருத்து ஒருமித்த தலைவன், தலைவியர் பிறர் அறியாது பழகும் நிகழ்வே (ஒழுக்கம்) களவு. இக்களவு ஒழுக்கத்திலிருந்து, பிறர் அறிய குடும்பத்தார் இசைவுடன் மணம் முடித்து பின்னர் வாழக்கூடிய ஒழுக்க நிகழ்வுகளே கற்பு என்பதை,

“***கற்பெனப் படுவது கரணமொடு புணரக்***
***கொளற்குரி மரபின் கிழவன் கிழத்தியைக்***
***கொடைக்குரி மரபினோர் கொடுப்பக் கொள்வதுவே***”[21]

(தொல்.பொருள்.களவு., நூ.எ. 1088)

எனக் கற்பு வாழ்க்கையில் தலைவன், தலைவி இருவரின் வாழ்க்கைக்குத் துணை நிற்கும் வாயில்களாக பன்னிருவரைக் கூறுகிறார் தொல்காப்பியர். இப்பன்னிரு வாயில்களிடம் தலைவன் கூற்று நிகழ்த்தும்போது ‘அச்சம்’ மெய்ப்பாட்டு உணர்வு வெளிப்படுவதை வகைப்படுத்தப்பட்டு விளக்கப்படுகின்றது.

### தலைவன் → தலைவியிடம் கூற்று

தலைவன் வினைமேற் செல்கின்றபோது தலைவியிடம் கூற்று நிகழ்த்தும் சூழலில் அமைந்த பாடல்களில் அச்சம் வெளிப்படுகின்றது. மன்னனுக்குப் படைத்தலைமைப் பூண்ட தலைமகன் போர்க்கடமையை முடித்துத் திரும்பி வந்து தன் மனைவியோடு வாழுகின்றபொழுது, தன் கணவன் மீண்டும் பிரிவானோ என்று தலைவி கவலை கொண்டாள்.

அஃதுணர்ந்த தலைமகன் அவளுடைய ஐயத்தைத் தீர்க்கும் நோக்குடன் கூறுகின்ற,

"***வென்வேல் வேந்தன் அருந் தொழில் துறந்து, இனி,***
***நன்னுதல்! யானே செலவு ஒழிந்தனெனே!***
***முரசு பாடு அதிர ஏவி,***
***அரசு படக் கடக்கும் அருஞ்சமத்தானே?***"[22] (ஐங்., பா.எ. 426)

என்னும் இப்பாடலில், 'அழகிய நெற்றியை உடையவளே! போர் முரசுகள் கடியனவாய் முழங்கத் தன் படையைப் பகைவர் மேற்செலுத்திப் பகைமன்னர் மாண்டொழியுமாறு வெல்லுதற்கு இடனான தாங்குதற்கு அரிய போர்க்களத்தில் வெற்றி தரும் வேலேந்திய நம் அரசன், விலக்கரிய போர் வினையத் தவிர்ந்தனன். ஆதலின், யான் இப்பொழுது போர்க் கடமையாற்றப் பிரிதலை நீங்கினேன்' என்று கூறுவதில் அச்சம் உணர்வு உணர்த்தப்படுகின்றது.

தலைவன் தன்னைவிட்டுப் பிரிந்து விடுவானோ என்ற தன் நெஞ்சத்துள் பயம் கொள்ளும் தலைவியிடம், 'போர் தொழில் ஒழிந்தேன்' 'இனி பிரியேன்' என்று கூறுவதிலிருந்து இப்பாடல் அச்சம் மெய்ப்பாட்டில் அமைந்திருக்கின்றது. 'நன்னுதல்' என்பது தலைவியிடம் உண்டாகியுள்ள அச்சத்தை தவிர்க்கக் கூறும் தலைவனின் சொல்லாகிறது.

மேலும், தலைவியிடம் காட்டின்வழி நிகழும் சூழலைக் கூறும்போது அச்ச உணர்வு வெளிப்படுகின்றவற்றை 'தலைவனுடன் வருவேன்' என்று தலைவியை நோக்கி 'மாலைப்பொழுதில் தனியேயிருக்க இயலாமையின் எம்மொடு வருவதாகக் கூறுகின்றன. பாலைவழி கொடியதாதலின் அதனில் உடன் வருதல் நினக்கு ஆற்றொணாதது' எனக் கூறுவதாகின்ற,

"***மனை உறை புறவின் செங் காற் பேடைக்***
***காமர் துணையொடு சேவல் சேர,***
***புலம்பின்று எழுதரு புன்கண் மாலைத்***
***தனியே இருத்தல் ஆற்றேன்' என்று, நின்***
***பனி வார் உண்கண் பைதல கலுழ,***

*'நும்மொடு வருவல்' என்றி, எம்மொடு*
*பெரும் பெயர்த் தந்தை நீடு புகழ் நெடு நகர்*
*யாயொடு நனி மிக மடவை – முனாஅது*
*வேனில் இற்றித் தோயா நெடு வீழ்,*
*வழி நார் ஊசலின் கோடை தூக்குதொறும்,*
*துஞ்சு பிடி வருடும் அத்தம்*
*வல்லை ஆகுதல் ஒல்லுமோ, நினக்கே*"[23] (நற்., பா.எ. 162)

எனும் இப்பாடலில், 'மிக்க புகழை உடைய தந்தையின் புகழ்மிக்க பெரிய மாளிகையில் தாயோடு பிரியாது வாழ்கின்ற மிக்க இளமையுடைய தலைவியே! முன்னர் 'மனையிடத்து உறைகின்ற சிவந்த காலை உடைய அழகிய புறாவின் பேடையோடு அதன் ஆண் துணையாகிய சேவல் கூடி மகிழும். அவற்றைக்கண்டு வருத்தம் மிகுகின்ற துன்பம் உண்டாக்கும் மாலைப்பொழுதில், யான் நின்னைப் பிரிந்து தனியே இருப்பதற்கு ஆற்றேன்' என்று கூறினாள். நின் நீர் வடிகின்ற மையுண்ட கண்கள் துன்புற்றுக் கலங்கின. இந்நிலையில் நீ எம்மை நோக்கி 'நும்மொடு வருவேன்' என்று கூறினை. வேனிற்காலத்தில் இத்திமரத்தின் நெடிய விழுது நிலத்தில் தேயாது தொங்க அதன் மீது நாராற்பிணித்த ஊசலைப்போல மேல் காற்று வீசும்போதெல்லாம் அவ்விழுது ஆடும். அவ்விழுது காற்று வீசுந்தோறும், அம்மரத்தின் கீழே துயிலும் பெண் யானை மீது புரளும். இத்தகு பாலையின் கண்ணே செல்லுவது என்பது உனக்குப் பொருந்தாததாகும். ஆகவே நீ என்னோடு வரவேண்டா' என்ற விளக்கத்தில் காட்டில் வாழும் விலங்கினால் உண்டாகும் துன்ப நிலையை நினைத்து அச்சப்படும் உணர்வு பாடலில் புலப்படுகிறது. இப்பாடலில் விலங்கு நிலைக்களன்வழி அச்சம் வந்துள்ளமையை அறிய இடமுளது.

தலைவன் தலைவியைப் பிரிந்துபோய் பொருள் ஈட்டி மீண்டு வந்து தலைவியைக் கண்டான். தலைவன்பால் ஊடல் கொண்ட தலைவி, 'பொருளீட்டும் பொருட்டு நெடுந்தொலைவு சென்ற நீவீர் எம்மை என்றேனும் நினைத்துப் பார்த்தீரோ? எனக் கூறி வருந்தினாள். அது

கண்ட தலைவன் தன் அன்புடைமை தோன்றக் கூறி மகிழ்வித்ததாக வருகின்ற,

*"ஒழித்தது பழித்த நெஞ்சமோடு வழிப் படர்ந்து,*
*உள்ளியும் அறிதிரோ, எம்?' என, யாழ நின்*
*முள் எயிற்றுத் துவர் வாய் முறுவல் அழுங்க,*
*நோய் முந்துறுத்து நொதுமல் மொழியல்; நின்*
*ஆய் நலம் மறப்பெனோ மற்றே? சேண் இகந்து*
*ஒலி கழை பிசைந்த ஞெலி சொரி ஒண் பொறி*
*படு ஞெமல் புதையப் பொத்தி, நெடு நிலை*
*முளி புல் மீமிசை வளி கழற்றுறாஅக்*
*காடு கவர் பெருந் தீ ஓடுவாயின் ஓடலின்,*
*அதர் கெடுத்து அலறிய சாத்தொடு ஒராங்கு*
*மதர் புலி வெரீஇய மையல் வேழத்து*
*இனம் தலை மயங்கிய நனந் தலைப் பெருங் காட்டு,*
*ஞான்று தோன்று அவிர் சுடர் மான்றால் பட்டென*
*கள் படர் ஓதி நிற் படர்ந்து உள்ளி,*
*அருஞ் செலவு ஆற்றா ஆர் இடை, ஞெரேரெனப்*
*பரந்து படு பாயல் நவ்வி பட்டென்*"[24] (அகநா., பா.எ. 39:1–16)

என்னும் இப்பாடலில், பெண்களுக்கு 'விசனம் பண்ணலாகாது' என்று உயர்ந்தோர் கடிந்த கொள்கையை இகழ்ந்த உள்ளத்துடன் பொருளீட்டும் பொருட்டு நெடுந்தொலைவு சென்ற நீவிர் எம்மை என்றேனும் நினைத்துப் பார்த்தீரோ? என நின் முள் போலும் கூர்மையான பற்களையுடைய பவளம் போன்ற வாயின் புன்னகை கெடும்படியாக என் மாட்டுத் துன்பமாகிய நோயை தோற்றுவித்து உண்மைக்குப் புறம்பானதொன்றைக் கூறாதே, ஆராயப்படும் நின் அழகினை யான் என்றேனும் மறப்பேனோ? நினைப் பிரிந்து நெடுந்தூரம் கடந்து சென்றேன். தழைத்த மூங்கில் ஒன்றோடொன்று உராய்வதால் அம்மூங்கில் சொரியும் ஒளி பொருந்திய தீப்பொறி மிகுதியான சருகுகள் மறையும்படி மூண்டெழுந்தது, செங்குத்தாய் நிற்கும் உலர்ந்த ஊகம் புல்மீது காற்றுச் சுழன்றடித்துப் பரவச் செய்யக் காட்டைத் தன்கைப்படுத்தி எரியும் பெரிய தீயானது,

காற்று வீசும் இடமெல்லாம் சென்று பரவியதால் அந்தச் சுரவழிச் சென்ற வாணிகச் சாத்தர்? அவ்வழியினைத் தவறவிட்டு அலறி ஓடினர். மற்றோரிடத்து, செருக்குற்ற புலியினைக் கண்டு அஞ்சிய மயக்கம் பொருந்திய யானைக் கூட்டம் ஓரிடத்தே வந்து கூடியது, இன்ன தன்மையதான அகன்ற இடத்தையுடைய பெரிய காட்டகத்தே, வீழ்கின்றபோது தாழ்ந்து தொங்குவது போலத் தோன்றும் ஞாயிறு மயங்கி மறைந்தது' என்பதிலிருந்து விலங்கு நிலைக்களன்வழி அச்சம் இப்பாடலில் அமைகின்றது. இவற்றில் புலியினைக் கண்டு அஞ்சி மயக்கம் பொருந்திய யானை ஓரிடத்து நிற்கும். இத்தகு சூழல் அதாவது பலம் பொருந்திய யானைகள் புலியினைக் கண்டு அஞ்சுகிறது. இத்தகு நாட்டின் சூழல் கூறுவதில் அச்சம் மெய்பாடு தோன்றுகிறது.

நெருப்பு உண்பிக்கக்கூடிய காட்டின் தன்மையும் காட்டிடத்தே நிகழும் துன்பச் சூழலும் மிகப்பெரும் அச்சத்தை உண்டாக்கும் இயல்பினது என்பதை தலைவன் கூறும்போது அச்ச சுவையுணர்வு பாடலுக்குள் புதையுண்டிருப்பதை சுவைக்க முடிகிறது.

வினைவயிற் பிரிந்த தலைவன் பாசறையில் இருந்தவாறு தலைவியை நினைந்து சொல்லியதாக வருகின்ற இப்பாடலில் கார்கால நிகழ்வான வானவில் தோன்றுவதை உணர்த்தி பருவம் தொடங்கியது கண்டு அச்சமுறும் உணர்வை,

"*மலைமிசைக் குலைஇய உரு கெழு திருவில்*
*பனை முழங்கு எழிலி பௌவம் வாங்கி,*
*தாழ் பெயற் பெருநீர், வலவன் ஏற்பு வளைஇ,*
*மாதிரம் புதைப்பப் பொழிதலின், காண்வர*
*இரு நிலம் கவினிய ஏமுறு காலை*
*நெருப்பின் அன்ன சிறு கட் பன்றி,*
*அயிர்க்கட் படாஅர்த் துஞ்சு, புறம் புதைய,*
*நறு வீ முல்லை நாள் மலர் உதிரும்*
*புறவு அடைந்திருந்த அரு முனை இயவின்*

*சீறூரேளே, ஒண்ணுதல்! — யாமே,*

*எரி புரை பல் மலர் பிறழ வாங்கி,*

*அரிஞர் யாத்த அலங்கு தலைப் பெருஞ் சூடு*

*கள் ஆர் வினைஞர் களம்தொறும் மறுகும்*

*தண்ணடை தழீஇய கொடி நுடங்கு ஆர் எயில்*

*அருந் திறை கொடுப்பவும் கொள்ளான், சினம் சிறந்து,*

*வினைவயின் பெயர்க்கும் தானை*

*புனைதார், வேந்தன் பாசறையேமே*”[25] (அகநா. பா.எ. 84)

என்னும் இப்பாடல் உணர்த்துகிறது. இவற்றில், ‘வளைந்த அழகிய இந்திர வில் மலை உச்சியிலே தோன்றியது, முரசு போல் முழங்கும் அச்சம் தரும் மேகங்கள், கடல் நீரை முகந்துகொண்டு எழுந்து உலகினை வலமாக வளைத்தன. விண்ணிலிருந்து வீழும் பெருமழை திசையெலாம் மறையுமாறு கால் இறங்கிப் பெய்தது. இவ்வாறாக, பெரிய நிலப்பரப்பு கண்ணுக்கு இனிதாக அழகு பெற்றுத் திகழுமாறு கார்காலம் தொடங்கியது. அக்காலத்தே, நெருப்பினைப் போன்ற சிறிய கண்களையுடைய பன்றி நுண்ணிய மணலி கண்ணுள்ள சிறிய தூறிடத்தே மகிழ்ந்து படுத்துறங்கும். அதன் முதுகுப்புறம் மறையுமாறு, மணங்கமழும் முல்லையின் புதிய மலர்கள் உதிர்ந்து கிடக்கும். அன்ன தன்மை வாய்ந்த காடு சார்ந்த அரிய முனைகளையுடைய வழியிடத்து அமைந்துள்ள சிறிய ஊரின் கண், ஒளி பொருந்திய நெற்றியையுடைய நம் தலைவியோ இருக்கின்றாள். நெல் அரிவோர், நெருப்புப் போன்ற பல மலர்களை மாறுபட வைத்து, அசையும் பக்கங்களையுடைய கதிர்க் கட்டுக்களை இறுக்கிக் கட்டுவர். அக்கட்டுக்களைக் கள்ளுண்டு களித்திருக்கும் களமரின் களந்தோறும் கொண்டு செல்வர். அத்தகு மருத நிலம் சூழப்பெற்ற கொடிகள் அசைந்தாடும் இவ்வரிய எயிலை, பகைவர் அரிய திறையாகக் கொடுப்பவும் அதனை ஏற்றுக் கொள்ளானாய்ச் சினம் மிகுந்து, பின்னரும் போர்த் தொழிலில் செலுத்தப்படும் சேனைகளையும், அணிந்த மாலையையும் உடைய அரசனது பாசறையிடத்து, யாமோ (அவளை நினைந்து வருந்தி) இருக்கின்றோம்!’ என்ற விளக்கத்திலிருந்து பருவம் தொடங்கிய பின் தலைவியை அடையாது போகும் இச்சூழலை

நினைத்து அஞ்சக்கூடும் என்று தலைவன் எண்ணுகிற நிலையில் அச்சம் வெளிப்படுகின்றது.

வளைந்த இந்திர வில் போன்ற மலை உச்சியிலே மேகங்கள் முழங்கின என்பது கார்காலம் தொடங்கியதைத் தலைவி உணர்ந்து கொண்டு தான் வரவில்லையே என வருத்தப்படுவாள் என அச்சமுறுவதை உணர்த்துகிறது. ஏனெனில் பருவம் கண்டு வராது போயின் சமூகத்தில் தலைவிக்கு பிறர் ஏசுவதால் துன்பம் உண்டாகும் என நினைத்து வருந்துவார் என்ற உணர்வு பாடலுக்குள் அச்சம் உள்ளார்ந்து அமைகிறது.

**தலைவன் → தோழியிடம் கூற்று**

தலைவன் தோழியிடம் கூற்று நிகழ்த்தும்போது அச்ச உணர்வு தோன்றுகின்றது. பொருள் முற்றிப் புகுந்த தலைமகன், 'எம்மை நினைத்தும் அறிதிரோ? என்ற தோழிக்குச் சொல்லியதாக வருகின்ற,

"***உள்ளினென் அல்லெனோ யானே? உள்ளி,***
***நினைந்தனென் அல்லெனோ பெரிதே? நினைந்து***
***மருண்டனென் அல்லனோ, உலகத்துப் பண்பே?***
***நீடிய மராஅந்த கோடு நோய் மலிர் நிறை***
***இறைந்து உணச் சென்று அற்றாங்கு,***
***அனைப் பெருங்காமம் ஈண்டு கடைக்கொளவே***"[26] (குறுந்., பா.எ. 99)

என்னும் இப்பாடலில், 'வினைவயின் யான் இருந்தபோது, இடைவிடாது நும்மை நினைத்தேன் அல்லவா? அங்ஙனம் எண்ணியதோடமையால் மீண்டும் மீண்டும் செய்யும் பொருளினும் நும் காம இன்பமே பெரிது என நினைவு கூர்ந்தேன் அல்லவா? உயர்ந்த தடம்ப மரத்தின் கிளையைத் தொட்டவாறு பெருகும் மிக்க வெள்ளம், நெடுந்தூரம் சென்று, ஆண்டு உள்ளார் கையால் இறைத்து உண்ணும் அளவு குறைந்து, பின் வற்றினாற்போல, அப்பெரிய காமநோய், யான் வினைமுடித்து வருதலால் முடிவடையும்படி, உலகத்து இயல்பை எண்ணி மயங்கினேன் அல்லவா?' தோழி, 'நீவிர் இவ்வளவு காலம் பாணித்தீர் ஆண்டுள்ளதுபோது எம்மை நினைத்திலர் போலும்' என்றாங்கு, 'நான் எப்பொழுதும் இங்கு மீண்டு

வருதலை நினைந்திருந் தேனாயினும் உலக இயல்பை அஞ்சி இத்துணை நாள் நின்றேன்' என்று கூறினான் என்கிறார். 'பிரிந்திருந்த நாளில் எம்மை நினைத்தீரோ' என்று வினாவிய தோழிக்கு, வினைமுற்றி மீண்ட தலைமகன் கூறுவதாய் இப்பாடல் அமைகின்றது.

தலைவியின் அன்பு வெள்ளம் வற்றினாற்போன்று என் மீதுள்ள உணர்வு முறையிடக்கூடும் என்பதை நினைத்து அச்சமுற்றேன் என்பதை 'மயங்கினேன்' என்று உணர்த்துகிறான். இவ்வாறு தலைவன் கூற்றில் அச்சம் மெய்ப்பாடு வெளிப்படுகிறது. தலைவியைக் காண வேண்டும் என்ற வேட்கை இருந்தபோதிலும், 'வினையே ஆடவர்க்கு உயிரே' என்று உலக இயல்பிற்கு அஞ்சி மீண்டு வந்திலன். நீங்கிய காமத்தனாய்ப் பிரிந்து சென்றவன், பெருகிய காமத்தனாய்த் திரும்புதல் கூறப்பட்டது. கடலின் நீர், மேகங்களால், மலை முகட்டில் பெய்யப்பெற்று, அருவியாய்ப் பெருகிக் கடலை மீண்டும் அடையும்போது இறைத்து உண்ணும் அளவினதாய் வற்றிவிடும். தலைவியால் உண்டாகிய காம வேட்கை, தலைவற்கு வினைமுற்றிய வழிப் பெருகி, அவளை நேரில் கண்டவழி தீர்ந்துவிடும் எனத் தோழியிடம் கூறினான்' என்ற விளக்கம் தலைவனது கூற்றில் அச்சம் தோன்றும் சூழலை உறுதிப்படுத்துகிறது.

பரத்தையர் சேரியினின்றும் வந்து தோழியைத் தலைவன் வாயில் வேண்டினான். தோழி அதனை மறுத்தபோது அவன் முன்னர் நிகழ்ந்த ஒன்றை நினைவு கூர்ந்து அவளுக்குச் சொல்லியதாக வருகின்ற,

"*..................................................*

***ஒடுங்கினள் கிடந்த ஓர் புறம் தழீஇ,***
***முயங்கல் விருப்பொடு முகம் புதை திறப்ப,***
***அஞ்சினள் உயிர்த்தகாலை, 'யாழ் நின்***
***நெஞ்சம் படர்ந்தது எஞ்சாது உரை என,***
***இன் நகை இருக்கை, பின், யான் வினவலின்,***
***செஞ் சூட்டு ஒண் குழை வண் காது துயல் வர,***
***அகம் மலி உவகையள் ஆகி, முகன் இருந்து,***
***ஒய்யென இறைஞ்சியோளே – மாவின்***

*மடம் கொள் மதைஇய நோக்கின்,*

*ஒடுங்கு ஈர் ஓதி, மாஅயோளே*"[27] (அகநா., பா.எ. 86:22–31)

என்னும் இப்பாடல் வரிகளில், 'தேமல் படர்ந்த அழகிய வயிற்றினையுடைய தூய அணிகலன்களை அணிந்த மகனைப் பெற்றெடுத்த மகளிர் நால்வர் கூடிநின்று, 'கற்பினின்றும் வழுவாது நல்ல பலவற்றினும் உதவியாக இருந்து, நின்னை மனைவியாகப் பெற்ற நின் கணவனைப் பேணிக் காக்கும் பெருவிருப்பத்தை உடையை ஆகுக எனக் கூறி வாழ்த்தினர். வாழ்த்தியவராய், நீரொடு குளிர்ந்த இதழ்களையுடைய மலர்களை நெல்லுடன் கலந்து அவளது பலவாகிய கரிய கூந்தலையுடைய தலையிலே தூவினர். இவ்வாறாக, வதுவை மணமுடன் நடந்து முடிந்தது. சுற்றத்தினர் கல்லென்ற ஒலியினராய் விரைந்து வந்து, 'பெருமனைக் கிழத்தி ஆவாய்' எனக் கூறி, ஓர் அறையில் என்னுடன் அவளைக் கூட்ட, நாங்கள் ஒன்றுகூடிய புணர்ச்சிக்குரிய முதல் இரவாக அன்றைய இரவு கழிந்தது. முதுகினை வளைத்துக்கொண்டு புதுப்புடவைக்குள்ளே ஒடுங்கிக் கிடந்தாள். அவளை அணுகி அவள் முதுகினைத் தழுவிக்கொள்ளும் விருப்பத்துடன் முகத்தை மூடியிருந்த ஆடையை விலக்கினேன். அவளோ, அஞ்சிப் பெருமூச்சு விட்டாள். அப்பொழுது, மகிழ்ச்சியுடன் கூடிய இருக்கையிடத்து இனிதாக இருந்த பின்னர், 'நீ நின் நெஞ்சத்து நினைத்ததை மறையாது உரைப்பாயாக' என வினவினேன். மானின் மடப்பத்தினையும், செருக்கிய பார்வையினையும் கொண்ட கண்களையும், குளிர்ந்த கூந்தலையும் உடைய மாமை நிறமுடைய எம் தலைவி, சிவந்த மணிகள் பதிக்கப்பெற்ற ஒளி பொருந்திய குழைகள் வளமான தன் காதுகளில் வந்தசைய, உள்ளம் நிறைந்த உவகையனாகி முகம் தாழ்த்தி விரைந்து வணங்கி நின்றாள்' என்ற விளக்கத்திலிருந்து தலைவியின் அச்சப்பட்ட நிலையினைக் கூறப்படுவதன்வழி உணர முடிகிறது. 'அஞ்சினள் உயிர்த்தகாலை' எனும் அடியானது தலைவியின் அச்ச உணர்வை வெளிப்படுத்துகின்றது. முதல் முறையாகத் தலைவனைப் பார்த்து பேசுகின்றபோது அவளுக்கு ஒழுக்கத்தின்வழி சிறு பயம் மனதில் உருவாகிறது.

**தலைவன் → தேர்ப்பாகனிடம் கூற்று**

வினைமேற் சென்ற தலைமகன் மீண்டு வரும் வழியில், தேரை விரைந்து செலுத்துமாறு தேர்ப்பாகற்குச் சொல்லியதாக வருகின்ற,

"***கடும் பரி நெடுந் தேர்க் கால் வல் புரவி,***
***நெடுங் கொடி முல்லையொடு தளவ மலர் உதிர,***
***விரையுபு கடைஇ நாம் செல்லின்,***
***நிரை வளை முன் கை வருந்தலோ இலளே***"[28] (ஐங்., பா.எ.422)

என்னும் இப்பாடலில், 'வலிய கால்களையுடைய நெடிய தேரில் பூட்டிய கடுஞ்செலவினையுடைய குதிரைகளை, நீண்ட முல்லைக்கொடிகளும் செம்முல்லையும் தம் மலர்களை உதிர்க்கும் வண்ணம் விரைவாகச் செலுத்தி நாம் செலவு மேற்கொள்வோமாயின், முன் கைகளில் வளை வரிசைகளை உடைய எம் காதலி வருத்தம் தவிர்வாள்' என்று கூறுவதான விளக்கத்தில் அச்சம் மெய்ப்பாடு உணர்த்தப்படுகிறது.

தலைவியானவள் பிரிந்ததனால் துன்பப்படக்கூடும் என்பதை நினைத்து தலைவன் மனதளவில் அச்சப்படுவது மெய்ப்பாடாக அமைந்திருக்கின்றது. இதனை, 'விருந்தலலோ இலனே' என்னும் அடி உணர்த்துகின்றது.

வினைவயிற் பிரிந்து சென்று மீளும் தலைமகன், தேரைவிரைந்து செலுத்துமாறு தேர்ப்பாகனைப் பணித்துக் கூறுகின்ற,

"***புன்புறப் பேடை சேவல் இன்புற***
***மன்னர் இயவரின் இரங்கும் கானம்***
***வமல்லை நெடுந்தேர் கடவின்,***
***அல்லல் அருநோய் ஒழித்தல் எமக்கு எளிதே***"[29] (ஐங்., பா.எ.425)

என்னும் இப்பாடலில், 'பொலிவில்லாத புறச்சிறகினைக் கொண்ட பேடை, தன் அன்பிற்குரிய சேவல் மகிழுமாறு மன்னர்களின் வாச்சியக்காரர் எழுப்பும் இசையொலிபோல இன்னொலியெழுப்பும் காட்டின் வழியே நின் நெடியதேரை வல்லாங்கு இயக்கினால், என் பிரிவால் உனக்கும் என் காதலியின் நீக்குதற்கு அரிய துயரத்தினைப் போக்குவது எனக்கு

எளிதாகும்’ என்று தேர்ப்பாகனிடம் உணர்த்துவதிலிருந்து தலைவன் அச்சமுறுவதை அறிய முடிகிறது.

என் காதலியானவள் என்னைப் பிரிந்து துன்பம் அடைவாள் என்று தலைவன் கூற்றிலிருந்து ‘அச்சம் மெய்ப்பாடு’ தோன்றுகிறது. இதனை ‘அல்லல் அருநோய்’ என்னும் சொல் புலப்படுத்துகிறது. தலைவன் பிரிவால் தலைவிக்கு பசலை நோய் ஏற்படக்கூடும் என நினைக்கும் தலைவனுக்கு ‘அச்சம்’ தோன்றுகின்றது.

தலைவன் தான் மீள்வதற்குச் சுட்டிச் சென்ற பருவம் வந்தும் மேற்கொண்ட கடமை முடியாமையால், அக்கடமை விரைவில் முடிய வேண்டும் என்னும் வேட்கை தோன்றக் கூறியதாக வருகின்ற,

“***பிணி வீடு பெறுக, மன்னவன் தொழிலே!***

***பனி வளர் தளவின் சிரல்வாய்ச் செம்மகை,***

***ஆடு சிறை வண்டு அவிழ்ப்ப,***

***பாடு சான்ற; காண்கம், வாணுதலே!***”[30] (ஐங்., பா.எ. 447)

என்னும் இப்பாடலில், ‘குளிர்ந்த பருவத்தில் வளரும் இயல்புடைய மீன் கொத்திப் பறவையின் அலகு போன்ற சிவந்த தளவின் அரும்பினை, வட்டமிட்டுச் சுழலும் சிறகுகளை உடைய வண்டினம் ஊதி மலர் வித்தமையின், அவ்வரும்புகள் இப்பொழுது அழகு மிகப்பெற்றன. நம் காதலியாம் ஒளி பொருந்திய நெற்றியாளை இனிச் சென்று கூடி மகிழ்வோம். அதற்கு உதவும் வகையில், மன்னவன் போர் வினையின் பிணிப்பிலிருந்து விடுதலை பெறுவானாக’ என்று தலைமகனை நினைத்துக் கூறுமிடத்து தூது சென்ற பாகன் கூற்றிலிருந்து ‘அச்சம்’ மெய்ப்பாடு தோன்றுகிறது. ‘காண்கம் வானுதலே’ என்னும் பாடலடிகள், தலைவிக்குப் பசலை தோன்றும் என்பதை உணர்த்துகிறது. இதனால் அவனுக்கு ‘அச்சம்’ தோன்றுகிறது. இதேபோல்,

“***பெரும் புன் மாலை ஆனாது நினைஇ,***

***அரும் படர் உழத்தல் யாவது? என்றும்***

***புல்லி ஆற்றாப் புரையோட் காண***

***வள்பு தெரிந்து ஊர்மதி, வலவ! – நின்***

***புள் இயற் கலிமாப் பூண்ட தேரே***"[31] (ஐங்., பா.எ. 486)

என்னும் இப்பாடலில், 'பாகனே! பெரிய புன்மையை உடைய மாலைப்பொழுதில் இடைவிடாது எண்ணி எண்ணி, தாங்குதற்கரிய துயரம் உழத்தல் வேண்டா; என்றும் அணைத்து மகிழ்ந்த பொழுதும் மீண்டும் மீண்டும் பிரிவு ஆற்றாமைக்குக் காரணமாகிய இன்பத்தைக் கொடுக்கும் எம் காதலியைக் காண்பதற்கு, நின் பறவை போலும் நிலந்தீண்டாத விரைந்த செலவினைக் கொண்ட குதிரைகள் பூட்டிய தேரினை, கடிவாளத்தினை ஆய்ந்து பற்றிச் செலுத்துவாயாக' என்று கூறுவதிலிருந்து தலைவனுக்கு, தலைவியின் பிரிவுத்துயர் அச்சமாகிறது. மேலும்,

"***இது மன் பிரிந்தோர் உள்ளும் பொழுதே;***

***செறி தொடி உள்ளம் வப்ப***

***மதியுடை வலவ! – ஏமதி தேரே***"[32] (ஐங்., பா.எ. 487)

என்னும் இப்பாடலில், 'காதலரைப் பிரிந்து உறைவோர் எதிர்பார்ப்புடன் அவரை நினையும் பொழுது இதுவாதலின், அறிவுடைய பாகனே, செறிந்த தொடிகளை அணிந்த எம் காதலி உள்ளம் உவக்குமாறு தேரை விரைந்து கடவுவாயாக!' எனக் கூறுவதிலும் தலைவனுக்கு தலைவி படும் துயர் குறித்து அச்சம் மெய்ப்பாடு தோன்றுகிறது.

தலைவன், தலைவியின்பால் கொண்ட அன்பினால் அவளின் மனநிலையை நினைத்து அதாவது தன்னைப் பிரிந்து வாழும் உணர்வால் வருத்தமுறக் கூறியதை நினைத்து அச்சப்பட்டு தேர்ப்பாகனிடம் கூறும் மெய்ப்பாடாக அமைகிறது.

இதேபோல் பொருள் முற்றி மீளும் தலைவன் தேர்ப்பாகனுக்குக் கூறுமிடத்து விலங்குகளினால் உருவாகும் அச்ச உணர்வு வெளிப்படுவதை,

"***அஞ்சுவது அறியாது அமர்துணை தழீஇ***

***நெஞ்சு நப்பிரிந்தன்று, ஆயினும் எஞ்சிய;***

***கையிணி நெகிழின் அஃது எவனோ? நன்றும்***

***சேய அம்ம, இருவாம் இடையே***

***மாக் கடல் திரையின் முழங்கி, வலன் ஏர்பு***
***கோட்புலி வழங்கும் சோலை***
***எனைத்து என்று எண்ணுகோ – முயக்கிடை மலைவே?***"[33]

(குறுந்., பா.எ. 237)

என்னும் இப்பாடல் குறிப்பிடுகிறது. இதில், 'குறித்த பருவம் தவறினால், தலைவி என்னாகுவளோ என்று யான் அஞ்சுவதை அறியாமல், தான் விரும்பிய துணையைத் தழுவுவதற்கு என் நெஞ்சு, நம்மைப் பிரிந்து சென்றது. அந்நெஞ்சுடன் செல்லமாட்டாது, என்னுடன் தங்கிய கைகள், அணைத்தலின்றி நெகிழ்ந்த இண்டே கிடத்தலால், நெஞ்சின் அத்தழுவுதலால் யாது பயன் விளையும்? இருவராக விளங்கும் எம்மிடையே உள்ள இடங்கள், பெரிதும் சேய்மையுடையன. இன்றே சென்று அவளைத் தழுவுவதற்குத் தடையாக, முழங்கி, வெற்றியுடன் எழுந்து, உயிர்களைக் கொல்லும் புலிகள் இயங்குகின்ற காடுகள், ஒன்றன்பின் ஒன்றாக பெரிய கடலின் அலைகளைப் போல எத்துணை உள்ளனவோ என்று யான் எண்ணுவேன்' என்று கூறுவதிலிருந்து விலங்குகளால் தலைவனுக்கு அச்சம் தோன்றுகிறது.

தலைவன், தன்னைப் பிரிந்து வாழும் நிலையைத் தலைவி ஏற்கமாட்டாள். பிரிவால் துன்புறுவாள் என்ற அச்ச உணர்வுடன் பாணனிடம் கூறுகின்றபோதும், வினைமேற்சென்ற தலைமகன் அவ்வினையை முடித்துத் திரும்புகின்றபோதும் தேரினைப் பாகன் விரைவாகச் செலுத்த வேண்டும் எனக் கருதுகின்றான். அதனைக் குறிப்பாக, முன்பு நிகழ்ந்த செயல் ஒன்றனைச் சுட்டி, 'பாக! என் காதலியிடத்து நான் வினைவயிற் செல்லும் பிரிவுணர்த்தியபோது அவள் மறுமொழி கூறாது, இளந்தளிர்கைப் பிசைந்தகையனாய் வருத்தமுற்ற நிலையை நீ அறிந்தனையோ? அறியாயோ' என்று கூறுவதாகின்ற,

"***அறிதலும் அறிதியோ பாக! பெருங்கடல்***
***எறி திரை கொழீஇய எக்கர் வெறி கொள,***
***ஆடு வரி அலவன் ஓடுவயின் ஆற்றாது,***
***அசைஇ, உள் ஒழிந்த வசை தீர் குறுமகட்கு***

***உயவினென் சென்று, யான் உள் நோய் உரைப்ப,***
***மறுமொழி பெயர்த்தல் ஆற்றாள், நறு மலர்***
***ஞாழல் அம் சினைத் தாழ் இணர் கொழுதி,***
***முறி திமிர்ந்து உதிர்த்த கையள்***
***அறிவு அஞர் உறுவி ஆய் மட நிலையே?***"[34] (நற்., பா.எ. 106)

என்னும் இப்பாடலில், 'பாக! பெருங்கடலினுள் வீசுகின்ற அலைகள் கொண்டு குவிக்கும், புலவு நாற்றம் கமழும் மணல் மேடு, அங்குப் புள்ளிகளையுடைய நண்டினைப் பிடிக்கச் சென்று, அது இயலாது களைப்புற்று அம்முயற்சியைக் கைவிட்ட குற்றமற்ற இளையோளாகிய என் காதலியிடத்துத் தற்போது பிரிவினால் வருந்தியிருக்கும் நான் வினைவயிற் செல்கின்ற வருத்தத்தை உரைத்தேன். அவ்வளவில் மறுமொழி கூற இயலாது ஆற்றாதவளாய் நறியமலர் அழகுடன் தாழ்ந்து விளங்கும் ஞாழல்மரத்தின் பூங்கொத்தின் இதழ்களைப் பிய்த்துப் பிசைந்தவளாய் உதிர்த்தனள். அங்ஙனம் அறிவு மயக்கமுற்றவளின் அழகிய மடப்பத்தினையுடைய நிலையைக் கூறுவதிலிருந்து தலைவியின் துன்ப நிலையை நினைத்து தலைவன் அச்சப்படுவதை உணர முடிகிறது.

மறுமொழி கூற இயலாதவளாக தலைவியின் உணர்வினை தலைவன் கூறுகிறான். இவற்றில் தலைவி, தலைவனது பிரிவால் எத்தகு துன்பம் நேரிடும் என்பதை என்னிடம் துணிந்து கூறும் உணர்வின்றி நிற்கின்றாள் என்பது அவளது மனதிற்குள் உண்டான அச்சமே என்பதைக் கூறுகிறான். சமூகத்தில் கணவன் கூறும்போது எதிர் உரைப்பது ஆகாது என்பது சமூக அச்சமாகிறது.

மேலும், வினை முடித்து மீள்கின்ற தலைவன் தேர்ப்பாகனிடம், 'பாக! மேகம் மழை தொடங்கிற்று. நம் காதலி இதனைக் கண்டு அழத் தொடங்கியிருப்பாள். ஆயர் குழலோசை அவள் அழுகையை மிகுவிக்கும். எனவே, விரைந்து தேர் செலுத்துக' என்று பருவ வரவு கண்டு வருத்தமுறுவதாக வருகின்ற,

*"காயாங் குன்றத்துக் கொன்றை போல,*
*மா மலை விடர் அகம் விளங்க மின்னி,*
*மாயோள் இருந்த தேஎம் நோக்கி,*
*வியல் இரு விசும்பு அகம் புதையப் பாஅய்,*
*பெயல் தொடங்கினவே, பெய்யா வானம்;*
*நிழல் திகழ் கடர்த் தொடி ஞெகிழ ஏங்கி,*
*அழல் தொடங்கினளே ஆயிழை; அதன் எதிர்*
*குழல் தொடங்கினரே கோவலர்*
*தழங்கு குரல் உருமின் கங்குலானே"*[35] (நற்., பா.எ. 371)

என்னும் இப்பாடலில், 'பாகனே! காயாமரங்கள் நிறைய மலர்ந்துள்ள மலையிடத்தே இடையிடைச் சாக்கொன்றைகள் மலர்ந்தது போல மலையின் பிளவுகள் எல்லாம் ஒளியின் புலப்படுமாறு மின்னி நம் தலைவியாகிய மாமைநிற முடையாள் இருந்த திசை நோக்கிச் சென்று அகன்ற கரிய வானம் எல்லாம் மறையுமாறு பரந்து மழை பெய்யத் தொடங்கிவிட்டன. இதுகாறும் மழை பெய்யாதிருந்த மேகங்கள். அவ்வாறு மழை தொடங்கியமையின் ஆராய்ந்தெடுத்த அணிகலன்களைப் பூண்ட நம் தலைவி நிழல் விடுகின்ற ஒளியையுடைய கைவளைகள் கழலுமாறு வருந்தி அழத்தொடங்கினள். அதற்கு எதிராக முழங்குகின்ற இடியொலிக்கும் இரவுப்போதில் கோவலர் தம் புல்லாங்குழலை இசைக்கத் தொடங்கினர். ஆதலின் தேரை விரைந்து செலுத்துக' என்கிறான் தலைவன். பருவம் வந்தும் தலைவன் வராது அச்சப்படுவதையும் அதன்வழி தலைவன் அச்சப்படும் உணர்வாகிறது.

வினைவயிற் பிரிந்த தலைவன் செய்வினை முடித்து மீண்டுவருங் காலை தலைவியைக் கண்டு தண்ணளி செய்து அவள் மாணலம் பெற வேண்டும் என்னும் தன் விருப்பத்தைத் தேர்ப்பாகனுக்கு உரைத்துத் தேரினை விரைவாகச் செலுத்துமாறு கூறுகின்ற,

"*..............................................................*
*செல்க, தேரே – நல் வலம் பெறுந!*
*பசை கொல் மெல் விரல், பெருந் தோள், புலைத்தி*

*துறை விட்டன்ன தூமயிர் எகினம்*
*துணையோடு திளைக்கும் காப்புடை வரைப்பில்,*
*செந் தார்ப் பைங் கிளி முன்கை ஏந்தி,*
*'இன்று வரல் உரைமோ, சென்றிசினோர் திறத்து' என*
*இல்லவர் அறிதல் அஞ்சி, மெல்லென*
*மழலை இன் சொல் பயிற்றும்*
*நாணுடை அரிவை மாண் நலம் பெறவே*"[36] (அகநா., பா.எ.34:10–18)

என்னும் பாடலில், 'ஆடைகளிலே ஊட்டப்பெற்ற கஞ்சிப் பசையினைக் கரைத்து விடும் மெல்லிய விரல்களையும், பெரிய தோள்களையும் உடைய வெளுப்பவள், அக்கஞ்சிப் பசையினை நீர்த் துறையின்கண் அலசிவிட்டாற்போன்ற தூய மயிரினையுடைய அன்னங்கள், காவல் பொருந்திய மனையகத்தே களிப்புடன் விளையாடி மகிழும். அம்மனை எல்லைக்குள் சிவந்த மாலையணிந்தது போன்ற கழுத்தினையுடைய பச்சைக் கிளியினைத் தன் முன்கையில் ஏந்திய வண்ணம் வீட்டில் உள்ளவர்கள் அறிந்துகொள்வார்களோ என அஞ்சியவளாய், மெல்லென, 'நம்மைப் பிரிந்து சென்ற தலைவர் பற்றி ஒன்று உரைப்பாயாயின், 'அவர் இன்று வருவார்' என்னும் உரையையே உரைப்பாய் என்று மழலை போன்ற தன் இனிய சொற்களால் பலகாலும் பயில்வித்துக் கொண்டிருக்கும் நாணம் மிக்க நம் தலைவியது மாட்சிமையுடைய நலத்தினை அடைதல் வேண்டும். எனவே தேரை விரைந்து செலுத்துவதில் நல்ல திறம் வாய்ந்த பாகனே!' என்று உரைப்பதில் அச்ச உணர்வு வெளிப்படுவதை காணலாம். வீட்டிலுள்ளவர்கள் அறிந்துகொள்வார்கள் எனத் தலைவி அஞ்சுவாள் என்பதைத் தலைவன் உணர்கிறான். இதன்வழி தலைவி அச்சப்படுவது கண்டு தலைவன் அச்சப்படுவது உறுதியாகிறது.

தலைவன் வினைவியற் சென்றான். வினை முற்றியவுடன் தலைவியை நினைந்து அவள் துன்பத்தைக் களைதற்கு விரைந்து செல்லக் கருதியவன் தேர்ப்பாகனிடம் விரைந்து செல்லச் சொல்கின்றதான,

"...............................................................

***கன்று பயிர் குரல, மன்று நிறை புகுதரும்***

***ஆ பூண் தெண் மணி ஐது இயம்பு இன் இசை***

***புலம்பு கொள் மாலை கேட்டொறும்***

***கலங்கினள் உறைவோள் கையறு நிலையே்***"[37] (அகநா., பா.எ.64:14–17)

என்னும் இப்பாடலில், 'விரைந்தோடும் மழைநீர் வரிவரியாக இழைத்த செம்மண் நிலப்பக்கத்தில், தேர்விடும் வழியில் உள்ள ஈர மணலைக் காட்டுக்கோழி கிளறும், பாம்பு வாழும் புற்றின் ஈரமான மேற்புறத்தைக் குத்திக் கொம்பில் மண் கொண்ட தலைமை சான்ற ஆனேறு, எக்காலத்தும் தன்னுடன் உடன் நிற்றலை விரும்பிய தன் இளைய பசுவினைத் தழுவிய வண்ணம் மாலைப்பொழுதில் ஊர் நோக்கி வரும், கறவைகள் யாவும் ஒருங்கு சேர்ந்து கன்றுகளை அழைக்கும் குரலை உடையனவாய் அம்மாலைப் பொழுதில் தொழுவங்களில் சென்று சேரும், அப்பசுக்கள் பூண்டுள்ள தெளிந்த ஓசையுடைய மணிகள் விட்டுவிட்டு அழகாக ஒலிக்கும், கேட்பதற்கு இனிய ஒலியினைத் தன்மைத் துன்பத்தைக் கொண்டுள்ள மாலைப்பொழுதில் கேட்குந்தொறும், கலங்கிய நிலையில் வாழ்பவளாகிய நம் தலைவியின் செயலற்ற துயர நிலையை நீக்கும் காலம் இதுவேயாகும்' என்று கூறுவதில் தலைவியின் அச்ச உணர்வு வெளிப்படுகின்றது.

கலங்கிய நிலையில் வாழ்பவர் நம் தலைவி என்பது தலைவியின் தன்மையை நினைத்து தலைவன் அஞ்சுவது புலனாகிறது. இதனை, 'கலங்கிளை உறைவோள்' என்ற அடி உணர்த்துகிறது. இதுபோல், தலைவி தான் படும் துயர் கண்டு தலைவி அஞ்சுறுவதாகத் தேர்ப்பாகனிடம் கூறுகின்ற தலைவன் கூற்றில் அச்சம் தோன்றுவதை இப்பாடல் உணர்த்துகிறது.

**தலைவன் → நெஞ்சிடம் கூற்று**

தலைவி பிரிவால் துன்பப்படும் சூழலை நினைத்து நெஞ்சிடம் கூறுவதாகக் கூறும் தலைவனின் கூற்றில் 'அச்சம்' உணர்வு தோன்றுகிறது.

தலைவியைப் பிரிந்து சுரநெறியில் சென்ற தலைவன் மீளக்கருதித் தன் நெஞ்சிற்குச் சொல்லும் நிலையில்,

"***வெந் துகள் ஆகிய வெயிற் கடம் நீந்தி,***
***வந்தனம் ஆயினும், ஒழிக இனிச் செலவே!***
***அழுத கண்ணள் ஆய்நலம் சிதையக்***
***கதிர் தெறு வெஞ் சுரம் நினைக்கும்,***
***அவிர் கோல் ஆய்தொடி உள்ளத்துப் படரே***"[38] (ஐங்., பா.எ. 330)

என்னும் இப்பாடலில், 'நெஞ்சே! ஒளியுடைமையும் திரட்சியும் கொண்ட அழகிய தொடியணிந்தாளுடைய உள்ளத்தில் உள்ளதாகிய நினைவு கண்ணில் நீர் சோரவும், அணி செய்யப்பட்ட மேனியின் நலம் கெடவும், வெயில் கடுமையாக எரிக்கும் கொடிய சுரநெறிக் கண் நம் செலவு காரணமாக அவளை வருத்துமாதலின், சூடேறிய துகள் மிக்க வெயில் காயும் காட்டினைக் கடந்து வந்துள்ளோமாயினும், மேலே செல்லுதலை இனி ஒழிவோமாக!' எனக் கூறுவதிலிருந்து அச்சம் மெய்ப்பாடு தோன்றுகின்றது. தன் அன்புக்குச் சொந்தமான அவள், தான் சென்ற காட்டினது கொடுமையை இடைவிடாது எண்ணி, அந்த நினைவினால் கண்ணீர் சோர நிற்பாள் என்றும், அதனால் அவளுடைய பேரழகு கெடுமென்றும் அஞ்சினமையாலும், கொடுங்காட்டைக் கடந்து நெடுந்தொலைவு சென்றிருந்தும், இனி எஞ்சிய செலவினையும் முடித்துத் திரும்புவதே ஆண்மைக்கு அழகு என்று எண்ணனாய், கோழையென்று உலகு தூற்றினும் கவலையில்லை, எனத் தலைவன் கூறும்போது 'அச்ச மெய்ப்பாடு' 'அழுத கண்ணள்' என்னும் பாடலடி உணர்த்துகின்றது.

கார்காலத் தொடக்கத்தில் திரும்பி வருவதாக உறுதிமொழிந்து மனையாளைத் தேற்றி விடை கொண்டவன் தலைவன் அக்குறித்த பருவம் வந்த பின்னும் திரும்ப இயலாமை எண்ணி வருந்தினான். தன் வேந்தன் தான் மேற்கொண்ட போர் வினையைத் தவிர்த்தாலன்றித் தன் மனையாளைக் கூடி இன்புறும் வாய்ப்பில்லை எனத் தலைவன் கூறும்போது அச்சத்தை 'காண்குவெம் – சுடர் நுதல்' என்னும் பாடலடிகள் உணர்த்துகின்றது. இதனை,

"***நனி சேய்த்து என்னாது, நற்றேர் ஏறிச் சென்று,***
***இலங்கு நிலவின் இளம் பிறை போலக்***
***காண்குவெம் தில்ல, அவள் கவின்பெறு சுடர் நுதல்***
***விண் உயர் அரண் பல வௌவிய***
***மண்ணுறு முரசின் வேந்து தொழில் விடினே***"[39] (ஐங்., பா.எ. 443)

என்னும் இப்பாடலில், 'விண்ணைத் தொடுவதுபோல் உயர்ந்த பகை மன்னரின் அரண்கள் பலவற்றையும் வென்று கைப்பற்றிய, கழுவிப் பலியூட்டப்பெற்ற முரசினையுடைய எம் வேந்தன் தான் மேற்கொண்டுள்ள போர்வினையைக் கைவிடுவானாயின், எம் ஊர் நெடுந்தொலைவில் உள்ளதென்று சிறிதும் மலைவு எய்தாமல், நன்கு சமைக்கப்பட்ட தேரினில் ஊர்ந்து சென்று, ஒளிமிக்க நிலவின் இளம்பிறையைக் காண்பது போல் எம் காதலியின் சுடர் விடும் அழகிய நெற்றியினை இனிதே காணப்பெறுவேம்' என்பதிலும்,

"***பெருந் தோள் மடவரல் காண்குவெம் தில்ல***
***நீள் மதில் அரணம் பாய்ந்தெனத் தொடி பிளந்து***
***வைந் நுதி மழுகிய தடங் கோட்டு யானை,***
***வென்வேல், வேந்தன் பகை தணிந்து,***
***இன்னும் தன் நாட்டு முன்னுதல் பெறினே***"[40] (ஐங்., பா.எ. 444)

என்னும் இப்பாடலில், 'உயர்ந்த மதிலரண்களைத் தாக்கியமையால், தொடிகள் சிதைந்து தம் கூரிய நுனி மழுங்கப்பெற்ற பெரிய கொம்புகளை உடைய களிறுகளையும், வெற்றி தரும் வேலையும் உடைய வேந்தன் தன் பகைவனை வென்று தன்னாட்டுக்குத் திரும்புதலை விரும்புவனாயின், நாமும் நம் பெரிய தோள்களைக் கொண்ட மடப்பம் பொருந்தி காதலியைக் காண்போம்' என்பதிலும் தலைவனிடம் அச்சம் தோன்றுகின்றது.

இவ்வாறு தலைவர் தன் நெஞ்சிடம் கூறும்போது பருவ வரவினால் தலைவி துன்புறுவாள் எனத் தனக்குள் அச்சப்படுகிறான். தலைவியின் பிரிவுத்துயர் பலர் அறியும்போது குறை நேர்ந்திடுமோ என்ற உணர்வினால் தலைவனுக்கு அச்சம் வெளிப்படுகின்றது.

பொருள்வயிற்பிரிந்த தலைவன் பாலை நிலவழியில் தலைவியை எண்ணி வருந்திய தன் நெஞ்சிடத்து, 'நெஞ்சே! காட்டில் வந்து இடர்ப்படும் நிலையில் பொருளை நாடிச் செல்லக் கருதினும், தலைவியை நாடி மீளக் கருதினும் என்றால் தடுத்தலரிது என்பதை,

"*..........................................................*

***பசி அட முடங்கிய பைங் கட் செந்நாய்***

***மாயா வேட்டம் போகிய கணவன்***

***பொய்யா வேட்டம் போகிய கணவன்***

***பொய்யா மரபின் பிணவு நினைந்து இரங்கும்***

***விருந்தின் வெங் காட்டு வருந்துதும் யாமே***

***ஆள்வினைக்கு அகல்வாம்எனினும்***

***மீள்வாம்எனினும், நீ துணிந்ததுவே***"[41] (நற்., பா.எ. 103)

என்னும் இப்பாடலில், 'புல்லிய காம்புடைய சிறிய இலைகள் நிறைந்த வேப்ப மரத்தின் பெரிய கிளைகளை முறித்து வீழ்த்தி மதத்தாற் செருக்குண்ட கடிய சினமும் வலிமையும் உடைய களிற்றியானை திரிந்து அகன்ற காட்டுப்பகுதி. அக்காட்டுப் பகுதியுள் நன்னீர் இல்லாது இழிந்த நீரின் ஈரத்தே பால்வற்றிய தோலாகிய முலையுடைய வயிற்றைப் பொருத்தி, பசி வருத்தத்தால் செந்நாயின் பிணவு முடங்கிக் கிடக்கும். அதன் கணவனாகிய செந்நாயேறு, கெடாத வேட்டையின்கண் சென்று தான் முன்பு தன் பிணையொடு கூடித்துய்த்த புணர்ச்சியின் தன்மையைக் கருதி வருந்தி நிற்கும். இத்தகைய புதிய கொடிய கானகத்தில் நின்னுடன் புகுந்து நானும் வருந்துகிறேன். தொடர்ந்து பொருள் கருதிச் செல்வோம் எனினும், அங்ஙனம் செய்யாது மீண்டும் ஊர் திரும்புவோம் எனினும் என்னால் தடுத்தலரிது. அவ்விரண்டனுள் ஏதேனும் ஒன்றைத் துணிந்துரைப்பாயாக' என்பதிலிருந்து தலைவனுக்கு விலங்கு அச்சம் நேருகின்றது. செந்நாயோடு கூடித்துய்த்த புணர்ச்சியை நினைத்து துன்புறுவது போன்று தானும் துன்புறக்கூடுமே எனத் தனக்குள் அஞ்சுகிறான்.

பொருள் காரணமாகப் பிரிந்த தலைமகன் பாலை வழியில் தலைவியைக் கருதி மீளலுற்ற நெஞ்சினை விளித்து, 'நெஞ்சே நீ முதலிலே காட்டு வழியின் கடுமையை உணராமல் நம் காதலி தனித்து வருந்தும்படி புறப்பட்டு நெடுந்தொலைவு வந்துவிட்டாய். இன்று மீண்டும் தலைவியைக் கருதி மீளக் கருதுவையாயின் நின் முயற்சி நல்லது. இங்ஙனம் நீ வாழ்க! என இகழ்ச்சி படக் கூறுகின்றதாகிய,

"***முளி கொடி வலந்த முள் அரை இலவத்து***
***ஒளிர் சினை அதிர வீசி, விளிபட***
***வெவ் வளி வழங்கும் வேய் பயில் மருங்கில்,***
***கடு நடை யானை கன்றொடு வருந்த,***
***நெடு நீர் அற்ற நிழல் இல் ஆங்கண்***
***அருஞ் சுரக் கவலைய என்னாய்; நெடுஞ் சேண்***
***பட்டனை, வாழிய – நெஞ்சே! குட்டுவன்***
***குட வரைச் சுனைய மா இதழ்க் குவளை***
***வண்டு படு வான் போது கமழும்***
***அம் சில் ஓதி அரும் படர் உறவே***"[42] (நற்., பா.எ. 105)

என்னும் இப்பாடலில், 'என் நெஞ்சே! மூங்கில் அடர்ந்த காட்டுப்பகுதியிடத்து வீசுகின்ற வெம்மையான காற்று, காய்ந்த கொடிகள் சுற்றி விளங்குவதும் முட்கள் நிறைந்த அடிப்பகுதியுடையதுமான இலவ மரத்தின் கிளைகளை அதிரச் செய்வதோடன்றி அவற்றை முறியுமாறும் செய்கின்றது. நீண்ட வழிதோறும் நீரும் நிழலும் இன்மையால் கடிய செலவினையுடைய பெண் யானைகள் தத்தம் கன்றுகளுடன் வருந்தி நிற்கின்றன. இத்தகைய காட்டின் பலவாறாய்ப் பிரியும் கவர்த்த வழிகளை எண்ணாதாய்! என் நெஞ்சே! சேர மன்னனாகிய குட்டுவனின் குடமலைச் சுனையின் பூத்த கரிய இதழுடைய குவளையின், வண்டு மொய்க்கும் பெரிய மலர்களைச் சூடுதலால் மணங்கமழும் அழகிய, சிலவாய கூந்தலைக் கொண்டவள் நம் தலைவி. அவளை நீங்குதற்கரிய துன்பத்திலே வருந்தச் செய்து நீ நெடுந்தொலைவு வந்து விட்டாய். இத்தொலைவில் நீ வந்த பின்பு மீண்டும் தலைவியை எண்ணி மீண்டு செல்லக் கருதுவையாயின் நின் முயற்சி மிக நன்றாய் இருந்தது காண்!

இவற்றோடே நீ வாழ்க!' என பிரிவானது அச்சமாக உணரப்படுகிறது. மேலும், வினைவயிற் பிரிந்து செல்லக் கருதும் தலைமகன் தன் நெஞ்சிடம், 'அரிய மாலை வழியிடத்துச் செல்லக் கருதிய நீ நம் காதலியைக் கைவிடக் கருதினை. இவளினும் அரியதொரு பொருளைக் காட்டுவழியில் கண்டனைப் போலும், வாழிய நெஞ்சே!' என வருந்தி இகழ்ந்துரைத்தாகின்ற,

"***தண்ணிய கமழும் தாழ் இருங் கூந்தல்,***
***தட மென் பணைத் தோள், மட நல்லோள்வயின்***
***பிரியச் சூழ்ந்தனைஆயின், அரியது ஒன்று***
***எய்தினை, வாழிய – நெஞ்சே! செவ் வரை***
***அருவி ஆன்ற நீர் இல் நீள் இடை,***
***கயந் தலை மடப் பிடி உயங்கு பசி களைஇயர்,***
***பெருங் களிறு தொலைத்த முடத் தாள் ஓமை***
***அருஞ் சுரம் செல்வோர்க்கு அல்குநிழல் ஆகும்***
***குன்ற வைப்பின் கானம்***
***சென்று, சேண் அகறல் வல்லிய நீயே!***"[43] (நற்., பா.எ. 137)

எனும் இப்பாடலில், 'நெஞ்சே! செம்மையான மலையின்கண் நீரின்றி அமைந்த அருவியுடன் விளங்கும் நீண்ட வழி. அவ்வழியிடத்தில் மென்தலையுடைய இளைய பிடியானையின் வருந்திய பசியைப் போக்குமாறு பெரிய களிற்றியானை ஓமை மரத்தை முறித்துத் தள்ளும். அதனால் முறிந்து வளைந்த அடிப்பகுதியையுடைய மரம், அரிய பாலை நில வழியே செல்வார்க்கு நிழலாக அமையும். இத்தகைய தன்மைகள் நிறைந்த குன்றங்கள் இடைப்பட்டு விளங்கும் காட்டுப்பகுதியைக் கடந்து நெடுந்தொலைவு அகன்று செல்லக் கருதினாய். மெல்லியதாய் மணம் கமழ்வதாய்த் தாழ்ச்சியுடையதாய் விளங்கும் கரிய கூந்தலையும் அகன்ற மென்மையான பருத்த தோளையும் மடப்பத்தையும் உடையள் நல்லோளாகிய நம் காதலி, அவளைக் கைவிட்டுப் பிரியக் கருதுகின்றனை, நன்கு ஆராயின், அடைவதற்கரியதும் இவளினும் சிறந்ததுமானதொரு பொருளை அடைந்தனை போலும், அங்ஙனம் பெற்ற பொருளுடன் நீயே நீடு வாழ்வாயாக! யான் இவளை விடுத்து வாரேன்

அங்ஙனம் பிரியும் வல்லமை நினக்கேயுள்ளது' என்பது தலைவனின் பிரிவு தாங்காது தலைவன் தன்னிடம் வருந்திக் கூறுவதில் அச்சம் தோன்றுகிறது.

பொருள் ஈட்ட வேண்டும் என இடைவிடாது தூண்டும் தன் நெஞ்சை நோக்கித் தலைவன் 'யாம் இப்போது பிரிந்து சென்றால் தலைவி ஆற்றாது வருந்தி இறந்துபடுவாள். ஆதலின் அவளை விட்டுப் பிரிதலை மறந்து அவள் ஆற்றும் இல்லறக் கடமைகளில் நாமும் அவளுடன் மகிழ்ந்திருக்கவே நினைவாயாக' எனக் கூறிச் செலவழுங்கியதாக வருகின்ற,

"........................................................................

***நீ உழந்து எய்தும் செய்வினைப் பொருட்பிணி***

***பல் இதழ் மழைக் கண் மாஅயோள்வயின்***

***பிரியின் புணர்வது ஆயின், பிரியாது,***

***ஏந்து முலை முற்றம் வீங்க, பல் ஊழ்***

***சேயிழை தெளிர்ப்பக் கவைஇ, நாளும்***

***மனைமுதல் வினையொடும் உவப்ப***

***நினை-மாண் நெஞ்சம் - நீங்குதல் மறந்தே***"[44]

(அகநா., பா.எ. 51: 8-14)

என்னும் பாடலில், 'மனித நடமாட்டமே இல்லாத பாலை நிலத்து வழியிலே ஞாயிற்றின் கதிர்கள் சுடுவதினால் மிகுதியான வெப்பம் பரவி இருந்தது. நீண்ட அடிப்பகுதியினைக் கொண்ட யாமரத்தின் பொலிவற்ற உயர்ந்த கிளைகளில் இரைச்சலுடன் காற்று ஊடறுத்துச் செல்லும். அக்கிளையில், ஊனாகிய இரையைப் பெரிதும் விரும்பி வீற்றிருக்கும் தன் பெடையின் முகம் நோக்கி எழுகின்ற ஊன் துண்டினைப் பதித்து வைத்தாற்போன்ற அச்சத்தைத் தரும் சிவந்த காதுகளையுடைய ஆண் பருந்தின் சிறகுகள் கரிந்து தீய்ந்து போகுமாறு வேனில் வீற்றிருப்பது மூங்கில் உயர்ந்து வளர்ந்துள்ள அகன்ற பரப்பினைக்கொண்ட நாம் கடந்து செல்ல வேண்டிய கானகமாகும். அக்காட்டிடையே சென்று, பொருட்பற்றுக் காரணமாக நீ வருந்திச் செய்யும் வினைகளால் அடையப்படும் பொருள், பல

இதழ்களையுடைய மலர் போன்ற குளிர்ந்த கண்களையும் மாந்தளிர் போன்ற நிறத்தினையும் உடைய தலைவியிடத்தினின்றும் பிரிந்து செல்வதாலே கைகூடிவருவது உறுதி. ஆயினும், மாண்புடை நெஞ்சமே, அவளை நீங்குதலை மறப்பாயாக, தம்மிற்பிரியாது அண்ணாந்து ஏந்திய வனமுலைப் பரப்புவிம்மவும், சிவந்த அணிகலன்கள் ஒலிப்பவும் பலமுறை தழுவி நாள்தோறும் இல்லறச் செல்களில் ஈடுபடும் தலைவியுடன் நாமும் மகிழ்ந்திருக்கவே நினைவாயாக' என்று கூறுவதிலிருந்து கானகத்தின் இயல்பின்வழித் தலைவனுக்கு உண்டாகும் அச்சமானது நன்கு உணர முடிகிறது. தீய குணமுடைய பருந்து வாழும் மூங்கில் நிறைந்த காடு என்பதைத் தலைவன் நினைப்பதிலிருந்து விலங்குகள் வாழும் காட்டின் தன்மையை நினைத்து அச்சப்படும் உணர்வு புலப்படுகிறது. இதனை, 'ஊன் பதித்தனை வெருவரு செஞ்செவி' என்னும் அடி புலப்படுத்துகிறது. இவ்வச்சம் விலங்கு நிலைக்களன் அடிப்படையில் உருவாகிறது.

பெருங்கையானை வாழும் காட்டில் தனிமையாகத் தலைவன் இதனைப் பொருள் ஈட்டுதற்குத் தலைவியைப் பிரிந்து சென்றவன் இடைச்சுரத்தில் தன் நெஞ்சொடு கூறியதாக வருகின்ற,

"***சிறு பைந் தூவிச் செங் காற் பேடை***
***நெடு நீர் வானத்து, வாவுப் பறை நீந்தி***
***வெயில் அவிர் உருப்பொடு வந்து, கனி பெறாஅது,***
***பெறு நாள் யாணர் உள்ளி, பையாந்து,***
***புகல் ஏக்கற்ற புல்லென் உலவைக்***
***குறுங் கால் இற்றிப் புன் தலை நெடு வீழ்***
***இரும் பிணர்த் துறுகல் தீண்டி, வலி பொர,***
***பெருங் கை யானை நிவப்பின் தூங்கும்***
***குன்ற வைப்பின் என்றூழ் நீள் இடை,***
***யாமே எமியம்ஆக, தாமே***
***..........................................***"[45] (அகநா., பா.எ. 57–1–10)

என்னும் இப்பாடல் வரிகளில், 'வாவற் பேடை சிறிய மெல்லிய சிறகினையும் சிவந்த யாலினையும் உடையது. தன் சிறகால் நீண்டு

பரந்த வான் வெளியைத் தாவிப் பறந்து அரிதின் கடந்து ஒளிதரும் வெயிலால் ஆகிய வெம்மையோடு வந்து கனிகளைப் பெறாது தான் முன்பு கனிபெறு நாளின் வளத்தினை நினைந்து வருந்திப் பண்டு போல் பழுமரம் புகுதற்கு ஆவலோடு ஏங்கியிருக்கும். தழையின்மையால் புல்லென்று காய்ந்த கிளைகளையும் குறிய அடியையுமுடைய இற்றி மரத்தின் புல்லிய உச்சியினைக்கொண்ட நீண்ட விழுது பெரிய சுரசுரப்பினையுடைய உருண்டைக் கல்லைத் தீண்டிக் காற்று அடித்தலால் அசைந்தாடுவது, பெருங்கை யானை தன் கையை உயர்த்தி அசைப்பது போல் தோற்றம் அளிக்கும். இன்ன தன்மையதான, மலையிடத்து ஊர்களையுடைய வெம்மை மிக்க நெடிய சுரவழியிடத்தே நமக்கு நாமே துணையாகத் தனித்திருக்கின்றோம்' என்று கூறுவதிலிருந்து தலைவன் காட்டில் வாழும் யானையினை நினைத்து அச்சமுறுகிறான் என்பது புலப்படுகிறது. ஆறலைக் கள்வர்களிடம் வயப்பட்ட நிலையை நினைத்து தலைவன் அச்சமுறுதலை பாடல் நன்கு உணர்த்துகிறது.

தலைவன் தலைவியைப் பிரிந்து குன்றும் மலையும் பல பின் ஒழியப் பொருள் ஈட்டச் சென்றான். இடைச்சுரத்தே தலைவியை நினைந்து அவன் நெஞ்சம் கவன்றது. அதனை உணர்ந்த தலைவன், குன்றங்கள் பல குறுக்கிட்டுள்ளன. அவற்றை மீண்டும் கடந்து போந்து வறிதே மீளுதல் இயலாது. எனவே, அவளை நினையாதே என்று தன் நெஞ்சை நோக்கிச் சொல்லியதாக வருகின்ற,

"*..........................................................*
***வழங்குநர் மடிந்த அத்தம் இறந்தோர்,***
***கைப்பொருள் இல்லை ஆயினும், மெய்க் கொண்டு***
***இன் உயிர் செகாஅர் விட்டு அகல் தப்பற்குப்***
***பெருங்களிற்று மருப்பொடு வரி அதள் இறுக்கும்***
***அறன் இல் வேந்தன் ஆளும்***
***வறன்உறு குன்றம் பல விலங்கினவே***"[46] (அகநா., பா.எ. 109:10–15)

என்னும் இப்பாடலில், 'பகைவர் மார்பினைத் தம் கொம்பால் குத்தி உழும் ஆண் யானைகளின் கூட்டம் செறியப் பெற்றமையால் நெட்டை மரங்களைக் கொண்ட சோலை, காடாய் நெருங்கிப் பரந்து காணப்பட்டது.

அச்சோலையிலுள்ள மூங்கில் வளர்ந்த அகன்ற இடத்திலே ஒன்றையொன்று விரும்பும் அணில்கள் விளையாடி மகிழ்ந்தன. அவ்விடத்தே, நிணம் தோய்தலால் வெண்மையான நுணியையுடைய அம்பு வேகம்பட தைத்தமையால் எண்ணில் அடங்கார் இறந்துபட்டனர். அவர்தம் உடல்களைத் தழையிட்டு மூடி மறைக்கப்பெற்ற கற்குவியல்களையுடைய அருஞ்சுரத்தில் பொருந்திய கவர்த்த வழியானது, ஆறலை கள்வர் வயப்பட்டமை அறிந்து, அதற்காக அஞ்சி அச்சுரவழிச் செல்வார் யாரும் செல்லாது போயினர் என்று தலைவன் தன் நெஞ்சிற்குக் கூறினான்' என்பதிலிருந்து ஆறலைக்கள்வர் நிலையை உணர்ந்து அச்சமுறுவது உணர்த்தப்படுகிறது. இதனை, 'சுரம் கெழு கவலை கோட்பால்' எனும் அடியானது அச்ச உணர்வைப் புலப்படுத்துகிறது.

போர்முனை ஒத்த அரசர்களின் காட்டின் தன்மை நினைத்து அஞ்சுறும் உணர்வைக் கீழ்வரும் பாடல் உணர்த்துகிறது. தலைவி தரும் இன்பத்தினும் ஈதல் இன்பம் சிறந்தது எனக் கூறிப் பொருள் ஈட்ட வேண்டும் என வற்புறுத்திய நெஞ்சிற்குத் தலைவன் கூறியதாக வருகின்ற,

"..........................................................
***கடைமணி உகுநீர் துடைத்த ஆடவர்***
***பெயரும் பீடும் எழுதி, அதர்தொறும்***
***பீலி சூட்டிய பிறங்குநிலை நடுகல்***
***வேல்ஊன்று பலவகை வேற்றுமுனை கடுக்கும்***
***வெருவரு நகுந கானம், 'நம்மொடு***
***வருக' என்னுதி ஆயின்,***
***வாரேன்; நெஞ்சம்! வாய்க்கநின் வினையே***"[47]

(அகநா., பா.எ. 131:6–15)

என்னும் பாடல் அடிகளில், 'நாம் கடந்து செல்லும் காடோ, சீழ்க்கை ஒலி பொருந்திய அம்பினது தப்பாத தொடையினையுடைய வெட்சி சூடின மறவர்கள், விடியற்காலையில் பசுக் கூட்டத்தைக் கவர்ந்துகொண்டு போகும் அச்சம் தரும் கொடிய பாலை வழியினைக் கொண்டது. வெட்சியாருடன் போரிட்டு ஆனிரைகளை மீட்டு வரச்சென்ற கரந்தையார், அச்சுரவழியைக்

கடந்து நெடுந்தூரம் நடந்து வந்தமையால் தம் தாயாருடன் செல்லமாட்டாது நடை தளர்ந்து நின்றுவிட்ட கன்றுகளின் கண்ணின் கருமணியின் கடையினின்றும் சிந்துகின்ற நீரைத் துடைத்து அவற்றின் துயரைப் போக்கினர். நிரைமீட்ட போரில் இறந்துபட்ட கரந்தையோரின் பெயரும் பெருமையும் பொறித்து, மயிற்பீலி சூட்டப் பெற்று விளங்கும் சிறப்பினைக் கொண்ட நடுகல்லின் முன் ஊன்றிய வேலும், அதன்கண் சார்த்தப்பெற்ற கேடகமும் செல்லும் வழிதோறும் வேற்று வேந்தரது போர்முனையை ஒத்துக் காணப்படும் அச்சம் வரும் இயல்பினை உடையது' எனக் கூறுவதில் அச்ச உணர்வு புலப்படுகிறது.

வேந்தரது போர்முனை என்பதிலிருந்து, 'இறை' என்னும் நிலைக்களன்வழி அச்சம் வெளிப்படுகிறது என்பதை உய்த்துணர முடிகிறது. இதனை, 'வேற்றுமுனைகடுக்கும் வெருவரு தகுந கானகம்' என்னும் அடிகள் உணர்த்தும்.

தன் நெஞ்சம் பொருள்வயிற் பிரியக் கருதியது. அதனை உணர்ந்த தலைவன், தலைவி இப்பொழுது நம் பிரிவைப் பொறுக்கமாட்டாள். அவள் கண்கள் நீர் கொள்ளுமாறு நான் அவளைப் பிரிய உடம்படேன். நீ சென்று கருதிய வினையை முடித்து மீள்வாயாக' என்று தன் நெஞ்சினை இடித்துக் கூறியதாக,

"***சிறுபுன் சிதலை சேண்முயன்று எடுத்த***
***நெடுஞ்செம் புற்றத்து ஒடுங்குஇரை முனையின்,***
***புல்அரை இருப்பைத் தொள்ளை வான்பூப்***
***பெருங்கை எண்கின் இருங்கிளை கவரும்***
***அத்த நீள்இடைப் போகி, நன்றும்***
***அரிதுசெய் விழுப்பொருள் எளிதினின் பெறினும்***
***வாரேன் – வாழி, என் நெஞ்சே!***
***...........................................***"[48] (அகநா., பா.எ. 149: 1–7)

என்னும் பாடலடிகளில், 'சிறிய புன்மையான கறையான், நெடிது நாள் முயன்று எடுத்த உயரமான சிவந்த புற்றின் உள்ளே மறைந்து கிடக்கும்

புற்றாம் பழஞ்சோற்றினை, பெரிய கையினையுடைய கரடியின் பெருங்கூட்டம் அகழ்ந்தெடுத்துத் தின்னும். தின்று வெறுக்குமானால், புல்லென்ற அடி மரத்தினைக் கொண்ட இருப்பையின் தோளை பொருந்திய வெண்ணிறப் பூக்களைக் கவர்ந்து உண்ணும். எனது நெஞ்சமே! அத்தகைய சுரவழியைக் கடந்துபோய் நாம் பொருளீட்டி வருதல் வேண்டும். தலைவன் செல்லும் வழி அச்சம் தரக்கூடியது வழியாகும்.

தலைவன் தலைவியைப் பொருள்வயிற் பிரிந்தான், பிரிந்து சென்றவன் உடன்வருவேன் என்ற தலைவியை மறுத்து வந்தமையால் இடைவெளியில் அவளை நினைத்து இரங்கித் தன் நெஞ்சிற்குச் சொல்லும் நிலையிலான,

"***பானாட் கங்குலும், பெரும்புன் மாலையும்,***
***ஆனா நோயொடு அழிபடர்க் கலங்கி,***
***நம்வயின் இனையும் இடும்பை கைம்மிக,***
***என்னை ஆகுமோ, நெஞ்சே! நம் வயின்***
***.........................................................***"[49] (அகநா., பா.எ. 297: 1–4)

என்னும் பாடலடிகளில், 'இரவுக் காலத்தும், பொலிவிழந்த மாலைக் காலத்தும் நீங்காத காமநோயால் நெஞ்சழிந்து கலங்க, நம்மை நினைத்தலாலே அவள் அடைந்த துன்பம் அளவு கடந்து சென்றமையால், அத்துன்பத்தைச் செய்த எமக்கு என்ன தீங்கு நேருமோ' என்பதில் அச்சம் உணரப்படுகிறது. இதேபோல், பிரிவினைத் தலைவி பொறுக்கமாட்டாள் என அறிந்து வைத்தும், அவளைப் பிரிந்து பொருள் ஈட்டி வருதல் வேண்டும் என இடைவிடாது தூண்டிய தன் உள்ளத்தைத் தலைவன் இடித்துரைத்ததாகின்ற,

"***..................................................***

***நீசெல வலித்தனை ஆயின், யாவதும்***
***நினைதலும் செய்தியோ எம்மே – கனைகதிர்***
***ஆவி அவ்வரி நீர்என நசைஇ,***
***மாதவப் பரிக்கும் மரல்திரங்கு நனந்தலை,***
***களர்கால் யாத்த கண்அகன் பரப்பின்***
***செவ்வரைக் கொழிநீர் கடுப்ப, அரவின்***

***அவ்வரி உரிவை அணவரும் மருங்கின்,***
***புற்றுஅரை யாத்த புலர்சினை மரத்த,***
***மைந்நிற உருவின், மணிக்கண், காக்கை***
***பைந்திணம் கவரும் படுபிணக் கவலைச்***
***சென்றோர் செல்புறத்து இரங்கார் கொன்றோர்,***
***கோழ்கழிபு இரங்கும் அதர,***
***வேய்பயில் அழுவம் இறந்த பின்னே?***"[50] (அகநா., பா.எ.327: 7–19)

என்னும் அடிகளில், 'நீ கடந்து செல்ல நினைக்கும் பாலை வழியோ வெப்பம் மிகுந்தது. ஞாயிற்றின் வெப்பம் காரணமாகத் தோன்றும் கானல்நீரின் அலைகளை நீரென நம்பி, அதனைப் பருக விரும்பி விலங்குகள் ஓடி அலையும், உவர் நிலத்தைக் கொண்ட பரந்தகன்ற பாலை நிலப்பரப்பில் மரம், செடிகள் நீரின்றி வாடும். உயர்ந்த மலையினின்றும் ஓடிவரும் அருவிநீர் போலக் காட்சிதரும், அழகிய வரிகளையுடைய பாம்பின் உரிக்கப்பெற்ற தோல்கள் பொருந்திய பாறைகள் மிகுந்த இடங்களைக் கொண்டது; அடிமரத்தில் புற்றுக்களைக் கொண்ட காய்ந்துபோன கிளைகளையுடைய மரத்தின்கண் உள்ள கரிய நிறத்தையுடைய உருவத்தையும், நீலமணி போன்ற கண்களையும் உடைய காக்கைகள், கொழுப்பமைந்த தன்னைக் கவர்ந்து உண்ணுதற்கு இடனான பிணங்கல் பாவிக்கிடக்கும் கவர்த்த வழிகளைக் கொண்டது. செய்யும் கொலைத் தொழிலுக்குச் சிறிதும் இரங்காது, அம்புகள் செலவானதற்காக வருந்தும் வழிப்போவாரைப் பின்னின்று கொல்லுகின்ற ஆறலைக் கள்வர் இயங்கும் அரிய வழிகளையுடையது. அத்தகைய கடத்தற்கரிய மூங்கில் செறிந்த காட்டைக் கடந்து சென்ற பின்பு எம்மை நீ நினைத்துப் பார்ப்பாயோ' என்பதிலிருந்து அச்சம் உணரப்படுகின்றது. காட்டிடைத்தே நிகழ்கின்ற விலங்கு, ஆறலைக்கள்வர் நடமாடும் சூழல் போன்ற நிகழ்வை நினைக்குந்தோறும் தலைவன் மனதிற்குள் அச்சம் தோன்றுகிறது.

### தலைவன் → உழையரிடம் கூற்று

தலைமகளைப் பிரிந்து சுரநெறியிற் சென்ற தலைமகன், தன் நெஞ்சம் தன் மனைவியை நினைத்து மீள முயன்றபொழுது அதனை நோவானாய்த் தனக்குத் துணையாகச் சென்றோரிடம் செல்லுகின்ற,

“***ஆள் வழக்கு அற்ற பாழ்படு நனந் தலை***

***வெம் முனை அருஞ் சுரம் நீந்தி, நம்மொடு***

***மறு தருவது கொல் தானே – செறிதொடி***

***கழிந்து உகு நிலைய ஆக***

***ஒழிந்தோள் கொண்ட, என் உரம் கெழு நெஞ்சே?***”[51] (ஐங்.,பா.எ.329)

என்னும் இப்பாடலில், ‘தோளில் செறிவாக அணிந்த தொடிகள் நெகிழ்ச்சியுற்று நீங்கும் நிலை எய்த, இல்லின்கண் தவிர்ந்து உறையும் என் காதலியால் கொள்ளப்பட்ட என் உறுதிகொண்ட நெஞ்சம், மக்கள் இயக்கம் இல்லையாகிப்போன, பாழடைந்த அகன்ற இடத்தினை உடைய, கொடுமைப்பண்புகள் கொண்ட ஆறலைகள்வரின் புலமான அரிய காட்டைக் கடந்து நம்மொடு வாராது மீண்டு செல்லக் கருதுமோ?’ என்று கூறுவதிலிருந்து தலைவனுக்கு அச்சம் மெய்ப்பாடு தோன்றுகிறது. மேலும், ‘அன்றியும் இத்துணைத் தொலைவு நம்மொடு வந்த என் நெஞ்சு, இப்பொழுது என்னை விடுத்து என் ஊர்நோக்கித் திரும்பிச் சென்று விடுமோ என்று தன் அச்சத்தினை வெளியிட்டானுமாம். இதற்கு, நம்மொடு என்பதனொடு ‘வாராத’ என்று ஒரு சொல் வருவிக்க, துணிந்து போதலும், மீளலும் இன்றி மனம் தடுமாறினான் ஆதலின், தன் தயக்கத்தினைத் தன் மனத்தின் மேலேற்றி இங்ஙனம் கூறினான்’ என்ற உரை விளக்கமும் மெய்ப்பாட்டை உறுதிப்படுத்துகிறது.

தலைவன் நெஞ்சிடம் கூறுகின்ற உணர்வினை பாடல்களில் நெடுஞ்சுரத்தின் வெம்மையினை நினைக்குந்தோறும் தான் மீண்டும் திரும்ப இயலாது போகக்கூடும். இதனால் தன்னையே நெஞ்சில் நிறுத்தி வாழக்கூடிய தலைவிக்கு சமூகத்தில் குறை நேரக்கூடும் என்பதை நெஞ்சிடம் கூறுகிறான். இவ்வுணர்வைப் பாடல்வழி நுட்பமாக உணர்த்தியிருப்பதை உணரமுடிகிறது. காட்டகத்தின் கொடூரமான சுரப்பின்புலம் முழுவதையும் உணர்கின்றபோது அச்ச மெய்ப்பாடு அடித்தளமானதாக அமைந்துள்ளது.

## தொகுப்புரை

சங்க அகப் பாடல்களில் அகமாந்தர்களின் உணர்வுகளைப் பதிவு செய்கின்றபோது, இயற்கை நிகழ்வுகளையும் எடுத்துக்காட்டி அதன்வழி காதல் நிலையினைப் புலப்படுத்தியிருக்கும் பொதுப்பண்பினைக் காணமுடிகின்றது. தொல்காப்பிய மெய்ப்பாட்டியல் கூறும் எண்வகை மெய்ப்பாடும் சங்க நெறியாக்கிக் கருத்துப்புலப்பாட்டினைத் தெளிவுபடுத்தியிருக்கின்றனர். அவ்வகையில் எண்வகை மெய்ப்பாட்டினுள் அச்சம் மெய்ப்பாடும் பாடலுக்குள் அமைந்திருக்கின்றது.

பண்டைய கால மக்களின் உணர்வுகளை மெருகூட்டி உணர்த்துகின்ற கருவியாகத் திகழ்கின்றன. அக வாழ்க்கையில் வரைவிற்கு முன்பு வயது ஒருமித்த தலைவன் தலைவி இருவரும் அக மனம் திறந்த நிலையில் காதல் உணர்வுகளைப் பகிர்ந்து மகிழ்கின்றனர். வரைவிற்குப் பின்பு குடும்பம் என்ற நிலையில் வாழ்க்கையின் பல்வேறு உணர்வுகளைத் தம் இருவருக்குள் பங்கிட்டு வாழ்கின்றனர்.

சமூகம் தன்னைச் சூழ்ந்துள்ள இயற்கை, உயிரினங்களோடு வாழ்ந்திருப்பதை அறிய முடிகின்றது. தலைவன், தலைவியரின் அக வாழ்க்கைக்குத் தோழி துணையாகியுள்ளாள். தலைவன், தலைவியரின் உணர்வுகளைப் புரிந்துகொண்டு உரிய நேரத்தில் உகந்த கருத்துக்களை எடுத்துரைத்து வாழ்க்கைக்கு உறுதுணை புரிகிறாள்.

களவு வாழ்க்கையில் தலைவன், தலைவி, தோழி, நற்றாய், செவிலித்தாய் போன்றோர் முதன்மை மாந்தர்களாகின்றனர். இவ்வகமாந்தர்கள் ஒருவருக்கொருவர் சந்தித்தும், சந்திக்க நேரிடும்போது கூற்று நிகழ்த்துகின்றவற்றில் பல்வேறு உணர்வுகள் தோன்றுவதில் இயல்பாக அச்ச உணர்வும் தோன்றுகிறதை அறிய முடிகின்றது.

இவ்வச்சம் தொல்காப்பியம் கூறும் நிலைக்களன் அடிப்படையிலும், சமூகத்தால் ஏற்படக்கூடிய அம்பல், அலர் போன்றவற்றாலும் உண்டாகின்றவற்றைப் புலப்படுத்துகின்றன.

களவு வாழ்க்கையில் தலைவன், தலைவியிடமும் தோழியிடமும் நெஞ்சிடமும் கூற்று நிகழ்த்துகின்றான். இவ்வுணர்வில் அமைந்துள்ள களவுப் பாடல்களில் அச்சம் மெய்ப்பாட்டுணர்வு தோன்றுகிறது. தலைவியிடம் உன்னைப் பிரிந்து வாழும் வாழ்க்கை மிக்கத் துன்பத்தைத் தருகிறது. உன்னை விட்டு வாழப்பிரியேன் என்றுரைக்கின்ற நிலையில் பிரிய முடியாத உணர்வினால் உள்ளார்ந்து பயம் உணர்ச்சி உண்டாவது புலப்படுகிறது.

தோழியிடம், தலைவன் தலைவி மீது வைத்துள்ள அதீத அன்பின் காரணமாக அவள் தனக்கு கிடைக்கப் பெறவில்லை எனில் பிறர் அறியுமாறு மடலேறுவேன் என்கிறான். தலைவி என்னை வரைவு செய்யாவிடின் இறந்துபடக்கூடிய நிலைக்குச் செல்வேன் என்று தோழியிடம் கூற்று நிகழ்த்துகின்ற பாடல்களில் அச்ச உணர்வு வெளிப்படுகிறது.

தலைவன் மீது கொண்ட அன்பின் காரணமாக, அவனைப் பிரிய மனங்கொள்ளாத தலைவி தானும் உடன் வருவேன் என்கிறபோதும் தான் பொருள் தேடச் செல்லுகின்ற காட்டின்கண் உண்டாகக்கூடிய துன்பம் விலங்குகளினாலும், கள்வர்களாலும் ஏற்படுவது தலைவியறியாது வருகிறாளே என எண்ணுகின்றபோது தலைவன் மனத்திற்குள் அச்சம் தோன்றுகிறது.

தலைவன், தோழியிடம் தலைவியின் நிலை, தலைவி தன்னுடன் வருவாளானாள் அவளுக்கு உண்டாகும் தீங்கு ஆகியவற்றைத் தோழிக்கு உணர்த்துகின்ற சூழலில் அச்சத்தைக் காணலாம். சங்க அகமாந்தர்களுள் முதன்மைப் பாத்திரங்களான தலைவன், தலைவி, தோழி ஆகியோரின்

கூற்றுகளில் கற்புப் பாடல்களில் ‘அச்சம்’ மெய்ப்பாடு நிலைக்களன்கள் வாயிலாக மாந்தர்களின் காதலுணர்வு மேம்பட்டு நிற்கின்றது.

தலைவன், தலைவியினுடைய பிரிவு வழி மனதிற்குள் உண்டாகும் அச்சத்தை உணர்ந்து அவ்வச்சத்திலிருந்து அவளை விடுவிக்கும் உணர்வில் கூறுகின்ற சூழலில் அச்சம் உணர்த்தப்பட்டிருக்கிறது. தலைவன், தலைவியைப் பிரிந்து பொருள்வயிற் காரணமாக பிரிகின்றான். இதன் தன்மையை தலைவி உணர்ந்து அச்சமுறுவதாகின்ற பாடல்கள் அச்சத்தைப் புலப்படுத்துகிறது.

தலைவன் பிரிவால் தனக்கு பிரிவுத்துன்பம் உண்டாவதை இச்சமூகம் உணர்ந்தால் கற்பு நிலையில் பிறர் பழி தூற்றக்கூடும் என நினைத்து அஞ்சுகிற சூழல் மிகுதியாக இடம்பெறுகின்றது. தலைவி தன்னைப் பிரிந்தால் மிகுந்த துன்பத்தை அடைவாள் என்பதைத் தலைவன் உணர்ந்து, இவ்வுணர்வை தேர்ப்பாகனிடம் எடுத்துரைக்கின்ற பாடல்களில் அச்சம் தலைவனுக்கு உண்டாவதைப் புலப்படுத்துகின்றன.

பருவ வரவினை உணர்ந்த தலைவி, தான் குறித்த நேரத்தில் வராததை எண்ணி வருந்துவாளென தலைவன் தேர்ப்பாகனிடம் கூறுகின்ற நிலையில் தலைவனுக்கு அச்சம் உண்டாகிறது. தலைவியைப் பிரிந்து நெடுந்தொலைவு சென்றபோதும் மீண்டும் அவளை அடைய வேண்டும்; அவ்வாறு அவளிடம் செல்லாது போனால் இந்த உலகு தன்னை ஏசக்கூடும் என்பதை தன்னுடைய மனதிற்குள் நினைக்கின்ற உணர்விலான பாடல்களில் அச்ச மெய்ப்பாடு தோன்றுகிறது.

இடைச்சுரத்தே விலங்கினாலும் ஆறலைக் கள்வர்களாலும் மிகக்கொடும் துன்பம் உண்டாகப் பெறின், தலைவியிடம் குறித்த நேரத்தில் சென்றுவிடாமல் போய்விடக்கூடும் என்பதைத் தன் நெஞ்சிடம் கூறும் உணர்வினாலான பாடல்களில் அச்சம் மெய்ப்பாடு அமைகிறது.

## குறிப்புகள்

1. க. வெள்ளைவாரணன் (உ.ஆ.), தொல்காப்பியம் களவியல் உரைவளம், ப. 38.
2. ந. சுப்புரெட்டியார், அகத்திணைக் கொள்கைகள், ப. 39.
3. இறை.கள. நூ.எ. ப. 1.
4. இரா. மோகன் (ப.ஆ.), இலக்கிய வளம், ப. 1.
5. வி. நாகராஜன் (உ.ஆ), குறுந்தொகை மூலமும் உரையும், ப. 318.
6. மேலது., ப. 712.
7. உ.வே.சாமிநாதையர் (உ.ஆ.), குறுந்தொகை மூலமும் உரையும், பக். 549–550.
8. கு.வெ. பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), நற்றிணை மூலமும் உரையும், பக். 297–298.
9. இரா. செயபால் (உ.ஆ.), அகநானூறு மூலமும் உரையும், பக். 771–772.
10. தமிழண்ணல் (உ.ஆ.), தொல்காப்பியமும் மூலமும் கருத்துரையும், பக். 342–43.
11. நக்கீரர் (உ.ஆ.), களவியல் என்ற இறையனார் அகப்பொருள், ப. 62.
12. எஸ். ஆரோக்கியநாதன், இலக்கியச்சாரல், பக். 132–138.
13. உ.வே.சாமிநாதையர் (உ.ஆ.), குறுந்தொகை மூலமும் உரையும், ப. 35.
14. மேலது., பக். 40–41.
15. வி. நாகராசன் (உ.ஆ.), குறுந்தொகை மூலமும் உரையும், பக். 91–92.
16. கு.வெ. பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), நற்றிணை மூலமும் உரையும், பக். 696–697.
17. மு. இராகவையங்கார், தொல்காப்பிய பொருளதிகார ஆராய்ச்சி, ப. 68.

18. ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), ஐங்குறுநூறு மூலமும் விளக்கவுரையும், ப. 452.
19. பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் (உ.ஆ.), நற்றிணை மூலமும் உரையும், ப. 393.
20. மேலது., பக். 13–14.
21. தமிழண்ணல் (வி.உ.), தொல்காப்பியம் மூலமும் கருத்துரையும், ப.363.
22. அ. தட்சிணாமூர்த்தி (உ.ஆ.), ஐங்குறுநூறு மூலமும் உரையும், ப. 927.
23. கு.வெ. பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), நற்றிணை மூலமும் உரையும், ப. 297.
24. இரா. செயபால் (உ.ஆ.), அகநானூறு மூலமும் உரையும், பக். 115–116.
25. மேலது., பக். 251–252.
26. வி. நாகராசன் (உ.ஆ.), குறுந்தொகை மூலமும் உரையும், ப. 241.
27. இரா. செயபால் (உ.ஆ.), அகநானூறு மூலமும் உரையும், பக். 256–257.
28. அ. தட்சிணாமூர்த்தி (உ.ஆ.), ஐங்குறுநூறு மூலமும் உரையும், ப. 917.
29. மேலது., ப. 924.
30. மேலது., பக். 969–970.
31. மேலது., ப. 1048.
32. மேலது., ப. 1050.
33. வி. நாகராசன் (உ.ஆ), குறுந்தொகை மூலமும் உரையும், ப. 550.
34. கு.வெ.பாலசுப்பிரமணியன் (உ.ஆ), நற்றிணை மூலமும் உரையும், பக். 191–192.
35. மேலது., பக். 684–685.
36. இரா. செயபால் (உ.ஆ), அகநானூறு மூலமும் உரையும், பக். 98–99.
37. மேலது., பக் 189–190.

38. அ. தட்சிணாமூர்த்தி (உ.ஆ.), ஐங்குறுநூறு மூலமும் உரையும், பக். 732–733.
39. மேலது., ப. 960.
40. மேலது., ப. 963–964.
41. கு.வெ. பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), நற்றிணை மூலமும் உரையும், பக். 185–186.
42. மேலது., பக். 189–190.
43. மேலது., பக். 251–252.
44. இரா. செயபால் (உ.ஆ.), அகநானூறு மூலமும் உரையும், பக். 150–151.
45. மேலது., பக். 168–169.
46. மேலது., பக். 332–333.
47. மேலது., பக். 399–400.
48. மேலது., பக். 453–454.
49. மேலது., பக். 881–883.
50. மேலது., ப. 963.
51. அ. தட்சிணாமூர்த்தி (உ.ஆ.), ஐங்குறுநூறு மூலமும் உரையும், ப. 730.

## இயல் – 3

# சங்க அக இலக்கியத்தில் தலைவி கூற்றில் அச்சம்

### முன்னுரை

சங்க அகப்பாடல்களில் அகமாந்தர்களின் உணர்வு நிலைகளை அடிப்படையாக வைத்து பாடல்களின் கருத்துப் பொருண்மைகள் அமைகின்றது. அகமாந்தர்களில் முதன்மை மாந்தர்களின் கூற்று நிலையில் பாடலிலுள்ள உணர்வு வெளிப்பாடு புலப்படுகிறது. தலைவி தோழியிடமும், நெஞ்சிடமும் களவுக் காலங்களில் கூற்று நிகழ்த்துகின்றாள். அவ்வகையில் அகவுணர்வுத் தன்மையை எடுத்துரைக்கின்ற பாடல்களில், குறிப்பாக தலைவி கூற்றிலான அகப்பாடல்களில் 'அச்சம்' மெய்ப்பாட்டுச் சுவை அமைந்திருக்குமாற்றை விளக்கப்படுகிறது. மேலும், கற்புப் பாடல்களிலும் தலைவி கூற்று நிகழ்கின்றது. இவ்விரு ஒழுக்கங்களில் தலைவிக்குத் தோன்றும் அச்சம் உணர்வு பாடல்களில் பொதிந்திருப்பதை இவ்வியலில் விளக்கப்படுகிறது.

### களவுப் பாடல்களில் அச்சம்

தலைவனுடன் காதல் வயப்பட்ட தலைவி தன் ஒழுக்கத்தைப் பிறர் அறியாதவாறு அஞ்சி ஒழுகின்றாள். தோழியின் உதவியுடன் களவு ஒழுக்கத்தை மேற்கொள்ளும் தலைவி, இக்களவில் தலைவனுக்கு ஏற்படும் இடையூருக்கு அஞ்சியும், தனக்கு ஏற்படும் சமுதாய சூழக்கு அஞ்சியும் தலைவி வருந்துகின்றாள். அவ்வாறு வருந்தும் தலைவிக்கு பின்வரும் சூழல்களில் அச்சம் வெளிப்படுகின்றது. தலைவி, தோழியிடம் கூற்று நிகழ்த்தும்போது, அச்சம் வெளிப்படத் தோழி, தலைவன், செவிலி, பாங்கன் போன்ற பல்வேறு மாந்தர்களிடம் கூற்று நிகழ்த்துமிடத்து அச்சம் வெளிப்படுகின்றது.

**தலைவி தோழியிடம் கூற்று**

தலைவன் மணஞ்செய்து கொள்ளாது நீட்டித்தவிடத்து ஆற்றுவிக்கும் தோழியிடம் தலைவி, ‘நம் காதலன் நம்பால் வைத்து நட்பானது தொடர்பின்றி அறவொழிந்து பிரிந்த பின்னும்........ நல்ல ஊரின்கண் இருக்கும் பெண்டிர் தாம் என்னிமித்தமாக இன்னும் பழி கூறுதலை யொழிந்தாரிலர். இனியான் அதனை எங்ஙனம் ஆற்றுவேன் என்று கூறுகிறாள். இதனை,

“*..............................................................*

***சூல் முதிர் மடப்பிடி, நாள் மேயல் ஆரும்***
***மலை கெழு நாடன் கேண்மை, பலவின்***
***மாச்சினை துறந்த கோள் முதிர் பெரும் பழம்***
***விடர் அளை வீழ்ந்து உக்கா அங்கு, தொடர்பு அறச்***
***சேணும் சென்று உக்கன்றே அறியாது***
***ஏ கல் அடுக்கத்து இருள் முகை இருந்த***
***குறிஞ்சி நல் ஊர்ப் பெண்டிர்***
***இன்னும் ஓவார் என் திறத்து அலரே***”[1] (நற்., பா.எ. 116)

என்னும் பாடல் குறிப்பிடும். இவற்றில், ‘சூல் முதிர்ந்த இளைய பெண் யானை, தன் வயிற்றுச் சூல் கெட்டுப் புறத்தே வெளிப்படுமாறு பெரிய மூங்கிலின் முளைத்த எழுந்த இலையில்லாத, கொழுத்த முளைப்பகுதியை அறியாது தின்னும். இத்தகைய யானையை உடைய மலைக்குரிய நாடன், என்னைக் கைவிட்டுப் பிரிந்தான். அவனுடன் கொண்டிருந்த நட்பானது பலாமரத்தின் கரிய கிளையினின்று பழுத்து வீழும் காய் முற்றிய பெரிய பழம் பிறர் உண்ணாதவாறு மலைப்பிளவிடத்தில் விழுந்தது போல், தொடர்பற்றுப் போய்ப் பல நாட்களுக்கு முன்பே நீங்கி விட்டது. அதனையறியாது பெரிய மலையகத்து இருள் செறிந்த குன்றுகள் நிறைந்த குறிஞ்சி நிலத்தின் நல்ல ஊரில் வாழும் பெண்டிர் அலர் தூற்றி என்னை வருந்துதலைக் கைவிடவில்லை. கொடிய தீச்செயல் செய்பவரிடம் அச்செயலை நேரிலே கண்டபோதும் உள்ளத்தால் ஆய்ந்து அத்தொழில் செய்வோர் இனி அதனைச் செய்யார் என்று பலமுறை கருதிப் பொறுத்திருப்பர். அங்ஙனம் இன்றி இப்பெண்டிர் கூறும் அலர் என்னை

வருத்துகின்றது. இதனை எங்ஙனம் ஆற்றுவேன்? என்கிறாள். இதில் தலைவி 'தலைவன் பிரிந்து போனதால் ஊரார் கூறும் அலர்க்கு அஞ்சி ஆற்றாமை வெளிப்படுத்துமிடத்து அச்சம் உணர்த்தப்படுகின்றது.

வரைவிட ஆற்றாளாய தலைவி தோழியிடம், 'நான் அடைந்து நடுங்கும்படி புன்கண் செய்யும் மாலைப்பொழுதில் அத்தலைவர், தாம் என்னை நினையராகி அகன்றொழிந்தால், அதனால் உண்டான காம நோயலாகிய வேறுபாடு முருகணங்கியதால் வந்ததென ஊரிலுள்ளார் கூறுவர். அவ்வலர்மொழியை எய்தி யான் உயிர்வாழேன்' என்று கூறுவதனை,

"..................................................................

***கல் சேர்பு நண்ணீர்ப் படர் அடைபு நடுங்கி***
***புலம்பொடு வந்த புண்கண் மாலை***
***அன்னர் உன்னார் கழியின், பல் நாள்***
***வாழலென் வாழி, தோழி! — என்கண்***
***பிணி பிறிதாகக் கூறுவர்***
***பழி பிறிதாகல் பண்பு மார் அன்றே***"[2] (நற்., பா.எ. 117: 6–11)

என்ற பாடலடிகள் உணர்த்தும். இப்பாடலில், 'தோழி! வாழ்வாயாக! பெரிய கடலானது முழங்குகின்றது. கடலருகில் அமைந்த சோலைகளிடத்திலுள்ள மரங்களில் மலர்கள் நிறைந்துள்ளன. கரிய கழியின் நீர் வெள்ளம் நம் மனையெல்லையைக் கடந்த நிறைவனவாய் வருகின்றது. பெரிய இதழுடைய நெய்தல் மலர்கள் குவிகின்றன. மணம் வீசும் பூஞ்சோலைகளிடத்துள்ள கூடுகளில் காக்கைகள் சென்று தங்கின. சிவந்து தாழ்ந்த கதிரவன் ஒளிமண்டிலம் மேற்கே மலையைச் சேர்கின்றது. முன்பு எங்கிணும் பரவிய சுடர்க்கதிர்கள் ஒளிமங்கின. இத்தகைய மாலைப்பொழுது துன்பங்கள் யாவும் ஒருங்கே என்னைச் சேர்ந்து யான் நடுங்கும்படி தனிமைத் துயரைக் கொணர்ந்தது. துன்பம் செய்யும் மாலைப்பொழுதில் நம் காதலர் நம்மை எண்ணாது பிரிந்துறைவதால் உண்டான காமநோயால் ஏற்பட்ட மேனி வேறுபாட்டை முருகக் கடவுள் வருத்தியதால் வந்ததாகும் என்று ஊரவர் கூறுவர்.

அயலவர் மொழி பண்பற்றது. அது கேட்டு இனி யான் நெடுங்காலம் வாழேன்' என்று கூறுகிறாள். இதிலும் அச்சம் தோன்றுகிறது. இக்கூற்றில் தலைவி பிறர் கூறும் பழமொழிக்கு அஞ்சி வருந்தி ஆற்றாமை புலப்படுத்துமிடத்து அச்சம் வெளிப்படுகின்றது.

மேலும், வரையாது நெடுங்காலம் வந்தொழுக ஆற்றாளாய தலைமகள் தோழியிடம், தலைவன் தலையளி செய்யாமையால் யான்கொண்ட நோயானது ஊராரால் அறியப்பட்டு இன்னும் முன்பு நான்கொண்டிருந்த நோயினுங்காட்டிலும் மிக்க நோயுடையதாக நின்றது என்று குறிப்பாக அலர் மொழிக்கு அஞ்சி வருந்துவதை,

*"…………………………………………………*
***பூவுடைக் குட்டம் துழவும் துறைவன்***
***நல்காமையின், நசை பழுதாக,***
***பெருங் கையற்ற என் சிறுமை, பலர் வாய்***
***அம்பல் மூதூர் அலர்ந்து,***
***நோய் ஆகின்றது; அது நோயினும் பெரிதே***"[3] (நற்., பா.எ. 272:6–10)

என்னும் பாடல் உணர்த்துகிறது. இப்பாடலில், 'நோன்பு மேற்கொண்ட மகளிர் கொய்தழித்த, பொலிவுடைய அடும்பங்கொடி படர்ந்த வெண்மணற்குவியல், கடலில் இயங்கும் நீர்க்காக்கையின் சிவந்த வாயையுடைய ஆண்பறவை, வெண்மணற்குவியலின் ஒருபுறம் தங்கியுள்ள தன்னால் விரும்பப்படும் பெண் காக்கைக்குக் கரிய சேற்றிலிருந்து அயிரை மீனைத் தேடும். அது அங்ஙனம் தேர்ந்தெடுக்கத் தெளிந்த கழியிடத்தின் பூவுதிர்ந்த ஆழமான இடத்தில் துழாவும். இத்தகைய துறையையுடைய தலைவன், குறித்த பொழுதில் வந்து அருளாமையால் யானுற்ற விருப்பம் வீணாயிற்று. அதனால் செயலறப் போய்விட்ட என் காமநோய், பழமொழி கூறும் இயல்புடைய அம்பல், இந்தப் பழைமைமிக்க ஊரில் உள்ள அயலாரால் அறியப்பட்டது. அதனால் உண்டான அலர் நான் கொண்ட நோயினும் பெரிய நோயாயிற்று' என்பதில் தலைவிக்கு ஏற்பட்டிருக்கும் மனதளவிலான அச்சம் உணரமுடிகிறது.

இயற்கைப்புணர்ச்சி நீங்கிய தலைவி, வினாவிய தோழிக்கு, நேற்றுத் தினைப்புனம் காக்கச் சென்ற போது அங்கு வந்த ஒரு ஆடவன் தோன்றிக் காப்பவன்போல் இல்லாது மாறுபட இருப்பவர்களைப் போலத் தாழ்ந்த சிலவற்றைக் கூறித் தினையில் விழுகின்ற கிளிகளை ஓட்டுவதற்கு மாட்சிமைப்பட்ட ஈரமாகிய தட்டையை மெத்தெனப் புடைத்து தெய்வமகள்போல நின்ற நீவிர் யாரோ? என வினாவினான். வினாவி, என்னை வருத்தினாய் உன்னைப் பெற்று மகிழ்வேன் எனக்கூறி எனது முதுகைத் தழுவினான். அதனால் மழைபட்ட மண்ணைப் போல் நெகிழ்ந்து என் உள்ளத்தை அவன் அறிதலை அஞ்சி நினைத்தற்குக் கூடியவற்றைக் கூறிக் கைப்பிணிப்பை விடுவித்து, வெருண்ட பெண்மான் போல் ஒதுங்கி நின்றேன் எனது வயிரமாகிய தன்மையைக் கண்டு மறுபடி வேறுவார்த்தைகளைச் சொல்ல வல்ல ஆயினான். அதனால் வருந்தி இனம் பிரிந்த களிற்றைப் போல் நீங்கினேன்' என்று தோழிக்கு அச்சத்தை வெளிப்படுத்துவதை,

"*...............................................................*
*உள் அவன் அறிதல் அஞ்சி, உள் இல்*
*கடிய கூறி, கை பிணி விடாஅ*
*வெரூஉம் மான் பிணையின் ஒரீஇ, நின்ற*
*என் உரத் தகைமையின் பெயர்த்து, பிறிது என்வயின்*
*சொல்ல வல்லிற்றும் இலனே; அல்லாந்து,*
*இனம் தீர் களிற்றின் பெயர்ந்தோன் இன்றும்*
*தோலாவாறு இல்லை – தோழி! நாம் சென்மோ,*
*சாய் இறைப் பணைத் தோட் கிழமை தனக்கே*
*மாசு இன்றாதலும் அறியான், ஏசற்று,*
*என் குறைப் புறனிலை முயலும்*
*அன்கணாளனை நகுகம், யாமே*"[4] (அகநா., பா.எ. 32:11–21)

என்ற பாடலடிகள் உணர்த்துகின்றன.

**வரைவுகடாதலில் அச்சம்**

தலைவனை வரைந்து கொள்ளும்படி வற்புறுத்துவது வரைவுகடாஅதல் எனப்படும். அக இலக்கியங்களில் தலைவி தன் அற்றாமையின் கண் வரைவுகடாதலும் உண்டு. இதனை இறையனார் அகப்பொருள் உரை 'காமம் மிக்க கழிபடர் கிளவி' என்று சுட்டுகிறது. 'இலக்கியங்களில் தலைவனை நேர்முகமாக வரைவுகடாவுகின்ற பாத்திரமாகத் தோழி மட்டுமே காணப்படுகின்றாள். தோழியினது வரைவுகடாதல் பாடல்களை நோக்கும்போது, ஏன் தோழி மட்டுமே வரைவுகடாவுகின்றாள் தலைவி ஏன் தலைவனை மணத்திற்குரிய செயல்களுக்கு நேரிடையாக தூண்டவில்லை போன்ற வினாக்கள் எழுகின்றன. தோழியைப் போலத் தலைவனிடம் தலைவி நேரிடையாக வரைவினைப்பற்றி பேசாவிட்டாலும் சிறைப்புறமாகத் தலைவன் இருக்கும் போது, தோழியிடம் பேசுவாள் போல வரைவுபற்றி தன் எண்ணங்களைக் காட்டுகிறாள். வரைவுகடாதலைத் தலைவி முகக்குறிப்பால் வெளிப்படையாகவும், மறைபொருளாகவும் காட்ட முடியும் தலைவனோடு தனித்திருக்கும் போது தன் முகக்குறிப்பினால் வரைவுவேட்கையைப் புலப்படுத்துவாள். தலைவன் சிறைப்புறமாக இருக்கும் போது அஃறிணை பொருளாகிய ஆறு போன்றவற்றிடமும், உயர்திணையாகிய தோழியிடமும் தன் மனைக்குறையைக் கூறுவாள் போல வரைவினைப் புலப்படுத்துவாள்' என்றும், "***ஒருவரிடமும் அவருடைய தவறுகளைப் பற்றிச் சுட்டும் போது வெளிப்படையாக இடித்துரைப்பதைவிட மறைபொருளாக கூறுதல் நாகரிகமும் நலமும் உடையது. தன்னிடத்தில் களவு வேட்கையோடு தலைவன் வரும்பொழுது வரைவினைப் பற்றி அவன் உரையாடுவாளேயானால், தன் மீது ஐயம் கொண்டு தலைவி இவ்வாறு பேசுகிறாள் எனத் தலைவன் கருத இடமுண்டு, மேலும் பெண்மைக்குரிய இயல்பான அச்சமும், மடனும், நாணமும் அவளை நேர்முகமாகத் தலைவனிடம் வரைவு பற்றிப் பேசவிடாமல் தடுகின்றன எனக்கொள்ளலாம்***"[5] என்றும் விளக்கம் தருவார் இராம.சண்முகம்.

ஒரு காரணத்தை உள்ளடக்கி தலைவி தலைவனிடம் வரைவுகடாமிடத்து அச்சம் வெளிப்படுகின்றது. இதன்வழி, இரவுக்குறியின்போது, சிறைப்புறமாக தலைவன் நிற்க அவன் கேட்டுமாறு தலைவி தோழியிடம், 'நம் காதலர் இரவில் இங்கு வருவதனையெண்ணி அறியாமையுடையேனாகிய எனக்கு அந்நெறியின்கண்ணே புலியும் பெரிய களிற்றியாணையையும் மோதிக்கொல்லுதலால் அதனையறிந்த கரிய பிடியானை மின்னல் முதலாகிய தொகுதியையுடைய கரியமேகம் முழங்குவது போன்று பிளிற்றுகின்ற ஓசையைக் கேட்டு நடுங்கி நீலமலர் போன்ற மையுண்ட கண்கள் நீரை வடியவிடவும், யாதுமில்லாத பேதையையுடைய என்னெஞ்சம் கவலையாய் வருந்தவும் என் நிலைமை இவ்வாறாகியது' என்று கூறுகிறாள். இதனை,

"*..........................................................................*

***பிணவுப் புலி வழங்கும் அணங்கு அருங் கவலை,***
***அவிர் அறல் ஒழுகும் விரை செலல் கான் யாற்றுக்***
***கரை அருங் குட்டம் தமியர் நீந்தி,***
***விரவி மலர் பொறித்த தோளர்***
***இரவில் வருதல் அறியாதேற்கே***"[6] (நற்., பா.எ. 144: 6–10)

என்ற பாடல் விளக்குகின்றது. இப்பாடலில், 'இக்காட்டாற்றில் தமியராய் நீந்தி நீரிலே கலந்த மலர்கள் பொருந்திய தோளினையுடையராய் நம் காதலர் இரவில் வரும் பண்பினர். இரவில் இங்ஙனம் வரும் நெறியில் புலி பெரிய களிற்றியானையைத் தாக்கிக் கொல்லும். அதனையறிந்த கரிய பிடியானை மின்னல் முதலியன அடங்கிய கரியமேகம் முழங்குவது போலப் பெருங்குரல் எடுத்துப் பிளிறும். இத்தகைய நெறியில் தலைவன் வருதலால் அறியாமை மிகுத்து யானையின் பிளிறல் கேட்டு நடுங்கியும் நீலமலர் போன்ற கண்கள் கலங்கி நீரைப் பெருக்குமாறு வருந்துவேன். மேலும், யாதுமில்லாத பேதைமை நெஞ்சம் கவலையால் வருந்தி நிற்கும். இவ்வாறு என்நிலை தலைவனை எண்ணி வருந்தியபடி ஆயிற்றே' என்பதில் அச்சம் உணரப்படுகிறது. இதில் தலைவனுக்கு வரும் வழியில் விலங்கினங்களால் ஏதும் துன்பம் விளையுமோ என்று அஞ்சி தலைவி

தோழியிடம் மறைமுகமாக வரைவுகடாமிடத்து அச்சத்தை அறியமுடிகின்றது.

இரவுக்குறியின்போது, தலைவனுக்குச் சொல்லுவனாய் தோழியிடம் தலைவி, 'இரவு நடுயாமத்துப் பாம்பு தன்செவியிற்படதலும் தன்னடத்திலுள்ள அழகிய நீலமணியைக் கக்கி வருந்தி உழலுமாறு சினங்கொண்டு இடி முழங்கி நிற்கும். இத்தகைய பொழுதில் மெல்லிய தோள் தளர்வுற்று நாம் வருந்துவதாயினும் அவர் இங்கு வராதிருத்தல் மிக நல்லதாகும்' என்று தலைவன் கேட்குமாறு வரும்வழியில் உள்ள விலங்கினத்தாலும், தன் மேனியின் தளர்வினாலும் ஏற்படுகின்ற அச்சம் காரணமாக வரைவுகடாவுவதை,

"***மென்தோள் நெகிழ்ந்து நாம் வருந்தினும், இன்று அவர்***
***வாரார் ஆயினோ நன்றுமன்தில்ல***
***உயர் வரை அடுக்கத்து ஒளிறுபு மின்னிப்***
***பெயல் கால்மயங்கிய பொழுது கழி பானாள்***
***திருமணி அரவுத் தேர்ந்து உழல,***
***உருமுச் சிவந்து எறியும் ஓங்கு வரை ஆறே***"[7] (நற்., பா.எ. 255)

என்னும் இப்பாடலில், 'ஓங்கிய மலையின் சாரலில் ஒளியோடு விளங்கி மின்னி மழை பெய்து இடத்தொடு இடம் மயங்கி நிற்கின்ற பொழுது மிகவும் கடந்தது இரவின் நடுயாமம். இந்த நடுயாமத்தில் பாம்பு இடி முழங்கி மோதுவதால் தன் நாகமணியைக் கக்கி வருந்தி உழலும். இவ்வாறு அமைந்த உயர்ந்த மலைவழியில் நம் மெல்லிய தோள் நெகிழ்ச்சியுற்று வருந்தநேரினும் அவர் வராதிருத்தலே நல்லதாம்' என்பதில் அச்சம் தோன்றுகிறது. இதில் அச்சம் 'உரு' என்ற சொல்லில் வந்துள்ளது.

இரவில் வரும் தலைவன் சிறைப்புறத்தானாக தலைவி தோழியிடம், 'நாட நெடிய கையையுடைய யானையினது கடிய பகையினால் வருந்திய குறிய கையையுடைய கொல்லுதல் வல்ல பெரிய ஆண்புலியானது, பசிய கண்ணையுடைய செந்நாய் பார்த்திருக்கும் வருதற்கரிய இருளையுடைய

நடுயாமத்தில் வருகின்றாய்: அங்ஙனம் வருதலை ஒழிவாயாக' என்று கூறுகிறாள். இதனை,

"***வளைவாய்ச் சிறுகிளி விளைதினைக் கடீஇயர்***
***செல்க என்றோளே அன்னை என நீ***
***சொல்லி எவனோ – தோழி! கொல்லை***
***நெடுங்கை வன்மான் கடும்பகை உழந்த***
***குறுங்கை இரும்புலிக் கோள்வல் ஏற்றை***
***பைங்கட் செந்நாய் படுபதம் பார்க்கும்***
***ஆர் இருள் நடுநாள் வருதி;***
***சாரல் நாட வாரலோ எனவே***"[8] (குறுந்., பா.எ. 141)

என்னும் பாடல் உணர்த்தும். இப்பாடலில், 'புலி, செந்நாயை அகப்படுத்தும் செவ்வி பார்க்கும் நடுயாமம் எனத் தலைவன் இரவில் வருவதால் தோன்றும் ஏதம் குறித்துத் தலைவி அஞ்சினள். அன்னை, கிளி கடியத் தம்மை அனுப்பியதாகக் கூறுதல், பகற்குறி நேர்ந்தமையைக் குறிப்பதாகும். பகலிலும், கிளி கடியாமல் இருப்பின், அன்னை பிறரைக் காவலுக்கு அனுப்புதல் கூடும் என்பதால் அதனையும் மறுத்து, வரைந்த கோடல் வேண்டினாள்' என்பதில் அச்சம் உணரமுடிகிறது. இவற்றில் தலைவன் இரவில் வருவதனால் அவனுக்கு விலங்கினங்களால் உண்டாகும் ஏதத்திற்கு அஞ்சி தலைவி வரைவுகடாமிடத்து அச்சத்தை அறிய முடிகின்றது.

தலைவன் ஏதத்திற்கு அஞ்சி தலைவி வரைவுகடாவுவதை,

"***நெடுவரை மருங்கிற் பாம்புபட விடிக்கும்***
***கடுவிசை யுருமின் கழறுகுர லளைஇக்***
***காலொடு வந்த கமஞ்சூன் மாமழை***
***ஆர் அளி இலையோ நீயே? பேர் இசை***
***இமயமும் துளக்கும் பண்பினை***
***துணை இலர் அளியர், பெண்டிர்; இஃது எவனே***"[9] (குறுந்., பா.எ.158)

என்ற குறுந்தொகைப் பாடலில், 'மழையில்லாமலும் உயிர்கள் நெடும் பொழுது வாழ்தல் கூடும். ஆனால் காற்று இல்லாமல் சிறிது பொழுதும்

வாழ இயலாது. ஆதலால் உயிரெல்லாம் காக்கும் கருணை தன்பால் இல்லையோ எனக் காற்றினைத் தலைவி வினவினாள். எப்பொழுதும் எல்லா உயிர்களையும் வாழ்விக்கும் காற்று, இப்பொழுது சினம் கொண்டு வீசுதலால், 'ஆரளி இலையோ' எனத் தலைவியால் வினவப்பட்டது. தன்னொடு பகைத்தவரைத் தாக்குதல் தக்கது என்றும், துணையின்றித் தனித்து வாழும் பெண்டிரை நலிதல் தகாது என்றும் கூறினள். தலைவி, தலைவன் இரவுக்குறியில் வருவதால் மழை, இடி, காற்று ஆகியவற்றான் வரும் ஏதங்கள் குறித்து அஞ்சுவதாயினள். நடுக்கின்றி, நிலைபெறுவதாகிய இமயமும், நின்னால் துளங்கும் என்றால், துணையற்ற யாங்கள் எவ்வளவினேம் எனக் குறித்தாள். பெண்டிர், துணையிலர், அளியர் எனப் பொதுவகையான் கூறப்பட்ட போதிலும், அவை தலைவியையே குறித்தன. அருள் உள்ளம் உடைய வலியவானகிய நீ, மெலியவர்களை நலிவது அறமாகுமா என்றாள்' என்ற விளக்கம் வழி அச்சம் தோன்றுகிறது. இதேபோல், இரவுக்குறி வந்த தலைமகன் சிறைப்புறத்தானாக, தலைமகற தோழிக்குச் சொல்லுவாளாச் சொல்லுகின்ற,

"....................................................................

***குறுஞ்சுனைக் குவளை வண்டுபடச் சூடி,***
***கான நாடன் வரூஉம், யானைக்***
***கயிற்றுப் புறத்தன்ன கல்மிசைச் சிறுநெறி***
***மாரி வானம் தலைஇ நீர்வார்பு,***
***இட்டு அருங் கண்ண படுகுழி இயவின்,***
***இருளிடை மிதிப்புழி நோக்கி, அவர்***
***தளர்அடி தாங்கிய சென்றது, இன்றே***"[10] (அகநா., பா.எ. 128: 9–15)

என வரும் பாடலடிகளில், 'அம்மலையில் உள்ள குறுஞ்சுனையின் கண் மலர்ந்த குவளை மலரினை வண்டுகள் மொய்க்கும்படி சூடிக்கொண்டு கான நாடனாகிய நம் தலைவன் யானையின் முதுகின் மீதுள்ள கயிற்றுத் தழும்பு போன்ற மலை மேற்கிடக்கும் சிறிய வழியைக் கடந்து வருவான். வரும் வழியில் வானம் மழை பொழிய செல்லுதற்கரிய இடங்களிலுள்ள படுகுழிகள் நிறைந்த பாலை வழியிலே இருளிடையே அவர் மிதித்து

வரும் இடத்தைப் பார்த்து அவரது தளிர்கின்ற அடிகளைத் தாங்கும் பொருட்டு இன்று நம் நெஞ்சம் அவர்பால் சென்று விட்டதே! அஃது என்ன பயனைக் கருதியோ? தோழி, நீ கூறுவாயாக' என்பதில் தலைவிக்கு உண்டாகும் அச்சம் உணர்த்தப்படுகிறது. தலைவன் வரும் வழியானது அவனுக்குத் துன்பத்தை உண்டாக்கும் என்பதை நினைக்குந்தோறும் தலைவிக்கு மனதிற்குள் பயம் உருவாகிறது.

ஊரார் பிறர் அறியுமாறு பேசுவது அலர் ஆகும். இவ்வலர் அச்சத்துக்கு அஞ்சி தலைவி சிறைப்புறமாக வரும் தலைவனிடம் வரைவுகடாமிடத்து அச்சம் வெளிப்படுகின்றது.

களவொழுக்கத்தில் தலைவி பேசும் பேச்சுக்களை தொகுத்து தொல்காப்பியர், ***அலர் பற்றித் தலைவி பேசுவாள் என்பதைச் சுட்டவில்லை. ஆனால் சங்க இலக்கியத்தில் தலைவியும் தோழியும் அலர் பற்றி தம்முள் கூறிக்கொள்கின்றனர்***"[11] என்பார் வை.சு. அழகப்பன். களவு வாழ்வில் தலைவன் பிரிந்துறையும் காலத்து தலைவியின் பேரச்சம் அலரச்சமாகும். இவ்வாறு தலைவி ஊரலர்க்கு அஞ்சி தன் ஆற்றாமை புலப்படுத்துமிடத்து அச்சம் வெளிப்படுகின்றது.

தலைவன் சிறைப் புறத்தானாகத் தலைவி தோழியிடம், 'கல்லென ஆரவாரம் செய்யும் விரைந்த தலைவனது தேரை, யான் கண்டேனோ இல்லையோ நடு இரவின்கண் உயர்ச்சியையுடைய வெள்ளிய மணலினிடத்துக் தாழ்ந்து வளர்ந்த புன்னை மரத்தினது மகரந்தம் சேர்ந்த ஒளியுடைய மலர்களைப் பறிக்கும் மகளிர் கூட்டமெல்லாம் ஒருங்கே கண்டது இங்ஙனமாக எவ்வாறு பழிமொழி ஒழிவனவாகும்' என்கிறாள். இதனை,

"***அலர்யாங்கு ஒழிவ தோழி பெருங்கடற்***
***புலவுநாறு அகன்றுறை வலவன் றாங்கவும்,***
***நில்லாது கழிந்த கல்லென் கடுந்தேர்***
***யான் கண்டன்றோ இலனோ பானாள்***
***ஓங்கல் வெண்மணல் தாழ்ந்த புன்னைத்***

***தாதுசேர் நிகர்மலர் கொய்யும்***

***ஆயம் எல்லாம் உடன் கண்டன்றே***"[12] (குறுந்., பா.எ. 311)

என்னும் இப்பாடலில், 'பாகன், குதிரையின் வார்பு வலித்து, அதன் ஓட்டத்தை விலக்கவும், பெரிய கடற்பரப்பில், புலால் மணம் வீசுகின்ற, அகன்ற நீர்த்துறைப் பகுதிகளில் யாண்டும் நில்லாது கடந்த, மணிகளால் கல் என்னும் ஓசையையுடைய, விரைந்த செலவினையுடைய தேரை, யான் பார்த்தேனோ, பார்த்திலனோ அறியேன். அவை எல்லாவற்றையும், நாட்பாதியாகிய பகற்பொழுதில் ஓங்கிய வெண் மணலால், உயரமில்லாது தாழ்ந்த புன்னையில் தாதுக்களோடு கூடிய, ஒள்ளிய மலர்களைக் கொய்யும் ஆயத்தார் யாவரும் ஒருங்கு கண்டனர். அதனால், அவ்வாயத்தார் எடுக்கும் அலர்மொழிகள், எங்ஙனம் ஒழிதல் கூடும்?' என்பதில் அச்சம் உணரமுடிகிறது. இதில் தலைவி தலைவனுக்கு அலர் மிகுதியைப் புலப்படுத்தி வரைந்து கொள்ள வேண்டுமென்று அறிவுறுத்துகின்றாள். இவற்றில் தலைவி அலர் அச்சத்துக்கு அஞ்சியதை உணர முடிகிறது.

தலைவன் சிறைப்புறத்தானாக, தோழிக்கு தலைவி, 'ஊரினர் கூறும் அலர்க்கு அஞ்சி வரைவுகடாவுவதை,

"***பெருங்கடற் பரதவர் கோள்மீன் உணங்கல்***

***இருங் கழிக் கொண்ட இறலின் வாடலொடு,***

***நிலவுநிற வெண்மணல் புலவ, பல உடன்***

***எக்கர் தொறும் பரிக்குந் துறைவனொடு ஒரு நாள்,***

***நக்கதோர் பழியும் இலமே, போது அவிழ்***

***பொன் இணர் மரீஇய புள் இமிழ் பொங்கர்ப்***

***புன்னை அம் சேரி இவ் ஊர்***

***கொன் அலர் தூற்றும் தன் கொடுமையானே***"[13] (குறுந்., பா.எ. 320)

எனச் சுட்டும். இவற்றில் 'பெரிய கடலில் பரதவர் கொண்ட சுறாமீனின் வற்றல், நீர் அற்ற கழிகளில் எளிதில் கிடைத்த இறாமீனின் வாடல் ஆகியவை நிலவின் ஒளிபோன்ற வெள்ளிய மணற்பரப்பில் புலால் நாற்றத்தை உண்டாக்கின. இடுமணற் குன்றுகள் பலவற்றிலும் அந்நாற்றம்,

காற்றினால் பரவுவதாயிற்று. இத்தகைய கடல் துறையை உடைய தலைவனோடு ஒருநாள் சிரித்து மகிழ்ந்தன்றி, ஒரு பழியும் நாம் இவ்வூர்க்குச் செய்திலேம். செவ்வி அரும்புகள் மலரும், பொன்னிறமான பூங்கொத்துக்கள் பொருந்திய, பறவைகள் ஒலிக்கின்ற பொழிலில், புன்னை மரங்கள் விளங்கும் சேரியையுடைய இவ்வூர், தனக்கு இயல்பாகிய கொடுமையால், ஒரு பயனுமின்றி அலர் தூற்றுகின்றது' என்று தலைவி கூறுவது பிறர் கூறும் அலர் துன்பத்தைத் தரும் என்பதை உணர்த்துகிறது.

தலைவன் வரைந்து கோடலை நினையாது களவொழுக்கமே விரும்பி வந்ததை அறிந்த தலைவி தோழியிடம் கூறுவதனை,

"***எக்கர் ஞாழல் இணர் படு பொதும்பர்த்***

***தனிக் குருகு உறங்கும் துறைவற்கு***

***இனிப் பசந்தன்று – என் மாமைக் கவினே***"[14] (ஐங்., பா.எ. 144)

என்ற பாடல் விளக்குகின்றது. இப்பாடலில், 'தோழியே! மணற்பரப்பிடையே அமைந்த பூங்கொத்துக்கள் பொருந்திய ஞாழல் மரங்கள் அடர்ந்த சோலையின்கண் தனித்த நாரையொன்று உறங்குதற்கு இடனான கடற்றுறைத் தலைவன் பொருட்டு என் மாமையாகிய அழகு இப்பொழுதுதான் பசலையுற்றது' என்பது அச்சத்தைக் குறிக்கிறது. இவற்றில் "***வரைந்து கோடலை நினையாது களவொழுக்கமே விரும்பி யுறைவதால் எழும் அலர்க்கு அஞ்சி தன் மேனி நலங்கெடுவதற்கு இரங்குவாள்***"[15] என்பர் ஔவை துரைசாமிப்பிள்ளை.

இதேபோல், தலைவி வரைவிடைவைத்துப் பிரிவின் போது, தலைமகன் சிறைப்புறத்தானாக இருப்பதை அறிந்து தோழியிடம்,

"***அம்ம வாழி, தோழி! நன்றும்***

***எய்யாமையின் ஏதில பற்றி;***

***அன்பு இலன் மன்ற பெரிதே***

***மென்புலக் கொண்கன் வாராதோனே!***"[16] (ஐங்., பா.எ. 119)

என்ற இப்பாடல், 'நெய்தல் நிலத்தையுடைய தலைவன் வரைந்து கோடற்குரிய நன்னெறியினை அறியாமையினால் அதற்கு ஏதுவாகாதவற்றை மேற்கொண்டு ஒழுகின்றமையின் அவன் தெளிவாகப்

பெரிது அன்பில்லாதவனாவான். அன்புடையனாயின், இவை செய்யாது வரைதற்கு வேண்டுவன கொண்டு வருவான்' என்று கூறுகிறாள். இதில் தலைவன் வரைவிற்கு முயற்சியை மேற்கொள்ளாமல் களவொழுக்கத்தை விரும்பி ஒழுகுவதால் அலர் வெளிப்பட்டு நான் இறக்க நேரிடும் என்று குறிப்பாக அஞ்சி தலைவி தோழியிடம் வரைவுகடாஅமிடத்து அச்சம் வெளிப்படுகின்றது.

களவில் தலைவன் வரையாமல் களவொழுக்கமே விரும்பி ஒழுகும் காலத்தில் தலைவி தன் உடல் மெலிவையும் அதனால் ஏற்படும் உடல் வருத்தத்தையும் காட்டி இதனால் இச்சமூகம் ஏதேனும் நினைக்கக்கூடும் என்பதை முன்னிறுத்தி இதைத் தவிர்க்க வரைவுகடாவுமிடத்து அச்சம் வெளிப்படுகின்றது.

தலைவன் வரைவு நீட்டிப்பின் போது, தலைவி தோழியிடம், 'இவ்விடத்திலுள்ளேன் என்னோடு முன்பு ஒன்றியிருந்த எனது பெண்மை நலன், தினைப் புனங் காப்பார் விடும் கவண்கல்லின் ஒலிக்கு அஞ்சி காட்டு யானை கைவிட்ட பசிய கவர்ந்து கொண்ட தூண்டிலைப்போல மேலே செல்லுதற்கு இடமாகிய காட்டையுடைய தலைவனோடு நாங்கள் பழகிய நட்பு (நலன்) சென்றது என்கிறாள். இதனை,

"***யானே ஈண்டையேனே; என் நலனே***
***ஏனல் காவலர் கவண்ஒலி வெரீஇக்***
***கான யானை கைவிடு பசுங்கழை***
***மீன் எறி தூண்டின் நிவக்கும்***
***கானக நாடனொடு ஆண்டு ஒழிந்தன்றே***"[17] (குறுந்., பா.எ. 54)

என்ற பாடல் சுட்டும். இப்பாடலில், 'யான் மட்டும் ஈங்கு உள்ளேன். தினைப்புனத்தில் தினையைக் காவல் புரிபவர், விடுகின்ற கவண் ஒலிக்கு அஞ்சிக் காட்டுயானை கைவிட்ட பசிய மூங்கிலானது, மீனைக் கவர்ந்து கொண்ட தூண்டிலைப்போல, மேலே செல்வதற்கு இடமாகிய கானக நாட்டின் தலைவன் என்னை நீங்கிய பொழுதே, என்னைப் பிரியாத என் நலமும் நீங்கியது' என்பதில் அச்சம் உணர்த்தப்படுகிறது. இதில் தலைவன்

என் பெண்மை நலத்தைக் கொண்டான். இனி அவன் வரைந்து கொண்டாலன்றி அதனை பெற்றேன் என்று கூறுவது, தலைவி மேனி நலத்திற்காக அஞ்சி வருந்துமிடத்து அச்சம் உணர்த்தப்படுகின்றவற்றை உணர முடிகிறது.

இரவுக்குறியின்போது, தலைவன் சிறைப்புறத்தே இருப்பதை அறிந்த தலைவி தோழியிடம், நாழிகை கணக்கை அறிவிப்பர். அவர்கள் துயிலாது இருத்தலைப் போல யானும் தலைவன் வரும் பொழுதை நினைந்து துயிலாது இருந்ததை,

"***பழமழை பொழிந்தெனப் பதனழிந் துருகிய***
***சிதட்டுக்கா யெண்ணின் சில்பெயற் கடைநாட்***
***சேற்றுநிலை முனைஇய செங்கட் காரான்***
***நற்றென் யாமத் தையெனக் கரையும்***
***அஞ்சுவரு பொழுதி னானு மென்கண்***
***துஞ்சா வாழி தோழி காவலர்***
***கணக்காய் வகையின் வருந்தியென்***
***நெஞ்சுபுண் ணுற்ற விழுமத் தானே***"[18] (குறுந்., பா.எ. 261)

என்ற பாடலடிகள் சுட்டும். இப்பாடலில், 'மேகங்கள் சூல்முற்றிப் பல நாட்களாகப் பெய்யும், கார்கால மழையைப் பொழிந்தமையால், செவ்வி கெட்டு, உள்ளீடாகிய விதை இல்லையாகிய எள்ளின் குருட்டுக் காய்களுக்கு இனியவாகச் சிலமழை தூவும் கார்ப்பருவத்தின் இறுதிநாட்களில், சேற்றில் நிற்றலை வெறுத்த, சிவந்த கண்களையுடைய எருமை, இருள் செறிந்த நடு இரவுப் பொழுதில், 'ஐ' என்ற ஒலியுடன் சேற்றைவிட்டு வெளியே வரக் கரையும். இத்தகைய அச்சத்தைத் தரும் கூதிர்பருவத்தும், என்னுடைய நெஞ்சு வருந்திப் புண்பட்ட துன்பம் காரணமாக, ஊர் காப்பாளர் இரவில் துயிலாது நாழிகையை எண்ணிக் கொண்டிருப்பது போல என் கண்கள் துயிலாவாயின' என்பதிலிருந்து தலைவனுக்கு விலங்கினால் துன்பம் நேரக்கூடும். இதனால் வரையாது போய்விடுவான் என்று தலைவி அஞ்சுவது புலனாகிறது.

தலைவன் சிறைப்புறமாக நிற்கும்போது, ஆற்றாமைமிக்க தலைவி தோழியிடம், எனக்கு நோய்மிக்கது: மெய்யும் வெப்பம் உடைத்து, இனி உய்யேன். ஒருகால் அவனது மலையிலே பட்டகாற்று எம்மெய்யைத் தீண்டினால் என் நோய் நீங்கப்பெறும் என்பதை விளக்குகின்ற,

"***நோயும் கைம்மிகப் பெரிதே : மெய்யும்***
***தீ உமிழ் தெறலின் வெய்தாகின்றே***
***ஒய்யெனச் சிறிது ஆங்கு உயிரியர், பையென***
***முன்றில் கொளினே நந்துவள் பெரிது என,***
***நிரைய நெஞ்சத்து அன்னைக்கு உய்த்து ஆண்டு***
***உரை, இனி — வாழி, தோழி! புரை இல்***
***நுண் நேர் எல் வளை நெகிழ்ந்தோன் குன்றத்து***
***அண்ணல் நெடுவரை ஆடி, தண்ணென்***
***வியல் அறை மூழ்கிய வளி என்***
***பயலை ஆகம் தீண்டிய, சிறிதே***"[19] (நற்., பா.எ. 236)

என்னும் இப்பாடலில், 'தோழி! நீ வாழ்க எனக்கு உண்டான காம நோயும் அளவு கடந்து மிகுதியாயிற்று. நெருப்பில் தோன்றி வீசும் அனலைப் போன்ற வெப்பத்தை என்னுடலும் உடையதாயிற்று. தலைவனோ என்னுடலை மெலிவித்து, குற்றமில்லாததும் நுண்ணிய நேர்த்தி மிக்கதும் ஒளி பொருந்தியதுமன வளையினைக் கழன்று விழச் செய்தனன். அங்ஙனம் நெகிழச் செய்த தலைவனின் மலையில் உயர்ந்த நெடிய சிகரத்திலே பரவி, குளிர்ச்சியுடன் அகன்ற பாறையில் காற்று அளாவி நிற்கும். தலைவன், மலையிலிருந்து வீசும் காற்று பசலை நோயால் வருத்தும் என் உடலில் சிறிது படவேண்டும். நான் சிறிதாவது உயிர்த்திருக்க நீ அன்னையிடம் விரைந்து செல்க; இவளை மெல்ல முற்றத்தில் கிடத்தினால் பெரிதும் உய்வாள்; என்ற மொழிகளை நரகம் போன்ற கொடிய நெஞ்சத்தையுடைய நம் தாய்க்குச் சென்றுரைப்பாய்' என்பதில் அச்சமுறும் உணர்வு தோன்றுகிறது. இவற்றிற்கு நாராயணசாமி ஐயர் அவர்கள் "***மலையில் பட்ட காற்றையும் விரும்பியேற்பவளை நாம் வரையாது விடின் இறந்துபடுவது திண்ணமென்று அஞ்சி விரைய***

***வரைவொடு புகுவ என்னுங் கருத்தால் இங்ஙனங் கூறினள்***"[20] என்று விளக்கம் கூறுவர்.

சிறைப்புறமாக நிற்கும் தலைவன் கேட்குமாறு தோழியிடம் தலைவி, 'தலைவனே நீ கூறியவாறு நினையாது ஒழுகுவேன். இனி என் கண்கள் உறங்காமல் ஆயினேன்' என்று கூறுகிறாள். இதனை,

"***எக்கர் ஞாழல் இறங்கு இணர்ப் படு சினைப்***

***புள் இறை கூரும் துறைவனை***

***உள்ளேன் தோழி படீஇயர் என் கண்ணே***"[21] (ஐங்., பா.எ. 142)

என்ற அடிகள் உணர்த்தும். இப்பாடலில், 'தோழி! மணற்பரப்பில் நிற்கும் ஞாழல் மரத்தின் தாழ்ந்து தொங்கும் பூங்கொத்துக்களை உடைய கிளை வருந்துமாறு அதன் மீது நீர்வாழ் பறவைகள் தங்கியிருத்தற்கு இடனான கடற்றுறையைக் கொண்ட நெய்தல் நிலத் தலைவனை, நீ அறிவுறுத்தியவாறே நினையாதிருப்பேன். இனி என் கண்கள் உறங்குவனவாக!' என்ற விளக்கம் அச்சத்தை உணர்த்துகிறது. இதில் தலைவி 'வரையாது ஒழுகும் அவனுடைய ஒழுக்கத்தால் பல்வேறு எண்ணங்கள் தோன்றி மனம் கலங்கி வருந்துதலின் உறங்கேனாயினேன் என்று குறிப்பாக அஞ்சி வருந்துமிடத்து அச்சம் சுட்டப்படுவது புலனாகிறது.

இரவுக்குறியின்போது, தலைவன் சிறைப்புறத்தில் இருப்பதை அறிந்த தலைவி தோழியிடம், 'நேற்று இரவில் தனியாக ஒரு தேர் இங்கே வந்து மீண்டு சென்றதென்று அயலார் கூற அது முதல் தாய் என்னை துன்புறுத்துகின்றாள்' என்கிறாள். இதனை,

"***பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை***

***களிற்றுச்செவி யன்ன பாசடை மயக்கிப்***

***பனிக்கழி துழவும் பானாள் தனித்து ஓர்***

***தேர்வந்து பெயர்ந்து என்ப, அதற்கொண்டு***

***பின்னுவிடு கதுப்பின் மின்இழை மகளிர்***

***இளையரும் மடவரும் உளரே***

***அலையாத் தாயரொடு நற்பாலோரே***"[22] (குறுந்., பா.எ. 246)

என்னும் பாடல் உணர்த்தும். இப்பாடலில், 'கழுத்துப் பகுதியில் சிறிது வெண்மை நிறமுடைய காக்கை, பெரிய கடலின் கரைப்பகுதியில் உள்ளது. யானைக்கன்றின் செவியைப் போல விளங்கும் நெய்தலின் இலைகளை அது கலக்கி, குளிர்ந்த அக்கழிநீர்ப் பகுதியில் இரையைத் தேடி, ஒரு நாளின் பாதியாகிய பகற்பொழுது முழுவதும் துழாவிக் கொண்டிருக்கும். அப்பகற்பொழுதில், இளையர் துணை ஏதும் இன்றித் தனிமையில் ஒரு தேர் மட்டும் வந்து, திரும்பிச் சென்றுவிட்டது என்று பிறர் கூறுவர். அச்சொல்லைக் கேட்ட அன்னை, என்னைக் குறித்துத் தனக்குள்ளே ஆராய்வாளாயினள். என்னை வருத்துவதாயினள். தலைவனின் தேர்வந்து பெயர்ந்துழி யானேயன்றி, பின்னிவிடப்பட்ட கூந்தலையுடையவர்களும், அழகுடையவர்களும், ஆகிய பிறர் இருந்தனர். அவரெல்லாரும், தம்மை வருத்துதல் இல்லாத தாயரால் நல்வினையுடையவர் ஆவர்' என்ற விளக்கம் அச்சம் உணர்வைக் கூறுகிறது. இதில் அன்னையின் இற்செறிப்புக்கு அஞ்சி வருந்தி தலைவி தலைவனிடம் வரைவுகடாமிடத்து குறிப்பாக உணர்த்தும் அச்சத்தை அறியமுடிகின்றது.

இரவுக்குறி வந்த தலைவன் கேட்குமாறு தோழியிடம் தலைவி, அன்னை என்னை விளிப்பாள் இருந்தமையால், நேற்று இரவு வந்த தலைவனை காணப்பெறவில்லை' என்று கூறுவதனை,

"***பொழுதும் எல்லின்று பெயலும் ஓவாது***
***கழுது கண்பனிப்ப வீசும்; அதன் தலைப்***
***புலிப்பற் தாலிப் புதல்வற் புல்லி,***
***அன்னா! என்னும், அன்னையும்; அன்னோ!***
***என் மலைந்தனன் கொல்தானே – தன்மலை***
***ஆரம் நாறும் மார்பினன்***
***மாரி யானையின் வந்து நின்றனனே***"[23] (குறுந்., பா.எ. 161)

என்ற பாடலடிகள் குறிப்பிடும். இதில், 'பொழுதும் இருண்டது. இருளில் திரிதற்குரிய பேய்களும் நடுங்கும் வண்ணம் மழை இடைவிடாது பெய்வதாயிற்று. இத்துணைக்கும் மேலாக, தாயும், புலிப்பல்லைக்

கோத்த தாலியை அணிந்துள்ள தன் மகனைத் தழுவி என்னை அன்னையே என அழைப்பாள். தனது மலையில் விளைந்த சந்தனம் மணக்கின்ற மார்பினையுடைய தலைவன், இத்துணை இடையீடுகளையும் பொருட்படுத்தாது, மழையில் நனைந்த யானையைப் போல வந்து நின்றனன். அவன், என்ன காரியம் மேற்கொண்டு வந்தனனோ' என்பது அச்சமாகிறது. இவற்றில் அன்னை இற்செறிப்பால் களவை மேற்கொள்வது இயலாதது அதற்கு வரைவே சிறந்தது என்று தலைவனிடம் வேண்டுமிடத்து தலைவி குறிப்பாக இற்செறிப்புக்கு அஞ்சுவதை அறிய முடிகின்றது.

வரையாது வந்தொழுகும் தலைமகன் சிறைப்புறத்து நிறபதை அறிந்த தலைவி தோழியிடம், 'வெண்மையான மணல் பொருந்திய கரையை அலைக்கும் உயர்ந்த அலைகளையுடைய துறைவற்குப் பெண்டாயினாள் என்று என்னை இவ்வூரார் நெருநல் அலர்கூற, அதனைக் கேட்ட அன்னை சிவந்து வினவுவதை,

"***அம்ம வாழ் தோழி! நென்னல்***
***ஓங்கு திரை வெண் மணல் உடைக்கும் துறைவற்கு,***
***ஊரார் பெண்டு என மொழிய வென்னை,***
***அது கேட்டு அன்னாய் என்றனள் அன்னை***
***பைய 'எம்மை' என்றனெள் யானே***"[24] (ஐங்., பா.எ. 113)

என்ற பாடலடிகள் விளக்கும். இப்பாடலில், 'தோழியே, கேட்பாயாக! வெண்மையான மணல் நிறையினை உயர்த்து வரும் அலைகள் வந்து மோதியலைக்கும் துறைவனுக்குப் பெண்டாயினேன் யான் என நேற்று ஊரார் அலர்மொழி கூற, அதனைக் கேட்ட அன்னை 'அன்னாய்?' என என்னை வினவினள். யான் அதற்கு விடையாக 'எம்மை?' என மெல்ல மெல்லக் கூறினேன். (இதனை நீ அறிவாய்)' என்பது அச்சம் உணர்வைப் புலப்படுத்துகிறது. இதில் தலைவன் வரைவு கருதாது களவொழுக்கமே விரும்பி வருவதால் அலர் பரவி அன்னை இற்செறிப்பாள் என்று அஞ்சி தலைவனிடம் தலைவி வரைவுகடாமிடத்து குறிப்பாக அச்சத்தை உணர்த்துகின்றது.

**வெறியாட்டின்கண் அச்சம்**

காதல் நினைவுகளைத் தன்னுள்ளே அடக்கித் தனித்திருக்கும் தலைவியின் மேனியில் தோன்றும் வேறுபாடு அறிந்த தாய் இது தெய்வத்தால் அணங்குப் பெற்றால் என்று எண்ணி முருகனுக்கு வெறியாட்டு எடுக்க முற்படுவது வெறியாட்டு எனப்படும். இவ்வெறியாட்டுக்கு அஞ்சி தலைவி கூற்று நிகழ்த்துவதை தொல்காப்பியர்,

"***வெறியாட் டிடத்து வெருவின் கண்ணும்***"[25]

என்பர். இவ்வெறியாட்டு அஞ்சி தலைவி தலைவனிடம் வரைவுகடாமிடத்து அச்சம் வெளிப்படுகின்றது.

தலைவன் சிறைப்புறத்தானாக, தலைவி தோழியிடம், பொறுத்தற்கரிய நினைவாலுண்டாகும் துன்பத்தை இன்று நாம் அடைந்தாலும், எனது நோயைத் தீர்க்கும் வழி வெறியாடுதலென்று தெளிந்த வேலன், அந்நோயைத் தீர்ப்பதற்கு உரிய பரிகாரத்தை அறியாதவன் அதனை, நம் தாய் காணும்பொருட்டு, மலைச்சாரலின் கண், சோலைகள் விளங்கும் மலைநாடனாகிய தலைவன் இராக்காலத்தே, இங்கே வாராதொழிக' என்று கூறுவதாகின்ற,

"***வெறிஎன உணர்ந்த வேலவன் நோய் மருந்து***
***அறியான் ஆகுதல் அன்னை காணிய***
***அரும்படர் எவ்வம் இன்றுநாம் உழப்பினும்***
***வாரற்தில்லை – தோழி! சாரல்***
***பிடிக்கை அன்ன பெருங்குரல் ஏனல்***
***உன்கிளி கடியும் கொடிச்சிகைக் குளிரே***
***சிலம்பின் சிலம்பும் சோலை***
***இலங்கு மலை நாடன் இரவினானே***"[26] (குறுந்., பா.எ. 360)

என்னும் பாடலில், 'தோழி, நம் நோயைத் தீர்ப்பதற்கு உரிய மருந்து வெறியாடல் என அறிந்த வேலன் நம்முடைய நோயை அறியான் ஆதலின் மருந்தும் அறியான். நம்முடைய நோயின் மருந்தினை அன்னை உள்ளவாறு காண்பாளாகுக. பெண் யானையின் துதிக்கையைப் போன்ற மலைச்சாரலில் விளைந்த பெரிய கதிர்க் கொத்துக்களையுடைய

தினையை, உண்ண வரும் கிளிகளை ஓட்டும் குறமகளிர் தம் கையால் புடைக்கும் குளிர் என்னும் கருவி ஒலித்தவழி அவ்வொலி பக்கமலைகளில் பட்டு எதிரொலிக்கும். இத்தகைய சோலைகளையுடைய மலைநாட்டைச் சார்ந்த தலைவன் இன்று நாம் பொறுத்தற்கு அரிய அவன் நினைவினால் உண்டாகும் துன்பத்தால் வருந்துவேமாயினும் இரவில் இன்று வாராது ஒழிக. அதுவே என் விருப்பமாகும்' என்பதில், வெறி அஞ்சி தோழிக்குச் சொல்லுவாளாய்த் தலைவி தலைவனிடம் குறிப்பாக வரைவுகடாவுமிடத்து அச்சம் சுட்டப்படுகின்றது. இதேபோல், சிறைப்புறமாக இருக்கும் தலைவன் கேட்குமாறு தோழியிடம் தலைவி, '.........நம் தலைவனது மணம் அகன்ற மார்பு வருந்திய வருத்தத்தை இதனால் உண்டாயதென்று அறியாத கலக்கமுற்ற காலத்தே வணங்காரைத் தேய்த்தொழித்த பலவகைப் புகழ்களைக் கொண்ட பெரிய கையினையுடைய நெடுவேளைப் போற்றி இவள் துயர் தணியப் பெறுகுவள் என்று அறிவு வாய்த்தலையுடைய பெண்டிர் அதனை மெய்யாகக் கூற, வெறியாடும் களம் நன்கு அமைத்து கண்ணி சூட்டி, வளம் பொருந்திய கோயிலில் ஒலியுண்டாகப் அழகிய செந்தினையைக் குருதியுடன் கலந்து தூவி வெடிப்புக்கள் செறிந்த மலைச்சாரலில்.... யான் எய்திய நோயைத் தணித்த காதலரின் வரவு குற்றமில்லதாகும்' என்று கூறுவதனை,

"..................................................................

***வள நகர் சிலம்பப் பாடி, பலி கொடுத்து,***
***உருவச் செந்தினை குருதியொடு தூஉய்,***
***முருகு ஆற்றுப்படுத்த உரு கெழு நடு நாள்,***
***ஆரம் நாற, அரு விடர்த் ததைந்த***
***சாரற் பல் பூ வண்டு படச் சூடி,***
***களிற்று இரை தெரீஇய பார்வல் ஒதுக்கின்***
***ஒளித்து இயங்கும் மரபின் வயப் புலி போல,***
***நல் மனை நெடு நகர்க் காவலர் அறியாமை–***
***தன் நசை உள்ளத்து நம் நசை வாய்ப்ப,***
***இன் உயிர் குழைய முயங்குதொறும் மெய்ம் மலிந்து,***
***நக்கனென் அல்லெனோ யானே – எய்த்த***

*நோய் தணி காதலர் வர, ஈண்டு*

*ஏதில் வேலற்கு உலந்தமை கண்டே?"*[27] (அகநா., பா.எ. 22)

என்ற பாடலடிகள் உணர்த்தும். இதில் தலைவி அன்னை வெறியெடுப்பதை தோழி மூலம் தலைவனுக்கு அச்சுறுத்தி வரைவுயுமாறு வேண்டுமிடத்து அச்சம் வெளிப்படுகின்றது.

**அறத்தொடு நிற்றலில் அச்சம்**

களவொழுக்கத்தை தலைவி தோழிக்கும் தோழி செவிலிக்கும் செவிலி நற்றாய்க்கும் நற்றாய் தந்தை தமையன்மார்களுக்கு தக்க ஏதுக்கள் காட்டி தலைவியின் அறத்தொடு நிற்றலாகும் என்கிறார் தொல்காப்பியர். மேலும், தலைவி கூறறு நிகழும் இடங்களை தொகுத்து கூறுமிடத்து,

"*..........................................................................*

*மனைப்பாட்டுக் கலங்கிச் சிதைந்த வழித்தோழிக்கு*

*நினைத்தல் சான்ற அருமறை உயிர்த்தலும்*

*உயிராக் காலத்து உயிர்த்தலும் உயிர்செல*

*வேற்று வரைவுவரின் அது மாற்றுதற் கண்ணும்*

*.................................................................*

*வெறியாட் டிடத்து வெருவின் கண்ணும்"*[28] (தொல்.கள., நூ.எ. 1057)

என்ற நூற்பாவில் அறத்தொடு நிற்றலை குறிப்பிடுகின்றார். அத்துறையிலான பாடல்களில் அச்சம் மெய்ப்பாடு அமைகிறது.

தலைவி புறத்துப் போய் விளையாட இயலாதவாறு தான் இற்செறிக்கப்பட்டுக் கலங்கி உள்ளம் சிதைவுற்ற நிலையிலும், ஆய்ந்த நிறை வேன்றுதற்கு உரிய அரிய களவொழுக்கத்தினைத் தன் தோழிக்கு வெளிப்படுத்தலும் தனது வருத்தத்தினை வெளிப்படக் கூறவொண்ணாத காலத்து நெட்டுயிர்பெறிதலும், உயிர்தனது உடம்பைவிட்டு நீங்கும்போதும் துன்பமுண்டாக அயலார் தன்னை மணம் பேசவந்த நிலையிலும் அதனை மாற்றுதற்பொருட்டும் தலைவிக்கு இவ்வுடல் மெலிவு (வேறுபாடு) எதனால் ஏற்பட்டது எனச் செவிலி வேலனைக் கொண்டு வெறியாட்டு நிகழ்த்துவிக்க

வரும் காலத்துத் தலைவி அஞ்சும் அச்சத்தின் கண்ணும் தலைமகள்பால் நிகழும் கூற்றுக்கள் அறத்தொடு நிலைச் சார்ந்தவையாய் உள்ளன.

நொதுமலர் வரைவின்போது, தலைவி தோழியிடம், 'மாட்சிமை பொருந்திய தகுதியை உடையோனை வீரர் கூடியுள்ள சேரி விழாவின் கண்ணும். மகளிர் தம்முள் தழுவி ஆடுகின்ற துணங்கைக் கூத்தின் கண்ணும் ஆகிய எவ்விடத்தும் கண்டேனில்லை. யானும் ஆடுகின்ற களத்திற்குரிய ஒரு மகளே என் கையில் உள்ள, சங்கை அறுத்துச் செய்த விளங்குகின்ற வளையல்களை நெகிழச் செய்த, பெருமை பொருந்திய தலைவனும் ஆடுகின்ற களத்தில் உள்ள ஒருவனே' என்று கூறுவதை,

*"மள்ளர் குழீஇய விழவினானும்,*
*மகளிர் தழீஇய துணங்கை யானும்,*
*யாண்டும் காணேன், மாண் தக்கோனை*
*யானும் ஓர் ஆடுகளை மகளே என்கைக்*
*கோடு ரிலங்குவளை நெகிழ்த்த*
*பீடுகெழு குரிசிலுமோ ராடுகள மகனே"*[29] (குறுந்., பா.எ. 31)

என்று குறுந்தொகைப் பாடல் குறிப்பிடும். இவற்றில் தலைவி நொதுமலர் (வரைவில்) வரைவிற்கு அஞ்சி தான் களவு வழிப்பட்டதை தோழியிடம் கூறி அறத்தொடு நிற்குமிடத்து அச்சம் சுட்டப்பெறுகின்றது. மேலும், அகநானூற்றில் தலைவி தோழியிடம் கூறுமிடத்து,

"................................................ *நாடன்*
*உருவ வல் விற் பற்றி, அம்பு தெரிந்து,*
*செருச் செய் யானை செல் செறி வினாஅய்,*
*புலர் குரல் ஏனற் புழையுடைய ஒரு சிறை,*
*மலர் தார் மார்பன், நின்றோர் கண்டோர்*
*பலர் தில், வாழி தோழி! – அவருள்*
*ஆர் இருட் கங்குல் அணையொடு பொருந்தி*
*ஓர் யான் ஆகுவது எவன் கொல்,*
*நீர் வார் கண்ணொடு நெகிழ் தோளேனே?"*[30] (அகநா., பா.எ. 82)

என்னும் பாடலடிகளில், ‘நம் தலைவன் தாரினை அணிந்த அகன்ற மார்பினையுடைய அவன், அச்சம் தரும் வலிய வில்லினைக் கையிற்கொண்டான். சிறந்த அம்பினைத் தேர்ந்தெடுத்துக் கொண்டான். தன்னால் போர் செய்து அம்பு எய்யப்பெற்ற யானை சென்ற வழியினைக் கேட்டான். கேட்டு, முதிர்ந்த கதிர்களையுடைய தினைப்புனத்தின் சிறு வாயில்கள் ஒரு பக்கத்தே வந்து நின்றான். அங்ஙனம் நின்றவனைக் கண்டோர் பலராவர். அவருள்ளும், அதிய இருள் செறிந்த இரவில் படுக்கையிடத்துப் பொருந்திக் கிடந்து, கண்கள் நீர் சொரிய, யான் ஒருத்தியுமே மெலிந்த தோல்களை உடையேன் ஆயினேன். அதற்குக் காரணம் யாதோ? என்று கூறுகிறாள்.

இவற்றில் தன் மேனியின் வேறுபாடு கண்டு வினாவிய தோழிக்கு அஞ்சிய தலைவி தலைவன் ஒருவனால் வந்த என்று சொல்லி அறத்தொடு நிற்குமிடத்து அச்சத்தை உணர்த்துகின்றன.

### தலைவி → நெஞ்சிடம் கூற்று

#### பிரிவின்கண் அச்சம்

தலைவன் தலைவியும் களவுக்காலத்தில் ஒருவரை விட்டு ஒருவர் பிரிகின்றனர். தலைவி எங்கும் பிரிந்து செல்வதில்லை. தலைவன் பொருள் ஈட்டும் பொருட்டு பிரியும் வழக்கம் உண்டு. அவ்வாறு பிரிந்து சென்ற தலைவனை நினைத்து தலைவி வருந்துகிறாள். தம் மன உணர்வை இருவகையில் வெளிப்படுத்துகின்றாள். அவை,

- ஆற்றி வெளிப்படுதல்
- ஆற்றாமையை வெளிப்படுத்துதல்

என்பனவாகும். இவ்விரண்டு இடங்களிலும் அச்சம் வெளிப்படுகின்றது.

ஒருவர் தாம் சொல்வது உண்மை என்பதை உறுதிசெய்ய தெய்வத்தைச் சாட்சியாக வைத்துச் சத்தியம் செய்வர். சொல்பவர் பொய் சொன்னால் தெய்வம் பழிவாங்கி விடும், உயிரைப் பறித்துவிடும் என்பது மக்கள் நம்பிக்கை. இதுபோல, குறுந்தொகையில் தலைவன்

தலைவியோடு அளவளாவியலான் பிரியும்போது 'கடம்ப மரத்தில் உறையும் கடவுள்மேல் ஆணையிட்டு உன்னைப் பிரியேன் என்று கூறி அவன் பிரிவு நீட்டித்தனாக, அதனால் அத்தெய்வம் ஒடுக்குமென்று அஞ்சி தலைவி தன்பால் உள்ள வேறுபாட்டிற்கு காரணம் தலைவர் இல்லை என்ற மனநிலையாகும் என்று கூறுகிறாள். அதனை,

"***மன்ற மராஅத்து பேஎம்முதிர் கடவுள்***

***கொடியோர்த் தெறூஉம் என்ப யாவதும்***

***கொடியர் அல்லர் எம் குன்றுகெழு நாடர்,***

***பசைஇப் பசந்தன்று நுதலே***

***நெகிழ நெகிழ்ந்தன்று, தடமென் றோளே***"[31] (குறுந்., பா.எ. 87)

எனச் சுட்டும். இப்பாடலில், 'நுதல் பசந்தமையும், தோள் நெகிழ்ந்தமையும் தலைவன் பிரிந்தமையால் அல்ல எனவும், அவை தாமாகப் பசந்து நெகிழ்ந்தன எனவும் கூறி அவர் கொடியரல்லர் என்பதை உணர்த்தினாள். கொடியோரைத் தெறும் என்பதால் அத்தேய்வம் நல்லவரை வாழச்செய்யும் என்பது பெறப்படும். இப்பாடலில், நல்லவரைக் காப்பதற்காகத் தலைவி, தெய்வத்திற்கு வழிபாடு நேர்ந்து கொள்வதைக் குறிப்பதாகும். கடம்பமரம், தலைவன் நின்னிற் பிரியேன் என தெய்வத்தை முன்நிறுத்திச் சூளுரைத்த இடமாகும். தன் காதலன், சூளுறவு பொய்த்தமையால், அவரைக் கடவுள் தெறும் எனக் கருதிய தலைவி, தன் தலைவர் கொடியரல்லர் எனக் கூறி அவனைத் துன்புறுத்துதல் கூடாது என வழிபட்டனள். செங்கடம்பு முருகப்பெருமானுக்கு உகந்த மலராகும். ஊர் மன்றங்களில் உள்ள மரத்தில் தெய்வம் உறைவதாக மக்கள் நம்பினர்' என்பதில் அச்சம் தோன்றுகிறது.

இதில், தலைவனின் சூள் பொய்த்தாள்; தெய்வம் அவனை தண்டிக்கும் என்று அஞ்சி தன் மனத்தைக் காரணம் காட்டித் தலைவி ஆற்றுயிருக்குமிடனான உணர்வு அச்சத்தை உணர்த்துகின்றது. இதில் இறை அச்சம் வெளிப்படுவதை அறியலாம்.

தலைவன் வரைபொருளின் பொருட்டுப் பிரிந்த காலத்தில் ஆற்றாளெனக் கவலையுற்ற தலைவி, 'தலைவன் முன்பு பிரியேன் என்று

சூளுறவு செய்து இப்பொழுது பிரிந்து சென்று விட்டான். அதனால் உண்டான வருத்தத்தைப் பொறுத்துக்கொண்டு யான் ஆற்றிருக்கின்றேன் நீ வருந்தாதே' என்று கூறுகின்றாள். இதனை,

"***துறுக யெலது மாணை மாக்கொடி***
***துஞ்சுகளிறு குவருங் குன்ற நாடன்,***
***நெஞ்சு கானாக 'நீயலென் யான்' என***
***நற்றோள் மணந்த ஞான்றை, மற்று அவன்***
***தாவா வஞ்சினம் உரைத்தது***
***நோயோ தோழி – நின்வயி – னானே?***"[32] (குறுந்., பா.எ. 36)

என்ற பாடலடிகள் விளக்குகின்றன. 'துறுகல்லின் அயலே வளர்ந்துள்ள, மானைக் கொடியானது அதன்மீது படர்ந்து பற்றுக் கோட்டினைப் பெறாமல், அதனருகில் உறங்கிக் கிடக்கும் யானை மேல் படர்ந்து வளரும். அத்தகைய நாட்டிற்கு உரியவன், தன் நெஞ்சத்தினையே தனக்குரிய சான்றாகக் கொண்டு, நின்னிற் பிரியேன் எனத் தலைவியின் நலம் பொருந்திய தோள்களைத் தழுவியபோது உரைத்தனன். அவன் உரைத்த, கெடாத அவ்வுறுதி மொழிகள், நின் திறத்து வருத்தமமைவதற்குக் காரணமாக அமையுமோ? என்று கூறுகிறார். தலைவன், வஞ்சினம் பொய்த்தலால் அவனுக்கு வரும் ஏதம் குறித்துத் தலைவி அஞ்சினாள்' என்பதாகிறது.

## கற்புப் பாடல்களில் அச்சம்

### தலைவி – தலைவனிடம் கூற்று

தலைமகன் பரத்தையரோடு புனலாடியதை அறிந்து அலர் தூற்றுவதை நினைத்து அச்சப்படுவதை அறியமுடிகிறது. இதனை, தலைவன் பரத்தையர் மனையிலிருந்து தன் இல்லம் மீண்டான். அவன் பரத்தையரோடு புனலாடினமையை மறுத்து வாயில் வேண்டினான். அப்பொழுது அவன் பலர் காணப் புனலாடினமை சொல்லி வாயில் மறுத்த தலைவி கூற்றிலான,

"***அலமரல் ஆயமொடு அமர்துணை தழீஇ***
***நலம் மிகு புதுப்புனல் ஆட, கண்டோர்***

*ஒருவரும் இருவரும் அல்லர்;*

*பலரே தெய்ய; எம் மறையாதீமே*"[33] (ஐங்., பா.எ. 64)

என்னும் பாடலில், 'கழன்று திரியும் மகளிர் கூட்டத்தின் நடவே, நின்னால் விழையப்பட்டவராய் நினக்குப் புணர்துணையாய் அமைந்த பரத்தையோடு நீ அழகுடைய புதுப்புனலில் ஆடித் திளைத்ததனைக் கண்டோர் ஒருவரோ இருவரோ அல்லர். மிகப்பலரேயாவர். எம்மிடம் உண்மையை ஒப்புக்கொள்ளத் தயங்கற்க' என்று கூறுவதிலிருந்து அலர் அச்சம் தோன்றுகிறது.

மேலும், பரத்தையர் மனைக்கண் இருந்த தலைமகன் தனக்குப் புதல்வன் பிறந்த அண்மைக் காலத்தில் இல்லம் திரும்பினான். தலைவியின் ஆற்றாமையைப் பயன்படுத்தித் தலைவியை முயங்க நெருங்கிய தலைவற்கு இடித்துரையாகின்ற,

"*கரும்பு நடு பாத்தியில் கலித்த ஆம்பல்*

*சுரும்பு பசி களையும் பெரும் புனல் ஊர!*

*புதல்வனை ஈன்ற எம் மேனி*

*முயங்கன்மோ தெய்ய; நின் மார்பு சிதைப்பதுவே*"[34] (ஐங்., பா.எ.65)

எனும் இப்பாடலில், 'கரும்பு நடப்பட்டு வளர்ந்த பாத்தியில் தானே வளர்ந்த அம்பல் தேன் வண்டுகளின் பசியை அகற்றுதற்கு இடனான மிக்க நீர் வளம் கொண்ட ஊரின் தலைவனே! அண்மையில் தான் புதல்வனை ஈன்ற என் மேனியை முயங்குதலை ஒழிப்பாயாக! நீ தழுவினால் உன் மார்பின் அழகினை என் தீம்பால் சிதைக்கும்' என்று தலைவி வருந்தக்கூடிய அலரினால் உருவாகும் அச்சம் உணர்த்தப்படுகிறது.

பிரிவு பற்றிக் கூறிய தலைவனிடத்துத் தலைவி தன்னையும் உடன் கொண்டு செல்லும்படி கூறினாள். அது கேட்ட தலைவன், காட்டின் கடுமையையும், தலைவியது மென்மையையும் கூறினன், அது கேட்ட தலைவி, வாழ்நாள் சிலவாதலையும், இளமை வறிதே கழிதலையும் எடுத்துக்கூறித் தன்னையும் உடன் கொண்டு செல்லுங்கள் எனத் தலைவனிடத்துக் கூறுகின்றதாக வரும்,

"........................................................................

*கிளிபுரை கிளவியாய்! நின் அடிக்கு எளியவோ,*
*தளிஉறுபு அறியாவே, காடு? எனக் கூறுவீர்!*
*வளியினும் வரைநில்லா வாழுநாள், நும் ஆகத்து*
*அளி என, உடையேன் யான்; அவலம் கொண்டு அழிவலோ?'*

*'ஊறுநீர் அமிழ்து ஏய்க்கும் எயிற்றாய்! நீ உணல் வேட்பின்,*
*ஆறு நீர் இல' என, அறன் நோக்கிக் கூறுவீர்!*
*பாறு நீர் கழிந்தன்ன இளமை, நும் நெஞ்சு என்னும்*
*தேறு நீர், உடையேன் யான்; தெருமந்து ஈங்கு ஒழிவலோ?"*[35]

(கலித்., பா.எ. 20: 7–14)

என்னும் இப்பாடலில், 'கிளியின் பேச்சினைப் போலப் பேசும் மொழியினை உடையாய், அழலைச் சொரியும் மழை பெய்தலைக் கண்டறியாத வெம்மையை உடைய காட்டிடை நீ நடந்து போதற்கு, நின் அடிக்கு எளியவாய் இருக்குமோ என்று கூறினீர், வரையறுத்துக் கூறவியலாத, நிலையாமை உடைய காற்றைப் போன்று விளங்குவது வாழ்நாள். நாம் கூடி வாழும் இந்நாளிலே, நின் அகத்திடத்து, முயக்கத்தைக் கண்டு, அதனையே தஞ்சம் எனக் கொண்டு, வாழ்நாளாக உடையேன். ஆதலால் இனி உம்மைப் பிரிந்து, அவலங்கொண்டு நெஞ்சழிவனோ? இறந்து படுவனே.

இதழ்க் கடையிலே அமிழ்தத்தைப் போன்ற வாயூறல் ஊறும் பல்வரிசையினை உடையாய், சுரத்திடைச் செல்லும்போது, நீர் உண்ணலை நீ வேட்டுக் கேட்பின், வழியிடை நீர் இல என்று அறத்தைக் கருதிக் கூறினீர், ஆறு நீர் கழிந்தாற் போன்று இளமை கழிந்து போகும் தன்மை உடையது. நும்முடைய நெஞ்சம் என்கின்ற தெளிந்த நீரைப் பெற்றிருப்பவள் யான். அத்தகைய யான் நீர் பிரிந்த பின் வருந்தி, கழன்று இவ்விடத்தே நெஞ்சழிவனோ? இறந்துபடுவனே' என்பதிலிருந்து தலைவியின் உள்ளத்தில் உருவாகும் அச்சம் வெளிப்படுகிறது.

இவற்றில், வெய்ய காட்டின் வழியே தலைவன் செல்லும்போது கொடிய விலங்கினாலும் காட்டின் தன்மையாலும் உயிருக்கு தீங்கு நேரிடக்கூடும் என்பதை நினைத்து அஞ்சி வருந்தும் உணர்வு புலனாகிறது.

இதேபோல், தலைமகனால் பிரிவு உணர்த்தப்பட்ட தலைவி தன்னையும் உடன் அழைத்துக் கொண்டு செல்க என்றனள். தலைமகன் அதற்கு உடன்படவில்லை. தலைவி, அவன் பிரிந்தால் தான் இறந்துபடுவேன் என்பது தோன்றுகின்ற,

"..................................................................

***யானும் நின்னகத்து அனையேன்; ஆனாது,***
***கொலை வெங் கொள்கையொடு நாய் அகப்படுப்ப,***
***வலைவர்க்கு அமர்ந்த மட மான் போல,***
***நின் ஆங்கு வரூஉம் என் நெஞ்சினை***
***என் ஆங்கு வாராது ஓம்பினை கொண்மே***"[36] (கலித்., பா.எ.23:15–19)

எனும் இப்பாடலில், 'யானும் நின்னிடத்து, பயன்படாத தன்மையள் ஆகிவிட்டேன், கொலைத் தொழிலில் கடிய கோட்பாட்டினைக் கொண்ட நாய் வேட்டையிற் சென்று தனக்கு என்று அகப்படுத்திக் கொள்ள, அதற்கு உரித்தாகாது வலைவர்க்கு அமர்ந்துவிட்ட மடமான் போலே, எனக்கு உரித்தென்று யான் அகப்படுத்தவும், என்னிடத்து வாராமல் நின்னிடத்து வரும் என் நெஞ்சினைப் பாதுகாத்துக் கொள்வாயாக' என்று தலைவி கூறுவதிலிருந்து அச்சம் உணரப்படுகிறது.

பூக்களை உதிர்த்து வெம்மை மிக்கதாக விளங்குகின்ற சுரத்திடையே நீ செல்லவிருக்கிறாய். எனக்கு மிகுந்த துன்பம் தரும் என உணர்ந்த தலைவி ஊரார் பலர் சிரிக்கக்கூடும் என்ற அச்சத்தால் உயிர் வாழேன் எனக் கூறுமிடத்து அச்சம் வெளிப்படுகிறது.

தலைவி தன்னுள் புலந்து பேசும்போது, தலைவனின் செயல்பாட்டால் வேதனைப்பட்டு அச்சம் உருவாவதை பாடல் உணர்த்துகிறது. இதனை,

"..........................................................................................................

***எள்ளலான், அம்மென் பணைத்தோள் நுமர் வேய்ந்த கண்ணியோடு***

***எம் இல் வருதியோ? எல்லா! நீ தன் மெய்க்கண்***
***அம்தீம் சொல் நல்லார் அணிந்த கலம் காட்டி,***
***முந்தை இருந்து மகன்செய் நோய்த்தலை***
***வெந்த புண் வேல் எறிந்தற்றால், வடுவொடு***
***தந்தையும் வந்து நிலை***"[37] (கலித்., பா.எ. 83. 26–30)

என்னும் வரிகள் உணர்த்துகிறது. 'புதல்வனை நோக்கி, ஏடா, அழகினை உடைய மெத்தென்ற மூங்கில் போலும் தோளினை உடைய நும்முடைய தாய் மார் சூட்டின கண்ணியோடே எம் இல்லிலே நீ வருவையோ வாராயோ? என வெறுத்துக் கூறினள், தலைவன் வந்தமை கண்டு, அழகிய இனிய சொல்லை உடைய நல்லரான பரத்தையர் உன்மெய்க் கண் அணிந்த கலங்களின் வடுவைக் காட்டி நீயும் வந்தாயோ? முன்னை இருந்து மகன் எமக்குச் செய்த நோய்க்கு மேலே நீயும் வந்து நிற்றல் வெந்ததொரு புண்ணிலே வேலால் எறிந்த தன்மைத்தாய் இருந்தது என அவனொட புலந்து கூறிநாள்' என்பதிலிருந்து தலை வருந்தும் அச்சம் புலப்படுகிறது.

பரத்தையர் சேரியில் தங்கியிருந்துவிட்டு வீடு திரும்பிய தலைவன் தன்பால் ஊடியிருந்த தலைவியை நோக்கி, 'யான் பரத்தையர் யாரையும் அறியேன்' என்றான். அது கேட்ட தலைவி தலைவன் நட்புக்கொண்டுள்ள பரத்தையைத் தான் கண்டமை கூறிப் பின்னும் புலந்தமை கூறியதாகின்ற,

'..................................................................

***காணுநர் இன்மையின், செத்தனள் பேணி,***
***பொலங்கலம் சுமந்த பூண் தாங்கு இள முலை,***
***வருகமாள, என் உயிர்! எனப் பெரிது உவந்து,***
***கொண்டனள் நின்றோட் கண்டு, நிலைச் செல்லேன்,***
***'மாக இல் குறுமகள்! எவன் பேதுற்றனை?***
***நீயும் தாயை இவற்கு? என, யான் தற்***
***கரைய, வந்து விரைவனென் கவைஇ***
***களவு உடம்படுநரின் கவிழ்ந்து, நிலம் கிளையா,***
***நாணி நின்றோள் நிலை கண்டு, யாம்***

*பேணினன் அல்லெனோ – மகிழ்ந! – வானத்து*
*அணங்கு அருங் கடவுள் அன்னோள் நின்*
*மகன் தாய் ஆதல் புரைவது – ஆங்கு எனவே?*"[38]

(அகநா., பா.எ. 16)

எனும் இப்பாடலில், 'கண்ட யான், நின்ற நிலையினின்றும் மீண்டும் பெயர்ந்தேன் அல்லேன். விரைந்து வந்து அவளைத் தழுவிக் கொண்டேன். 'குற்றமற்ற இளமகளே ஏன் மயங்கினாய்? இவனுக்கு நீயும் யாகுவை' என அவளிடம் கூறினேன். தாம் செய்த களவுக் குற்றத்தை (கண்டு கொண்டார் முன்) உடன்பட்டு நிற்பாரைப்போல நாணி முகங்கவிழ்ந்து நிலத்தைக் கீறி நின்றாள். அவளுடைய நிலையினைக் கண்ட யான் வானத்தில் காண்டற்கரிய அழகுத் தெய்வமாகிய அருந்ததியை ஒப்பாகும் அவள் நின் மகனுக்குத் தாயாதல் ஒக்கும் என எண்ணி யானும் அவளை விரும்பினேன்' என்று கூறுவதிலிருந்து தலைவியின் வருத்தம் அச்சமாகிறது. தலைவி நாண்முகங்கவிழ்ந்து நிற்கும் சூழல் அவள் உள்ளத்துள் நிறைந்து நிற்கும் அச்ச உணர்வின் வெளிப்பாடு என்பதாலேயே அவள் சமூகத்திற்கு அஞ்சுகிறாள்.

அகநானூற்றில் தலைவன் பரத்தையர் சேரிக்குச் சென்று அவரோடு தங்கி, வைகறைப்பொழுது இல்லம் திரும்பினான். அப்போது அவனுடன் ஊடல்கொண்ட தலைவி கூறியதாகின்ற,

"........................................................

*தொடுகலம், குறுக வாரல் – தந்தை*
*கண்கவின் அழித்ததன் தப்பல், தெறுவர,*
*ஒன்றுமொழிக் கோசர்க் கொன்று, முரண்போகிய,*
*கடுந்தேர்த் திதியன் அழுந்தை, கொடுங்குழை*
*அன்னி மிஞிலியின் இயலும்*
*நின்நலத் தகுவியை முயங்கிய மார்பே*

......................................................."[39] (அகநா., பா.எ. 196: 8–13)

எனும் இப்பாடலடிகளில், 'வஞ்சினம் கூறும் இயல்புடைய கோசர்கள் அன்னி மிஞிலியின் தந்தையின் கண்ணைக் களைந்து அதன்

அழகினைக் கெடுத்தனர். அக்குற்றத்திற்காக, வளைந்த குழையணிந்த அன்னி மிஞிலி, விரைந்தோடும் தேரினையுடைய திதியனது அழுந்தூர் என்னுமிடத்து, அச்சம் உண்டாக அவர்களைக் கொன்று, தன் பகை தீர்ந்து மகிழ்ந்திருந்தாள்.

அங்ஙனம் களித்திருந்த மிஞிலி போல, நின் நலத்தை நுகர்வதற்குத் தக்கவளாகிய பரத்தையும், நின்னை அடைந்த களிப்பு மிகுதியால் செருக்குற்றுத் திரிகின்றாள். எனவே, அவளைத் தழுவிய நின் மார்பினை யாம் தீண்டமாட்டோம். எம் அருகே வாராது ஒழிக!' என்று கூறுவதிலிருந்து மிஞிலி என்னும் அரசியினது தொடுந்தன்மையின் உணர்வின் மிகுதியை எடுத்தாள்வதன் காரணமாகி அச்சச் சுவையமைகிறது.

ஊரார் அலர் தூற்றுவதை உணர்த்துகின்றபோது சமூகத்தில் தனக்கு நேரும் நிலை குறித்த அச்சம் உணர்வானது, தலைவன் பரத்தையர் சேரியில் தங்கியிருந்து ஒருநாள் இல்லம் வந்தாள். அதுபோது தலைவி அவனுடன் ஊடல் கொண்டு கூறியதாகின்ற,

"***திரு மருது ஓங்கிய விரி மலர்க் காவில்,***
***நறும் பல் கூந்தற் குறுந் தொடி மடந்தையொடு***
***வதுவை அயர்ந்தனை என்ப, அலரே***"[40] (அகநா., பா.எ. 36: 9–11)

என்னும் இப்பாடலின் வரிகளில், 'இடையறாது பெருகும் புனலையுடைய வையை ஆற்றின் மணல்மிக்க அகன்ற துறையின்கண் அழகிய மருதமரம் உயர்ந்து வளர்ந்து நிற்கின்ற விரிந்த மலர்களையுடைய சோலையில் நறுமணமுடைய பலவாகிய கூந்தலையும் குறுகிய வளையல்களையும் உடைய பரத்தையோடு மணஞ்செய்து கொண்டாய் என்று ஊரார் அலர் தூற்றுவர்' என அச்சப்படுவதை உணர முடிகிறது.

### தலைவி → தோழியிடம் கூற்று

தலைவன் பிரிந்து சென்ற பின்னர், தலைமகள் அவன் சென்ற வழியின் ஏதம் கருதிப் பிரிவாற்றாமையால் உடல் மெலிந்தது கண்டு,

தலைவர் தான் செல்ல வேண்டிய இடத்தை அடைந்து விட்டமையால் கவலை வேண்டாவென அறிவுறுத்திய தோழிக்கு அவள் சொல்லியதாகின்ற,

"***வேங்கை கொய்யுநர் பஞ்சுரம் விளிப்பினும்,***
***ஆர் இடைச் செல்வோர் ஆறு நனி வெரூஉம்***
***காடு இறந்தனரே காதலர்,***
***'நீடுவர் கொல்' என நினையும், என் நெஞ்சே!***"[41] (ஐங்., பா.எ. 311)

எனும் இப்பாடலில், 'வேங்கை மலரைக் கொய்வோர் பஞ்சுரம் என்னும் பண்ணைப் பாடினும், அதைக் கேட்டு வழிப்போக்கர் தாம் செல்லும் வழியைப் பெரிதும் அஞ்சுதற்கு இடனான காட்டு வழியைத் தலைவர் கடந்து சென்றுள்ளார். அவர் தாம் சென்ற இடத்தில் நீடித்துத் தங்கிவிடுவாரோ என நினைத்து என் நெஞ்சம் வருந்துகின்றது' என்று காட்டிடத்தே விலங்குகள், கள்வர்களால் ஏதேனும் தலைவனுக்கு துன்பம் வருவதை நினைத்து அச்சப்படும் மெய்ப்பாடு உணர்வு தோன்றுகிறது.

தலைவன் பொருளீட்டற் பொருட்டுப் பிரிந்து சென்றபோது அவனுடன் சென்று மீண்டோர் திரும்பி வந்தனர். அவர்கள் தாம் சென்ற வழியின் கொடுமைப் பண்புகளைப் பற்றித் தம்முட் பேசிக் கொண்டதைச் செவிமடுத்த தலைவி, அதனைத் தன் தோழிக்குச் சொல்லியதாகின்ற,

"***அவிர்தொடி கொட்ப, கழுது புகவு அயர,***
***கருங்கட் காக்கையொடு கழுகு விசும்பு அகவ,***
***சிறு கண் யானை ஆள் வீழ்த்துத் திரிதரும்***
***நீள் இடை அருஞ்சுரம்' என்ப – நம்***
***தோள் இடை மனிநர் சென்ற ஆறே***"[42] (ஐங்., பா.எ. 314)

என்னும் இப்பாடலில், 'தோழியே! நம்முடைய தோள்கள் மீது வெறுப்புக் கொண்டவராய் நம்மைப் பிரிந்து சென்ற நம் தலைவர் கடந்து சென்ற வழியானது நெடியதும் கடத்தற்கு அறியதுமாகியது என்றும், அந்த நெறியில், ஒளி வீசும் வளைகள் சுழலுமாறு சுற்றித் திரிந்து பேய்கள் தமக்கு விருப்பமான நிணத்தினை உண்ட திளைக்கவும், நிணமுண்ணும் விருப்பம் கொண்ட, கரிய கண்களையுடைய காக்கைகளோடு கழுகுகளும்

விசும்பில் வட்டமிடவும், வழிப்போவாரைக் கொன்று வீழ்த்திய சிறிய கண்களைக் கொண்ட காட்டு யானைகள் திரிதரும் தன்மையுடையது என்றும் அறிந்தோர் கூறுகின்றனர்' என்று கூறுவதிலிருந்து விலங்கினால் வரும் துன்பம் பற்றி 'அச்சம்' மெய்ப்பாடு உணர்த்தப்பட்டுள்ளது. இவ்வாறு தலைவனுக்கு விலங்கு காரணமாகத் தோன்றும் 'அச்சம்' மெய்ப்பாடு கூறப்படுகிறது. இதனை, நீள் இடை அருஞ்சுரம்' எனும் அடிகள் உணர்த்துகின்றது.

தலைவன் தலைவியைப் பிரிந்து சுரநெறியிற் சென்ற பின்னர் அச்சுரத்தின் கொடுமை நினைந்து தலைவி சொல்லிய,

"***முள் அரை இலவந்து ஒள் இணர் வான்பூ***
***முழங்கு அழல் அசைவளி எடுப்ப, வானத்து***
***உருமுப் படு கனலின் இரு நிலத்து உறைக்கும்***
***கவலை அருஞ்சுரம் போயினர்***
***தவல் இல் அரு நோய் தலைத்தந்தோரே***"[43] (ஐங்., பா.எ. 320)

என்னும் இப்பாடலில், 'முட்கள் பொருந்திய அடிமரத்தை உடைய இலவின் வெண்மையான கொத்தான பெரிய பூக்கள், முழங்கும் தீயினை அலைத்து வீசும் காற்று மோதுதலால், வானத்தில் இடியின்கண் பிறக்கும் நெருப்புப் போன்று நிலத்திலே உதிர்வதற்கு இடனான கவர்த்த வழிகளைக் கொண்ட காட்டைக் கடந்து சென்ற நம் காதலர் என்றும் கெடாததும், தாங்குதற்கு அரியதுமான துன்பத்தினை நமக்குத் தந்தார்' என்ற விளக்கத்திலமைந்த கருத்து 'அச்சம்' மெய்ப்பாடு உணர்த்தப்பட்டுள்ளதை உணர்த்துகிறது.

'நெருப்பு' போன்ற தீமையினை உடைய காடு என்பது, தீயினால் உண்டாகும் நெருப்பு போன்று தீங்கு செய்யும் விலங்குகள் வழி துன்பம் வரும் என்பதை உள்ளார்ந்து கூறுவது அச்சத்தை வெளிப்படுத்துகிறது. இக்கருத்திற்கு, 'அருஞ்சுரமாவது, கடந்து செல்வதற்கு அரிய சுரமாகும். அவ்வருமைப்பாட்டை மிகுவிக்கும் ஏதுக்களுள் அதன் கவர்த்த வழிகளையுடைமையும் ஒன்றென்பாள், 'கவலை அருஞ்சுரம்' என்றாள். தலைவன் இல்லாதபொழுது தன்னைப் பற்றியலைக்கும் தனிமைத்

துயரையும், தலைவன் கொடிய பாலை நிலத்தைக் கடக்கும் பொழுது அடையக்கூடிய துன்பங்களைப் பற்றிய இடைவிடாத சிந்தனையால் தோன்றும் துயரையும் உட்கொண்டு, 'தவல்இல் அருநோய் தலைத் தந்தோர் என்றாள்' எனும் உரை விளக்கமும் அச்சம் மெய்ப்பாடு வெளிப்பாடும் நிலைக்களனை உணர்த்துகிறது.

தலைவனுக்கு இன்று துய்க்கும் காதலின்பத்தினும், பிற்காலத்துக்குப் பயன்படும் பொருளே சிறந்தது என்று, தலைவனைக் குறை கூறித் தோழியிடம் தலைவி சொல்லிய,

"***அம்ம வாழி, தோழி! நம் வயின்***
***மெய் உற விரும்பிய கைகவர் முயக்கினும்***
***இனிய மன்ற தாமே***
***பனி இருங் குன்றம் சென்றோர்க்குப் பொருளே***"[44] (ஐங்., பா.எ.337)

என்னும் இப்பாடலில், 'தோழியே! நீ வாழி! இதைக்கேள். தலைவருக்கு நம்மிடம் கிடைக்கும் மெய்கள் இரண்டும் நன்கு பொருந்தும்படி விருப்பத்தோடு விரும்பிய ஒருவரையொருவர் கைகளால் அணைத்துக்கொள்ளும் தழுவலைக் காட்டிலும், பொருட்செல்வம் பெறுதலே தெளிவாக இனிமையுடையது. அதனாற்றான் நினைத்தாலே நெஞ்சு நடுங்குதற்குரிய பெரிய மலைகள் கொண்ட கானக வழியிலே செல்லத் துணிந்தார்' என்பதில் நினைத்துப் பயம் கொள்ளக்கூடிய அச்சம் தோன்றுகிறது. '***இப்பிறவியில் மட்டுமன்று அவர்கள் ஒன்றாக வாழ விரும்பியது, 'யான் இறப்பதற்கு அஞ்சவில்லை, ஆனால் மறு பிறப்பில் தலைவனை மறப்பேனோ என்றுதான் அஞ்சுகிறேன்' என்று கூறும் தலைவியின் கற்பு நிலையை என் என்று புகழ்வது?***"[45] என்று தெ.பொ. மீனாட்சி சுந்தரம்பிள்ளை தனது நற்றினை சொற்பொழிவு தலைமையுரையில் குறிப்பிடுவதிலிருந்து தலைவி கற்பு நிலையால் அஞ்சுவது உண்மையானதாகிறது.

களவில் தலைவியைக் கூடிய தலைமகன், உரிய உறுதிமொழிகளைத் தந்து மணந்து கொண்டு இல்லறம் நிகழ்த்திய பொழுது தன் உறுதிமொழிக்கு மாறாகப் புறத்தொழுக்கம் பூண்டு

பிரிந்தமை கண்டு வருந்திய தலைவி, தன் தோழியிடம் இங்ஙனம் தன் வருத்த மிகுதியை வெளியிடுகின்ற,

"***அள்ளல் ஆடிய புள்ளிக் களவன்***
***முள்ளி வேர் அளைச் செல்லும் ஊரன்***
***நல்ல சொல்லி மணந்து, 'இனி***
***நீயேன்' என்றது எவன்கொல்? — அன்னாய்!***"[46] (ஐங்., பா.எ. 22)

என்னும் இப்பாடலில், 'அன்னையே! சேற்றில் அளைந்த புள்ளிகளையுடைய நண்டு முள்ளிச் செடிகளின் வேர்களுக்கிடையே அமைந்த தன் வளையிலே சென்று வாழ்தற்கு இடனான ஊரையுடைய தலைவன், முன்னர் நாம் மகிழுமாறு பல நல்ல மொழிகளைக் கூறி மணந்துகொண்டு, 'இனி நின்னை எஞ்ஞான்றும் பிரியேன்' என்று கூறிய உறுதிமொழி இப்போது என்னவாயிற்று?' என்று கூறுவதில் தலைவிக்கு அச்சம் தோன்றுகின்றது. பிரியேன் என்று சூளுரைத்தால் தலைவனுக்கு பெரும் துன்பம் தரக்கூடும் என்பதை நினைத்து தலைவி அஞ்சுகிறாள் என்பது பாடல்வழி புலப்படுகிறது. இக்கருத்திற்கு, 'நல்ல கூறி மணந்து என்றாள். களவுக்காலத்தே தலைவன் தன்னுடைய நலன்களைக் பலபடப் பாராட்டியும், உறுதிமொழிகள் பலவற்றைக் கூறியும் தன்னை வயப்படுத்தியதனை உட்கொண்டமையான், அந்நாளில் தலைவன் பாராட்டிய பல்வேறு நலன்களும் இப்பொழுதும் தன்பால் இருப்பனவாக, இப்பொழுது அற்றையெல்லாம் புறக்கணித்தவனாய்ப் பரத்தமை கொண்டு ஒழுகுதல் அவனுக்குத் தகாது என்பது அவள் கருத்தாகும். தன்னை அவன் மணந்த நாளில், 'இனி நின்னை என்றும் பிரியேன்' என்று உறுதி கூறியவன் இன்று அவ்வுறுதிமொழியை மறந்தது எக்காரணம் பற்றியென அறியாதாள். 'எவன்கொல்?' என்று ஐயவாய்பாட்டால் வினவினாள் என்க' என்ற உரை விளக்கமானது தலைவியின் மனதில் உருவாக்கக்கூடிய அச்சம் மெய்ப்பாட்டை உறுதி செய்கிறது.

இதேபோல், தலைவன் ஒருநாள் தலைவியோடு புதுப்புனல் ஆடி மகிழ்ந்தபோது, அவள் தோழியர் முன்னிலையில் 'இனிப்பரத்தையர் தொடர்பினை விரும்பேன்' என உறுதி கூறினான். தான் கூறியதனை

மறந்து மீண்டும் புறத்தொழுக்கம் மேற்கொண்டான். அதனை அறிந்த தலைவி, அவன் உதவியாளர் காதில் விழுமாறு தன் தோழிக்கு கூறுகின்ற,

"***அம்ம வாழி, தோழி! மகிழ்நன்***
***கடன் அன்று என்னும் கொல்லோ? — நம் ஊர்***
***முடம் முதிர் மருதத்துப் பெருந் துறை***
***உடன் ஆடு ஆயமொடு உற்ற சூளே?***"[47] (ஐங்., பா.எ. 31)

என்னும் இப்பாடலில். 'நம்மூர்க்கண் உள்ள மிகவும் வளைந்த மருத மரங்களைக் கொண்ட நீர்த்துறையில், நம்முடன் புனலாடிய தோழியர் அறியத் தான் கூறிய சூளுரைகளை மேற்கொள்வது தனக்குக் கடமையன்று என்பானோ தலைமகன்?' என்பதிலிருந்து சூளுரை பொய்த்தலாகும் என நினைத்து அச்சப்படுகிறாள். இக்கருத்திற்கு, 'பலர் முன் தான் சொன்ன உறுதிமொழியை மறந்து மீண்டும் பரத்தையரோடு உறவு கொண்டமையின், சொன்ன சொல்லைக் காத்தல் சான்றோர் கடனாகவும், தான் அது தனக்குக் கடன் இல்லை என்று நான் நம்பிய தலைவன் இவ்வாறு நிலை தடுமாறுவது அவட்கு வருத்தம் தந்தது என்க. பலரும் அவனைப் பொய்யன் எனத் தூற்றுவரேயென்று கவன்றாளாம். முடமாவது வளைவு. அதன் முதிர்வாவது மிக வளைந்திருத்தல். இதனை, முடமும் முதிர்வும் உடைய மருதம் என விளக்கலும் ஒன்று. 'பெருந்துறை' என்றாள். தானும் தன் தோழியரும் அன்றி ஊரார் பலரும் நீராடும் பெரிய துறை நோக்கி, அஃதாவது ஊரறியச் சூளுரைத்தான்' எனும் உரை விளக்கமும் சூளுரைத்தல் பொய்யானால் என்ன விளைவு ஏற்படும் என்பதனை உணர்ந்து அச்சமுறுகிறாள்.

தலைவன் தலைவியிடம் சூளுரை செய்கிறான். உன்னைப் பிரியேன் என தெய்வத்தின் முன் சூளுரைக்கிறான். சூளுரை மறந்து பரத்தமை ஒழுக்கம் கொள்கிறான். தெய்வக்குற்றம் ஆகித் தலைவனுக்கு மிகப் பெருந்துன்பம் நேரிடும் என்று தலைவி எண்ணுவது அணங்கு நிலைக்கன்வழி அச்சமாகிறது.

பிரிவிடை ஆற்றல் வேண்டும்' என்ற தோழிக்கு, 'யாங்ஙனம் ஆற்றுவேன்' எனத் தனது ஆற்றாமை மிகுதி தோன்றத் தலைமகள் கூறியதாகின்ற,

"***வெந்திறல் கடுவளி பொங்கர்ப் போந்தென***
***நெற்று விளை உழிஞ்சில் வற்றல் ஆர்க்கும்***
***மலையுடை, அருஞ்சுரம்' என்ப – நம்***
***முலையிடை முனிநர் சென்ற ஆறே***"[48] (குறுந்., பா.எ. 39)

என்னும் இப்பாடலில், தோழி நம் முலையிடைக் கிடந்து துயிலும் தூக்கத்தை வெறுத்தவர். பிரிந்து சென்ற வழியானது, வெம்மையான வலிமையுடைய விரைவான காற்று, மரக்கிளைகளில் வீசுவதால், வாகை மரத்தின் நெற்றுக்களின் முற்றிய வற்றல்கள் ஒலித்ததற்கு இடனாக உள்ள மலைகளையுடைய சுரமாகும் என்ற கூறுவர்' என்று தலைவியின் உணர்வானது தலைவனுக்கு உருவாகும் துன்பத்தை நினைந்து அச்சமுறுவதை உணர்த்துகிறது. இக்கருத்திற்கு, 'தலைவன் சென்ற நெறியருமை நினைந்து தலைவி ஆற்றாளாயினாள். பாலை நிலத்தில் காற்று வெம்மையாகவும், வலிமையாகவும், வேகமாகவும் வீசுதல் குறிக்கப்பட்டது. தான் சென்றறியாத பாலை நிலம் ஆதலின், 'அருஞ் சுரங்களையுடையது' எனத் தலைவன் கூறியதைக் கொண்டு கூறினள். இன்பம் துய்த்து ஈண்டு இராமல், கொடிய பாலையில் செலவு மேற்கொண்டு துயருற்று, வருந்துகிறாரே எனக் கலங்கினள். கன்றுகளும் உறைகின்ற பாலை நிலம், கள்வர்கள் அலைத்தலையுடைய பாலைநிலம். வாகை நெற்றுக்கள் ஒலிக்கும் பாலைநிலம் எனத் தலைவன் சென்ற சுரம், கேடு பயப்பதாய் விளங்குவதைத் தலைவி எண்ணி வருந்தினாள். வாகை வெண்ணெற்று ஒலித்தலால், வழிச் செல்வார் கூவியழைத்தாலும், கேட்டற்கு அரிய சுரம் என்றும், அவ்வொலி கேட்டு ஆறலை கள்வர் ஏதம் புரிவர் என்றும் உணர்த்தப்பட்டது' என்ற விளக்கமும் அச்சம் மெய்ப்பாடு தோன்றுவதற்குரிய காரணமாவதை உறுதிப்படுத்துகிறது. "***தலைவன் தலைவியை உடன்கொண்டு செல்வது பாலை நிலத்து வழியாதலாலும், அவ்விருவரும் தத்தம் மனையை விட்டுப் பிரிந்து செல்வதாலும், அருஞ்சுரத்தே இருவரும் கூடித் தனிச் செல்வதால் ஆறலைக்கள்வர்,***

***கொடிய விலங்குகள் வருமென அஞ்சி விரைந்து செல்வர் ஆகலான் ஆங்குப் புணர்ச்சி நிகழ்த்தற்கு இடமில்லை***"[49] என்று தி. சங்குப்புலவர் கூறுவதிலிருந்து விலங்கு, கள்வர் வழி அஞ்சும் சூழல் உறுதியாகிறது.

இடைச்சுரத்து ஏற்படக்கூடிய துயர நிகழ்வை (விலங்கு) தோழிக்கு எடுத்துரைக்கும்போது அச்சம் உணர்வு உருவாகிறது.

பிரிவின் கண் ஆற்றாளாகிய தலைமகள் தோழிக்குச் சொல்லியதாகின்ற,

"***அம்மவாழி, தோழி – யாவதும்***
***தவறு எனின் தவறோ இல்வே – வெஞ்சுரத்து***
***உலந்த வம்பலர் உவல்இடு பதுக்கை***
***நெடுதல் யானைக்கு இடுநிழல் ஆகும்***
***அரிய கானம் சென்றோர்க்கு***
***எளிய ஆகிய தடமென் தோளே***"[50] (குறுந்., பா.எ. 77)

என்னும் இப்பாடலில், 'தோழி! நீ வாழ்க! ஒன்று கூறுவேன். கேட்பாயாக. கொடிய பாலை நிலத்து அருவழியில் இறந்த வழிப்போக்கருடைய உடல்களை மறைத்துத் தழையால் மூடப்பட்டுள்ள கற்குவியலானது, உயர்ந்த நல்ல யானைக்கு, அமைக்கப்பட்ட நிழலாகப் பயன்படும். இத்தகைய கடத்தற்கரிய பாலை நிலத்தில் என்னைப் பிரிந்து சென்ற தலைவர் திறத்து மெலிந்தனவாகிய என்னுடைய பெரிய மெல்லிய தோள்கள் தவறு உடையன என்று நீ கூறினால் சிறிதும் தவறு இல்லாதனவேயாம்' என்பதிலிருந்தும், வெயிலின் கொடுமை, ஆறலைக்கள்வரின் அச்சம், பிணக் குவியலின் தோற்றம், துணையுடன் வதியும் யானையின் நிலை, தங்குவதற்கு வேறு நிழலின்மை ஆகிய அருஞ்சுரத்து ஏதங்களைத் தலைவி நினைத்தனள்' என்ற விளக்கமும் தலைவிக்கு உருவாகும் அச்ச உணர்வைப் புலப்படுத்துகிறது.

பொருள்வயின் பிரிந்த தலைமகனை நினைந்த தலைமகள் தோழிக்குச் சொல்லியதாகின்ற,

"***கானயானை தோல் நயந்து உண்ட***
***பொரிதாள் ஓமை வளிபொரு நெடுஞ்சினை***
***அலங்கல் உலவை ஏறி, ஒய்யெனப்***
***புலம்புதரு குரல புறவுப்பெடை பயிரும்***
***அத்தம் நண்ணிய அம்குடிச் சீறூர்ச்***
***சேர்ந்தனர் கொல்லோதாமே – யாம் தமக்கு***
***ஒல்லேம் என்ற தப்பற்குச்***
***சொல்லாது ஏகல் வல்லுவோரே***"[51] (குறுந்., பா.எ. 79)

எனும் இப்பாடலில், 'யாம் தலைவன் பிரிவினைத் தாங்கப் போறேம் என்று கூறிய தவற்றால், அவர் நம்மிடம் சொல்லாமல் நீங்குதலில் உறுதியுடையவராய் விளங்கினார். பொரிந்த அடிமரத்தையுடைய ஓமை மரத்தின் பட்டைகளைக் காட்டு யானைகள் விரும்பித் தின்னும். காற்று மோதுகின்ற அம்மரத்தின் நெடிய கிளைகளில் உள்ள அசைகின்ற வற்றிய கொம்பில் ஏறி, ஒய்யென, தனிமையையும், வருத்தத்தையும் வெளிப்படுத்தும் குரலை உடையனவாய், ஆண் புறாக்கள், பெண் புறாக்களை அழைக்கும். இத்தகைய பாலை நிலத்தில் அமைந்த அழகிய குடிகளையுடைய சிற்றூரில் அவர் தங்கினாரோ' என்ற விளக்கதின்வழி விலங்குகளினால் உண்டாகும் அச்சம் உணரப்படுகிறது.

தெய்வத்தின்வழி உருவாகும் அச்சம் மெய்ப்பாடும் கூறப்படுகிறது. பிரிவிடை ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்குக் கிழத்தி உரைத்ததாக வருகின்ற,

"***விடர்முகை அடுக்கத்து விறல்கெழு சூலிக்குக்***
***கடனும் பூணாம், கைந்நூல் யாவாம்***
***புள்ளும் ஓராம், விரிச்சியும் நில்லாம்***
***உள்ளலும் உள்ளாம் அன்றே – தோழி!***
***உயிர்க்கு உயிர் அன்னர் ஆகலின், தம் இன்று***
***இமைப்புவரை அமையா நம்வயின்***
***மறந்துஆண்டு அமைதல் வல்லியோர் மாட்டே***"[52] (குறுந்.,பா.எ. 218)

என்னும் இப்பாடலில், 'தோழி, நம் தலைவர், எம் உயிர்க்கு உயிர் போன்றவர் ஆதலின், தம்மையின்றி, இமைப்பொழுதளவேனும், நம்மால் பிரிந்து இருத்தல் இயலாது. இவ்வியல்புடைய நம்மை மறந்து, அவர் ஆண்டுத் தங்குதலில் வலியராக உள்ளார். அவர் பொருட்டு, பிளவுகளையும், குகைகளையும் உடைய மலைப்பக்கத்தில் உள்ள வெற்றி பொருந்திய கொற்றவைக்குப் பலிக்கடன் நேர்ந்து கொள்ளோம். அதற்கு நோன்பு மேற்கொண்டு, கையில் காப்பாக, நூல் யாத்தலையும் செய்யோம். அதுபற்றிப் புள்ளின் நிமித்தங்களும் பார்க்க மாட்டோம். நற்சொல் கேட்பதற்கும் சென்று நில்லோம். இவை பற்றி நிகழும் விளைவுகளையும் நினைத்தல் செய்யோம்' என்பதிலிருந்தும், 'கடன் நேர்ந்து கொள்ளுதல், காப்பு நாண் அணிதல், நிமித்தம் பார்த்தல், விரிச்சிகேட்டல், இவற்றின் பயன்களை ஆராய்தல் ஆகியவை தலைவன் உயிரைத் தம் உயிரின் வேறாகக் கருதி, அவன் குறித்த பருவம் தப்பிய பின்னரும் உயிர் வாழும் வேட்கையுடையார் செய்யும் செயல்களாகத் தலைவி குறித்தனள். தான் வேறு, அவன் வேறு அல்லர் என மந்திர விதியால் கூட்டப்பட்டமையின் தலைவியின் உள்ளத்தில், 'தெய்வம் அஞ்சுதல்' என்ற ஓர் உணர்வு தோன்றும்' என்ற விளக்கத்திலிருந்தும் அச்சம் மெய்பாடு தோன்றுகிற சூழல் உணர்த்தப்படுகிறது.

பிரிவின்வழி கலங்கும் சூழலில் பிறர் தூற்றும் பழிச் சொல்லுக்கு அஞ்சக்கூடிய மெய்ப்பாடும் பாடல்களில் அமைகிறது. வன்புறை எதிரொழிந்து சொல்லியதாகின்ற,

"***மான்அடி அன்ன கவட்டிலை அடுமின்***
***தார்மணி அன்ன ஒண்பூக் கொழுதி,***
***ஒண்நொடி மகளிர் வண்டல் அயரும்***
***புள்இமிழ் பெருங்கடற் சேர்ப்பனை***
***உள்ளேன் – தோழி! – படீஇயர், என்கண்ணே***"[53]

(குறுந்., பா.எ. 243)

என்னும் இப்பாடலில், 'தோழி, மானின் குளம்புப்பகுதி பிளந்து காணப்படுவதுபோல, அரும்பின் இலைகள் பிளந்து காணப்படும்.

குதிரையின் தார்க்குச்சியின் நுனியில் கட்டப்பட்டுள்ள சிறிய மணியைப் போல அவற்றின் ஒள்ளிய மலர்கள் விளங்கும். அம்மலர்களை மலரச் செய்து, ஒள்ளிய வளையல்களை அணிந்த மகளிர், தாம் இயற்றிய வண்ணடல் பாவைக்குச் சூட்டி விளையாடுவர். பறவைகள் ஒலிக்கின்ற, இத்தகைய கடற்றுறைக்குத் தலைவனை யான் நினையேன். என்னுடைய கண், துயிலுவதாகுக' என்றும், 'தலைவன் பிரிவினால் தலைவி, துயிலின்றி, அவன் நினைவாகவே இருந்தனள். 'கண்கள் துயில் பொருந்துக' என்ற தொடர், அவரை யான் மறப்பேனாகுக' என்று பொருள்படும். மறத்தல் இயலாதாகலின், துயிலுதலும் இயலாதாயிற்று. துயிலாத கண்ணைத் துயிலச் செய்து, அவன் நினைவு உண்டாகாமல் தடுத்தலும் தன்னால் இயலவில்லையே எனத் தலைவி வருந்தினள்' என்பதிலிருந்தும் தலைவிக்கு உண்டாகும் அச்சம் உணர்த்தப்படுகிறது. மேலும், பிரிவிடை வற்புறுத்தும் தோழிக்குத் தலைமகள் உரைகின்ற,

"*.........................................................*

***கொடியர் வாழி – தோழி! – கடுவன்***

***ஊழுறு தீம்கனி உதிப்ப, கீழ் இருந்து,***

***ஓர்ப்பன ஓர்ப்பன உண்ணும்***

***பார்ப்புடை மந்திய மலை இறந்தோரே***"[54] (குறுந்., பா.எ. 278: 4–7)

என்னும் பாடலில், 'தோழி உறுதலையுடைய காற்று, தடவிய, அழகிய தளிர்களையுடைய மாமரத்தின் இளந்தளிரைக் கண்டாற்போன்ற மென்மையான சிறிய அடிகளையுடைய, சிறிய, பசிய குழந்தையையும், எம்மையும் நினையாதவராய், ஆண் குரங்கானது, முதிர்ந்த இனிய பழங்களை மரத்தின் மேல் ஏறி உதிர்ப்ப, அம்மரத்தின் கீழேயிருந்து அவற்றை ஆராய்ந்து உண்ணுகின்ற குட்டிகளையுடைய பெண் குரங்குகளையுடைய மலைகளைக் கடந்து சென்றோர் கொடுமையுடையோராவார் அவர் வாழியா' என்ற விளக்கத்தின்வழி தலைவியின் அச்சம் உணர முடிகிறது.

தலைமகன் பொருள்வயிற் பிரிந்தவழி, 'ஆற்றாள் எனக் கவன்ற தோழிக்கு, அவர் பிரிய ஆற்றேனாயினேனல்லேன், அவர் போன காத்துத் தன்மை நினைந்து வேறுபட்டேன்' என்று கிழத்தி சொல்லியதை,

*“உள்ளது சிதைப்போர் உளர்எனப் படாஅர்;*
*இல்லோர் வாழ்க்கை இரவினும் இளிவு எனச்*
*சொல்லிய வன்மை தெளியக் காட்டிச்*
*சென்றனர் வாழி – தோழி! என்றும்*
*கூற்றத் தன்ன கொலைவேல் மறவர்*
*ஆற்றுஇருந்து அல்கி வழங்குநர்ச் செகுந்த*
*படுமுடைப் பருந்து பார்த்திருக்கும்*
*நெடுமூதிடைய நீர்இல் ஆறே”*[55] (குறுந்., பா.எ. 283: 4–8)

என்னும் இப்பாடலில், ‘தாம் முயன்று தேடாது, தம் தாயத்தாரால் தேடி வைக்கப்பெற்றுத் தம்பால் உளதாகிய செல்வத்தை அழிப்பவர், உயிருள்ளவராக உலகோரால் எண்ணப்படார் (இறந்தவராகவே எண்ணப்படுவர்). அவ்வுள்ளது சிதைத்த பின், இல்லோராய் உயிர் வாழ்தல், இயல்பாகவே வறியராயினார். இரந்து உயிர் வாழ்வதை விட இளிவரவு உடையதாகும். இவ்வாறு, தாம் உரைத்த மன உறுதியை, நாம் தெளிந்துகொள்ளும் வண்ணம் சுட்டிக்காட்டித் தலைவர் சென்றார். கூற்றத்தை ஒத்த, கொல்லுதலில் தப்பாத வேற்படையையுடைய மறவர், வழிச் செல்வார் வரும் வழியில் தங்கியிருந்து, பொழுதுபட்ட வழி, அவர்களைக் கொல்லுவர். அவ்வாறு இறந்துபட்ட அவர்களுடைய உடல்களை உண்பதற்காகப் பருந்துகள், அவை மிக்க நாற்றம் உண்டாகும் வரை காத்திருக்கும். இத்தகைய, நெடிய, பழமையான இடையீடுகள் பலவற்றைக் கொண்ட நீரில்லாத வழியில் அவர் சென்றார். அவர் ஏதம் இன்றி, எந்நாளும் வாழ்வாராக’ என்ற விளக்கத்தில் தலைவி அச்சப்படக் கூடிய உணர்வு வெளிப்படுகிறது.

தலைவன் பொருள் தேடிச் செல்லுதல் பாராட்டுக்குரியதாயினும், அவன் சென்ற வழித்தன்மை நினைத்து உள்மனம் அஞ்சி தலைவி வருந்துவதைக் காணலாம்.

பிரிவிடை மெலிந்த கிழத்தி வற்புறுத்தும் தோழிக்கு, ‘யான் ஆற்றுவல்’ என்பது படச் சொல்லியதாகின்ற,

"***கான இருப்பை வேனில் வெண்பூ***
***வளி பொரு நெடுஞ்சினை உளுற்றலின், ஆர்கழல்பு***
***களிறு வழங்கு சிறுநெறி புதையத் தாஅம்***
***பிறங்குமலை அருஞ்சுரம் இறந்தவர்ப் படர்ந்து***
***பயில் இருள் நடுநாள் துயில் அரிது ஆகி,***
***தெள்நீர் நிகர்மலர் புரையும்***
***நல்மலர் மழைக்கணிற்கு எளியவால், பனியே***"[56] (குறுந்.,பா.எ. 329)

என்னும் இப்பாடலில், 'காட்டில் வளர்ந்த இருப்பை மரத்தினது, வேனிற் காலத்தில் வரும் வெள்ளிய பூக்கள், நெடிய கிளைகளைக் காற்று மோதும் முயற்சியால், ஆர்க்குக் கழன்று, களிறுகள் செல்லும் சிறிய வழி மறையும் படிப் பரவும், இத்தகைய ஓங்கிய மலைகளையடுத்த கடத்தற்கரிய பாலை நிலத்தைக் கடந்து சென்ற தலைவரை நினைந்து, அவருடன் உள்ளபோது துயில் பயின்ற நடுநாள் இரவில், உறங்குதல் இல்லையாகித் தெளிந்த நீரில் உள்ள, ஒளி பொருந்திய குவளை மலரைப் போன்ற நல்ல மலர்ந்த குளிர்ச்சியையுடைய என் கண்களுக்கு நீர்த்துளிகள் எளிதில் உண்டாயின' என்பதிலிருந்து தலைவியின் அச்சம் உணர்வு புலப்படுகிறது.

பருவகாலம் தொடங்கியும் வராது கண்ட தலைவி தோழியும் கூறி அச்சப்படுவதை,

'***கடும்புனல் தொடுத்த நடுங்கு அஞர் அள்ளல்,***
***கவிர் இதழ் அன்ன தூவிச் செவ்வாய்,***
***இரைதேர் நாரைக்கு எவ்வம் ஆகத்***
***தூஉம் துவலைத் துயர்கூர் வாடையும்***
***வாரார் போல்வர், நம் காதலர்;***
***வாழேன் போல்வல் – தோழி – யானே***"[57] (குறுந்., பா.எ. 103)

என்னும் பாடல், 'தோழி விரைவாக ஓடிவரும் நீரினால் குவிக்கப்பட்ட கால் நடுங்குவதற்கு ஏதுவாகிய துன்பத்தைத் தருவது சேற்று நிலமாகும். அதில் நின்று, நாரை ஒன்று இரை தேடிக் கொண்டிருக்கும். அது முள்முருக்க மலரின் இதழைப் போன்ற மெல்லிய சிறகையும், செம்மை நிறமுடைய அலகையும் உடையது. அந்நாரைக்குத் துன்பம் உண்டாகும்படி

தூவுகின்ற நீர்த்துளிகளையுடைய, பிரிந்தார் துயர் மிகுதற்குக் காரணமாகிய வாடைக் காற்றையுடைய கூதிர் காலத்திலும், பிரிந்து சென்ற நம்முடைய காதலர் வருவாரல்லர், யான் வாழ்வேனல்லேன்' என்றாள். தலைவி, தலைவன் வராததை உணர்ந்து அச்சப்படுவதைக் காணலாம்.

பருவம் கண்டு வற்புறுத்தும் தோழிக்குக் கிழத்தி உரைத்ததாகின்ற,

***"இலைஇல் அம்சினை இனவண்டு ஆர்ப்ப,***
***முலைஏர் மென்முகை, அவிழ்ந்த கோங்கின்***
***தலை அலர் வந்தன, வாரா – தோழி!***
***துயில்இன் கங்குல் துயில்அவர் மறந்தனர்;***
***பயில்நறுங் கதுப்பின் பாயலும் உள்ளார்***
***செய் பொருள் தரல்நசைஇச் சென்றோர்***
***எய்தினரால்' என வரூஉம் தூதே"***[58] (குறுந்., பா.எ. 254)

என்னும் பாடலில், 'தோழி, பழுத்து உதிர்தலால், இலை இல்லாத, கோங்க மரத்தின் அழகிய கிளையின்கண், வண்டின் திரள் ஆரவாரிக்கும்படி முலையின் அழகு போன்ற அழகுடைய மென்மையான அரும்புகள், இதழ் விரிந்து, முதற்பூக்கள் தோன்றின. தாம் ஈட்ட வேண்டிய பொருளைத் தேடித் தருதலை விரும்பிச் சென்றவர், மீண்டும் வந்தனர் என்று அறிவித்தற்கு வரும் தூதுரைகள் வந்தில. அவர், யான் துய்த்ததற்குக் காரணமாக இராக்காலத்தில் உடன் துயிலும் இனிய துயிலை மறந்தனர். அவ்வாறு துயிலுவதற்கு இடனாகிய, தாம் பழகிய நறிய என் கூந்தலாகிய அன்னையும் நினைந்திலர்' என தலைவியின் கூற்றிலிருந்து அச்சம் உணர்வு தோன்றுகிறது. தலைவி தோழியிடம் கூறுகின்ற சூழலில் பிரிந்து சென்ற தலைவனின் நிலைப்பாட்டை நினைத்து அவனுக்கு துன்பம் நேரிடக்கூடுதம். அவ்வாறு நேரிட்டால் அதன் துயர் தாங்காது போய்விடக்கூடும் என்ற கருத்தை நுட்பமாகக் கூறுகிறாள். இதன்வழி தலைவிக்கு அச்சம் தோன்றுகிறது.

தலைவன் பொருள் தேடச் செலவு மேற்கொள்ளும்போது தன்னிடம் கூறிச் சென்ற செய்தியும், பருவம் கண்டு உரிய நேரத்தில் வராது

நினைத்தும் நாட்டிடையே நிகழக்கூடிய கள்வர் செயல், விலங்குகளின் கொடூரம் போன்றவற்றினால் தலைவனுக்கு உண்டாகும் கொடுந்துன்பம் நினைத்து அச்சமுறுகிறார். அவை அச்சம் மெய்ப்பாட்டு நிலைக்களன்கள் வழி அச்சம் விளக்குகின்ற சூழலை உணர முடிகிறது.

தலைவி தோழியிடம் கூற்று நிகழ்த்தும்போது தலைவனின் சூளுரை தலைவன் செல்லும் வழியில் விலங்குகளால் வரும் துன்பம், ஆரலைக்கள்வர் சூழலை நினைத்து அச்சப்படுவது உணரமுடிகிறது.

இரந்தோர்க்கு ஈதல் வேண்டும் முதலான காரணத்தால் பொருள்வயிற் பிரிந்த தலைமகன், தான் வருவதாகக் குறித்த பருவம் வந்தும் வராதது கண்ட தலைவி, 'போது சூடிட வருவேன் என்று சூளுறையிட்டுப் பிரிந்த தலைவர், கார் காலத்தையுணர்த்தும் இடிமுழக்கம் கேட்கவில்லையோ' என வருந்திக் கூறிய,

"*.............................................................*

***எஞ்சா வஞ்சினம் நெஞ்சு உணக் கூறி,***

***மை சூழ் வெற்பின் மலை பல இறந்து,***

***செய் பொருட்கு அகன்ற செயிர் தீர் காதலர்***

***கேளார் கொல்லோ – தோழி! – தோள***

***இலங்கு வளை நெகிழ்த்த கலங்கு அஞர் எள்ளி***

***நகுவது போல, மின்னி***

***ஆர்ப்பது போலும் இக் கார்ப் பெயற் குரலே***"[59] (நற்., பா.எ.214:6–12)

இப்பாடலில், 'தோழி தம் இல்லத்தில் செயலற்றுச் சோம்பியிருப்பவர்க்கு, இம்மைக்குரிய புகழும், இம்மை மறுமைக்குரிய இன்பமும் மறுமையிலும் இன்புறச் செய்யும் கொடைமையும் ஆகிய மூன்றும் அரிதாகவும் கைகூடுவதில்லை, இதனைக் கருதிப் பொருள் செயல் வினை காரணமாகப் பிரிந்து வேறுபடும் கொள்கையரானார். இத்தகு கலங்கும் துன்பத்தைக் கண்டு இகழ்ந்த நகைப்பதுபோல மின்னி ஆரவாரம் செய்வது போல மழை பெய்யும். பெய்யும் இந்த மழை மேகத்தின் இடி

முழக்கத்தை நம் காதலர் இன்னும் கேட்கவில்லையோ' என்று கூறுவதிலிருந்து தெய்வ அச்சம் புலப்படுகிறது.

சூளுரைக்கும்போது தெய்வத்தின் முன்னர் தலைவன் சூளுரைத்தான். தெய்வத்தினால் பெரும் துன்பம் வரக்கூடும் என நினைத்து அச்சப்படும் உணர்வு தலைவிக்கு உருவாகிறது.

தலைவன் பொருள் காரணமாக் பிரிய, அதனால் வருந்திய தலைவியை பிரிவை ஆறறியிரு எனத்தோழி வற்புறுத்தினள். அதற்கு விடை கூறுவாளாய், 'அவருடைய அன்பு காரணமாக உயிர் திரித்திருந்தோம். தற்போது அஃதுணராது பிரிந்தனரே; இதவே ஆடவர் இயற்கை என்பர்' என்று பிரிவிடை ஆற்றாது வருந்திக் கூறியதாகின்ற,

'***மரம் சா மருந்தும் கொள்ளார், மாந்தர்;***
***உரம் சாச் செய்யார், உயர்தவம்; வளம் கெடப்***
***பொன்னும் கொள்ளார், மன்னர் – நன்னுதல்!***
***நாம் தம் உண்மையின் உளமே; அதனால்***
***தாம் செய்பொருள் அளவு அறியார்; தாம் கசிந்து,***
***என்றூழ் நிறுப்ப, நீள் இடை ஒழிய,***
***சென்றோர்மன்ற நம் காதலர்; என்றும்***
***இன்ன நிலைமைத்து என்ப;***
***என்னோரும் அறிப, இவ் உலகத்தானே***'[60] (நற்., பா.எ. 266)

என்னும் இப்பாடலில், 'நல்ல நெற்றியை யுடையவளே! மாந்தர் மருந்து தந்துதவும் மரத்தினின்று மருந்து எடுக்கும் போது, அது பட்டுப்போகும்படி முழுவதும் கொள்ளார். தவம் செய்யும் மாந்தர் தம் வலிமை முற்றும் கெடுமளவு உயர்ந்த தவம் புரியார். மன்னரும் தன் கீழ் வாழும் குடிமக்களின் வளமையெல்லாம் நீங்குமாறு அவரிடம் வரிவாங்குபவர் அல்லர். இவற்றையெல்லாம் தலைவர் உணர்வர். ஆயினும் தாமே வருத்தம் கொள்ளுமாறு வெயில் நிலை பெற்ற நீண்ட பாலை வழியில் எம்மைத் தனித்து விட்டுப் பிரிந்து அகன்றனர். நாம் அவரைப் பிரியாதிருப்பின் உயிருடன் வாழ்வோம்; பொருள் காரணமாகப் பிரியின்

இறந்து படுவோம் என்பதனைத் திண்ணமாக அறிந்தவராகார். சான்றோர் ஆடவரின் இயல்பு இஃதே என்பர். இதனை உலகத்தினர் யாவரும் அறிவர்' என்ற அச்ச உணர்வானது தலைவிக்கு வெளிப்படுவதைக் காணலாம்.

தலைவன் பிரியக் கருதியது அறிந்த தோழி தலைவியிடத்துக் கூறலும், தலைவி அவர் இல்லாமல் அமையாத என்னை வருந்தும்படி விட்டுப் பிரிகின்ற அன்னதொரு குணக்குறைபாடு இல்லாதவர் எனத் தலைவனைப் புகழ்ந்து கூறுவதாகின்ற,

"..........................................................

***நீர் இன்று அமையா உலகம் போலத்***

***தம் இன்று அமையா நம் நயந்தருளி***

***நறு நுதல் பசத்தல் அஞ்சிச்***

***சிறுமை உறுபவோ? செய்பு அறியலரே!***"[61] (நற்., பா.எ. 1: 6–10)

என்னும் இப்பாடலில், 'தோழி! நம் காதலர் தவறாத வாய்மையுடையவர். நெடிதாகத் தோன்றும் இனிமையுடையவர், எப்பொழுதும் என் தோள்களைப் பிரிதல் என்பதை அறியாதவர், அத்தகைய சிறந்தவருடைய நட்பு, தேனீ தாமரையின் குளிர்ந்த மகரந்தங்களை ஊதி, உயர்ந்து நிற்கும் சந்தன மரத்தின் தாதினையும் ஊதி, சந்தனமரத்தின் உச்சியில் கொண்டு சென்று வைத்த தேனைப் போல உறுதியாக உயர்ந்தது. தண்ணீர் இல்லாமல் இவ்வுலகம் அமையாது. அதுபோல அவர் இல்லாமல் நாம் இல்லை. நம்மீது மிகவும் விருப்பம் கொண்டவர் அவர். அவர் பிரிந்தால் நம் நெற்றியில் பசலை படரும். அவ்வாறு பசலை படர்வதற்கு அஞ்சித் தடுமாற்றம் அடைவாரோ? அடையமாட்டார்' என்பதிலிருந்து தலைவியின் அச்ச உணர்வு புலனாகிறது.

தலைவன் பிரிவினால் தனக்கு பசலை நோய் தோன்றும். இதனையறிந்த சமூகத்தினர் தலைவன் வராது போய்விட்டான் என பழி தூற்றக்கூடும். இப்பழிச்சொல் ஏற்க முடியாத மன நிலையானதால்

தலைவிக்கு அச்சம் ஏற்படுகிறது. இதனை, 'நறுநுதல் வசத்தல் அஞ்சி' என்னும் அடி உணர்த்துகிறது.

பொருள்வயிற்பிரிவு காரணமாகத் தலைவன் சென்றால் பிரிவு தாங்க இயலாது நிலையையும் உணர்த்துகின்றபோது அச்சம் வெளிப்படுகிறது. தலைமகனது குறிப்பினைக் கண்டு, பிரிய இருக்கின்றான் என ஐயம் கொண்டனள் தலைமகள். ஐயுற்றுச் செல்கின்ற அக்காலத்துத் தலைவன் கனவில் அரற்றினமை கேட்டனள் தலைவி, பொருள்வயிற் பிரிவன் எனத் துணிந்து ஆற்றாதவளாய்த் தோழியிடத்துச் சொல்லியதாக வருகின்ற,

"..............................................................................

***தாம் இடை கொண்டது அதுவாயின், தம் இன்றி***
***யாம் உயிர் வாழும் மதுகை இலேமாயின்,***
***'தொய்யில் துறந்தார் அவர்' என, தம்வயின்***
***நொய்யார் நுவலும் பழிநிற்ப, தம்மொடு***
***போயின்று, சொல், என் உயிர்?***"[62] (கலித்., பா.எ. 24: 13–17)

என்னும் இப்பாடலில், 'மாசில்லாத வண்மையை உடைய படுக்கையில் என்னோடு புணர்ந்த புணர்ச்சிக் காலத்தே என் தோளிலே சாய்ந்தவாறே உறங்கியவர் கனாக் கண்டு பிதற்றினார். 'குத்தும் கொம்பினை உடைய யானை நீர் வேட்கையினாலே விளங்குகின்ற பேய்த்தேரினை நோக்கி ஓடும் நெடிய மலையில் வெம்மையுடைய கானலைக் கடந்து சென்று, நடுவு நிலைமையோடு முயற்சி செய்து, யான் பொருள் தேடி வரும் அளவும், ஆராய்ந்த கோற்றொழினை உடைய செறிந்த தொடியணிந்த முன்கையினை உடையாள் துன்புற்று வாடுதல் கொள்ளாளாய், மனையறங்காத்துப் பேணி நிற்க வல்லமை உடையவளோ' என்று கூறினார். 'ஆராய்ந்தணிந்த அணிகளை உடையதாய், அவர் உள்ளத்திலே கொண்டது பொருள்வயிற் பிரிவாயின், யானும் அவரைப் பிரிந்து உயிர் வாழும் வலிமை இல்லாதவளாதலின், இனி, 'அவன் மார்பின் தொய்யிலை நீங்காதவர், இப்போது துறந்தார்' என்று நொய்ய மகளிர் கூறும் பழி தம்மிடத்தே நிற்க, என் உயிரும் அவரோடு போய்விடும் என்று

அவரிடத்தே சென்று சொல்லுவாயாக என்றாள் தலைவி' என வரும் விளக்கத்திலிருந்து தலைவி அச்சமுறுவது உணர முடிகிறது.

இவற்றில், என் உயிரும் அவரோடு போய்விடும் என்று பிரிவு தாங்க முடியாத தலைவியின் கூற்று மிகுந்த அச்சம் வெளிப்படுவதை உணர்த்துகிறது. குத்தும் கொம்பினை உடைய யானை, நீர் வேட்கையினையே செல்லும் காடு தலைவனுக்குக் கெடிய துன்பம் தரும் என்பதை நினைத்து அஞ்சுவது தலைவியின் ஆழ்மனதில் உண்டாகும் அச்சத்தை வெளிப்படுத்துகிறது.

தலைவன், பரத்தையரிடம் சென்று வந்து பொய்சூள் அதாவது பொய்யாகச் சபதம் செய்பவன். தலைவன் நாள்தோறும் புதுப்புது பரத்தையை வதுவை அயர்ந்து வரும் இயல்பினன். அவன் அங்ஙனம் வதுவை அயர்ந்து வருதல் தனக்குப் பிடிக்காத நிலையில் தலைவி ஊடல் கொள்ளாது ஏற்றுக்கொள்கின்றாளே எனத் தோழி தலைவியிடம் கேட்டதற்குத் தலைவி அதற்குக் காரணம் கூறுகின்ற,

"...............................................................

***வாடிய பூவொடு வாரல், எம்மனை?' என***

***ஊடி இருப்பேனாயின், நீடாது***

***அச்சு ஆறாக உணரிப வருபவன்***

***பொய்ச்சூள் அஞ்சிப் புலவேன் ஆருவல்***"[63] (கலித்., பா.எ. 75:18–21)

என்னும் பாடல் வரிகளில், 'பரத்தையரைத் தழுவுவதலால் வாடிய பூவோடே எம் மனையிடத்து வாராதே என்று கூறி யான் ஊடி இருப்பேனாயின், அதுவும் நீடியாமல், என் ஊடலை உணர்ந்து வரும் அவன், நான் கொள்ளும் அச்சமே ஊடல் தீர்க்கும் வழியாகக் கொண்டு, தன் செயலை மறுத்துப் பொய்ச் சத்தியம் செய்வானே என்று அஞ்சிப் புலவேனாய் இருப்பேன் என்றனள்' என்பது தலைவி அஞ்சுகிற உணர்வைப் புலப்படுத்துகிறது.

பொய்ச்சூளுரையால் தெய்வத்தின் குற்றத்திற்கு ஆளாகக்கூடும் என்பதை நினைத்து தலைவி அஞ்சுகிறாள். இதில் இறை அச்சம் உணர்த்தப்படுகிறது.

'கார் காலத் தொடக்கத்தே வருவேன்' எனக் கூறித் தலைவியைப் பிரிந்து பொருள் ஈட்டச் சென்ற தலைவன், அப்பருவத் தொடக்கத்தே வாராதது கண்ட தலைவி ஆற்றாது வருந்தினாள். அது கண்ட தோழி, தலைவன் வருமளவும் ஆற்றியிருக்க வேண்டும் எனக் கூறினாள். அப்போது தலைவி தன் ஆற்றாமைக்குக் காரணம் கூறியதாகின்ற,

"***கள்ளி அம் காட்ட புள்ளி அம் பொறிக் கலை***
***வறன் உறல் அம் கோடு உதிர, வலம் கடந்து,***
***புலவுப் புலி துறந்த கலவுக் கழி கடு முடை,***
***இரவுக் குறும்பு அலற நூறி, நிரை பகுத்து,***
***இருங் கல் முடுக்கர்த் திற்றி கொண்டும்***
***கொலை வில் ஆடவர் போல, பலவுடன்***
***........................................................***"[64] (அகநா., பா.எ. 97: 1–6)

என்னும் இப்பாடலில், 'கள்ளிகள் நிறைந்த காட்டினிடத்தே புள்ளிப் பொறி பொருந்திய கலைமானை, வறண்ட அழகிய அதன் கொம்புகள் சிதைந்து உதிருமாறு, புலால் விருப்பமுடைய புலி அதனைத் துரத்திப் பற்றிக் கொன்று தின்னும்; அப்புலி தின்று கைவிட்டுப்போன மூட்டுவாய் கழிந்த கடிய முடைநாற்றத்தினையுடைய தசையைத் தின்னுதற்குப் பெரிய தலைகளையுடைய எருவைகளோடு பருந்துகள் பலவும் ஒருங்கே வந்து சூழ்ந்திருக்கும். அக்காட்சி, இரவு நேரத்தில் காட்டரண்களில் உள்ளோர் அலறுமாறு அவர்களைக் கொன்று, தாம் கைப்பற்றிய ஆனிரைகளைத் தமக்குள் அறுத்துப் பகுத்துக்கொண்டு, பெரிய கற்பாறையின் முடுக்கரிலே அவற்றின் தசையினைத் தின்னுதற்குக் குழுமியிருக்கும் கொலைத் தொழிலில் வல்ல வில்லினையுடைய வெட்சி வீரர்கள் போலக் காணப்படும். அத்தகைய அரிய பாலை வழியைக் கொடியோராகிய நம் தலைவர் கடந்து சென்றார்' என்று கூறுவதிலிருந்து விலங்குகளினால் தலைவனுக்கு ஏற்படும் தீங்கு பற்றி நினைத்து வருந்துகிறாள். கொலைத்

தொழில் புரியும் வில்லுடைய கரந்தை வேந்தர்கள் ஒலிந்துகொண்ட மலை என்பதனால் தலைவிக்கு அச்சம் உண்டாகிறது. 'கொலைவில் ஆடவர்' என்பதும், 'அருஞ்சுரம்' என்பதும் தலைவனுக்குத் துன்பத்தைத் தரக்கூடிய சூழலைக் குறிப்பிடுகிறது. இதனால் விலங்கு மற்றும் நிலைக்களன்வழி அச்சமாகிறது.

பாலை நிலத்தில் கள்வர்களால் தலைவனுக்கு வரக்கூடிய துன்ப நிலையினை நினைத்து அச்சமுறும் தலைவியின் உணர்வை பாடல் விளக்குகிறது. 'தலைவன் தலைவியைப் பிரிந்து பொருள் ஈட்டச் சென்றான். திரும்பி வரக் காலம் நீட்டித்தது. பிரிவாற்றாத தலைவி, 'தலைவர் அருளின்றிப் பிரிந்து சென்றார். பசலையை எனக்கு உசாத்துணையாக வைத்துவிட்டு, என் அழகையெல்லாம் தம்முடன் கொண்டு போயினரே. அதயைாவது அவர் எனக்கு மீண்டும் தந்து அருளாரோ?' எனப் பெரிதும் வருந்தித் தோழிக்குச் சொல்லியதாக வருகின்ற,

"..................................................................

***இறை நிழல் ஒரு சிறைப் புலம்பு அயா உயிர்க்கும்***
***வெம் முனை அருஞ் சுரம் நீந்தி, தம் வயின்***
***ஈண்டு வினை மருங்கின் மீண்டோர்மன் என***
***நள்ளென் யாமத்து உயவுத்துணை ஆக***
***நம்மொடு பசலை நோற்று, தம்மொடு***
***தானே சென்ற நலனும்***
***நல்கார் கொல்லோ, நாம் நயந்திசினோரே***"[65]

(அகநா., பா.எ. 103: 9–15)

என்னும் இப்பாடலில், 'குறும்பூழ்ச் சேவல் பெரிய தலையினையும் கூர்மையான சிவந்த நாவினையும் உடையது. தெளித்து விட்டாற்போன்ற நுண்மையான அழகிய பல புள்ளிகளைக் கொண்டது. நிழலே அற்றுப்போன பரந்தகன்ற பாலை நிலத்தே, புல்லூற்றினால் எறிதற்குக் குறி வைக்கப்பட்ட சேவல் அதனைத் தப்பிப் பாதுகாப்பான இடத்திற்குச் சென்று தங்க எண்ணித் தானிருந்த காய்ந்து போன சிறு புதர் தனித்துக்

கிடப்ப வெளியேறிச் செல்லும். அவ்வாறு செல்லும் அச்சேவல், முன்னிடத்தில் உள்ளதாகிய வன்னிலத்தைச் சார்ந்திருக்கும் பெரிய மன்றத்திலே, ஆறலை கள்வர் வழிப்பறிக்காக வழியைப் பார்த்துத் தங்கியிருக்கும் பசுக்களைக் கொண்ட சிற்றூரினிடத்தே அதன் கண் தங்கியிருப்போர் விட்டுப்போன உயர்ந்த நிலையினையுடைய பெரிய வீட்டில், இறப்பு நிழலின் ஒரு பக்கத்தே தங்கித் தனிமையில் (துன் துணையை நினைந்து) பெருமூச்செறிந்தவாறு இருக்கும். நம்மால் விரும்பப்பட்ட தலைவர், அத்தகை கொடிய போர் முனை இருப்புக்களையுடைய அரிய சுரவழியைக் கடந்து, தாம் மேற்கொண்ட பொருளீட்டும் வினையில் மீண்டும் ஈடுபட்டுச் செல்லுற்றார்.

'நள்' என்ற நடுயாமத்தும் நம்முடைய வருத்தத்துக்கு உசாத்துணையாகும் பொருட்டு, நம்மிடத்தே பசலையை இருக்கச் செய்துவிட்டு அத்தலைவருடன் தானே வலிந்து சென்றுவிட்ட நம்முடைய நலனையேனும் நமக்கு நம் தலைவர் திரும்பத் தந்து அருளாரோ' என்பதலிருந்து உணர முடிகிறது. இதனில் ஆறலைக்கள்வர், அருஞ்சுரம், தலைவிக்குரிய பசலை நோய் ஆகியன அச்சம் தரும் நிலைக்களன்களாக அமைகிறது.

தலைவன் தலைவியைப் பொருள்வயிற் பிரிந்தான, பிரிவாற்றாது தலைவி வருந்தி அழுதாள். அதுகண்ட தோழி, 'நீ ஆற்றியிருத்தலை விடுத்து இங்ஙனம் அழுவதோ?' என்று கூறினாள். அது கேட்ட தலைவி, குடம்பை தனித் தொழியத் தான் செல்ல நினைத்த இடத்துக்குப் புள் பறந்து சென்றாற்போல, என் உடல் இவ்விடம் தனித்துக் கிடக்க, என் துன்பம் நீங்குமாறு, என் உயிர் பிரிந்து சென்று என் தலைவர் வினையாற்றும் இடத்துக்குச் செல்வதாக. அங்ஙனம் சென்றால் யாமும் எக்காலத்தும் அழாது இருப்போம் எனத்தலைவி ஆற்றாமையைப் புலப்படுத்தியதாக வருகின்ற,

"*......................................................*

***எழாஅப் பாணன் நல் நாட்டு உம்பர்,***

***நெறி செல் வம்பலர்க் கொன்ற தெவ்வர்***

*எறிபடை கழீஇய சேயரிச் சில் நீர்*
*அறுதுறை அயிர் மணற் படுகரைப் போகி,*
*சேயர்' என்றலின், சிறுமை உற்ற என்*
*கையறு நெஞ்சத்து எவ்வம் நீங்க,*
*அழாஅம் உறைதலும் உரியம் – பராரை*
*அலங்கல் அம் சினைக் குடம்பை புல்லெனப்*
*புலம் பெயர் மருங்கில் புள் எழுந்தாங்கு*
*மெய் இவண் ஒழியப் போகி, அவர்*
*செய்வினை மருங்கில் செலீஇயர், என் உயிரே*"[66]

(அகநா., பா.எ. 113: 17–22)

என்னும் இப்பாடல் வரிகளில், 'அன்ன தன்மைகளைக்கொண்ட பாணன் என்பானது நல்ல நாட்டிற்கு அப்பாற்பட்ட வழிப்போக்கராகிய புதியவரைக் கொன்ற ஆறலை கள்வர், தாம் எறிந்த படைக்கலன்களைக் கழுவிய சிவந்த நிறமுடைய அரித்தொழுகும் சிலவாகிய நீரும் அற்றுப்போன, மக்கள் நடமாட்டம் அற்ற நுணணிய மணல் பொருந்திய கரையினையும் கடந்து நம் தலைவர் நெடுந்தொலைவில் உள்ளார் என்று அறிந்தோர் பலரும் கூறுவர். அதனைக் கேட்ட நோயுற்ற என் நெஞ்சம் செயலற்றுத் துன்புறுகின்றது.

பருத்த அடிப்பகுதியில் கிளைத்த, அசையும் இயல்புடைய அழகிய கிளைகளில் உள்ள தன் கூடு தனித்துக் கிடப்ப, பறவை தான் செல்ல நினைத்த இடத்துக்குப் பறந்து சென்றாற்போல, என் உடம்பு இவ்விடத்துத் தனித்துக் கிடக்க, என் வருத்தம் தீருமாறு என் உயிர் பிரிந்து சென்று, என் தலைவர் வினையாற்றும் இடத்துக்குச் செல்வதாக! அங்ஙனம் சென்றால் யாமும் எக்காலத்தும் அழாது வாழ்வோம் அல்லமோ' என்று தலைவி கூறுவதிலிருந்து ஆறலைக்கள்வர்கள்வழி அச்சம் உணர்வானது உணர்த்தப்படுகிறது.

தலைவன் தலைவியைப் பிரிந்து பொருள் ஈட்டச் சென்றான். மீண்டு வருவதாகக் கூறிச் சென்ற பருவம் வரவும் அவன் வாராமையால்

துன்பமுற்று வருந்தியிருந்த தலைவியை நோக்கி, 'நீ ஆற்றியிருத்தல் வேண்டும்' என வற்புறுத்தும் தோழிக்குத் தலைவி சொல்லிய,

"*சென்று நீடுநர் அல்லர் அவர்வயின்*
*இனைதல் ஆனாய்' என்றிசின் – இகுளை*
*அம்புதொடை அமைதி காண்மார், வம்பலர்*
*கலன்இலர் ஆயினும் கொன்று, புள்ஊட்டும்*
*கல்லா இளையர் கலித்த கவலை,*
*கணநரி இன்னொடு குழீஇ, நிணன்அருந்தும்*
*நெய்த்தோர் ஆடிய மல்லல் மொசிவிரல்,*
*அத்த எருவைச் சேவல் சேர்ந்த*
*அரைசேர் யாத்த வெண்திரள், வினைவிறல்,*
*எழூஉத் திணிதோள், சோழர் பெருமகன்*
*விளங்குபுகழ் நிறுத்த இளம்பெருஞ் சென்னி*
*குடிக்கடன் ஆகலின், குறைவினை முடிமார்,*
*செம்புஉறழ் புரிசைப் பாழி நூறி,*
*வம்ப வடுகர் பைந்தலை சவட்டி,*
*கொன்ற யானைக் கோட்டின் தோன்றும்,*
*அஞ்சுவரு மரபின் வெஞ்சுரம் இறந்தோர்*
*நோய்இலர் பெயர்தல் அறியின்,*
*ஆழல மன்னோ, தோழி! என் கண்ணே*"[67] (அகநா., பா.எ. 375)

என்னும் இப்பாடலில், 'தோழியே! பொருள் ஈட்டுவதற்குச் சென்றுள்ள நம் தலைவர் காலம் தாழ்த்தார், விரைந்து வருகுவர், அவர் குறித்து நீ வருந்துதல் வேண்டாம் என்று கூறுகின்றாய்.

அவர் கடந்து சென்றுள்ள காடோ, தாம் அம்பு விடுக்கும் திறத்தினை அளந்தறியும்பொருட்டு, வழிச் செல்வார் தம்பால் அணிகலன் போன்ற பொருளைப் பெறாதவராயினும் அவரைக் கொன்று அவர்தம் உடல்களைப் பறவைகட்கு உண்பிக்கும் கொல்லும் கொடுந்தொழில் அன்றி வேறு தொழிலினைக் கற்றறியா ஆறலைக் கள்வர்கள் அலைந்து திரியும்

கவர்த்த வழிகளைக் கொண்டது. நரிகள் கூட்டம் தம் இனத்துடன் கூடிப் பிணங்களின் நிணத்தினைத் தின்னும் கொடுமை உடையது.

அத்தகைய காட்டிலுள்ள அடிதிரண்ட யா மரத்தின் கிளையில் குருதியாடிய நெருங்கிய விரல்களைக்கொண்ட ஆண் பருந்து வந்து தங்கியிருக்கும். அக்கிளையின் திரண்ட கொம்பானது, வெற்றி எஞ்ஞான்றும் நீங்காத வலிமை பொருந்திய தோளினையுடைய சோழர் பெருமகனாம் இளம் பெருஞ்சென்னி என்பான் தான் மேற்கொண்ட போர் வினையைக் குடிமக்களின் நன்மை கருதிய கடமை எனக் கொண்டு அதனை முடித்தற்பொருட்டுப் பாழி என்னும் மதிலை அழித்து, வடுகரது தலைகளை அறுத்துக் கொன்ற யானைகளின் கோடு போலத் தோற்றம் தரும்.

அத்தகைய அஞ்சத்தக்க வெப்பம் பொருந்திய சுரவழியைக் கடந்து சென்ற நம் தலைவர் தீங்கிலாது மீண்டு வருவார் என்று யான் அறிந்துகொள்ளக் கூடுமாயின் தோழியே! என் கண்கள் ஆற்றாமையால் ஆழமாட்டா, யான் அறிந்து கொள்ள இயலவில்லையே! என செய்வேன்?' என்ற விளக்கம் கள்வர் வழி அச்சமுறுவதாகிறது.

பொருளீட்டல் வேண்டித் தலைவன் தலைவியைப் பிரிந்தான். அப்பிரிவினை ஆற்றாது உடல் வேறுபட்ட தலைவியைத் தோழி தெளிவுறுத்த அப்போது தோழியை நோக்கித் தலைவி கூறியதாகின்ற,

"***அறன்கடைப் படாஅ வாழ்க்கையும், என்றும்***
***பிறன்கடைச் செலஅச் செல்வமும், இரண்டும்***
***பொருளின் ஆகும், புனையிழை!' என்று, நம்***
***இருள்ஏர் ஐம்பால் நீவி யோரே –***
***நோய்நாம் உழக்குவம் ஆயினும், தாம்தம்***
***செய்வினை முடிக்க; தோழி! பல்வயின்***"[68] (அகநா., பா.எ. 155:13–16)

என்னும் இப்பாடலில், 'தோழி! அழகிய மணிகலன்களை அணிந்தவளே! எக்காலத்தும் பாவ நெறியில் செல்லாத வாழ்க்கையும், பிறர் வீட்டு வாயின்

சென்று நின்று இரவாத மேம்பாடு ஆகிய இவ்விரண்டும் பொருளால் ஆகும்.

நீருண்ண வந்த பெரிய யானை நீர் இல்லாது சிறிது ஈரத்துடன் காணப்பட்ட குழியைக் கண்டு வருத்தமுற்றுத் தன் நீர் வேட்கையைத் தணித்துக்கொள்வதற்கு வேறு இடம் காணப்பெறாது அக்குழியினை மிதித்துக் கடந்து சென்றது. பின்னர் அங்கு சென்ற பெரிய புலி, சென்ற யானையின் அடிச்சுவட்டில் கால் வைத்து நடந்து சென்றது. யானையின் அடிச்சுவட்டிற் பதிந்த புலியின் காற்சுவடு குற்றமற்ற நாவினையுடைய கூத்தர், தம் தோளின் பின்புறத்தே கட்டிய மார்ச்சனை பூசிய மத்தளத்தின் கண்ணிடத்தே விரல் பதிந்த வடுப்போலக் காணப்படும். அத்தகைய கானகத்தே, மரலும் வாடுகின்ற இடங்களையுடைய மலையைக் கடந்து நம் தலைவர் சென்றுள்ளார்.

'அவரது பிரிவால் நாம் நோயுற்று வருந்துவோமாயினும், அவர் தமது பொருளீட்டும் வினையினை முடித்தபின் வருவாராக' என்று விலங்குகள் நிலைக்களன் அடிப்படையிலும் சமூகத்தில் குறை நேரக்கூடும் என்பதிலும் தலைவிக்கு அச்சம் வருவது உணர்த்தப்படுகிறது.

தலைவன் பிரிவினை ஆற்றாது வருந்திய தலைவிக்குத் தோழி அவளை ஆற்றுவித்தற் பொருட்டுச் சொல்லியது. பிரிவாற்றமையால் மெய் வேறுபட்டு மெலிந்த தலைவியின் பொருட்டு வருந்திய தோழியை ஆற்றுவித்தற்குத் தலைவி சொல்லுகின்ற,

"...........................................................

***தூங்கல் பாடிய ஓங்குபெரு நல்இசைப்***
***பிடிமிதி வழுதுணைப் பெரும்பெயர்த் தழும்பன்***
***கடிமதில் வரைப்பின் ஊணூர் உம்பர்,***
***விழுநிதி துஞ்சும் வீறுபெறு திருநகர்,***
***இருங்கழிப் படப்பை மருங்கூர்ப் பட்டினத்து,***
***எல்உமிழ் ஆவணத்து அன்ன,***
***கல்லென் கம்பலை செய்துஅகன் றோரே***"[69]

(அகநா., பா.எ. 227: 16–22)

என்னும் இப்பாடலில், ‘தழும்பன் என்பான் குறிதப்பாத வாளினையுடையவன், தமிழகம் முழுவதும் அவனது வலிமையும், கொடைத் தன்மையும் பரவிக் கிடந்தமையால் முழங்குகின்ற புகழ் முரசினைத் தன்னகத்தே கொண்டவன், பாடி வருவோர்க்குக் குறைவின்றிப் பெருங்கொடை வழங்கும் நாளோலக்க இருக்கையினை உடையவன், ‘தூங்கல் ஓரியார்’ என்னும் புலவரால் பாடப்பெற்ற பெரும்புகழ் வாய்ந்தவன், பிடி மிதித்த காரணத்தால் வழுதுணங்காய் போன்ற தழும்பினைப் பெற்றமையால் ‘வழுதுணைத் தழும்பன்’ என்னும் பெரும்பெயர் கொண்டவன்.

மருங்கூர் என்பது அவனது காவல் பொருந்திய மதில் சூழ்ந்த ஊணூர் என்னும் ஊருக்கு அப்பால் உள்ள பட்டினமாகும். அப்பட்டினம் பெரும் பொருள் நிலைபெற்றது. பொலிவு பெறத் தோன்றுவது. உப்பங்கழியிடத்து உப்பு விளையும் வயல்களைக் கொண்ட அழகிய அப்பட்டினத்து ஒளிவீசும் கடைத் தெருவில் இடம்பெறும் ஆரவாரத்தினைப் போன்ற ‘கல்’ என்னும் அலரை இவ்வூரில் எழுமாறு செய்துவிட்டு நம்மைப் பிரிந்த அகன்று சென்ற நம் காதலர் நோய் நொடியின்றி நிலைபெற்று வாழ்வாராக’ என்று தலைவி கூறுவதில் விலங்கு, ஆரலைக்கள்வர்களால் உண்டாகும் அச்சம் உணர முடிகின்றது.

தலைவன் வினைவயிற் பிரிந்தமையைத் தோழி, தலைவியின்பாற் சென்று கூறினாள். அதற்கு அவள் அத்தோழிக்குத் தன் கருத்தினைக் கூறுகின்ற,

“...................................................................

***உண்ணா உய்க்கமொடு உயிர்செலச் சாஅய்,***
***தோளும் தொல்கவின் தொலைய, நாளும்***
***பிரிந்தோர் பெயர்வுக்கு இரங்கி,***
***மருந்துபிறிது இன்மையின், இருந்துவினை இலனே!***”[70]

(அகநா., பா.எ. 147: 11–14)

என்னும் இப்பாடலில், ‘பெண் புலியானது உயர்ந்த மலையின் பக்க மலையின்கண் பாறையின் பிளப்பாகிய குகையின் முடுக்கிலே பிடவுடன் மலர்ந்த வேங்கையின் மணங்கமழும் பூவுடன் கூடிய தழையை வேறு வேறாக வகுத்து வைத்தாற்போன்ற, தசையின் மூட்டம் விரியாத வளைந்த நகத்தினையுடைய குட்டிகள் மூன்றினை ஒருசேரப் பெற்றெடுத்தது. அதனால் வலுவிழந்து ஓய்ந்துபோன பெண் புலி பசிமிக்கதாக, அதன் பசியைப் போக்கக் கருதிய புள்ளிகள் விளங்கும் பிளந்த வாயையுடைய ஆண்புலி, அறல்பட்ட கொம்பினையுடைய ஆண் மானினது குரலினைக் கூர்ந்து கேட்கும். அத்தகைய கவர்த்த வழிகளைக் கொண்ட கடந்து செல்வதற்கரிய நெடிய காட்டிலே, தன் கணவனைத் தேடிச் சென்ற வெள்ளிவீதி என்பவளைப் போல, யானும் என் தலைவனைத் தேடிச் செல்வதற்குப் பெரிதும் விரும்பினேன். நம் தலைவர் பிரிந்தமையால், யாவற்றையும் வெறுத்தேன். உண்ணாத வருத்தத்தால் உயிர் போகும் அளவு உடல் மெலிவுற்றேன். என் தோள்களும் பழைய அழகு கெட்டன. பிரிந்த தலைவரது பிரிவிற்கு இரங்கி யான் கொண்ட நோய்க்கு வேறு மருந்து இல்லாமையால் செய்வதறியாது செயலற்றுப் போனேன்’ என்பதில் தலைவி சமூகத்திற்காக அச்சமுறுவது தோன்றுகிறது.

**தலைவி → பாணனிடம் கூற்று**

தலைமக்களிடையே பூசல் நிகழ்ந்துழி, தவறுகளைச் சுட்டிக்காட்டித் தெளிவிக்கும் உரிமை கொண்ட பாணர், கூத்தர், அறிவர் முதலானோர் தலைவன் விடுக்கத் தலைவிபால் வந்த பொழுது, தலைவன் ஒழுகலாறு பற்றி வெறுப்புக் கொண்ட தலைவி, தலைவனையும் அவன் வாயில்களையும் இகழ்ந்துரைப்பதாக வருகின்ற,

“***தன் பார்ப்புத் தின்னும் அன்பு இல் முதலையோடு***
***வெண் பூம் பொய்கைத்து, அவன் ஊர்’ என்ப; அதனால்***
***தன் சொல் உணர்ந்தோர் மேனி***
***பொன் போல் செய்யும் ஊர்கிழவோனே***”[71] (ஐங்., பா.எ. 41)

என்னும் இப்பாடலில், ‘தான் ஈன்றெடுத்த பார்ப்பினைத் தானே உண்டு பசிதீரும் அன்புணர்ச்சியற்ற முதலையையும், வெண்ணிறப் பூக்களைக்

கொண்ட பொய்கைகளையும் கொண்டது தலைவனுடைய ஊர் என்பர். அதனால், அவ்வூரின் தலைவனும் தன் சொல்லை மெய்யென்று தெளிந்திருப்போர் மேனியில் தன் பிரிவினால் பொன்னிறம் கொண்ட பசலையூரச் செய்பவனாயினான்' எனும் விளக்கத்தில் அச்சம் உணர்த்தப்படுகிறது.

இரக்கமற்ற முதலையானது தன் பார்ப்பினைத் தின்னும். இந்நிகழ்வு அச்சத்தை உருவாக்கும். அதுபோன்று குணத்தை உடையவன் எனது அன்பு நிலையை ஏற்காது இரக்கமற்றவன் என்று தலைவி கூறுவது அச்ச உணர்வை ஏற்படுத்துவதாகிறது.

பரத்தை மனையிலிருந்து தலைவிபால் தூது வந்த பாணன், தலைவி மீது தலைவன் பேரன்புடையான் என்று கூறி வாயில் வேண்டிய பொழுது தலைமகள் இங்ஙனம் கூறி வாயில் மறுத்துக் கூறுவதை,

"***நன்றே, பாண! கொண்கனது நட்பே***
***தில்லை வேலி இவ் ஊர்க்***
***கல்லென் கௌவை எழாஅக்காலே***"[72] (ஐங்., பா.எ. 131)

என்னும் இப்பாடலில், 'பாணனே! தில்லை மரங்களை வேலியாக உடைய இவ்வூரிலே, கல்லென்னும் ஒலியோடு பழிமொழி பிறவாது எனின், நீ கூறுவது போல, நம் கொண்கனுக்கு நம்முடன் உள்ள நட்பு இனிமையுடையதாகும்' என்பதிலிருந்து அச்சம் மெய்ப்பாடு தோன்றுகிறது.

இங்கு அலர் அச்சம் ஆகிய மொழியை விட 'கௌவை' என்பது பழி தூற்றிப் பேசும்சூழலைக் குறிக்கின்றது. இந்நிலையைப் பாணனிடம் உரைக்கின்ற தலைவியின் மனத்தினுள்ள அச்சம் உணர்வு இருப்பதை நுட்பமாக உணர முடிகிறது.

**தலைவி → பாணனிடம் கூற்று**

தலைவன் பரத்தையர்பாற் சென்று ஒழுகினான். தலைவியின் ஊடலைத் தீர்க்கும் பொருட்டுத் தலைவன் பாணனை விடுத்தனன். பாணன் தலைவியின் பாற் சென்று, 'தலைவன் தவறிலன்' எனக் கூறி

வாயில் வேண்டினான். தலைவி, அவள் நம்மால் இரங்கத் தக்கவள் எனத் தலைவன் தவற்றினைப் பல்லாற்றானும் எடுத்துக் கூறி வாயில் மறுப்பதை,

"..................................................................

***வளிபொரத் துயல்வரும் தளிபொழி மலரின்***
***கண்பனி ஆகத்து உறைப்ப, கண்பசந்து,***
***ஆயமும் அயலும் மருள,***
***தாய்ஓம்பு ஆய்நலம் வேண்டா தோளே?***"[73]

(அகநா., பா.எ. 146: 10–13)

என்னும் இப்பாடலில், 'மிக்க பெருவலியையும் தலைமையையும் உடைய எருமைக்கடா, குளிர்ந்த மலர்களையுடைய பொய்கையின்கண் பகற்பொழுது முழுதும் கழியும்வரை சுழன்று உழக்கிக் கிடந்தது. பின்னர், மடப்பம் பொருந்திய கண்களையுடைய மாட்சிமைப்பட்ட பெண் எருமையினைத் தழுவிய வண்ணம் தோட்டங்களைச் சென்றடைந்து வயல்களில் தங்கியது. அத்தகைய மருத நில வளைஞ்சான்ற ஆரவாரமும் மகிழ்ச்சியும் கொண்ட ஊரனது ஒலிக்கும் மணிபூண்ட நெடிய தேர், ஒலி பொருந்திய அணிகலன்களை அணிந்த பரத்தை மகளிரின் சேரிக்குப் பல நாட்களாகச் செல்வதில்லை என கூறுகின்றாய்.

மாயப்பொய் பலகூறும் பரத்தைமைச் செயலுடைய எம் தலைவனது வாய்மொழியினை எம்மைப்போல ஒருத்தி உண்மையென நம்பிப் பரத்தையருள் உள்ளாள்போலும், காற்று அலைக்க அசையும் மழைத்துளி வீழப்பெற்ற மலர்போல, அவள் கண்கள் நீரினை மார்பிடத்துத் துளிர்க்க, கண்கள் பசலையுற்றுத் தோழியர் கூட்டமும் உற்றார் உறவினரும் மயங்கி நிற்க, தாயர் பல்லாற்றானும் பேணிப் பாதுகாத்து வளர்த்த அழகிய பெண்மை நலத்தைப் பேணாது இழப்பாளாகிய அப்பேதை தானும் யாரோ? அவள் இரங்கத்தக்கவள் ஆவாள் என வரும் விளக்கம் அச்சம் உணர்வு வெளிப்படுத்துகிறது.

**தலைவி → நெஞ்சிடம் கூற்று**

பரத்தையரை நீங்கி வந்த தலைமகனை ஏற்றுக் கொள்ளுமாறு வாயில்கள் சொன்னதற்கு இணங்கியும், தன்னுடைய ஆற்றாமைக்கு ஆட்பட்டும் அவனை ஏற்றுக்கொள்ள நினைத்த தலைவி, மேலும் அவன் பரத்தையர்க்கே அன்பு செய்தான் எனக் கேட்டு, மனம் வெதும்பிற் தன்னுள்ளே சொல்லிக் கொண்டதாகின்ற,

"***கரை சேர் வேழம் கரும்பின் பூக்கம்***
***துறை கேழ் ஊரன் கொடுமை நன்றும்***
***ஆற்றுக தில்ல, யாமே;***
***தோற்க தில்ல, என் தட மென் தோளே***"[74] (ஐங்., பா.எ. 12)

என்னும் இப்பாடலில், 'கரையிலே வளரும் கொறுக்கைச்சி, கரும்பினைப் போலவே வெண்பூக்களைத் தோற்றுவிக்கும் நீர்த்துறைகளைக் கொண்ட ஊரனின் கொடுமையை யாம் பொறுத்து வாழ்வோமாக. என் பெரிய மென்மையான தோள்கள் அவன் கொடுமையைப் பொறுக்க இயலாது. தலைவன் மீண்டும் வந்து தன்னிடம் அன்புகொள்ள மாட்டானோ என்ற உணர்வின் வெளிப்பாடானது அச்சமாகிறது. இவ்வாறு தலைவி தன் நெஞ்சில் கூறுகின்ற உணர்வுகளின் வாயிலாக வெளிப்படும் அச்ச உணர்வு புலப்படுத்தப்படுகிறது. தலைவன் செல்லும் காட்டின் இயல்பினையும் முன்னர் செய்த சூளினையும் நினைத்து வருத்தமுறும் தலைவியின் கூற்றில் அச்சம் தோன்றுகிறது.

தலைவன் பிரிந்ததால் உடல் வேறுபட்ட தலைவி 'என் முயக்கத்தை வெறுத்துத் தலைவன் சென்றனன். என்னுடம்பு துயிலாது துன்புறினும் தலைவன் சென்ற காடு மலைபோலப் பெரிதும் அச்சம் தரும். காட்டினைப் படைத்தோனும் அக்காட்டிடையே சென்று வருந்துவானாக' என்று நொந்துரைக்கின்ற,

"..............................................................
***ஆன் வழிப் படுநர் தோண்டிய பத்தல்***
***யானை இன நிரை வெளவும்***
***கானம் திண்ணிய மலை போன்றிசினே***"[75] (நற்., பா.எ. 240: 8–10)

என்னும் இப்பாடலில், ‘கூர்மையாய் எழுச்சி பெற்ற வெண்மையான பற்களும் ஒளிபொருந்திய நெற்றியுமுடைய இளமகளே! நம் காதலர் கையால் அனைத்துத் தழுவியும் மெய்யுடன் பொருந்தியும் அமையும் முயக்கம் வேண்டாது வெறுத்தகன்றனர். அதனால் ஏக்கப் பெருமூச்சு விடுவதுடன் பொருந்திய பருத்த மார்பகத்தை உடையது என்னுடல்; அஃது இனித் தனித்துத் துயில்வதனால் மிகவும் துன்புற்று வருந்தி நிற்கும். ஆயினும் இத்துன்பம் பெரிதன்று. வெயிலில் வெப்பமுற்ற பரற்கற்கள் மிகுந்த பள்ளத்தின் ஒரு புறத்தில் குந்தாலியால் கிணறு தோண்டப்பட்டிருக்கும். அங்குப் பசுக்கூட்டம் பாதுகாக்கும் ஆயர் சென்று அருகில் பறித்த சிறுகுழி; அக்குழியில் ஊறிய நீரை யானை இனம் சென்று உண்ணும் இத்தகைய வறட்சியையுடைய கொடிய காட்டுப்பகுதி திண்ணிய மலை போல நிலைத்த அச்சத்தைச் செய்கின்றது. இத்தகைய காட்டுப் பகுதியில் இவ்வுலகு படைத்தவனும் சென்று மெலிவானாக’ என்று கூறுவதிலிருந்து கட்டிடையே வாழும் விலங்குவழி உண்டாகும் அச்சம் உணரப்படுகிறது. மலை போன்ற திண்ணிய காடு என்பது விலங்குகள் வாழும் நிலையான அச்சத்தைக் கொண்டது. இதனால் மிகப்பெரும் துன்பத்தைத் தலைவன் அடைவான் ன்று தலைவியின் எண்ணுகிறாள். இதனால் தலைவிக்கு அச்சம் தோன்றும் என்பது உறுதியாகிறது.

தலைவன் குறித்த பருவத்து வரவில்லை. தலைவி நெஞ்சழிந்து, ‘முன்பு நம்மைப் பிரிந்து சுரத்திடையே சென்ற தலைவர் முதிர்ந்தபின் இளமை எய்துதல் இல்லை; வாழ்நாள் இவ்வளவு என அறிந்தவரும் இல்லை. ஆதலால் நின்னைப் பிரியேன் என்று கூறிப் பொய்த்தனர். அதனால் அவர் துன்புறாது வாழ்வாராக’ எனக் கூறியதாக வருகின்ற,

“***முதிர்ந்தோர் இளமை அழிந்தும் எய்தார்;***
***வாழ் நாள் வகை அளவு அறிஞரும் இல்லை;***
***மாரிப் பித்திகத்து ஈர் இதழ் அலரி***
***நறுங் காழ் ஆரமொடு மிடைந்த மார்பில்,***
***குறும் பொறிக் கொண்ட கொம்மை அம் புகர்ப்பின்***

***கருங் கண் வெம் முலை ஞெமுங்கப் புல்லிக்***
***கழிவதாக கங்குல்' என்று***
***தாம் மொழி வன்மையின் பொய்த்தனர், வாழிய***
***நொடி விடுவன்ன காய் விடு கள்ளி***
***அலங்கல்அம் பாவை ஏறி, புலம்பு கொள்***
***புன் புறா வீழ் பெடைப் பயிரும்***
***என்றூழ் நீளிடைச் சென்றிசினோரே***'[76] (நற்., பா.எ. 314)

என்னும் இப்பாடலில், 'கையால் நொடிப்பது போன்ற ஒலியுடன் காய்கள் தெறிக்கின்ற கள்ளிச் செடியின் அசைகின்ற பாவை போன்ற கிளைகளில் ஏறிப் பொலிவுற்ற புறாக்கள் தனியே இருக்கும். அப்புறாக்கள் தம் விருப்பத்திற்குரிய பெடையைப் புணர்ச்சிக் கருத்துடன் அழைக்கும். இத்தகைய சுரத்தில் வெயிலின் வெப்பம் மிகுந்திருக்கும். இதனிற் சென்ற நம் தலைவர் 'ஒரு காலத்தே முதுமையை அடைந்தவர் மறுபடியும் அழிந்த இளமையை எய்துவது என்பது இல்லை. அதே போலத் தம் வாழ்நாளின் அளவு இன்னதென்பதையும் அறிவதற்கு இல்லை. ஆதலால் மாரிக்காலத்தில் மலரும் பித்திகையின் ஈரமான இதழ்களைக் கொண்ட பூவைத்தொடுத்து நறுமணம் கமழும் வளர முற்றிய சந்தனத்தை அரைத்துப் பூசிய மார்பில் மாலையாக மார்புடன்; குறுகிய புள்ளியையும் இளமையும் அழகும் கொண்ட கருமையான மார்பகக் கண்களும் நெருங்குமாறு அணைத்திருக்கும் அணையில் இனி என் காலம் கழிவதாக' என்று முன்பு கூறினார். அம்மொழியை அவரே வலிமையுறப் பொய்த்தனர். அவ்வாறு பொய்த்தாராயினும் அவர் தீதின்றி வாழ்வாராக என்பதில் தலைவிக்குள் தலைவனின் பொய்ச் சூளுரையின் தீங்கு நினைக்கின்றதால் மனதிற்குள் இருக்கும் அச்ச உணர்வு வெளிப்படுகிறது.

## தொகுப்புரை

தலைவி, தலைவனிடமும் தோழியிடமும் மிகுதியாகக் கூற்று நிகழ்த்துகின்ற சூழலில் களவுப் பாடல்கள் அமைந்திருக்கின்றன. தலைவி, தோழியிடம் தான் தலைவன் மீது எங்ஙனம் அன்பு வைத்து காதல் கொண்டேன் என்பதை எடுத்துரைத்து, அவன் என்னை ஏற்காது போனால் மிகப்பெருந்துன்பம் அடைவேன் என்று கூறுகின்றபோது அச்சம் உணர்த்தப்படுகிறது.

தலைவன் களவு நீட்டிக்கின்றவிடத்து, தன்னை மணஞ்செய்யாது துன்ப நிலைக்குக் கொண்டு செல்வானோ என நினைத்து வருந்துகின்றபோது, தோழியிடம் உரைக்கின்றாள். தலைவிக்கு மனதளவில் பயம் உணர்ச்சி தோன்றுகிறது. தோழியிடம் எடுத்துரைக்கின்றாள். இதனை உணர்கின்ற தோழியும் அச்சமுறுகிறாள்.

தலைவன் இரவுக்குறியில் தலைவியைக் கண்டு அவளிடம் இன்பம் துய்த்துச் செல்ல வருகின்றான். அவன் வருகின்ற இரவு நேரத்தில் வழியில் விலங்குகளினால் கொடிய துன்பம் நேரிடக்கூடும் என்பதைத் தோழியிடம் எடுத்துரைக்கின்றாள். கொடிய விலங்குகள் பிளிறுகின்ற இடியுடன் கூடிய மழை பொழிகின்ற சூழல் தலைவனுக்கு துன்பம் தருமே என்பதை நினைக்குந்தோறும் தோழியிடம் கூறுகின்றபோதும் அச்சம் உணர்வு வெளிப்படுகின்றது.

தலைவன் இரவில் தலைவியைச் சந்திக்கின்றான். அதனை ஊரார் அறிந்தால் அலர் தூற்றக்கூடும். எனவே, விரைவில் வரைவு செய்துகொள்ள அறிவுறுத்துமாறு தோழியிடம் தலைவன் சிறைப்புறத்தானாக நிற்கின்றபோது தலைவி கூறுகிறாள். இவ்வாறான சூழலில் ஊரார் தூற்றும் பழிச் சொல்லுக்கு நெஞ்சம் பயமுறக்கூடிய உணர்ச்சி அச்சமாகிறது.

தலைவியின் உடல் வேறுபாட்டை அறிந்த தாய் வெறியாட்டு எடுக்க முற்படுகிறாள். அப்போது அவ்வெறியாட்டின் நிலையினை உணர்ந்த தலைவி அதற்கு வருந்துகின்றபோது தலைவிக்கு அச்சம் உண்டாகிறது. நொதுமலர் வரைவின்போதும் தலைவிக்கு அச்சம் உருவாகிறது.

தலைவன் களவுக் காலத்தில் ஒழுக்கம் நிகழ்த்துகின்றபோது கடவுள் மேல் ஆணையிட்டுச் சொல்கிறேன். என்னாளும் உன்னைப் பிரியேன் என்று சூளுரைத்தான். ஆனால், அவன் செய்த சூள் பொய்த்தால் தெய்வக் குற்றமாகுமே எனத் தனது நெஞ்சிற்குள் நினைக்குந்தோறும் அச்சம் உண்டாகிறது.

தலைவி கூற்றில் அமைகின்ற பாடல்களில், தலைவனின் ஒழுக்க நிலையின் குறைபாட்டால் தனக்கு பிறரால் உண்டாகும் துன்பம் (அலர்) வழி உருவாகும் அச்சத்தைப் புலப்படுத்துகின்றாள். தலைவனிடம் தான் பழகியதாலும் அவன் பிரிந்தால் பலர் பேசும் அலரினால் உயிரோடு இருப்பதை விரும்பாத நிலையினைத் தலைவனிடம் கூறும் உணர்வில் தலைவிக்கு அச்சம் தோன்றுகிறது.

பொருள்வயிற் பிரிவினால் உண்டாகும் துன்ப நிலையினைத் தன்னால் தாங்க முடியாத நிலையினைக் கூறுகின்ற உணர்வில் இறக்க நேரிடும் என்ற உணர்வில் மிகுதியான அச்சம் தோன்றுகிறது. தலைவன் பிரிவில் தன்னுடைய மேனி கெட்டுவிடக்கூடும் என்பதையும் தலைவனிடம் வருந்திக் கூறுகின்ற சூழல் அச்சம் மெய்ப்பாட்டைத் தெளிவுறுத்துகிறது.

தலைவன் பரத்தையரிடம் சென்று ஒழுகும் ஒழுக்க நிலையினை எடுத்துரைத்துப் பேசுகின்ற உணர்ச்சியில் வருத்தமுறுகின்ற சூழல் அச்சமாகும்.

தலைவி, தலைவனுக்கு காட்டிடத்தே விலங்குகளினாலும் கள்வர்களாலும் ஏதேனும் துன்பம் வரக்கூடும் என்பதை நினைத்துத் தோழியிடம் கூறுகின்றபோது, ‘அச்சம்’ தலைவிக்கு உண்டாவதாகின்றது.

தலைவன் பொருள்வயிற்காரணமாகப் பிரிகின்றான். அப்போது பருவகாலம் தொடங்கியதும் வரவில்லை. விரைவில் வருவேன் என்றவன் இன்னும் வராது போயினான். அவன் கூறிய மெய்மொழி பொய்யாகுமோ என்பதைத் தோழியிடம் வரவில்லை என வருத்தமுற்றுக் கூறுவது அச்ச உணர்வாகின்றது. தன்னை மணந்த நாளில் இனி நின்னைப் பிரியேன் என்று கூறிய சூளுரை பொய்த்தலாகுமானால் அவனுக்குத் துன்பம் வரக்கூடும் என்ற அச்சப்படும் சூழலைத் தோழியிடம் கூறுகின்றபோது தலைவிக்கு அச்சம் உண்டாகின்றது.

தலைவனின் பரத்தமை ஒழுக்கம் ஊரெல்லாம் பரவியுள்ளது. இதனைத் தலைவன் உணரவில்லை. பாணனிடம் கூறுகின்றபோது தலைவிக்கு அலர் அச்சம் தோன்றுகின்றது. தலைவனின் பிரிவின் துயர் தாங்க முடியாத நிலையிலிருக்கும் தலைவி அவனின் நட்பினை எண்ணி அதனை வெளிப்படுத்த முடியாத மீளாத் துயரினை நெஞ்சிடம் கூறுகின்ற உணர்வில் தலைவிக்கு அச்சமுறுவதை அறிய முடிகிறது.

## குறிப்புகள்

1. கு.வெ. பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), நற்றிணை மூலமும் உரையும், பக். 210–211.
2. மேலது., பக். 212–213.
3. மேலது., ப. 502.
4. இரா. செயபால் (உ.ஆ.), அகநானூறு மூலமும் உரையும், பக். 92–93.
5. இராம சண்முகம் (ஆய்வேடு), அறத்தொடு நிற்றலும் வரைவு கடாதலும், ப. 16.
6. கு.வெ. பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), நற்றிணை மூலமும் உரையும், ப. 264–265.
7. மேலது., பக். 469–470.
8. வி. நாகராசன் (உ.ஆ.), குறுந்தொகை மூலமும் உரையும், பக். 326–327.
9. மேலது., ப. 366.
10. இரா. செயபால் (உ.ஆ.), அகநானூறு மூலமும் உரையும், பக். 391–392.
11. வை.சு. அழகப்பன் (க.ஆ.), வள்ளுவரும் அகத்துறையும், ப. 18
12. வி. நாகராசன் (உ.ஆ.), குறுந்தொகை மூலமம் உரையும், ப. 742.
13. மேலது., ப. 764.
14. அ. தட்சிணாமூர்த்தி (உ.ஆ.), ஐங்குறுநூறு மூலமும் உரையும், ப. 302.
15. ஔவை துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), ஐங்குறுநூறு மூலமும் விளக்கவுரையும், ப. 315.
16. அ. தட்சிணாமூர்த்தி (உ.ஆ.), ஐங்குறுநூறு மூலமும் உரையும், ப. 265.
17. வி. நாகராசன் (உ.ஆ.), குறுந்தொகை மூலமும் உரையும், ப. 140.
18. மேலது., ப. 609.

19. கு.வெ. பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), நற்றிணை மூலமும் உரையும், பக். 432–434.
20. பின்னத்தூர் நாராயணசாமி ஐயர் (உ.ஆ.), நற்றிணை நானூறு மூலமும் உரையும், ப. 295.
21. அ. தட்சிணாமூர்த்தி (உ.ஆ.), ஐங்குறுநூறு மூலமும் உரையும், ப. 298.
22. வி. நாகராசன் (உ.ஆ.), குறுந்தொகை மூலமும் உரையும், ப. 571.
23. மேலது., ப. 372.
24. அ. தட்சிணாமூர்த்தி (உ.ஆ.), ஐங்குறுநூறு மூலமும் உரையும், ப. 251.
25. தமிழண்ணல் (உ.ஆ.), தொல்காப்பியம் மூலமும் கருத்துரையும், பக். 347–348.
26. வி. நாகராசன் (உ.ஆ.), குறுந்தொகை மூலமும் உரையும், ப. 862.
27. இரா. செயபால் (உ.ஆ.), அகநானூறு மூலமும் உரையும், பக். 63–65.
28. தமிழண்ணல் (உ.ஆ.), தொல்காப்பியம் மூலமும் கருத்துரையும், பக். 347–48.
29. வி. நாகராசன் (உ.ஆ.), குறுந்தொகை மூலமும் உரையும், ப. 38.
30. இரா. செயபால் (உ.ஆ.), அகநானூறு மூலமும் உரையும், பக். 245–247.
31. வி. நாகராசன் (உ.ஆ.), குறுந்தொகை மூலமும் உரையும், ப. 213.
32. மேலது, பக். 100–101.
33. அ. தட்சிணாமூர்த்தி (உ.ஆ.), ஐங்குறுநூறு மூலமும் உரையும், ப. 143.
34. மேலது., ப. 144.
35. அ. விசுவநாதன் (உ.ஆ.), கலித்தொகை மூலமும் உரையும், பக். 70–71.
36. மேலது., பக். 80–81.
37. மேலது., பக். 354–355.

38. இரா. செயபால் (உ.ஆ.), அகநானூறு மூலமும் உரையும், பக். 46–47.
39. மேலது., பக். 587–588.
40. மேலது., பக். 104–105.
41. அ. தட்சிணாமூர்த்தி (உ.ஆ), ஐங்குறுநூறு மூலமும் உரையும், பக். 685–686.
42. மேலது., பக். 694–695.
43. மேலது., பக். 707–708.
44. மேலது., ப. 747.
45. தெ.பொ. மீனாட்சிசுந்தரம் பிள்ளை (கு.உ.), நற்றிணைச் சொற்பொழிவுகள், ப. 11.
46. அ. தட்சிணாமூர்த்தி (உ.ஆ), ஐங்குறுநூறு மூலமும் உரையும், பக். 52–53.
47. மேலது., ப. 70–71.
48. வி.நாகராஜன் (உ.ஆ.), குறுந்தொகை மூலமும் உரையும், ப. 107.
49. தி. சங்குப்புலவர், ஐங்குறுநூற்றுச் சொற்பொழிவுகள், ப. 37.
50. வி. நாகராசன் (உ.ஆ.), குறுந்தொகை மூலமும் உரையும், பக். 190–191.
51. மேலது., பக். 194–195.
52. மேலது., பக். 503–504.
53. மேலது., ப. 564.
54. மேலது., ப. 655.
55. மேலது., ப. 669.
56. மேலது., ப. 786.
57. மேலது., ப. 250.
58. மேலது., ப. 590.
59. கு.வெ. பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), நற்றிணை மூலமும் உரையும், பக். 393–394.
60. மேலது., பக். 416–417.
61. மேலது., பக். 2–3.

62. அ. விசுவநாதன் (உ.ஆ.), கலித்தொகை மூலமும் உரையும், பக். 83–85.
63. மேலது., பக். 317–319.
64. இரா. செயபால் (உ.ஆ.), அகநானூறு மூலமும் உரையும், பக். 291–293.
65. மேலது., பக். 313–314.
66. மேலது., ப. 345–347.
67. மேலது., ப. 1089–1091.
68. மேலது., ப. 470–171.
69. மேலது., பக். 678–680.
70. மேலது., பக். 448–449.
71. அ. தட்சிணாமூர்த்தி (உ.ஆ.), ஐங்குறுநூறு மூலமும் உரையும், ப. 87.
72. மேலது., ப. 281.
73. இரா. செயபால் (உ.ஆ.), அகநானூறு மூலமும் உரையும், பக். 446–447.
74. அ. தட்சிணாமூர்த்தி (உ.ஆ.), ஐங்குறுநூறு மூலமும் உரையும், ப. 29.
75. கு.வெ. பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), நற்றிணை மூலமும் உரையும், ப. 441–442.
76. மேலது., பக். 578–579.

## இயல் – 4

# சங்க அக இலக்கியத்தில் தோழி கூற்றில் அச்சம்

### முன்னுரை

தலைவன், தலைவியரின் அக ஒழுக்கங்கள் முறையாக நடந்தேற துணை நிற்பவள் தோழி. பருவ நிலைகள் காரணமாக, தலைவியை வரைவு செய்ய வேண்டி பொருளீட்டச் செல்லுகின்ற காலங்களிலும் தலைவியை பகல், இரவு நேரங்களில் சந்தித்து மகிழ்கின்றபோதும் உறுதுணையாகிறாள் தோழி.

தலைவன் ஏதேனும் ஒரு சூழலில் வரைவு நீட்டிக்கின்ற காலங்களில் தலைவியின் உணர்வுகளை எடுத்துரைக்கின்றாள். தலைவனின் உணர்வுகளை உணர்ந்து அவனது களவு ஒழுக்கங்கள் நிறைவாகுவதற்கு காரணமாகிறாள். களவுக் காலங்களில் தலைவன், தலைவி இருவரும் காதல் செய்து வரைவு முடித்துக் கற்பு வாழ்க்கை நிகழ்த்துகின்றபோதும் தோழி துணை நிற்கின்றாள். இத்தகு சூழல்களின் உணர்வுகளைப் புலப்படுத்துகின்ற சங்க அகப்பாடல்களில் அச்சம் மெய்ப்பாட்டுணர்வு அமைந்திருக்குமாற்றை இவ்வியலில் விளக்கப்படுகிறது.

### களவுப் பாடல்களில் அச்சம்

தலைவனும் தலைவியும் ஒருவரை ஒருவர் கண்டு காதல் கொண்ட பின்னர், பிறர்க்கு அஞ்சி நெருங்கிப் பழக வாய்ப்பு இன்றி வருந்துவர். அவர்கள் காதல் ஒழுக்கத்தை அறிந்த தோழி தலைவனுக்கும் தலைவிக்கும் தக்க முறையில் வழிகாட்டி, அவர்களை நன்னெறிப் படுத்துவாள் தோழி. காதல் நெறியில் தலைவனுக்கும் தலைவிக்கும் ஏற்படும் இடர்பாடுகளுக்கு அஞ்சியும் வருந்துவாள். இவ்வாறு தோழிக்கு வருகின்ற அச்ச உணர்வுகள் பாடல்களில் பொதிந்திருப்பதை விளக்கப்படுகின்றது.

**தோழி → தலைவனிடம் கூற்று**

பாங்கியற்கூட்டத்தில் கையுறையை மறுத்த தோழி தலைவனிடம் கூறுவதனை,

"*நொதும லாளர் கொள்ளா ரிவையே*

*எம்மொடு வந்து கடலாடு மகளிரும்*

*நெய்தலம் பகைத்தழைப் பாவை புனையார்*

*உடலகம் கொள்வோரின்மையின்*

*தொடலைக் குற்ற சிலபூ வினரே*"[1] (ஐங்., பா.எ. 187)

என்னும் இப்பாடலில், 'கடலாடும் மகளிர் நெய்தலே தலைப்பட விரவித் தொடுத்த இப்பகைத்தழையினை மணற்கண் நிறுவியாடும் பாவைக்கும் புனையார். வேறு பூக்கள் விரவாமல் முற்றும் நெய்தலே தொடுத்து அணிந்து கொள்வோரும் இலராகலின், தொடலை தொடுப்போரும் இதனிற் சில பூவே கொள்வர். ஆகலின் இதனை யாம் ஏற்பின் நொதுமலாளரும் ஆராய்தற்கு இடனாம் என்கிறாள். இதில், தோழி தலைவனிடம் நீ கையுறை கொடுப்பதால் நொதுமலர் வரைவிற்கு இடனாகும் என்று அஞ்சி அதை மறுத்து உரைக்குமிடத்து அச்சத்தை அறியமுடிகின்றது.

தலைவன் மடலேறுவதால் அதை ஊரார் அறிந்து அலராகுமென்று அஞ்சி தலைவியிடம் அவனை குறை நயப்பிக்குமாறு வேண்டுவதை,

'எல்லா; இஃது ஒத்தன் என் பெறான்? கேட்டைக்காண்

செல்வம் இடைகொள, சாஅய், சான்றவர்

அல்லல் இளைதக்க கேளிருழைச் சென்று,

சொல்லுதல் உற்று, உரைக்கல்லாதவர் போல

'பால்ஊழ் பெயர்ந்து என்னை நோக்கும் : மற்று பான் நோக்கின்,

மெல்ல இறைஞ்சும் தலை,

எல்லா! நீ முன்னத்தான் ஒன்று குறித்தாப் போல் காட்டினை;

நின்னின் விடாஅ நிழல் போல திரிதருவாய்!

என், நீ பெறாதது? அது என்?

சொல்லின், மறாதீதாள் மன்னோ, இவள்?

சொறஅது ஈதல், இரந்தார்க்கு ஒன்று, ஆற்றாது வாழ்தலின்

சாதலும் கூடுமாம் மற்று,

இவள் தந்தை காதலின் பார்க்கும், கொடுக்கும் விழுப்பொருள்;

பாது நீ வேண்டியது?

பேதாய்! பொருள் வேண்டும் புன் கண்மை ஈண்டு இல்லை; பாழ

மருளி மடநோக்கின் நின் தோழி என்னை

அருளீபல் வேண்டுவல் பான்

அன்னையோ?–மண்டு அமர் அட்ட களிறு அன்னாள் தன்னை ஒரு

பெண்டிர் அருளக் கிடந்தது எவன் கொல்லோ?

ஒண்தொடீ! நாண் இலன் மன்ற இவன் ஆயின் ஏன்!

பல்லார் நக்கு எள்ளப்படு மடல்மா ஏறி,

மல்லல் ஊர் ஆங்கண் படுமே, நறுநுதல்

நல்காள் கண் மாறிவிடின்' எனச் செல்வானாம்

எள்ளி நகினும் வரூஉம் : இடை இடைக்

கள்வர் போல் நோக்கினும் நோக்கும் : குறித்தது

கொள்ளாது போகாக் குணன் உடையன் எந்தை தன்

உள்ளம் குறைபடா வாறு'

என்னும் இப்பாடலில், இவனொருத்தன் எதனைக் குறை பெறாதவன், இவன் கேடுற்றதைப் பார். அறிவுடையோர், தம் செல்வம் தீர்ந்துவிட, வறுமையடைந்து, துன்புற்று, தம்முடைய வருத்தத்தைக் களைதற்குரிய தக்க உறவினரிடத்தே சென்று தம் குறையை அவர்க்கு வாய் விட்டுச் சொல்லத் தொடங்கிப் பின்னர் அதனை முடியச் சொல்ல மாட்டாது, இவற்றில் இருப்பாரைப் போலே இவனும் நின்றனன்; தான் கூறக் கருதியதனைக் கைவிட்டுப் பலமுறையாகப் பார்க்கும், பின்னை யான் தன்னைப் பார்க்கின் தான் மெல்லத் தலை இறைஞ்சி நின்றனன் என்றாள். நீ குறிப்பாலே எம்மொடு நட்புச் செய்யக் குறித்தாய் போல எமக்குக் காட்டினை, நின்னை விட்டுப் பிரியாத நிழல் போல, எம்மைத் தொடர்ந்து நீயும் திரிந்து கொண்டிருந்தனை; நீ பெறாதது தான் யாது? நீ அக்குறையுறவுக்கு இடை இடையே கள்வனைப் போல தாள் குறித்த பொருளை நோக்காது நோக்குமாறு போல நின்னை மனம் நோக்காது நோக்கும். அதனால் இவனாயின்; போகின்ற போக்கைப் பார்த்தால், நீ

அருள் செய்யாது கைவிட்டால் பலரும் சிரித்து நகையாட, இகழப்படும் மடன்மா ஏறி, ஆரவாரம் மிக்க ஊரின்கண், அவளோடு, என்னடுத்து நிகழ்ந்ததை ஊரிடத்தே அலராமே எனக் கருதிச் சொல்வான். இவற்றில் அச்சம் தோன்றுவதை உணர முடிகிறது.

தலைவன் தலைவியும் இரவில் சந்தித்து பேசும் இடம் இரவுக்குறி எனப்படும். சில சமயங்களில் தோழியின் துணையோடு இச்சந்திப்பு நேருகிறது. தலைவன் இரவில் வருவதால் அவனுக்கு ஏற்படும் இடையூருக்கு அஞ்சி தோழி அவனுக்கு இரவுக்குறி மறுக்கின்றாள். மறுக்குமிடத்து அச்சம் வெளிப்படுகின்றது.

களவுக் காலத்தில் தலைவன் இரவுக்குறி வேண்டித் தோழியை இரந்தனன், அதற்கிசைந்த தோழி, தலைவியை உடன்படச் செய்வாளாய் அவளருகில் சென்று உரைப்பதை,

"***கரு விரல் மந்திச் செம் முகப் பெருங் களை***
***பெரு வரை அடுக்கத்து அருவி ஆடி,***
***ஓங்கு கழை ஊசல் தூங்கி, வேங்கை***
***வெற்ப அணி நறு வீ கற்சுனை உனிப்ப,***
***கலையொடு திளைக்கும் வரையக நாடன்***
***மாரி நின்ற ஆர் இருள் நடுநாள்***
***அருவி அடுக்கத்து, ஒரு வேல் ஏந்தி***
***மின்னு வசி விளக்கத்து வரும் எனின்***
***என்னோ தோழி நம் இன் உயிர் நிலையே***"[2] (நற்., பா.எ. 334)

என்ற பாடல் சுட்டும். இவற்றில் 'தோழி! கரிய விரலையும் சிவந்த முகத்தையும் உடையனவாய் விளங்கும் பெரிய குரங்கினத்தைச் சுற்றமாக உடையது மந்தி; அது, பெரிய மலைச் சாரலின் அருவி நீரிலாடும்; உயர்ந்த மூங்கிலிடத்து ஏறி ஊசலாடித் தொங்கும்; மலையிலமைந்த வேங்கையின் நறுமணமுடைய மலர்கள் மலைச்சுனை நீரில் உதிருமாறு, அதன் மீதேறிக் கடுவனுடன் புணரும். இத்தகைய மந்திகளுடைய மலையகத்தின் நாடன், மழை பெய்து விளங்கும் அரிய இருளுடைய

நடுயாமத்தில் அருவியுடைய மலைச்சாரலில் மின்னல் இருள் பிளந்து செய்யும் ஒளியே விளக்காகக் கையில் ஒரு வேலேந்தி வருவான்; அங்ஙனம் வரின் நம் இனிய உயிரின் நிலை என்ன ஆகும்' என்ற நிலையில் தோழிக்கு அச்சம் உண்டாகிறது.

இரவுக்குறியை விரும்பிய தலைவனை நோக்கி, தோழி, தலைவனே நீ இரவில் வருவையாயின் நினக்குத் தீங்குண்டாகுமோ வென்றெண்ணி யாம் வருந்துவோம். ஆதலின் நீ வராதே' என்று கூறுகிறாள். இதனை,

"***கருங்கட் தாக்கலை பெரும்பிறிது உற்றென,***
***கைம்மை உய்யாக் காமர் மந்தி***
***கல்லா வன்பறழ் கிளைமுதற் சேர்த்தி,***
***ஓங்குவரை யடுக்கத்துப் பாய்ந்துயிர் செகுக்கும்***
***சாரல்நாட நடு நாள்***
***வாரல் வாழியோ! வருந்துதும் யாமே!***"[3] (குறுந்., பா.எ. 69)

என்னும் பாடலில் 'இருளில் தாவுதலையுடைய ஆண் குரங்கு, சாவினை அடைந்ததாக, கணவன் இல்லாமல் வருந்தும் கைம்மை வாழ்வினைப் பெறாத, தன் கணவனால் விரும்பப்பட்ட பெண் குரங்கு, தன் தொழிலை இனிக் கற்க வேண்டாத தன்னுடைய வலிய குட்டியைச் சுற்றத்தாரிடம் அடைக்கலப்படுத்தி, ஓங்கிய வரைகளையுடைய மலைப்பக்கத்தில் உச்சியினின்று கீழே வீழ்ந்து உயிரை மாய்த்துக்கொள்ளும் இத்தகைய மலைச் சாரலையுடைய நாட்டின் தலைவனே! நள்ளிரவில் என்னைக் காண்பதற்காக வருதலைத் தவிர்ப்பாயாக. அங்ஙனம் நீ வரின், நினக்குத் தீங்கு உண்டாகும் என எண்ணி வருந்துவோம். நீ, தீங்கின்றி வாழ்வாயாக' என்ற விளக்கம் அச்ச உணர்வாகிறது.

இதில் தோழி தலைவன் இரவில் வருவதனால் அவனுக்குத் துன்பம் நேரிடுமோ என அஞ்சி வருந்துவதை அறிய முடிகிறது.

இரவில் வரும் தலைவனிடம், தோழி, 'மலை நாடனே அலரும் பருவத்தாய் அழகினையுடைய மலர் போன்ற மையுண் கண்ணினையுடைய இவரிடத்து நீ இன்றிமையாத காதலையுடைய

வார்த்தையோ இனிது. இஃதொழிய வழியை ஆராய்ந்து பார்க்கும் கண் மின்னலாக இடியென்று கருதாயாய் மழையென்று கருதாயாய் இவ்வரிய வழியிலே இவ்விடத்தே நீ வருகின்ற நிலமை எமக்கு இன்னது........... பக்க மலையை ஊடறுத்துச் சூரமகளிரையுடைய அரிய வழியிலே இவ்விடத்தேற நீ வருகின்ற நிலைமை எமக்கு இன்னாது...... யானை உலாகின்ற அரிய வழியிலேயே இவ்விடத்தே நீ வருகின்ற நிலைமை எமக்கு இன்னாது. அவ்வின்னாமையால் எமக்குத் துன்பம் வருதலின், இனி இராக்காலத்து வாராதேகொள். இவருடைய பெருமையையுடைய மெல்லிய தோள்களை விரவிய பூக்கள் அகன்ற பாறையிலே கோலச்செய்யும் மலைச்சாரலிடத்தே பகற்காலத்தும் வா' என்கிறாள். இதனை,

"..........................................................................

***ஒளிறுவேல் வலன் ஏந்தி ஒருவன் பான் என்னாது***

***களிறு இயங்கு ஆர் இடை ஈங்கு நீ வருவதை அதனால்***

***இரவின் வாரல் ஐய விரவு வீ***

***அகல் அறை வரிக்கும் சாரல்***

***பகலும் பெறுவை, இவள் தசமென்தோளே***"[4] (கலித்., பா.எ. 49)

என்ற பாடலடிகள் சுட்டும். இதில் தலைவன் இரவில் வருவதால் விலங்கினங்களால் ஏற்படும் இடையூறுக்கு அஞ்சி பகற்குறி உணர்த்துமிடத்து அச்சம் சுட்டப்படுகின்றது.

நற்றிணையில் தோழி வரைவிடப் பிரிய விரும்பும் தலைவனிடம், நீ பிரிந்தால் மீனினத்தை மிகத்தின்ற வெளிய நாரை மிதித்து நீர் வற்றிய குளத்து நெய்தல் மலர் போல் அவள் ஒரு நொடிப்பொழுதும் உயிர் வைத்திருக்க மாட்டாள். அங்ஙனம் இறந்துபடும் செயலை நினையாது நீ அறியாமையுடையவனாவாய்' என்று கூறுவதனை,

"***தம் நாட்டு விளைந்த வெண்ணெல் தந்து,***

***பிற நாட்டு உப்பின் கொள்ளை சாற்றி,***

***நெடு நெறி ஒழுகை நிலவு மணல் நீந்தி,***

***அவண் உறை முனிந்த ஒக்கலொடு புலம் பெயர்ந்து***

*உமணர் போகலும் இன்னா தாகும்*

*மடவை மன்ற கொண்க! வயின்தோறு*

*இன்னாது அலைக்கும் ஊதையொடு ஓரும்*

*நும்மில் புலம்பின் மாலையும் உடைத்தே!*

*இன்மீன் ஆர்ந்த வெண்குருகு மிதித்த*

*வறுநீர் நெய்தல் போல,*

*வாழாள் ஆதல் சூழாதோயே*"[5] (நற்., பா.எ. 183)

என்ற பாடலடிகள் விளக்கும். இப்பாடலில், 'கொண்கனே! மருத நிலத்தின்கண் உள்ள உப்பு வாணிகர் தம் நாட்டில் விளைந்த வெண்ணெல்லை வண்டிகளிலே ஏற்றிக்கொண்டு போய் விற்க, அதற்கு விலையாகப் பிற நாடாகிய நெய்தல் நிலப்பகுதியில் விளைந்த உப்பைப் பெற்று வந்து விலை கூறுவர். அவ்வுமணர் நீண்ட வழிகளில் வண்டிகளின் வரிசையோடு நிலவொளி போலும் மணற்பரப்பைக் கடந்து தாம் வீட்டைப் பிரிந்து போவதால் அவ்விடத்திலிருப்பதற்கு வெறுத்துத் தம் வணிகச் சுற்றத்துடனே அங்கிருந்து நீங்குவர். அவர் தம் வணிகக் கூட்டத்தோடும் வண்டிகளோடும் தங்கிய இடத்தை விட்டு நீங்குதல் அவ்வூர்க்குத் துன்பத்தைத் தருவதாக அமையும். அவ்வாறே நீயும் எம்மைக் கைவிட்டு இவ்விடத்திலிருந்து நீங்குவது எமக்கும் துன்பத்தைத் தருவதாகும். இத்துன்பத்தை மிகுதியாக்குதற்குத் தாம் செல்லுமிடமெல்லாம் துன்புறுத்தி வரும் வாடைக்காற்றும், நீ பிரிந்த நிலையில் தமியேமாக இருக்கும் நிலையில் வருகின்ற மாலைப்பொழுதும் துணையாய் இருக்கின்றன. இதனை அறிந்தும் நீ எம்மைப் பிரியின் மீனினத்தை மிகுதியாகத் தின்ற வெளிய நாரை மிதித்த நீர் வற்றிய குளத்திற் பூத்த நெய்தல் மலர்போல இவள் உயிர் வாழமாட்டாள். அங்ஙனம் துன்புறும் நிலையில் உள்ள இவளைக் குறித்து ஆய்ந்து பார்த்தில்லை. ஆகவே நீ அறியாமை மிக உடையை' என்பதில் அச்சம் உருவாகிறது. இதில் தோழி தலைவனிடம் நீ பிரிந்து சென்றால் உன்னை நினைத்து வருந்தி ஆற்றாமையால் இறந்து விடுவாள் என்று குறிப்பாக அச்சுறுத்துவதை அறியலாம்.

களவுக்காலத்தில் திருமணத்திற்கு வேண்டும் பொருளீட்டற்பொருட்டுப் பிரிந்து செல்ல விரும்புவதாகத் தலைவன் கூறக் கேட்ட தோழி அவனுக்குக் கூறுவதை,

"***சுரும்பு உணக் களித்த புகர் முக வேழம்***

***இரும் பிணர்த் துறுகல் பிடிசெத்துத் தழூஉம் நின்***

***குன்று கெழு நல் நாட்டுச் சென்ற பின்றை***

***நேர் இறைப் பணைத்தோள் ஞெகிழ***

***வாராய் ஆயின், வாழேம் எதய்யோ***"[6] (ஐங்., பா.எ. 239)

என்னும் இப்பாடலில், 'வண்டுகள் வந்து மொய்த்து உண்டு மகிழுமாறு மதநீர் ஒழுக நின்ற, புள்ளிகளை முகத்தேக் கொண்ட வேழம், (தன் களிப்பு மிகுதியால்) பெரிய (கரிய) சருச்சரையை உடைய குண்டுக்கல்லைத் தன் பிடியென்று பிறழவுணர்ந்து தழுவும் குன்றுகள் பொருந்திய நின் நல்ல நாட்டுக்கு நீ சென்ற பின்னர், இங்குள்ள என் தோழியின் நேரிய கோடுகள் கொண்ட மூங்கில் போன்ற மெல்லிய தோள்கள் நெகிழுமாறு, நீ சொன்ன காலத்தில் வரத்தவறினால், யாம் உயிர் வாழ்தல் அரிது' என்பதில் அச்சம் உணர்வு தோன்றுகிறது.

**வரைவு கடாஅமிடத்து அச்சம்**

தோழி தலைவியை திருமணம் செய்யும்பொருட்டு தலைவனை வற்புறுத்துவது வரைவுகடாவுதல் எனப்படும். '***களவுக்காலத்தில் தலைவியைச் சந்தித்து தலைவன் இரவுக் குறியிலும் பகற்குறியிலும் பன்முறை வந்தொழுகுவான், அப்போதெல்லாம் தலைவனிடம் தோழி பலமுறை உரையாடுவாள். இக்களவுக்காலம் மேலும், நீட்டித்தால் வெறியாட்டு, நொதுமலர் வரைவு போன்ற பல இன்னல்கள் ஏற்ப வாய்ப்புண்டு என அறிந்த அறிவுடைத்தோழி, களவு என ஒன்று நடந்தது எனத் தோன்றா வகையில் மணத்தை முடித்து வைக்கப் பல செயல்களை மேற்கொள்வாள். பல்வேறு வழிகளால் தலைவனை வற்புறுத்துவாள். இனியும் இவ்வாறெல்லாம் களவிலேயே வந்து தலைவியைக்கூடும் வழக்கத்தை விடுத்து விரைந்து மணம் செய்து கொள்ள வேண்டும்' என்று தலைவனை வேண்டும் முறையில் அவளது உரையாடல்கள் அமையும்.***

***தோழியின் இம்முயற்சியே வரைவுகடாவுதல் ஆகும்***"[7] என்று விளக்குவர் இராமசண்முகம்.

வரைவுகடாதல் குறித்து மூ. இராகவையங்கார் கூறுகையில், "***தலைவன் இருவகைக் குறிகளிலும் பலகாலும் வந்தொழுகும் இடத்து இக்களவு வெளிப்படச் சுற்றத்தார் இற்செறிப்பாலோ என்றும் வழியாலும் பொழுதாலும் தலைவற்கு ஏதம் வருங்கொல் என்றும் தோழி அச்சமுற்று இவ்வொழுக்கமொழுகல் நுங்குடிப்பிறப்புக்குஞ் சிறப்புக்கும் பொருந்தாமையின், இனி நீவிர் இவளை மணந்து கொள்வதே தகுதியென்று தலைவனை வரைவுகடாத் தொடங்குவாள் என்பார். மேலும், அவர் இவ்வரைவு கடாவும் முறை 'குறிப்பு' வெளிப்படை என இருவகையாகப் பகுக்கப்படுவதைக் காணலாம். குறிப்பாவது தோழி தலைவனை நோக்கி எம் மன்ன தலைமகளது வேறுபாடு கண்டு, இஃது இவட்கு எதனால் வந்ததென்று ஆராய்வாளாயினாள் எனப் பெய்தலைப் பெய்து கூறுதல் போல்வது. இதனாற்போந்தது, அன்னை அதன் காரணமறிந்து இற்செறிக்கக் கூடுமாதலின் அதற்குள் நீவிர் வரையாது தாழ்ப்பாதன்? என்பதாம். வெளிப்பட வரைவு கடாதலாவது, நும்களவொழுக்கம் ஊரால் அறியப்பட்டு, முதலில் அம்பலாய் முளைத்துப் பின் அலராக விளைந்தது. இனி வரையைத் தாழ்க்காற்பாயிர் அல்லிர் என்றாற் போல்வது***"[8] என இவ்விரு வகையாக குறிப்பிடுவர்.

வரைவுகடாதலின் முன்செயல்களாகப் பல நிகழ்வுகள் நடைபெறுதல் உண்டு. அவை தலைவனை வரைவிற்கு தூண்டுவனாக அமையும். அந்நிகழ்வுகளை ஏதுவாகக் கொண்டு தோழி தலைவனிடம் வரைவு பற்றி வலியுறுத்த இயலும் பகற்குறி இரவுக்குறி இடையீடு, அலரச்சம், தலைவியின் இற்செறிப்பு, தலைவன் வரும் ஆற்றருமை, தலைவியின் ஆற்றாமை, வெறியாட்டம், நொதுமலர் வரைவு போன்ற இவைகளே அத்தகைய ஏதுக்காளய் அமைக்கின்றன. இவையெல்லாம் சங்க இலக்கியங்களின் பொருண்மையாய்க் காணக்கிடக்கின்றன. இவை அனைத்தையும் வரைவு கடாதலுக்குரிய காரணங்களாய்ப் புலவர்கள்

பாடிவைத்தனர். இவற்றுள் ஏதேனும் ஒரு காரணத்தை உள்ளடக்கி தோழி தலைவனை வரைவுகடாவுவதாக அமைக்கப்பெற்றுள்ளன. இவ்வேறுபாடுகளைக் காட்டி தோழி தலைவனை வரைவுகடாமிடத்து அச்சம் வெளிப்படுகின்றன.

தலைவன் தலைவியைக் காண இரவுக்குறியில் வருமிடத்து அவனுக்கு ஏதும் நிகழுமென்று அஞ்சி தோழி தலைவனை வரைவுகடாமிடத்து அச்சம் வெளிப்படுகின்றது.

இரவில் கடுமையான வழியில் வரும் தலைவனிடம் தோழி இரவுக் குறி மறுத்து மணம் புரியுமாறு வற்புறுத்தக் கருதினள். அவள் இரவுக்குறியில் வந்த தலைவனிடம் இரவில் நேரும் துன்பத்திற்கு அஞ்சாது வருகின்றனை; நீ வருவது கண்டு யான் அஞ்சுகிறேன்; எனவே சிறிய வழியில் வருதல் வேண்டா' என மறுத்துரைத்ததை,

"***பினர்ச் சுவற் பன்றி தோல்முலைப் பிணவொடு***
***கணைக் கால் ஏனல் கைம்மிகக் கவர்தலின்***
***கல் அதர் அரும் புழை அல்கி, கானவன்,***
***வில்லின் தந்த வெண் கோட்டு ஏற்றை,***
***புனை இருங் கதுப்பின் மனையோள் கெண்டி,***
***குடி முறை பகுக்கும் நெடுமலை நாட!***
***உரவுச் சின வேழம் உறு புலி பார்க்கும்***
***இரவின் அஞ்சாய் அஞ்சுவல் அரவின்***
***ஈர் அளைப் புற்றம், கார் என முற்றி***
***இரை தேர் எண்கினம் அகழும்***
***வரை சேர் சிறு நெறி வாராதீமே***"[9] (நற்., பா.எ. 336)

என்று குறிப்பிடும் இப்பாடலடிகளில், 'சொரசொரப்பான பிடரியையுடைய ஆண்பன்றி, தோலாய் வற்றிவிட்ட முலையையுடைய பெண்பன்றியுடன் சென்று திரண்ட அடிப்பகுதியையுடைய தினைக்கதிரை அளவிறந்து திண்ணும். அதனையறிந்த கானவன் கல் நெருங்கிய அரிய வழியிடையே தங்கிப்பதுங்கி வில்லினால் அம்பெய்து, வெண்மையான தந்தத்தையுடைய

ஆண்பன்றியைக் கொல்வான். அவன் தான் கொன்ற பன்றியை அலங்கரிக்கப்பெற்ற கரிய கூந்தலையுடைய மனைவியிடம் தருவாள். அவளும் அப்பன்றியை அறுத்துத் தன் குடியினர் யாவர்க்கும் முறையுடன் பகுத்துத் தருவாள். இத்தகைய கானவரையுடைய நெடிய மலையின் நாடனே. வலிமையான சினம் பெருக, யானை அவ்விடத்தே புலி வருவதை நோக்கியிருக்கும் இரவுப்பொழுதில், எம்மைக் கருதி வருவதற்கு அஞ்சாய். ஆயினும் நீ வருவது கண்டு யான் அஞ்சுகிறேன். பாம்பு உறைகின்றதும் ஈரமான துளையுடையதுமான புற்றினை மேகம் சூழுமாறு போலச் சூழ்ந்து இரை தேடும் கரடியினம் அகழ்ந்து பெயர்க்கும். எனவே, இத்தகைய மலையிடத்துப் பொருந்திய சிறிய நெறியிலே இனி வருதல் வேண்டா' என்ற விளக்கம் அச்ச உணர்வை ஏற்படுத்துகிறது.

இரவின்கண், தோழி தலைவனிடம், 'கரிய பெண்புலி பசியிழந்ததாக அதனையறிந்து வலிய ஆண்புலி புள்ளிகளையுடைய முகம்பிளவுபடுமாறு மோதிக் களிற்றுயானையைக் கொன்று இடியினுங் காட்டில் மேலாக முழங்கநிற்கும் அச்சமிக்க நடுயாமத்தில் செறிந்து இருளாண் மூடப்பட்ட கருதினார்க்கு நடுக்கம் வருகின்ற நெறியின்கண்ணே பாம்பின்மீது சினந்து விழுந்து கொல்லுகின்ற இடி இடிக்கும்பொழுது நீ எங்களை நினைந்து வருதலானே அருளுடையை அல்லைக் காண்' என்று கூறுமிடத்தும் வெளிப்படுகிறது. இதனை,

"***கல் லயற் கலித்த கருங்கால் வேங்கை***
***அலங்கலம் தொடலை அன்ன குருளை***
***வயப்புனிற்று இரும்பிணப் பசித்தென வயப் புலி***
***புகர்முகந் சிதையத் தாக்கி, களிறட்டு***
***உருமிசை உரறும் உட்குவரு நடுநாள்***
***அருளினை போலினும் அருளாய் அன்றே***
***கனை யிருள் புதைத்த அஞ்சுவரும் இயவில்***
***பாம்புஉடன் றிரிக்கும் உருமோடு***
***ஏங்குவரை நாடநீ வருத லானே***"[10] (நற்., பா.எ. 383)

என்ற பாடலடிகள் சுட்டும். இதில் அச்சம் 'உட்கு' என்ற சொல்லில் வந்துள்ளது.

இரவுக்குறியில் வருகின்ற தலைமகற்கு தோழி 'கொடிச்சியாகிய தலைமகள் காக்கும் பெரிய கதிர்களையுடைய தினைய மலைப்பக்கத்தே வாழும் மயில்கள் கவரும் நாடனே, கங்குல் நடுநாளாகிய நள்ளிரவில் வருகின்றனையாகலின் வரும் நெறியின்கண் அச்சம் பொருந்திய விலங்குகள் தின்னைத் தாக்கின யாது விளையுமோ அறிகிலே னாகலின், இனி இரவுக்குறி வருதலைத் தவிர்க' என்ற விளக்கத்தின்வழி இரவில் வரும் தலைவனுக்கு ஏதத்தால் அச்சம் உண்டாவதை தோழி வரைவை உணர்த்துமிடத்து உணர்த்துவதை,

"***கொடிச்சி காக்கும் பெருங்குர லேனல்***
***அடுக்கன் மஞ்ஞை கவரு நாட***
***நடுநாள் கங்குலும் வருதி***
***கடுமா தாக்கி னறியேன் யானே***"[11] (ஐங்., பா.எ. 296)

என்ற பாடலடிகள் உணர்த்தும்.

'இரவுக்குறி வரும் தலைவனிடம் தோழி இரவுக்குறியது ஏதமும், ஏதத்தாய் வரும் துன்பத்தை உணர்த்துமிடத்து அச்சத்தை,

"..........................................................................
***மணங்கமழ் நாற்றத்த மலை நின்று பலி பெறூஉம்***
***அணங்கு என அஞ்சுவர், சிறு குடியோரே***
***ஈர்ந் தண் ஆடையை எல்லி மாலையை***
***சோர்ந்து வீழ் கதுப்பினாள் செய்குறி நீவரின்,***
***ஒளிதிகழ் நெகிழியர், கவணையர், வில்லர்,***
***'களிறு' என ஆர்ப்பவர், ஏனல் காவலரே,***
***ஆர மார்பினை, அண்ணலை, அளியை***
***ஐது அகல் அல்குலாள் செய்குறி நீவரின்,***
***'கறிவளர் சிலம்பில் வழங்கல் ஆனாப்***
***புலி என்று ஓர்க்கும் இக்கலி கேழ் ஊரே,***
***என ஆங்கு,***

***விலங்கு ஓரார், மெய் ஓர்ப்பின், இவள் வாழாள், இவள் அன்றி***
***புலம்புகழ் ஒருவ! யானும் வாழேன!***
***அதனால் பொதி அவிழ் வைகறை வந்து, நீ குறை கூறி,***
***வதுவை அயர்தல் வேண்டுவல்; ஆங்கு,***
***புதுவை போலும் நின்வரவும், இவள்***
***வதுவை நாண் ஒடுக்கமும், காண்குவல் யானே***"[12] (கலித்., பா.எ. 52)

என்ற பாடலடிகள் குறிப்பிடும். இப்பாடலில், 'மலைநாடனே, நான் கூறுகின்றவற்றைக் கேட்பாயாக. தாமரையினாலாகிய கண்ணியைச் சூடியுள்ளாய். குளிர்ந்த மணம் வீசும் சந்தனத்தைப் பூசியுள்ளாய்; ஒத்த இதழாற் கட்டின கோதையை உடையாள் செய்த குறியிடத்தே நீ வந்தனை. நீ வருங்கால், மணம் கமழும் மலைக்கண்ணே நின்று, தாங்கள் தரும் பலியை ஏற்றுக்கொள்ளும் அணங்குதானோ நீ என்று கருதிச் சிறுகுடியில் உள்ளோர் அஞ்சுவர்.

பகற்காலத்தே நீராடுதற்கேற்ற ஈரத்தினால் தண்ணிதாகிய ஆடையைச் சூடினை. இராக்காலத்தே புணர்ச்சிக்கேற்றன அணிபெற அணிந்து வரும் இயல்பினை உடையை. மயிர்கள் கன்னங்களிலே அழகாகக் கிடந்து புரளும் இவள் செய்த இரவுக் குறியிடத்தே நீ வந்தனை. நீ வருங்கால், மரக்கிளைக் தழைகளின் அசைவுகளான், யானைதான் வந்ததோ எனத் தினைப்புனம் காத்திருப்போர், ஒளிவிளங்குகின்ற தீப்பந்தகளுடன், கல்லெறியும் கவணையும், வில்லையும் உடையராய் ஆர்ப்பரிப்பர். ஆரம் சூடிய மார்பினை உடையை. தலைமை உடையை. அருளுடையை. மெல்லியதாய் அகன்ற அல்குலை உடையாள் செய்த குறியிடத்தே வந்தனை. நீ வருங்கால், நின்னைக் கண்டு விலங்கு முதலிய அஞ்சி ஓட, அவ்வோசையாலே மிளகு வளர்ந்த மலையிடத்தே உலாவுகின்ற புலிதான் வந்து விட்டதோ என்று செருக்குப் பொருந்தின ஊரார் ஓர்ந்து நிற்பார்கள். பலரும் பாராட்டும் சிறந்த அறிவினை உடையவனே, ஊரார் வேறாகக் கருதாராய், மெய்யென்று உணர்வாராயின், களவொழுக்கம் அறிந்தார் என்று இவள் உயிர் வாழ்ந்திருக்க மாட்டாள். இவளை இழந்து யானும்

உயிர் வாழேன். அதனால், மலர்கள் அலர்கின்ற விடியற்காலத்தே வந்து, நின் காரியத்தினைப் பலர்க்குங் கூறி, இவளை மணந்து கொள்ளுதலை விரும்பா நின்றேன். வேண்டினேன். புதியவனைப் போல நீ வரும் காட்சியினையும், திருமணக் கோலத்தில் நாணால் இவள் ஒடுங்கி இருக்கும் காட்சியினையும் யான் காண்பேன் ஆகுவள்' என்பதில் தலைவியின் துன்ப நிலையை எண்ணி அத்தகு துன்பம் நீங்கும் காலம் தலைவனாலே முடியும். ஆனால் அவன் இரவினில் வருவதால் மிகப்பெரும் துன்பம் வருமோ என்பதை மனதில் நிறுத்தி அச்சமுறுகிறாள் தோழி' என்ற விளக்கம் அச்ச உணர்வை புலப்படுத்துகிறது. இதில் விலங்கு நிலைக்களன் வழி அச்சம் உணர்த்தப்படுகிறது.

மேலும், தோழி தலைவனிடம்,

> "***சுரும்பு உண விரிந்த கருங்கால் வேங்கைப்***
> ***பெருஞ் சினைத் தொடுத்த கொழுங் கண் இறாஅல்,***
> ***புள்ளுற்றுக் கசிந்த தீம் தேன் கல் அளைக்***
> ***குறக் குறுமாக்கள் உண்ட மிச்சிலைப்***
> ***புன் தலை மந்தி வன் பறழ் நக்கும்***
> ***நன் மலை நாட! பண்பு எனப் படுமோ***
> ***நின் நயந்து உறைவி இன் உயிர் உள்ளாய்,***
> ***அணங்குடை அரவின் ஆர் இருள் நடு நாள்,***
> ***மை படு சிறு நெறி எகு துணை ஆக***
> ***ஆரம் கமழும் மார்பினை,***
> ***சாரற் சிறுகுடி ஈங்கு நீ வரலே***"[13] (நற்., பா.எ. 168)

என்னும் இப்பாடலில், 'மலைநாடனே நின்னை விரும்பியுறையும் இவளது இனி உயிர்படுகின்ற துன்பத்தை கருதாமல், வருந்தும் தன்மை உடைய பாம்புகள் இயங்குகின்ற வருத்தத்திற்குரிய இரவின் நடுயாமத்தில் மயக்கந்தருகின்ற சிறிய வழியின்கண்ணே நின் கையிலேந்திய வேற்படையே நினக்குரிய துணையாகக் கொண்டு சந்தனம் பூசுதலால் அதன் நறியமணங் கமழ்கின்ற மார்பினையுடையையாய்ச் சாரலின் கண் உள்ள சிறு குடியாகிய இவ்விடத்து நீ தனியே வருதல் நலம் பயக்குமோ?

ஆதலின் இனி இங்கு இரவில் வராதே' எனத் தோழி தலைவன் வரும் நெறியின் ஏதமஞ்சி தலைவன் வரவை மறுத்து வரைவுகடாமிடத்து அச்சம் வெளிப்படுகின்றது.

"***கருங்கால் வேங்கை வீஉகு துறுகல்***
***இரும்புலிக் குருளையிற் றோன்றுங் காட்டிடை***
***எல்லி வருநர் களவிற்கு***
***நல்லை அல்லை நெடுவெண் ணிலவே***"[14] (குறுந்., பா.எ. 47)

எனும் இப்பாடலில், 'நெடும்பொழுது ஒளிவழங்கும் வெண்ணிலாவே. கரிய அடிப்பகுதியையுடைய வேங்கை மரத்தின் மலர்கள் உதிர்ந்து காணப்படும் பாறை, பெரிய புலியின் குட்டி போலக் காட்சியளிக்கும் காட்டின் கண், பல இடையூறுகளுக்கு அஞ்சாது இரவின் கண் வரும் தலைவரது களவொழுக்கத்திற்கு, நீ நன்மை செய்வாயல்லை. என்பதிலிருந்து அச்ச உணர்வாகிறது. இவற்றிற்கு விளக்கம் கூறும் உ.வே. சாமிநாதய்யர், "***காட்டிடை வரும்போது வழியிலுள்ள வேங்கை மலர் உக்க பாறையை வேங்கைக் குருளை என்று அஞ்சச் செய்வதாலும், ஊரின்கண் உள்ளார் கண்டு கொள்வதற்கு ஏதுவாதலாலும் நிலவை நல்ல யல்லை என்றாள்***"[15] என்பார்.

இதில் தோழி இரவில் வருவது நல்லதல்ல விரைவாக வரைய வேண்டும் என்று குறிப்பாக உணர்த்துமிடத்து குறிப்பாக ஏதத்திற்கு அஞ்சுவதை அறிய முடிகின்றது.

இரவுக்குறியின்போது, சிறைப்புறமாக இருக்கும் தலைவனிடம் தோழி,

"***சேறிரோ? எனச் செப்பலும் ஆற்றாம்;***
***வருவீரோ? என வினவலும் வினவாம்;***
***யாங்குச் செய்வாம் கொல் – தோழி பாம்பின்***
***பையுடை இருந்தலை துமிக்கும் ஏற்றொடு***
***நடுநாள் என்னார், வந்து,***
***நெடுமென் பணைத்தோள் அடைந்திசினோரே***"[16] (குறுந்., பா.எ. 268)

என்னும் பாடலில், ‘பாம்புகளின் படத்தை உடைய பெரிய தலையை துணிக்கும் இடியோடு கூடிய பாதியிரவு என்று எண்ணராகி ஈண்டுப் போந்து நெடிய, மெல்லிய மூங்கிலைப் போன்ற நின் தோள்களை அடைந்த தலைவர் பால் செல்கின்றீரோ என்று செப்புதற்கும் வன்மை இல்லே மாயினேம் சென்றால் மீண்டும் வருவீரோ என்று கேட்டலையும் செய்யோம் எவ்வாறு செய்வோம்’ என்று கூறுகிறாள்.

இதற்கு உ.வே. சாமிநாதையர், “***தலைவனது வரவினால் இன்பம் உண்டாயினும் ஆற்றில் நிகழும் ஏதம் நினைந்து அச்சமும், அவன் வாராமையின் அவ்வச்ச மின்றெனினும் அவனைக் காணாத் துன்பம் உண்டாதலின் யாங்குச் செய்வோம்!’ என மயங்கினாள். இடையீடின்றி உடன் உறைவதற்குரிய இவ்வற நிலையே தக்கதென்றும், அதன் பொருட்டுத் தலைவன் வரைந்து கொள்ள வேண்டும் என்று உய்த்துணர வைத்தாள்***”[17] என்று விளக்கம் அளிப்பார்.

தலைவன் இரவு நேரத்தில் தலைவியைக் கூடி நீங்கும்பொழுது தோழி அவனை எதிர்ப்பட்டு, இரவில் வருதலில் தோன்றும் இடையூறுகளைச் சொல்லி அறிவுறுத்துகிறாள். இரவுக் குறியில் வரும் தலைவனிடம் தோழி,

“......................................

***ஆரிருள் பெருகின வாரல்***

***கோட்டுமா வழங்கும காட்டக நெறியே***”[18] (ஐங்., பா.எ. 282)

இப்பாடலில், ‘நாடனே! சாரலில் மிக்க இருள் பெருகிற்று. மேலும், காட்டகத்தே செல்லும் நெறிகளில் யானைகள் உலவுகின்றன. ஆதலால் அவ்வரி வருதலைத் தவிர்ப்பாயாக’. இதில், தலைவன் தலைவியை சந்திப்பதற்காக இரவில் வருவதால் அவன் உயிர்க்கு விலங்குகளால் அச்சம் ஏற்படும் என்று தோழி அஞ்சுவதை அறிய முடிகின்றது.

இதில் இத்தகைய இன்னாமை மிக்க வழியிலே தலைவன் வந்து போவதால் நான் வருந்துகிறேன் என்று கூறி தோழி வரைவுகடாமிடத்து குறிப்பாக அச்சம் சுட்டப்படுகின்றது.

இரவுக் குறி வரும் குறிஞ்சித் தலைவனிடம் தோழி கூறுகின்ற,

"*கூனல் எண்கின் குறுநடைத் தொழுதி*
*சிதலை செய்த செந் நிலைப் புற்றின்*
*மண் புனை நெடுங் கோடு உடைய வாங்கி,*
*இரை நசைஇப் பரிக்கும் அரைநாட் கங்குல்*
*ஈன்று அணி வயவுப் பிணப் பசித்தென மறப் பலி*
*ஒளிறு ஏந்து மருப்பின் களிறு அட்டுக் குழுமம்*
*பனி இருஞ் சோலை, 'எமியம்' என்னாய்,*
*தீங்கு செய்தனையே ஈங்கு வந்தோயே;*
*நாள் இடைப்படின் என் தோழி வாழாள்*
*தோளிடை முயக்கம் நீயும் வெய்யை;*
*கழியக் காதலர் ஆயினும், சான்றோர்*
*பழியொடு வரூஉம் இன்பம் வெஃகார்;*
*வரையின் எவனோ? வான் தோய் வெற்ப*
*..........................................................*"[19] (அகநா., பா.எ. 112)

என்னும் பாடலில் அச்சம் கூறுப்படுகிறது. இதில் 'கூனிய முதுகினையும் குறி நடையினையும் உடைய கரடிக் கூட்டம், கறையான் இயற்றிய செங்குத்தாய் நிற்கும் நிலையினையுடைய பற்றினது மண்ணாற் புனைந்த நெடிய ஓடுகள் உடைந்து போகும்படி அகழ்ந்தெடுத்து: தமக்கிரையான் புற்றாஞ் சோற்றினை விரும்பித் தின்னற்குச் செல்லுதற்குரிய இந்த நள்ளிரவின் இருளினூடே; குட்டி ஈன்ற அண்மைக் காலம் காரணமாக வருத்தத்தோடிருக்கின்ற பெண்புலி பசியுடன் இருப்பதறிந்து தகறுகண்மையுடைய ஆண் புலியானது அதற்குணவாக விளங்குகின்ற உயர்ந்த கொம்புகளையுடைய களிற்றியானையைக் கொன்று வீழ்த்தி முழங்கி நின்ற குளிர்ந்த பெரிய சோலையின் ஊடே முகுந்து யாம் தமியம் என்று எண்ணாமல் இங்கு வந்தனை, இங்ஙனம் வந்த நீ எமக்கு அருள் செய்யவே வந்தான். எமக்குத் துன்பமே செய்தனை காண் இனி நீ வாராமல் ஒரே ஒருநாள் இடைப்பட்டாலும் எம் பெருமாட்டி உயிர் வாழள்' என்று கூறுகிறாள். இவற்றில் தோழி நீ இரவில் கொடி நெறியின்கண்

வருவதால் உனக்கு ஏதேனும் துன்பம் நிகழுமாயின் இவள் உயிர் வாழாள் என்று கூறி வரைவுகடாமிடத்து குறிப்பாக அஞ்சுவதை அறிய முடிகின்றது.

தலைவன் சிறைப்புறமாக நிற்கும்போது, தோழி குறிப்பாக அலரச்சத்தைச் சுட்டி வரைவுகடாவுவதை,

"***கானல் அம் சிறுகுடிக் கடல் மேம்பரதவர்***
***நீல்நிறப் புன்னைக் கொழு நிழல் அசைஇ***
***தண் பெரும் பரப்பின் ஏண்பதம் நோக்கி***
***யாங்கண் அரில்வலை உணக்கும் துறைவனொடு***
***அலரே அன்னை அறியின் இவண் உறை வாழ்க்கை***
***அரிய ஆம் நமக்கு எனக் கூறின்***
***கொண்டும் செல்வர்கொல் தோழி உணர்***
***வெண் கல் உப்பின் கொள்ளை சாற்றி***
***..........................................................***"[20] (நற்., பா.எ. 38)

என்ற பாடலடிகளில், 'கடற்கரைச் சோலையில் உள்ள சிறுகுடியிலிருந்து கடலின் மேற்செல்லும் மீனவர் நீல நிறப் புன்னை மர நிழலிலே தங்குவர். குளிர்ந்த பெரும் பரப்பை உடைய கடலின் மேற் செல்லுதற்குரிய செவ்வி பார்த்து, முறுக்குண்ட வலையைப் பிரித்துக் காய விடுவர். அத்தகைய துறையை உடைய தலைவனிடம் நீ சென்று 'நமக்கு உண்டாகிய பழிச்சொல்லை அன்னை அறிந்தால் இனி இங்குத் தங்கிக் களவொழுக்கத்தில் வாழ்தல் அரிதாகும்' என்று கூறினாள். உப்பு வாணிகர் வெண்மையான கல்லுப்பின் விலை கூறிக் கூட்டமாகிய ஆநிரையை ஒலியெழுப்பிப் போகச் செய்யும் வழியில் செல்லும் வண்டிகள் மணல் பரப்பில் மடுத்து முழங்கும் ஓசையைக் கேட்டு வயல்களில் உள்ள கருங்கால் வெண்குருகுகள் அஞ்சுகின்ற கரிய உப்பங்கழி சூழ்ந்த நெய்தல் நிலத்திலே உள்ள தம் ஊர்க்கு நம்மை அழைத்துக் கொண்டு போவாரோ?' என்பதால் அச்சம் தோன்றுகின்றது.

இதில் மடுத்து முழங்குமோசைக்கு கழனி நாரை வெருவது போல, தலைவன் எதிலார் கூறும் அலர்க்கு அஞ்சுவன் என்பது குறிப்புப் பொருளாகிறது.

இதேபோல், வரைவு நீட்டித்தவழித் தோழி தலைவனிடம்,

"***முழங்கு திரை கொழீஇய மூரி யெக்கர்***
***நுணங்குதுகில் நுடக்கம் போலக் கணம்கொள***
***ஊதை தூற்றும் உரவுநீர்ச் சேர்ப்ப!***
***பூவின் அன்ன நலம்புதி துண்டு***
***நீபுணர்ந் தனையே அன்மையின் யாமே***
***நேர்புடைய நெஞ்சம் தாங்கத் தாங்கி***
***மாசில் கற்பின் மடவோள் குழவி***
***ஒய்ய வாங்கக் கைவிட் டாங்குச்***
***சேணும் எம்மொடு வந்த***
***நாணும் விட்டேம்; அலர்கவிவ் வூரே***"[21] (நற்., பா.எ. 15)

என்னும் இப்பாடலில், 'முழங்குகின்ற அலை கொண்டு வந்து சேர்த்த பெரிய எக்கர் மணலை மென்மையான துகிலின் அசைவைப் போலத் தோன்றுமாறு ஒரு சேரக் காற்றுத் தூற்றும். அத்தகைய நீர் மிக்க வலிய கடற்கரைக்குத் தலைவனே! பூப்போன்ற எமது தலைவியின் நலத்தை நுகர்ந்த பின்பும் உன்னைச் சேர்ந்து உன்னுடையவர்களாய் ஆனோம் இல்லை. ஆகவே நாங்கள் உனக்கு உடம்படக் கூடிய உள்ளத்தில் வருத்தமுற்று, அவ்வருத்தத்தைத் தாங்கினோம். குற்றமற்ற கற்பினையுடைய அறிவற்ற ஒருத்தி தன் குழந்தையைப் பேய் வாங்கிக் கொள்ளக் கைவிட்டதைப் போல முன்னாளிலிருந்து நெடிதாக எம்மோடு வந்த நாணத்தையும் நாங்கள் கைவிட்டோம். இனி இது குறித்து இவ்வூரில் அலர் பரவட்டும்' என்பதில் அலர் பரவுவதால் துன்பம் நேரிடக்கூடும். இருந்தபோதிலும் அதன் துன்பத்தை தாங்காது கூடும் என்று அச்சமாகிறது. இதற்கு, "***கடல்கொழித்து ஒதுக்கிய எக்கர் மணலிற் சிலவற்றைக் காற்று அள்ளித் தூற்றுதல் போல நின்னால் நீக்கப்பட்ட ஊரார் அலர் தூற்றவர்***"[22] என்று பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் விளக்கம் தருவார். இதில் அலரால் அஞ்சி குறிப்பாக வரைவுகடாமிடத்து அச்சம் வெளிப்படுகின்றது.

சிறைப்புறமாக உள்ள தலைவனிடம், தோழி பொலிவுபெற்ற நெற்றியையுடைய கரிய பிடியானை புலம்புமாறு நீரற்ற அகன்ற காட்டினிடத்துப் பெரிய களிற்று யானையைத் தாக்கிக் கொல்லா நிற்கும். 'மலையிடத்தையுடைய சிலம்பன் நின்னிற் பிரியேன் என்று கூறிய பொய்ம் மொழியை மெய்யெனத் தெளிந்து, யாம் எந்நலத்தை இழந்தேவிட்டோம். ஆதலின் இந்நடுயாமத்துக் கண்டுயிலா தொழிந்தனம் பழிதூற்றும் வாயையுடைய ஏதிலாட்டியரால் கூறப்படும் அம்பலொடு சேர ஒலிமிக்க இவ்வூர், மேன்மையில்லாத தீய சொற்கைக் கூறுதற்கு வேண்டிய உரைகளை ஏறட்டெடுத்துக்கொண்டு அமையாத பழி மொழியையுடையதாக எம்மைப்போல' என்பதை,

"***குறுங்கை யிரும்புலிக் கோள்வல் ஏற்றை***
***பூநுத லிரும்பிடி புலம்பத் தாக்கித்***
***தாழ்நீர் நனந்தலைப் பெருங்களி றடூஉங்***
***கல்லக வெற்பன் சொல்லில் தேறி***
***யாமெந் நலனிழந் தனமே யாமத்து***
***அலர்வாய்ப் பெண்டிர் அம்பலொ டொன்றிப்***
***புரையில் தீமொழி பயிற்றிய வரையெடுத்து***
***ஆனாக் கௌவைத் தாகத்***
***தானென் இழந்ததிவ் அழுங்க லூரே***"[23] (நற்., பா.எ. 36)

என்ற பாடல் உணர்த்தும். இதில் தலைவனிடம் ஊரார் பழி தூற்றுவதால் தலைவி அஞ்சி துயிலாமல் வருந்துகின்றாள் என்று தோழி வரைவுணர்த்துமிடத்து அலர்க்கு அஞ்சுவதை அறிய முடிகின்றது.

தலைவன் சிறைபுறத்தே நிற்க, தோழி, 'தலைவன் களவொழுக்கத்தில் நின்னொடு பழகிய காலம் சிறிதாயினும் அதனால் எழுந்த அலர் மிகப்பெரியது என்பதை,

"***மயங்குமலர்க் கோதை குழைய மகிழ்நன்***
***முழங்கிய நாள் தவச் சிலவே, அலரே***
***கூகைக் கோழி வாகைப் பறந்தலைப்***
***பசும்பூட் பாண்டியன் வினைவல் அதிகன்***

***களிறொடு பட்ட ஞான்றை***

***ஒளிறுவாட் கொங்ரர் ஆப்பினும் பெரிதே***"[24] (குறுந்., பா.எ. 393)

இப்பாடலில், 'மகிழ்ச்சியைச் செய்யும் தலைவன், விரவிய மலர்களால் ஆகிய தான் அணிந்த மாலை குழையுமாறு நின்னை இறுகத் தழுவிய நாள்கள் மிகச் சிலவேயாகும். ஆனால், அயலார் கூறும் பழிப்புரைகளோ, கூகைக் கோழியார் என்னும் புலவர் பாடிய வாகை என்னும் ஊர்ப்புறத்தில், போர்க்களத்தின்கண், பசிய பூணை அணிந்த பாண்டியனுக்கு ஏவலில் வலியனாக விளங்கிய அதிகன், களிற்றொடு மாய்ந்தநாளில், விளங்கும் வாட்படையையுடைய கொங்கு நாட்டையுடைய சேரர் படைவீரர் செய்த ஆரவாரத்திலும் பெரிதாயிற்று' என்பதில் அச்சம் கூறப்படுகிறது. இதில் தோழி அலரின் தன்மையை எடுத்துக்கூறி வரைவுகடாமிடத்து அச்சத்தைக் காண முடிகிறது.

தலைவன் சிறைப்புறமாக, தலைவி வேறுபாடு கண்ட புறத்தார், அலர் கூறுகின்றமை தோன்ற, தோழி தலைமகட்குக் கூறுவாளாய்க் கூறியதாகின்ற,

"***முட்கால் இறவிதன் முடங்குபுறப் பெருங் கிளை***

***புணரி இகுதிரை தரூஉம் துறைவன்***

***புணரிய இருந்த ஞான்றும்,***

***இன்னது மன்னோ, நல்நுதல் கவினே!***"[25] (குறுந்., பா.எ. 109)

என்னும் இப்பாடலடியில், 'முள்ளைப் போன்ற கால்களையுடைய இறாமீனின், வளைந்த முதுகினையுடைய பெரிய இனத்தை, கடலில் தாழும் அலை, கொண்டு வந்து தருதற்கு இடனாகிய துறையை உடைய தலைவன், உடன் இருந்த நாளிலும் நின் நல்ல நுதலின் அழகு, இவ்வாறு பிறர் அறியும்படித்தாய் வருந்துவதற்கு உரியதாயிற்று' என்பதில் அச்சம் தோன்றுகிறது.

தலைவியின் ஒழுக்கத்தால் ஐயமுற்றுத் தாய் மனையில் கட்டுக்காவலை மிகுக்கும்பொழுது தோழிக்கு கூற்று நிகழும், இதனை தொல்காப்பியர், "***அவள் விலங் குறினும்***"[26] எனக் கூறுகிறார்.

இவ்வகையிலான சூழலில் அதாவது தலைவியயை இற்செற்கின்ற நிலையினைத் தலைவனிடம் எடுத்துரைத்துக் கூற்று நிகழ்த்தும்போது அச்ச உணர்வு புலப்படுகிறது.

வரையாது நெடுங்காலம் பகல் வந்ததொழுகுவது கண்ட தோழி தலைவனிடம், 'உம்முடன் அருவியாடி வருவதை விடவும் வாழ்க்கையில் இனியதாகப் பெறுதற்கு அன்று உண்டோ? பிறப்பாக அமைந்த கருணைமிக்கிருக்கும் கூந்தலில் நறுமணம் கமழும் புது நாற்றத்தையும், நெற்றியின்கண் பசலை பாய்ந்திருப்பதையும் உற்றுப் பார்த்து அறிந்த அன்னை, வேறொன்றைக் குறித்து நினைத்தாள் போலப் பெருமூச்சு எறிந்தனை ஆதலால் நாங்கள் இற்செறிக்கப்படக்கூடும்' என்பதை,

"*...............................................................*

***நெறி படு கூழைக் கார் முதிர்பு இருந்த***
***தெறி கமழ் கொண்ட நாற்றமும், சிறிய***
***பசலை பாய்தரு நுதலும், நோக்கி,***
***வறிது உகு நெஞ்சினள், பிறிது ஒன்று சுட்டி,***
***வெய்ய உயிர்த்தனள் யாயே***
***ஐய் அஞ்சினம், அளியம் யாமே***"[27] (நற்., பா.எ. 368: 5–10)

எனத் தோழி அன்னை இற்செறிப்புக்கு அஞ்சி குறிப்பாக தலைவனிடம் வரைவுகடாவுமிடத்து அச்சத்தை அறியலாம். மேலும், தலைவன் சிறைப்புறத்தானாக, அதனை அறிந்து தோழி தலைவியிடம், 'தலைவியே! நின் மெய் வேறுபாடெல்லாம் அன்னை அறிந்து இற்செறிக்கக் கருதினள். எனவே, இதுவரையில் காதலனொடு நாம் பயின்றது போல நாளை இயலாது' எனக் கூறுவதை,

"***முன்றிற் பலவின் படு சுளை மரீஇ,***
***புன் தலை மந்தி தூர்ப்ப, தந்தை***
***மை படு மால் வரை பாடினள் கொடிச்சி,***
***ஐவன வெண்ணெல் குறூஉம் நாடனொடு***
***சூருடைச் சிலம்பின் அருவி ஆடி,***
***கார் அரும்பு அவிழ்ந்த கணி வாய் வேங்கைப்***

***பா அமை இதணம் ஏறி, பாசினம்***

***வணர் குரற் சிறுதினை கடிய,***

***புணர்வதுகொல்லோ, நாளையும் நமக்கே?***"[28] (நற்., பா.எ. 373)

என்னும் பாடலில், 'தோழி! வீட்டின் முன்புறத்தே உள்ள பலாவின் விளைந்த சுளைகளைப் புல்லிய தலையை உடைய மந்திக் குரங்கு உண்டு விதைகளைத் தரையில் உதிர்க்கும். பக்கத்தே இருக்கும் கொடிச்சி தன் தந்தையின் முகில் தவழும் மலையைப் பாடிக்கொண்டே ஐவனாகிய வெண்ணெல்லைக் குத்துவாள். இத்தகைய மலைநாடனொடு, அச்சம் தரும் பக்கமலையில் வீழும் அருவியில் ஆடி கரிய நிறத்தைக் கொண்ட அரம்புகள் அவிழ்ந்த, கணிவனைப்போலக் காலம் கூறும் வேங்கை மரத்திடையே கட்டிய பரப்பு அமைந்த பரண்மீது ஏறி வளைந்த கதிர்களைக் கொண்ட சிறிய தினைப்புனத்தில், தினை உண்ண வரும் கிளியினத்தை ஓட்டுவோம். இத்தகைய செயல் நமக்கு நாளையும் வாய்ப்பதாகுமா? இற்செறிக்கப்படின் கிடைக்காதுபோம்' என்பதில் அச்சம் தோன்றுகிறது. மேலும்,

"**..........................................................................**

***தேம் பெய் தீம் பால் வெளவலின், கொடிச்சி***

***எழுது எழில் சிதைய அழுத கண்ணே,***

***தேர் வண் சோழர் குடந்தைவாயில்***

***மாரி அம் கிடங்கின் ஈரிய மலர்ந்த,***

***பெயல் உறு நீலம் போன்றன: விரலே***

***பாஅய் அவ் வயிறு அலைத்தலின், ஆனாது,***

***ஆடு மழை தவழும் கோடு உயர் பொதியில்***

***ஓங்கு இருஞ் சிலமபில் பூத்த***

***காந்தள் அம் கொழு முகை போன்றன, சிவந்தே***"[29] (நற்., பா.எ. 379)

என்னும் இப்பாடலில், 'புற்கென்ற தலையை உடைய பெண் குரங்கினது, மரமேறும் தன் தொழிலையும் சரிவரக் கல்லாத இளமையுடைய வலிய குட்டி குன்றிடத்தே உள்ள பொருந்திய மனையின் முற்றத்தினின்றும் நீங்காமல் இருக்கும். நெருப்புக் கொழுந்து விட்டது போன்ற மலர்கள் நெருங்கிய பூங்கொத்தினை உடைய வேங்கை மரத்தின் தாழ்ந்த

கிளையிடத்தே மறைந்திருந்து தலைவியின் கையிலிருந்த தேன் கலந்த இனிய பாலைக் கிண்ணத்தோடு வலியக் கைப்பற்றிச் சென்றுவிட்டது. அதனால் ஓவியர் எழுதினாற் போல அமைந்த இவள் கண்ணின் அழகெல்லாம் சிதையுமாறு அழுதனள். அவ்வாறு அழுததனால், கண்கள் தேர்களை இரவலர்க்குப் பரிசிலாக வழங்கும் வள்ளன்மை மிக்க சோழ மன்னர்க்குரிய குடவாயில் என்னும் ஊரில் மழைபெய்து நிரம்பிய அகழியிடத்துக் குளிர மலர்ந்த பெய்யும் மழைநீரை ஏற்கும் நீலமலர் போன்றன. குரங்குக்குட்டி பாற்கிண்ணத்தைப் பற்றிச் சென்றமையால், தன் அழகிய வயிற்றிலே இவள் அடித்துக் கொண்டதனால் இவளுடைய விரல்கள் சிவந்து அலைகின்ற மேகங்கள் இயங்கும் கொடுமுடிகள் உயர்ந்து நிற்கும் பாண்டியனின் பொதியில் என்னும் பெரிய மலையிடத்தே மலர்ந்த செழித்த காந்தளின் பூத்த மலர்களைப் போன்றன. இத்தகைய நனி இளமையும் மடமையும் உடையாள் நின் காமம் தணிப்பது எங்ஙனம்?' என்பதன் வழி தோழிக்கு துன்ப உணர்விலான அச்சம் உணரமுடிகிறது. மடமையுடையவள் வாழ்வில் எங்ஙனம் தலைவனை அடைந்து இன்புறுவாளோ என்று திருமணத்திற்குள் பயத்துடனான உணர்வு புலப்படுத்துகிறது.

இதில் தலைவியை அன்னை இற்செறிப்புதால் தலைவன் கண்டு ஒழுக முடியாது என்று குறிப்பாக அஞ்சி அதற்கு வரைவதே சிறந்தது என்று தோழி கூறுமிடத்து அச்சம் வெளிப்படுகின்றது. மேலும், சிறைப்புறமாக நிற்கின்ற தலைவனிடம் தோழி கூறுகின்றதாகிய,

"***யாங்குச்செய் வாங்கொல் தோழி பொன் வீ***
***வேங்கை ஓங்கிய தேம்கமழ் சாரல்***
***பெருங்கல் நாடனொடு இரும்புனத்து அல்கிச்***
***செய்வாய்ப் பைங் கிளி ஒப்பி அவ்வாய்ப்***
***பெருவரை அடுக்கத்து அருவி ஆடி***
***சாரல் ஆரம் வண்டுபட நீவிப்***
***பெரித மர்ந்து இயைந்த கேண்மை சிறுநனி***
***அரிய போலக் காண்பேன் விரிதிரைக்***

***கடல்பெயர்ந் தனைய ஆகிப்***

***புலர்பதலு கொண்டன ஏனற் குறுலே***"[30] (நற்., பா.எ. 259)

என்னும் இப்பாடலில், 'தினையின் கதிரெல்லாம் விரிந்த அலையையுடைய கடல்தான் வற்றினாற் போலக் காயும் பருவம் எய்தினகண்டாய்! இனி அவற்றை நமர் கொய்து கொண்டு போவதன்றி நின்னையும் இல்லின் கண்ணே செறிப்பது திண்ணம்; பொன் போன்ற மலரையுடைய வேங்கை மரங்கள் உயர்ந்த மணங்கமழ்கின்ற சாரலின் கண்ணே, பெரிதும் விரும்பி இயைந்த நட்பு மிகச்சிறுகி இனி. அது தானும் இல்லையாகும் போல யான் காண்பேன். ஆதலால் நாம் என்னை செய்ய' என்று கூறுகிறாள். இவற்றில் தலைவி இச்செறிக்கப்படுவதால் களவொழுக்கத்தின் கேண்மையை நினைந்து இறந்துபடுவாள் என்று தலைவனுக்கு அறிவுறுத்தி தோழி வரைவுகடாமிடத்து குறிப்பாக அச்சத்தை அறிய முடிகின்றது.

பகற்குறிக்கண் வந்து நீங்கும் நெய்தல் நிலத் தலைவனிடம் தோழி, 'துறவேன் நீர் மிகுந்துள்ள கழிகளில் நெய்தல்கள் நீர்த்துளிகளைச் சொரியும் இத்துறையின்கண் 'பல காலும் தேர் வர நின்றது' எனக்கூறி இனிப்புறத்தே செல்லற்க' என்று எம்முடைய தாய் இற்செறித்தனள், ஆகலி நீ ஏற்ற தொன்றனைச் செய்வாயாக என்று கூறுகிறாள். இதனை,

"***நாரை நல்லினம் கடுப்ப மகளிர்***

***நீர்வார் கூந்தலுளரும் துறைவ***

***பொங்குகழி நெய்த லுறைப்ப வித்துறைப்***

***பல்கால் வரூஉந் தேரெனச்***

***செல்லா தீமோ வென்றனள் யாயே***"[31] (ஐங்., பா.எ. 186)

என்ற பாடலடிகள் உணர்த்துகிறது.

இதில் தோழி தலைவி இற்செறிக்கப்பட்டதால் நின்னோடு உண்டாகிய நட்பை நினைந்து வருந்துவாள்' என்று குறிப்பாக அஞ்சி வரைவு வேண்டுமிடத்து அச்சம் வெளிப்படுகின்றது.

தலைவியின் வேறுபாடு அறிந்த தாய் இற்செறிக்கக் கருதினாள் இனி இவளை மணந்து கோடலேதக்கது' என்று தோழி இற்செறிப்புக்கு அஞ்சி வரைவு வேண்டுவதை,

"***கழி தேர்ந்து அசைஇய கருங்கால் வெண் குருகி***

***..................................................***

***........................................... துறைவ***

***தொல்நிலை நெகிழ்ந்த வளையல், ஈங்குப்***

***பசந்தனள்மனி என்தோழி – என்னொடும்***

***இன்இணர்ப் புன்னைஅம் புகர்நிழல்***

***பொன்வரி அலவன் ஆட்டிய ஞான்றே***"[32] (குறுந்., பா.எ. 303)

என்ற பாடல் உணர்த்துகிறது. இதில், 'கழிச் சேற்று நீரில் இரையைத்தேடி உண்டு இளைப்பாறிய கரிய காலையுடைய வெள்ளிய நாரை, கரையைச் சார்ந்த தாழையில், தன் இனத்தோடு கூடி, பெரிய கடலின் கரையை மோதி உடைகின்ற அலைகளில் ஓசையைக் கேட்டு, உறங்கும் கடல்துறைக்குத் தலைவனே. ஒளிவிடும் பூங்கொத்துக்களையுடைய புன்னையின் அழகிய புள்ளிகளையுடைய நிழலில், பொன் நிறமான கோடுகளைப் புறத்தே உடைய அலவனை அலைத்துத் தலைவி என்னொடு விளையாடிய அன்றே, நீ உடலால் பிரிவதற்கு முன் நெகிழப் பெற்ற வளையலை உடையவளாய், அன்னை அறிந்து இற்செறிக்குமாறு இப்படி மிகப் பசந்த காட்டினாள்' என்பதில் அச்சம் உணர்த்தப்படுகிறது.

தலைவி களவில் தலைவன் பிரிவை நினைத்து வருந்துவாள். அவ்வாறு வருந்தும் தலைவிக்கு உடலில் மெலிவு ஏற்பட்டு வளையல் நெகிழ்வதும் (கழன்றலும்) பிறர் அறியாமல் சிறிய வளையல்கள் அணிந்து உடல் மெலிவினை மறைத்து விடலாம். ஆனால் உடல் முழுவதும் ஏற்பட்ட பசலை நோயை மறைப்பது என்பது அரிதான ஒன்றாகும். அன்னை இற்செறிப்பால் என்று தோழி அஞ்சுவதை அறிய முடிகின்றது.

வரைவு வேண்டிய தலைவனிடம் தோழி கூறுவதை,

"***கலைகை, தொட்ட கமழ் சுளைப் பெரும்பழம்***

***காவல் மறந்த கானவன், ஞாங்கர்,***

*கடியுடை மரந்தொறும் படுவலை மாட்டும்*
*குன்ற நாட! தகுமோ பைஞ்சுகனைக்*
*குவளைத் தண்தழை இவள்ஈண்டு வருந்த,*
*நயந்தோர் புன்கண் தீர்க்கும்*
***பயம் தலைப் பாடாஅப் பண்பினை எனினே***"[33] (குறுந்., பா.எ. 342)

என்னும் இப்பாடலில், 'பெரிய பலாப்பழத்தைக் காத்தலை மறந்து காட்டில் வாழும் குறவன், முசுக்கலை உண்ட காரணத்தால், புறத்தே அதன் சுளைகள் தோன்றி மணம் வீச, அதன்பின்னர், அவன் தன் காவலுக்கு உரிமையுடைய பலாமரங்கள் தோறும் பெரிய வலைகளைக் குரங்குகள் வாராமல் பிணித்தனன். 'நின்னை விரும்பியவளின் துன்பத்தை நீக்கும் பயனில் புகாத இயல்புடையை' என நின்னை யான் சொல்லின், பசிய சுனையின்கண் வளர்ந்த, குவளையின் தண்ணிய தழையை ஆடையாக உடைய இத்தலைவி, இல்லில் செறிக்கப்பட்டு வருந்துதல் தகுமோ?' என்பதால் அச்சம் புலப்படுத்துகிறது. இதில் தோழி தலைவி அன்னையால் இச்செறிக்கப்பட்டுள்ளால் என்று குறிப்பாக அஞ்சி தலைவனிடம் வரைவுணர்த்துமிடத்து அச்சம் வெளிப்படுகின்றது.

தலைவனிடம் தோழி, '...... உயர்ந்த மணல்மேடாகிய கரையில் மாலையையுடைய ஆயத்தாரோடு வண்டல் இயற்றி விளையாட்டினைப் புரியினும் உன் மேனி வாடும் என எதுவின்றியும் சினப்பவளாகிய அறங் கருதாத தாய் கானின் ....... காவற்படுத்திவிடுவாள் என்பதை,

"*பெருங் கடற் பரப்பில் சேயிறா நடுங்க*
*கொடுந் தொழில் முகந்த செங் கோல் அவ் வலை*
*நெடுந் திமில் தொழிலொடு வைகிய தந்தைக்கு*
*உப்பு தொடை நெல்லின் மூரல் வெண் சோறு*
*அயிலை துழந்த அம் புளிச் சொரிந்து*
*கொழுமீன் தடியொடு குறுமகள் கொடுக்கும்*
*திண் தேர்ப் பொறையன் தொண்டி அன்ன எம்*
*ஒண் தொடி நெமுக்காதீமோ தெய்ய*
*ஊதை ஈட்டிய உயர் மணல் அடைகரை*

***கோதை ஆயமொடு வண்டல் தைஇ***
***ஓரை ஆடினும் உயங்கும் நின் ஒளி எனக்***
***கொன்னும் சிவப்போள் காணின், வெண் வேற்***
***கொற்றச் சோழர் குடந்தை வைத்த***
***நாடு தரு நிதியினும் செறிய***
***அருங் கடிப் படுக்குவள் அறன் இல் யாயே***"[34] (அகநா., பா.எ. 60)

என்று குறிப்பிடும். இப்பாடலில், பெரிய கடற்பரப்பில் சிவந்த இறால் மீன் நடுங்கும்படி மீன்களை முகக்கும் கொடிய தொழிலையுடைய நேரிய கோல்வினையுடைய அழகிய வலையினைக் கையிலே கொண்டவாறு நீண்ட படகில் தந்தையானவன் மீன் பிடிக்கும் தொழிலில் தங்கினான். உப்பு விற்று வாங்கி வந்த நெல்லாலே ஆக்கப்பட்ட மூரலாகிய வென்சோற்றை அயிலை மீனை இட்டு ஆக்கிய சுவை மிகுந்த புளிங்கறியை அதிலே ஊற்றிக் கொழுமீன் கருவாட்டுடன் தன் தந்தைக்கு அவனுடைய இளமை பொருந்திய மகள் உணவாகக் கொடுப்பாள். அத்தகைய இடமாகிய, வலிமை பொருந்திய தேரினையுடைய சேரனது தொண்டியைப் போன்ற எம் தலைவியின் ஒளிரும் வளையல்களைத் தழும்பு ஏற்படும் வண்ணம் நெருக்கி அமுக்கி வருந்தாதே. வாடைக் காற்று கொண்டு வந்து குவித்த உயர்ந்த மணல் மேடுகளைக் கொண்ட பரந்த கடற்கரைப் பக்கத்தில் மாலையணிந்த தோழியருடன் சிற்றில் புனைந்து ஓரை விளையாடினும், உன் மேனி வருந்தும் என அறப் பண்பு இல்லாத எம் தாய் ஒரு பயன் இன்றியும் வீணே சினங்கொள்வாள். அத்தகையவன் நின் செயலைக் கண்டால் வெல்லும் வேலையுடைய வெற்றி பொருந்திய சோழ மன்னர் குடந்தை என்னும் ஊரின்கண் பாதுகாத்து வைக்கப்பட்ட, பகைவர் நாடு திறையாகத் தந்த நிதியைக் காட்டிலும் மிகவும் அரிய பாதுகாப்பினைச் செய்வாள்' என்றவழி அச்சம் உணரப்படுகிறது. இதில் தாயின் இற்செறிப்பை அச்சுறுத்தி தோழி வரைவுகடாவுமிடத்து அச்சம் உணர்த்தப்படுகின்றது. தலைவியின் வேறுபாடு அறிந்து தாய் வெறியாட்டெடுப்பதை உணர்த்தி தலைவனிடம் தோழி வரைவுகடாமிடுத்து அச்சம் வெளிப்படுகின்றது.

சிறைப்புறமாக உள்ள தலைவனிடம் தோழி, 'பொய்த்தல் இல்லாத மரபினையும் ஊர்க்கண் வாழும் முதுமையுமுடைய வேலன் கழங்கு நிறுத்தி, அதன்கண் தான் வழிபடுதெய்வம் வரப் பண்ணி, பின்னர் அதற்கு கன்னத்தை அணிந்து வெறியாடி, இவளை அணங்கியோன் முருகனாவான் என்று மொழிவானாயின், இவளை மெய்யாற் கூட்டித் தன் ஒழுக்கத்தால் மெலியச் செய்த தலைமகற்கு அவ்வெறியாட்டு உரித்தாங்கொல்லோ? எனக் கூறுவதை,

"***பொய்யா மரபினூ முது வேலன்***

***கழங்குமெய்ப் படுத்துக் கன்னந் தூக்கி***

***முருகென மொழியு மாயின்***

***கெழுதகை கொல்லிவ ளணங்கி யோற்கே***"[35] (ஐங்., பா.எ. 245)

என்ற பாடலடிகள் உணர்த்தும். இவற்றில், "***அன்னை வேண்ட வேலன் அயரும் வெறியாட்டின்கண் நம் குடிக்கு அலரும், தலைமகற்கு பழியும் எய்தக் கூறுவனோ என்று அஞ்சினாள் ஆகலின் பொய்யா மரபின் ஊர்முது வேலன் என்றும் அவன் முருகென மொழிவனாயின், அஃது அவனது பொய்யா மரபினொடு மாறுபடுதலின், கெழுதகை கொல் இவள் அணங்கியோற்கே என்றும் கூறினாள் என்றும் மேலும் அன்னை வேண்ட வெளியாடலுறும் வேலன், பொய்யா மரபின் னாகலின் தான் கழங்கு மெய்ப்படுத்தும் கன்னம் தூக்கியும் வெறி எடுத்து இவள் அணங்கியோன் இன்னானென உண்மை கூறிவிடின் அது நினக்குப் பழியும் எங்குடிக்கு ஏதமும் பயக்கு மாகலின் நீ வரைந்து கொள்வாயாக***"[36] என ஔவை துரைசாமிப்பிள்ளை கூறுகிறார்.

இதில் தோழி, அன்னை வெறியாட்டு எடுத்து உண்மை நிலை தெரிந்தால் உனக்கு பழியும் எங்களுக்கு துன்பமும் ஏற்படும் என்று அஞ்சி தலைவனிடம் வரையுமாறு வேண்டுகிறாள்.

சிறைப்புறமாக வந்து நிற்கும் தலைவனிடம் தோழி அன்னை வெறியாட்டு எடுப்பின் இவள் உயிர் வாழாள் என்று குறிப்பாக அஞ்சி வரைவு வேண்டுவதை,

*"………………………………………………………*

***செல்வன் பெரும் பெயர் ஏத்தி வேலன்***
***வெறி அயர் வியன் இளம் பொறிப வல்லோன்***
***பொறி அமை பாவையின் தூங்கல் வேண்டின்***
***என் ஆம்கொல்லோ? — தோழி — மயங்கிய***
***மையற் பெண்டிர்க்கு நொவ்வல் ஆக***
***ஆடிய பின்னும் வாடிய மேனி***
***பண்டையின் சிறவாது ஆயின் இம்முறை***
***அலர் ஆகாமையோ அரிதே அஃதான்று***
***அறிவர் உறுவிய அல்லல் கண்டருளி***
***வெறி கமழ் நெடு வேள் நல்குவன் எனினே***
***செறிதொடி உற்ற செல்லலும் பிறிது எனக்***
***கான் கெழு நாடன் கேட்பின்***
***யான் உயிர் வாழ்தல் அதனினும் அரிதே***"[37] (அகநா., பா.எ. 98)

இப்பாடலில், 'குளிர்ச்சி மிக்க மலையினது உயர்ந்த வளம் பொருந்திய பக்க மலையின்கண் வெறுப்பில்லாத கொள்கையோடு அன்று நமக்கு மகிழ்ந்து அளித்த நம் தலைவரது இனிய உள்ளம் இன்று இன்னாததாயிற்று. அதனால், நாம் வெறுக்குமாறு நம்மிடத்தே நிலை நிறுத்திய 'நல்கல் வருத்தமானது', திண்டி வருத்தும் தெய்வம் வாழுகின்ற மலையினை உடையவனான நம் தலைவன் மார்பினை நாம் பொருந்துதலாலே தணியக் கூடியது என்பதை நம் அன்னை அறியாதவள்.

பிறர் தலைவியை திருமணம் செய்யும் பொருட்டு வரும் காலத்தில் தோழி, தலைவனுக்கு உணர்த்தி வரைவுகடாமிடத்து அச்சம் வெளிப்படுத்துகின்றது.

நொதுமலர் வரைவின்போது, தலைமகட்கு உளதாகிய வேறுபாடு கண்ட தோழி தலைவனிடம், சிறிய கண்களையுடைய பன்றியின் மிக்க சினம் பொருந்திய ஆணோடு குறுகிய கால்களையுடைய பெரிய புலி பொருகின்ற நாடனை, நீ விரும்பிய அவளுடைய கண்கள் தெளிவாக

மிக்க நாணுடையணுயாகலின், பசந்து நீர் சொரிவனவாயின எனக் கூறுவதை,

"***சிறுக்கட் பன்றிப் பெருஞ்சின வொருத்த லொடு***
***குறுக்கை யிரும்புலி பொருஉ நாட!***
***நனிநா ணுடைய மன்ற***
***பனிப்பயந் தனநீ நயந்தோள் கண்ணே***"[38] (ஐங்., பா.எ. 266)

என்ற பாடலடிகள் சுட்டும். இவற்றிற்கு விளக்கவுரை தரும் ஔவை துரைசாமிப்பிள்ளை, "***நொதுமலர் வரைவு பிறந்தமை கண்டு ஆற்றாது கண் கழந்து வேறுபாடுதலைக் கண்டும் நீ வரையாதொழுகுதல் நாணுடைமையன்று என்பாள் குறிப்பால் நாணுடைய என்றும் மேனி வேறுபாடு நோக்கி அயலார் கூறுவனவற்றால் நாணி வருந்துகின்ற தலைமகள் வேற்றுவரைவு முற்றுமாயின் உயிர்வாழாள் என்றற்கு நனி நாணுடைய மன்ற என்று கூறினாள்***"[39] என்பர்.

இதில் நொதுமலர் வரைவால் ஆற்றாது தலைவி நாணி உயிர்வாழாள் என்று குறிப்பாக அஞ்சி தோழி வரைவுகடாவுகின்றாள். தலைவன் வரையாது ஒழுகும் காலத்தில் தலைவியின் ஆற்றாமை புலப்படுத்தி தோழி தலைவனுக்கு வரைவுகடாவுகிறாள். அவ்வாறு வரைவுகடாமிடத்து அச்சம் வெளிப்படுகின்றது. இதனை,

"***பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை***
***வரிவெண் டாலி வலைசெத்து வெரூஉம்***
***மெல்லம் புலம்பற் றேறி***
***நல்ல வாயின நல்லோள் கண்ணே***"[40] (ஐங்., பா.எ. 166)

என்ற பாடல் உணர்த்தும். இவற்றில், 'பெரிய கடற்கரையில் வாழும் சிறு வெண்காக்கை வரி பொருந்திய வெண்ணிறச் பல கோழிகளை வலையெனப் பிறழவுணர்ந்து அஞ்சுவதற்கு இடனான மென்னிலமான நெய்தல் நிலத்தலைவன் சொற்களை உண்மையென நம்பி, நல்லியல்பு மிக்க என் தோழியின் கண்கள் தம் நலமிழந்தன' என்பது அச்சமாகிறது. இதற்கு "***சிறுவெண்காக்கை வரிவெண்டாலிகழள வலைச்சுற்றிற் கோத்த பலகறையென வெரூஉம் என்றதனால், நம் வரைவுகடாவிக் கூறிய***

***சொற்களைத் தனக்கு வருத்தம் சூழ்ந்தனவாகக் கருதி அஞ்சுகின்றான் என உள்ளுறை கொள்க***"[41] என்று விளக்கவுரை தருகிறார் ஔவை துரைசாமிப்பிள்ளை. இதில் தலைவன் தோழியின் சொல் வன்மைக்கு அஞ்சி வரந்துவதை அறிய முடிகின்றது.

வரைவுநீட்டியது ஆற்றாத தலைவியின் நிலைமை அறிந்த தோழி தலைவனிடம், 'நீ தலைவியை வரையாவிடின் இவள் உடம்பில் வேறுபாட்டுக்கு அஞ்சி வருந்துவாள் என்று ஆற்றாமை புலப்படுத்தி வரைவு வேண்டுவதை,

"..................................................................

***தண்ணந்துறைவ! தகாஅய் காண் நீ என ஆங்கு***

***அனையள் என்று அளிமதி பெரும ! நின் இன்று***

***இறை வரை நில்லா வளையள் இவட்கு இனிப்***

***பிறை ஏர் சுடர் நுதற் பசலை***

***மறையச் செல்லும் நீ மணந்தனை விடினே***"[42] (கலித்., பா.எ. 125)

என்ற பாடலடிகள் குறிப்பிடும். இப்பாடல் வரிகளில், 'பெரும, யான் கூறியவற்றை மனத்திற்கொண்டு, அவள் அத்தன்மையள் என்று கருதியேனும் வந்து அருள்செய்வாய். நீ இல்லாது போயின் அவளுடைய முன்கை வளை எல்லை நில்லாமற் கழன்று விடுகின்றன. நீ அவளை மணந்து கொள்வாய் ஆயின், பிறையை ஒக்கும் அழகிய ஒளிபடைத்த நெற்றியில் படர்ந்த பசலை என்றுமே வாராது, மறையும்படி செல்வாய் என்று வரைவு கடாயினாள் தோழி' என்பது வழி அச்சம் உணரப்படுகிறது.

தலைவியது ஆற்றாமைக்கு அஞ்சி தலைவனிடம் வரைவுகடாவுவதை,

"..................................................................

***நனவு எனப் புல்லுங்கால் காணாளாய் கண்டது***

***கனவு என உணர்ந்து பின் கையற்றது கலங்குமே என ஆங்கு***

***பலநினைந்து இணையும் பைதல் நெஞ்சின்***

***அலமரல் நோயுள் உழக்கும் என தோழி***

***மதி மருள் வாள் முகம் விளங்கி***

***புது நலம் ஏர்திரி பூண்க, நின் தேரே***"[43] (கலித்., பா.எ. 126)

என்ற பாடல் சுட்டும். இவற்றில், 'உயரிய மனையிலே, மனத்தை நிறுத்த முடியாமல் நின்னை நினைந்து அசதியால் சிறிது தூங்கின இடத்து, நீ தன் தோள்மேல் தழுவிக் கிடந்ததாக நின்னைத் தணிந்தனள். தணிந்த அப்பொழுதே மெய்யென்று கருதித் தழுவுமிடத்து, நின்னைக் காணாதவளாக, கண்டது கனவே என்று அறிந்து பின்பு செயலற்றுக் கலங்கி நின்றனள் என்று பலவற்றையும் நினைத்து வருந்தும் நோய் கொண்ட நெஞ்சால் சுழலுகின்ற காம நோயிலே அழுந்தி வருந்துவள் என் தோழி. அவளுடைய மதி என்று மருளும் ஒளிமுகம் விளங்கும்படி, புதிய நலம் அழகுடன் தோன்ற நின்தேர் குதிரையைப் பூண்பதாக எனத் தோழி வரைவு கடாயினள்' என்பது அச்சத்தை புலப்படுத்துகிறது.

தோழி, தலைவன் தலைவிக்கு உடன்போக்கை உணர்த்துமிடத்து அச்சம் வெளிப்படுகின்றது. தொல்காப்பியத்தில் தோழி உடன்போக்கு உணர்த்துவதை,

"***போக்கற் கண்ணும் விடுத்தற் கண்ணும்***"[44]

என்கிறது.

உடன்போக்கு நயந்த தலைவனிடம் தோழி, வெள்ளிய வேலையுடை தலைவி, முள்ளையுடையமாவாகிய பன்றியினை உணவாகவுடைய வேட்டுவர்க்குத் தங்கையாகிய இளமையும் அழகுமுடைய எயிற்றிற்கு நின் உடன்போக்குக் குறிப்பை விளங்க உரைத்து உடன்படுமாறு இரந்துகொண்டு யான் வரும்அளவும் 'விரையாது நிற்பாயாக' என்று கூறுகின்றாள். இதனை,

"***முளவு மா வல்சி எயினர் தங்கை***

***இளமா எயிற்றிக்கு நின்நிலை அறியச்***

***சொல்லினென் இரக்கும் அளவை***

***வென்வேல் விடலை விரையா தீமே!***"[45] (ஐங்., பா.எ. 364)

என்ற பாடல் சுட்டும். இதில் எனும் பாடலில், 'வெற்றி தரும் வேலை ஏந்திய விடலையே! முள்ளம்பன்றி இறைச்சியை உணவாகக் கொள்ளும் எயினருக்குத் தங்கையாகிய இளையவளும், மாமை நிறத்தவளும் ஆகிய எயிற்றியாகிய என் தோழிக்கு, நின் விருப்பினை யான் சொல்லி அவள் உடம்பாட்டை வேண்டிப் பெறும் வரை, நீ பொறுமையைக் கடைப்பிடிப்பாயாக!' என்பதிலிருந்து அச்சம் உணரப்படுகிறது.

இவற்றில் உடன்போக்கின்கண் நெறியிடை உளவாகும் ஏதமும், உடன்போகிய வழியுண்டாகும் அலரும் கூறித்தலைமகள் நாணிவழித் தகுவன கூறி உடன்படுவிக்க வேண்டுதலின் இரக்குமளவும் என்றும், குறிவழியும் ஒருவழித்தணத்தும் ஒழுகின்றனாதலின் விரையாதீமே என்றும், தோழி இரந்து நின்றாள் என்று விளக்கிக் கூறுமிடத்து அச்சம் வெளிப்படுகின்றது.

இதில் தோழி உடன்போக்கினால் ஏற்படும் ஏதத்திற்கும் அலர்க்கு அஞ்சி நயந்து தலைவனிடம் கூறுகின்றாள்.

### தோழி → தலைவியிடம் கூற்று

களவில் இயற்கைப்புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம் கூடிய பின்னர் தலைவன் மீண்டும் கூட்டம் பெறுவதற்காகத் தோழியை நாடிச் செல்லுதல் தோழியற்கூட்டம் எனப்படும். இதில் தலைவன் மெல்ல மெல்லத் தோழியை அணுகித் தன் விருப்பத்தைத் தெரிவிப்பான். தோழி முதலில் அவன் நெருங்காதவாறு மறுத்து ஒதுக்கிய போதிலும், பிறகு அவனுடைய உண்மையான அன்பையும் பண்பையும் உணர்ந்தபிறகு அவற்றை தலைவிக்கு மறுக்காதபடியும் தான் உணர்ந்துகொண்டது பற்றி அவள் வருந்தாதபடியும் தக்க சொற்களால் புலப்படுத்துவாள். இவ்வாறு தோழி, தலைவனின் தன்மையை தலைவிக்கு கூறுமிடத்து அச்சம் வெளிப்படுகின்றது.

தலைவனிடம் குறை நேர்ந்த தோழி, தலைவியிடம் கூறுகின்ற,

"***சிறு மணி தொடர்ந்து பெருங் கச்சு நிறீஇ***
***குறு முகிழ் எருக்கங் கண்ணி சூடி***

***உண்ணா நல் மாப் பண்ணி, எம்முடன்***
***மறுகுடன் திரிதரும் சிறு குறுமாக்கள்***
***பெரிதும் சான்றோர்மன்ற – விசிபிணி***
***முழவுக் கண் புலரா விழவுடை ஆங்கண்***
***ஊரேம் என்னும் இப் பேர் ஏமுறுநிர்***
***தாமே ஒப்பரவு அறியின் தேமொழிக்***
***கயல் ஏர் உண்கண் குறுமகட்கு***
***அயலோர் 'ஆகல்' என்று எம்மொடு படலே***"[46] (நற்., பா.எ. 220)

எனும் இப்பாடலில், 'பனைமடலால் உண்ணாத குதிரையைச் செய்தும் அதற்குச் சிறுசிறு மணிகளைக் கட்டி பெரிய கச்சையைப் பூட்டிக் குறிய எருக்கம்பூ மாலையைச் சூடி ஒரு தோன்றல் அதில் ஏறியிருப்ப அக்குதிரையை ஈர்த்துக்கொண்டு யாம் வருகிற தெருவில் எம்பின்னே வந்து திரிகின்ற சிறிய பிள்ளைகளாகிய நன்றாய் இறுகக் கட்டிய குடமுழாவின்கண் ஓயாது முழங்குகின்ற திருவிழாவையுடைய அந்த ஊரினேமென்று கூறும் இப்பெரிய மயக்கமுடையவர்கள்தாம்' என்று கூறுகிறாள். இதில் தலைவன் மடலூர்தலால் ஊரறிந்து உன்னை அலர்தூற்றுவர் என்று அஞ்சி தோழி தலைவியை உடன்படுமாறு அறிவுறுத்துமிடத்து அச்சத்தை உணர்த்துகின்றது.

பாங்கியிற் கூட்டத்துத் தலைவன் கொடுத்த கையுறையை ஏற்ற தோழி தலைவியிடம், 'மலைநாடன் உடுத்திக்கொள்ளும் தழையைக் கையுறையாகக் கொடுத்தனன். அவற்றை உடுத்திக்கொள்ளின் அன்னை கேட்டற்கு யாது விடை சொல்ல வல்லமென்று அஞ்சாது நிற்பேம். அத்தழையுடையை மீட்டும் தலைவன்பாற் கொடுத்துவிடின் அதனால் அவன் படும் ஆற்றாமைக்கு அஞ்சி நிற்பேம் ஆகிய அவற்றிடையே அவனது மலையிலுள்ள போரைச் செய்தலையுடைய வரையாடும் பாய்ந்து செல்லாத தெய்வம் இருக்கின்ற மலைப் பக்கத்தின்கண்ணே உள்ள கொய்தற்குரிய தழைதாம் வாடுதலுடைய ஆகபொருமா?' என்று கூறுகிறாள். இதனை,

"***சிலம்பின் மேய்ந்த சிறுகோட்டுச் சேதா***
***அலங்கு குலைக் காந்தள் தீண்டித் தாதுஉக்***
***கன்று தாய் மருளும் குன்ற நாடன்***
***உடுக்கும் தழைதந் தனனே அவையாம்***
***உடுப்பின் யாய் யஞ் சுதுமே கொடுப்பின்***
***கேளுடைக் கேடஞ் சுதுமே ஆயிடை***
***வாடல கொல்லோ தாமே அவன்மலைப்***
***போருடை வருடையும் பாயாச்***
***சூருடை அடுக்கத்த கொயற்கருந் தழையே***"[47] (நற்., பா.எ. 359)

என்ற பாடல் குறிப்பிடும். இதில் தெய்வமேறிய மலைத்தழையை வாடச் செய்துவிடின் அத்தெய்வம் வருத்தும் என்று (தோழி) அச்சுறுத்தி தலைவியை கையுறை ஏற்குமாறு அறிவுறுத்துமிடத்து அச்சத்தை வெளிப்படுகின்றது.

தலைவன் தோழிபால் குறியிடத்தெதிர்படுதலை விரும்பினான். அதை தோழி தலைவியிடம் கூறுகின்றதாகிய,

"***விட்ட குதிரை விசைப்பி அன்ன,***
***விசும்புதோய் பசுங்கழைக் குன்ற நாடன்***
***யாந் தற் படர்ந்தமை அறியான், றானும்***
***வேனில் ஆனேறு போலச்***
***சாயின என்ப நம் மாண் நலம் நயந்தே***"[48] (குறுந்., பா.எ. 74)

எனும் பாடலில், 'நெடுநாள் பிணித்த கட்டு அவிழ்த்து விடப்பட்ட குதிரை, துள்ளியெழும் எழுச்சியைப் போல, வளைத்துப் பின் விட்டமையால் மேலெழுந்து மேகத்தைத் தீண்டும் பசிய மூங்கிலையுடைய மலைநாட்டிற்குத் தலைவன், யான் தன்னை நினைத்து மெலிதலை அறியாதவனாகி, தானும் வேனிற்காலத்தில், பசுவினால் விரும்பப்பட்ட ஏறுபோல, நமது மாட்சிமையுடைய அழகினை விரும்பி மெலிந்தனன்' என்ற விளக்கம் அச்சத்தை உணர்த்துகிறது. இதில் தோழி காமநோயால் தலைவன் துன்புற்று மெலிகின்றான் நீ அவனை ஏற்பாயாக என்று

தலைவனின் மெலிவிற்கு குறிப்பாக அஞ்சி தலைவியிடம் அறிவுறுத்துமிடத்து அச்சம் சுட்டப்படுகின்றது.

தோழி தலைவியிடம், 'தலைவன் மாலைப்பொழுதில் நம்மைப் பிரிந்துச் சென்று வருந்துகின்றான் என்று கூறுகின்றாள். இதனை,

"***நாகுபிடி நயந்த முளைக்கோட்டு இளங்களிறு,***
***குன்றம் நண்ணிம் குறவர் ஒப்ப***
***மன்றம் போழு நாடன்றோழி***
***சுனைப்பூங் குவளைத் தொடலை தந்தும்,***
***தினைப்புன மருங்கிற் படுகிளி ஒப்பியும்***
***காலை வந்து, மாலைப் பொழுதில்***
***நல்அகம் நயந்து, தான் உயங்கிச்***
***சொல்லவும் ஆகாது வஃகியோனே***"[49] (குறுந்., பா.எ. 346)

என்ற பாடலில் குறிப்பிடும். இப்பாடலில், 'தோழி, இளைய பெண்யானையை விரும்பிய, மூங்கில் முளையைப் போன்ற கொம்பினையுடைய அதன் இளைய களிறு, மலையை அடைந்த குறவர் முழக்கிய ஒலியினால் அஞ்சி அங்கிருந்து நீங்கி, ஊரில் உள்ள மன்றத்தைப் பிளந்து கொண்டு சென்றது. இத்தகைய மலைநாட்டின் தலைவன், பகலில் வந்து, சுனையில் பூத்த குவளை மலர்களை மாலையாகத் தொடுத்து நினக்குத் தந்தனன். தினைப்புனத்தில், தினைக் கதிர்களில் படியும் கிளிகளை நம்மோடு சேர்ந்து ஓட்டினான். இவ்வாறு நமக்கு எளியனாகிய அவன் மாலைப்பொழுதில் நின்னுடைய நல்ல மார்பினை அடைய விரும்பி, வருந்தி, அக்கருத்தைச் சொல்லத் துணிவின்றி மெலிந்தனன்' என்று உணர்த்துவது அச்சமாகிறது.

இதில், தலைவன் பகற்குறியாகிய மாலைப் பொழுதில் சந்திப்பதற்கு குறிப்பாக அஞ்சியதை அறிந்த தோழி அதனை முகக்குறிப்பால் தலைவிக்கு கூறுமிடத்து அச்சத்தை அறியமுடிகின்றது. ஆனால் இவற்றிற்கு உ.வே.சாமிநாதையர் "***பிடியை நயந்த களிறு குன்றம் நண்ணுமென்றது நின்னை நயந்த தலைவன் ஊராரலருக்கு அஞ்சி***

***மனையகத்தே இரவில் வருவானென்ற குறிப்பை உணர்த்தியது***"[50] என்று விளக்கம் கூறுவார்.

களவில் தலைவன் பொருள் ஈட்டும் பொருட்டு பிரிந்து செல்லுதல் உண்டு. அவ்வாறு பிரிந்து சென்ற தலைவனை நினைத்து வருந்தும் தலைவியை ஆற்றுவிக்குமிடத்தும், அவளது ஆற்றாமை புலப்படுத்துமிடத்து அச்சம் வெளிப்படுகின்றது.

தலைவன் வரைபொருட்டாகப் பிரிந்தபோது, வருந்திய தலைவியைத் தோழி, 'தெரிந்து அணிந்த அணிகலன்களையுடையாய் பயனையுடைய மலைநாட்டுக்குத் தலைவன் நம்மைப்போல் இரங்குதலை மிக உடையன் பழியையும் அஞ்சுவான் நம்முடைய வருத்தத்தை அறிந்து விரைவில் வருவான் என்று கூறுவதாகின்ற,

"***அழிய லாயிழை யழிபுபெரி துடையன்***
***பழியும் அஞ்சும், பயமலை நாடன்***
***நில்லாமையே நிலையிற்று அகலின்***
***நல்இசை வேட்ட நயனுடைய நெஞ்சின்***
***கடப்பாட் டாளனுடைப்பொருள் போலத்***
***தங்குதற்கு உரியது அன்று நின்***
***அங்கலுழ் மேனிப் பாஅய பசப்பே***"[51] (குறுந்., பா.எ. 143)

என்னும் பாடலில், 'ஆராய்ந்து அணிந்த அணிகலன்களை உடையாய். பயனைத் தரும் மலைநாட்டிற்கு உரிய தலைவன், நின்னிடம் அன்பு மிகுதியாக உடையவன். நின்னைக் களவில் நுகர்ந்து, வரையாது ஒழுகும் பழியையும் அஞ்சுபவன். பல்லாற்றானும் நில்லா உலகத்தில் நிலையாக உள்ளது, நிலையாமை ஒன்றேயாகும். ஆதலின் உலகம் நன்று எனக் கொண்ட புகழை விரும்பும் ஒழுகலாற்றினையுடைய உள்ளத்தோடு கூடிய ஒப்புரவாளன் ஈட்டிய பொருள் போல, நினது அழகு ஒழுகும் மேனியின்கண் பரவிய பசலை, நிலையாகத் தங்குவதற்கு உரியதன்று. அதலின் நீ வருந்தற்க' என்பது அச்ச உணர்வாகிறது. இதில் தோழி தலைவன் மிக இரக்கம் உடையவன் உன்னைப் பிரிந்து இருப்பதற்கு

அஞ்சி விரைவில் வரைபொருளோடு வருவான் என்று தலைவியை ஆற்றுவிக்குமிடத்து அச்சத்தை அறிய முடிகின்றது.

வரைவிடைப் பிரிவின்போது, தோழி தலைவியிடம், அவர் தம் காதலியை பிரிதலால் இவ்வண்ணம் ஆயினாளென்று என்னைக் கண்டு வெட்கமுற்றுத் தெய்வத்தை முன்னிலைப்படுத்தி இனி ஒருபொழுதேனும் பிரியேனென்று நின்னுடன் சூளுற்றாயினும் அங்ஙனங் கூறிய சூள் பொய்த்தால் தெய்வம் வருத்துமென்று அஞ்சி அத்தெய்வத்திற்கு வழிபாடு செய்வோம் என்று தோழி தலைவியை ஆற்றுவிக்கின்ற,

"***பெருந் தோள் நெகிழ அவ் வரி வாட***
***சிறு மேல் ஆகம் பெரும் பசப்பு ஊர***
***இன்னோம் ஆக, ஏற் கண்டு நாணி,***
***நின்னொடு தெளித்தனர் ஆயினும், என்னதூஉம்,***
***அணங்கல் ஓம்புமதி வாழிய நீ! என***
***கணம் கெழு கடவுட்கு உயிர் பலி தூஉய்,***
***பரவினம் வருகம் சென்மோ – தோழி! –***
***பெருஞ் சேயிறவின் துய்த் தலை முடங்கல்***
***சிறு வெண் காக்கை நாள் இரை பெறூஉம்***
***பசும் பூண் வழுதி மருங்கை அன்ன, என்***
***அரும் பெறல் ஆய் கவின் தொலைய,***
***பிரிந்து ஆண்டு உறைதல் வல்லியோரே***"[52] (நற்., பா.எ. 358)

என்னும் இப்பாடலில், 'தோழி! பெரிய சிவந்த இறா மீனின் பஞ்சு போன்ற தலையையுடைய முடங்கலைச் சிறிய வெள்ளிய காக்கை நாட்காலையின் இரையாகப் பெறும் பசிய பூணையனிந்த பாண்டியனது மருங்கூர் போன்ற என் அழகு தொலையுமாறு என்னைப் பிரிந்து தலைவன் அங்கே தங்கியிருக்கின்றான். தோழி! முன்னொரு பொழுது என் பெரிய தோள்கள் தளர்வடைந்தன. அழகிய வரிகள் வாடின. சிறிய மெல்லிய என் மார்பில் பெரிய பசலை பரவியது. அதனால் நாணமடைந்த அவர் தெய்வத்தை முன்னிலைப்படுத்தி இனி ஒரு பொழுதேனும் இவளைப் பிரியேன் என்று சூளுரை செய்தார். அப்படிச் சூளுரைத்த அவர் பொருள்

காரணமாக என்னைப் பிரிந்தார். சூள் தவறிய அவரைச் சிறிதேனும் வருத்துதல் செய்யாது காப்பாயாக என்று கூறிக் கணங்களையுடைய கடவுளுக்கு உயர்ந்த பலி தூவி வணங்கி வரச் செல்வோமா?' என்பது ஐயத்தை உணர்த்துகிறது. இதில் அச்சம் 'அணங்கு' என்ற சொல்லில் இடம்பெற்றுள்ளது.

**நொதுமலர் வரைவில் தோழி அறத்தொடு நிற்றலில் அச்சம்**

"***பிறர் தலைவியை திருமணம் செய்ய வருவது நொதுமலர் வரைவாகும். நொதுமலர் வரைவோ தலைவியின் கற்பைப் பாதிப்பதாகிறது. அதனால் தலைவி நொதுமலர் வரைவிற்கு அஞ்சுவாள். அப்போது தலைவி தோழிக்கும் தோழி செவிலிக்கும் அறத்தொடு நிற்பாள்***"[53] என்பர் கொ.இராமசாமி.

நொதுமலர் வரைவின்போது, தலைவியிடம் தோழி கூறுகின்ற,

"***மலைச்செஞ் சாந்தின் ஆர மார்பினன்,***
***சுனைப்பூங் குவளைச் சுரும்பு ஆர் கண்ணியன்,***
***நடுநாள் வந்து நம் மனைப் பெயரும் –***
***மடம் ஆர் அரிவை நின்மார்பு அமர் இன்துணை,***
***மன்ற மரையா இரிய, ஏறுஅட்டு,***
***செங்கண் இரும்புலி குழுமும்; அதனால்,***
***மறைந்தற் காலையோ அன்றே;***
***திறப்பல் வாழி வேண்டு அன்னை! – நம்கதவே***"[54] (குறுந்.,பா.எ. 321)

எனும் இப்பாடலில், 'அன்னையே, மடப்பம் பொருந்திய அரிவையே, வாழ்வாயாக, நான் கூறுவதை விரும்பிக் கேட்பாயாக, நினது மார்பைப் பொருத்தும், செவ்விய சந்தனத்தைப் பூசி, தன் கடலில் பிறந்த முத்துக்களை அணிந்த மார்பினையுடையவன். தன் மலைச்சுனையில் பூத்த, வண்டுகள் ஒலிக்கும் ஆகிய கண்ணியைச் சூடியவன். அவன் நம்முடைய மனைக்கு நடு இரவில் வந்து மீண்டு செல்பவன். சிவந்த கண்களையுடைய பெரிய புலி, ஊர்மன்றத்தின் கண் உள்ள மரையா, இரிந்து ஓட, அதன் கலையைக் கொன்று, முழங்கா நிற்கும். அதன் முழக்கத்தை கேட்டேன். ஆதலால், நம்முடைய கதவினை மறைக்கும்

காலம் இதுவன்று' என்று கூறுகிறாள். இதற்கு உ.வே.சா., "***புலிகுழுமம் என்றது தலைவன் வரும் இடையாமத்தில் அப்புலியினால் அவனுக்கு ஏதம் நிகழிலுங் கூடுமென்று அச்சத்தைக் கொண்ட நினைவிற்று. அதனால் இனி அறத்தொடு நின்று அவனது வரைவை ஏற்றுக்கொள்ளச் செய்தலே நன்றென்பதைத் தோழி உணர்த்தினாள்***"[55] என்று கூறுகிறார்.

இதில் தலைவன் இரவில் வருதலால் அலரும், அவன் வரும் வழி விலங்குகள் வாழும் இடம் என்பதால் அவனது உயிர்க்கு ஆபத்து நிகழும் என்று தோழி அஞ்சியமையை அறத்தொடு நின்று கூறுகிறார்.

**தோழி → செவிலியிடம் கூற்று**

தலைவியின் உடல் வேறுபாட்டின் காரணத்தை அறியாத செவிலி தோழியை வினாவும்போது, அவள் அஞ்சி அன்னைக்கு சினம் தோன்றாதவாறு களவை உணர்த்தி அறத்தொடு நிற்பாள். அவ்வாறு நிற்குமிடத்து அச்சம் வெளிப்படுகின்றது.

தலைமகளை நோக்கி, இவ்வேறுபாடு எதனால் ஆயிற்று என்று வினாவிய செவிலியிடம் தோழி, 'அன்னாய், வாழ்வாயாக யான் கூறுவதனை விரும்பிக் கேள். என் தோழி மிகவும் பசப்பெய்தி வேறுபடுகின்றாளாகலின், இதற்குக் காரணம் என்னையென் நீ சினத்தால் கண்சிவந்து அச்சுறுத்தி வினவகின்றாய். ஆராயுமிடத்து, அது தளிரும் பூங்கொத்துக்களுமுடைய கோங்கின்பூவைக் கொடுத்தமையால் ஆயினமையின், பிறரால் எத்துனையும் அறியப்படாது காண்' என்று கூறுவதனை,

"***அன்னாய் வாழிவேண் டன்னையென் றோழி***
***பசந்தனள் பெரிதெனச் சிவந்த கண்ணை***
***கொன்னே கடவுதி யாயி னென்ன தூஉம்***
***அறிய வாகுமோ மற்றே***
***முறியிணர்க் கோங்கம் பயந்த மாறே***"[56] (ஐங்., பா.எ. 366)

என்ற பாடலடிகள் சுட்டும்.

இதில் தோழி 'இவளின் மேனியின் வேறுபாட்டுக்கு காரணம் கோங்கின்பூ கொடுத்து அன்பு செய்த ஒரு ஆடவனே காரணம் என்று வினாவிய தாய்க்கு அஞ்சி அறத்தொடு நிற்குமிடத்து அச்சம் சுட்டப்படுகின்றது.

தோழி வினாவும் செவிலியிடம் 'அன்னாய் இதனை விரும்பிக்கேள்; அவர் நாட்டின்கண், துதிபோலும் கால்களையுடைய அன்னம் தன் பெடையன்னம் எனக் கருதித் தன் காலை வைத்து மிதித்து நோக்கும் குளிர்ந்த கடற்சங்கினும் இவள் தன் அழகொழுகும் மேனி அவளை நினைந்து வேறுபட்டுப் பசந்து தோன்றா நின்றாள்' என்று குறிப்பிடுவதை,

"***அன்னை வாழிவேண் டன்னை யவர்நாட்டுத்***
***துதிக்கா லன்னந் துணைசெத்து மிதிக்கும்***
***தண்கடல் வளையினு மிலங்குமிவள்***
***அங்கலி ழாகங் கண்டிசி னினைந்ததே***"[57] (ஐங்., பா.எ. 106)

என்ற பாடலடிகள் சுட்டும். இதில் தலைவியின் அழகும் மேனியும் வேறுபாட்டுக்கு ஒரு தலைவனே காரணம் என்று தோழி (குறிப்பாக) அஞ்சி வினாவிய தோழியிடம் அறத்தொடு நிற்குமிடத்து அச்சம் சுட்டப்படுகின்றது. இதைப்போல், வினவிய செவிலியிடம் தோழி,

"......................................................................
***பொய்யும் உளவோ? என்றனன் பை யெனப்***
***பரிமுடுகு தவிர்த்த தேரன் எதிர் மறுத்து***
***நின் மகள் உண்கண் பல் மாண் நோக்கிச்***
***சென்றோன்மன்ற அக்குன்று கிழவோனே***
***பகல் மாய் அந்திப் படுசுடர் அமையத்து***
***அவன் மறை தேஎம் நோக்கி மற்று இவன்***
***மகனே தோழி! என்றனள்***
***அதன் அளவு உண்டு கோள் மதி வல்லோர்க்கே***"[58]

(அகநா., பா.எ. 48:19–26)

என்னும் பாடலில், 'அன்னை வாழ்வாயாக! அன்னை யான் கூறுவதனை விரும்பிக் கேள் நின்மகள் துன்பம் எய்தி பாலையும் பருகாளாய் மிகவும் பசந்துள்ளாள் என வினவுகின்றனை.......... ஒப்பற்ற கணையினை ஆய்ந்து கைக்கொண்டு ஒரு தலைவன் தோன்றி அப்புலி சென்ற வழி யாதோ என்று வினவி நின்றனன். யாங்கள் அவனைக் கண்டு நாணுற்று நின்றேமாக... மலை நாட்டிற்குரியனாகிய அவன், பரிகளின் வேகத்தை அடக்கி மெல்லெனச் செலுத்தும் தேரனாகி நின் மகளது மையுண்ட கண்களை நோக்கிய பின் எதிர்நோக்கலாகப் பலமுறை நோக்கி சென்றனன். தோழியே இவன் ஓர் ஆடவனே என்றனள்' என்று கூறுகிறாள்.

இவற்றில் தோழி தலைவியின் மேனியின் வேறுபாட்ட காரணம் ஒரு ஆடவனே என்று வினாவிய செவிலியிடம் (குறிப்பாக) அஞ்சி தோழி அறத்தொடு நிற்குமிடத்து அச்சத்தை உணர்த்துகின்றது.

தலைவியின் வேறுபாடு கண்ட தாய் தெய்வத்தால் அணற்குற்றாள் என்று முருகனுக்கு வெறியெடுப்பு வெறியாடல் எனப்படும். வெறியாட்டு நிகழுமிடத்து தோழி கூறுவதனை தொல்காப்பியர், "*.......................... களம்பெறக் காட்டினும்*"[59] எனச் சுட்டுவர். தோழி இவ்வெறியாட்டு எடுக்கும்போது அறத்தொடு நிற்குமிடத்து அச்சம் வெளிப்படுகின்றது.

தலைவியின் வேறுபாடு கண்டு வினாவிய செவிலியிடம் தோழி, இவளுக்குத் தழையுடையுதவி அன்பு செய்தான் ஒருவன் இருப்ப, அதனை அறியாது இது முருகனால் வந்தது என மயங்கி வெறியெடுப்பதனால் பயனில்லை, என்று தோழி வெறியெடுப்பதற்கு அஞ்சி செவிலியிடம் அறத்தொடு நிற்பதை,

> "***மரம் கொல் கானவன் புனம் துளர்ந்து வித்திய***
> ***பிறங்கு குரல் இறடி காக்கும் புறம் தாழ்***
> ***அம் சில் ஓதி, அசை இயல், கொடிச்சி***
> ***திருந்து இழை அல்குற்குப் பெருந்தழை உதவிச்***
> ***செயலை முழுமுதல் ஒழிய அயலது***
> ***அரலை மாலை சூட்டி,***
> ***ஏமுற்றன்று இவ்வழுங்கல் ஊரே***"[60] (குறுந்., பா.எ. 214)

என்று குறிப்பிடும். ‘குறவன் மரங்களை வெட்டி எறிந்த கொல்லையில் களைக்கோட்டினால் களையை நீக்கிக் கருத்தினையை விதைப்பர். பருத்த கதிர்களையுடைய அத்தினையை, நுதல் தொட்டுப் பின் தாழ்ந்த, அழகிய, சிலவாக முடிக்கப்பெறும் கூந்தலையும், அசைந்த நடையினையும், உடைய கொடிச்சி காவல் புரிவாள். அவளுடைய, செவ்விதாக அமைந்த அணிகலன்களையுடைய அல்குலில் ஆடையாக அணிவதற்குப் பெரிய தழையை உதவிய அசோக மரத்தின் பருத்த அடிமரம், தனித்து நின்றது. விதைகளால் ஆகிய மாலையை, வேலனுக்குச் சூட்டி, இவ் ஆரவாரத்தையுடைய ஊர், இவட்கு யாதோர் இயைபுமில்லர்த அயன்மையையுடைய வெறியாட்டின்கண் மயங்குவதாயிற்று’ என்பதன்வழி அச்சம் கூறப்படுகிறது.

காப்புமிகுதிக்கண் தலைமகள் மெலிவுகண்டு வெறியெடுப்பதற்கு அஞ்சி தோழி செவிலித்தாயிடம், இவள் மெலிவிற்கு தலைவன் ஒருவனே என்று கூறி அறத்தொடு நிற்கின்ற,

“***அன்னகய், வாழி! வேண்டு, அன்னை!*** நம் படப்பைப்
***புலவுர்சேர் துறுகல் ஏறி, அவர் நாட்டுப்***
***பூக்கெழு குன்றம் நோக்கி நின்று,***
***மணிபுரை வயங்கு இழை நிலைபெறத்***
***தணிதற்கும் உரிந்து, அவள் உற்ற நோயே***”[61] (ஐங்., பா.எ. 210)

என்னும் இப்பாடலில், ‘அன்னையே! நீ வாழி! யான் கூறுவதனை விரும்பிக் கேள் அன்னையே! நம் தோட்டத்தின்கண் உள்ள புலால்மணம் வீசும் குண்டுக்கல் மீது ஏறி நின்று, அவர் நாட்டகத்துள்ள பூக்கள் நெருங்கியதும் நீலமணியையொத்ததும் ஆன குன்றத்தை நோக்கினாள் எனில், என் தோழி, தன் ஒளிமிக்க அணிகள் நெகிழாது, அவை நின்ற நிலையிலேயே நிற்பதற்கு ஏதுவாக அவளை வாட்டும் பிரிவுத்துயரம் தணிதற்கும் உரியதாகும் (வேறு வழியறியேன்)’ என்பது அச்சமாகிறது.

தலைவியை வேற்று மக்கள் மணஞ்செய்து கொள்ள வேண்டி வருவதையறிந்த தோழி செவிலியிடத்து, ‘அன்னாய் முன்பு

களவொழுக்கத்திலே கலந்த கேள்வருடைய தேர்வருவது நிறுத்தப்பட இயலாது வந்தவர் தம் வறிதே பெயர்வரோ? நம் இளைமைகளை வேற்றுவரைவிற் படுத்தினிரேல் கொலை செய்ய சிறுவர் கைப்பட்டளேயே' என்று கூறுகிறாள். இவற்றில் வேற்றுவரைவிற்கு அஞ்சி தோழி தலைவியின் உண்மை நிலை எடுத்துக் கூறி அறத்தொடு நிற்குமிடத்து அச்சம் வெளிப்படுகின்றது. மேலும்,

"***அன்னாய், வாழி வேண்டு, அன்னை! என் தோழி***
***நனி நாண் உடையள்; நின்னும் அஞ்சும்***
***ஒலி வெள் அருவி ஓங்கு மலை நாடன்***
***மலர்ந்த மார்பிற் பாயல்***
***தவ நனி வெய்யள்; நோகோ, யானே***"[62] (ஐங்., பா.எ. 205)

என்னும் பாடலில், 'அன்னையே! நீ வாழ்க! என் சொல்லைக் கேள்! அன்னையே! என் தோழி மிகவும் நாணமுடையவள், மேலும் நின்னையும் பெரிதும் அஞ்சுகின்றனள். ஒலியொடு வீழும் வெள்ளிய அருவியினை உடைய உயர்ந்த மலைநாட்டிற்குத் தலைவன் இவள் காதலன். அவனது அகன்ற மார்பிடத்தே கிடந்து துயிலுதலை இவள் மிக விரும்புகின்றனள். இவள் நிலைக்காக யானும் நோகின்றேன். யான் செய்யவல்லது பிறிது யாது?' என்பது வழி அச்சம் உணரப்படுகிறது.

தலைவியின் நொதுமலர் வரைவிற்கு அஞ்சிய தோழி செவிலியிடம் தலைவியின் நிலைக்கு மலைநாடனாகிய ஒருவனே காரணம் என்று சொல்லி அறத்தொடு நின்றவிடுத்து அச்சம் வெளிப்படுகின்றது. நொதுமலர் வரைவின்போது, வினாவிய செவிலியிடம் தோழி, 'பெரிய கடற்கரைக் கண்ணதாகிய சிறுவெண்காக்கை துறையின்கண் தங்கும் தோணியினகத்தே கூடு அமைத்து முட்டையிட்டு வாழும் குளிர்ந்த துறைவன் வரைந்து கொண்டு தன் தண்ணிளியைச் செய்வானாயின், ஒள்ளிய நெற்றியையுடைய அரிவையாவாள் பாலுண்டு பழங்கண் தீர்வாள் என்பதை,

"***பெருங்கடற் கரையது சிறுவெண் காக்கை***
***துறைபடி யம்பி யகமணை யீனும்***

***தண்ணந் துறைவன் நல்கின்***

***ஒண்ணுத லரிவை பாலா ரும்மே***”[63] (ஐங்., பா.எ. 168)

என்ற பாடலடிகள் குறிப்பிடும். இதில் நொதுமலர் வரைவின் தலைவி ஆற்றாமைக் கண்டு வினாவிய செவிலிக்கு குறிப்பாக அஞ்சி நெய்தல் தலைவன் ஒருவனே என்று கூறி அறத்தொடு நிற்குமிடத்து அச்சம் வெளிப்படுகின்றது.

**கற்பு பாடல்களில் அச்சம்**

**தோழி → தலைவியிடம் கூற்று**

தலைமகன் கடமை காரணமாகப் பிரிந்தான், பிரிவாற்றாத தலைவி மெலிவுற்றாள். அது கண்டு பொறாத தோழி சொல்லியதாக வருகின்ற,

“***பொன் செய் பாண்டிற் பொலங்கலம் நந்த,***

***தேர் அகல் அல்குல் அவ்வரி வாட,***

***இறந்தோர் மன்ற தாமே – பிறங்கு மலை***

***புல் அரை ஓமை நீடிய***

***புலி வழங்கு அதர கானத்தானே***”[64] (ஐங்., பா.எ. 316)

எனும் இப்பாடலில், ‘பொன்னால் செய்த பாண்டிலாகிய பொன்னணி நெகிழ, தேர்த்தட்டுப் போன்ற அல்குல் தடத்தின் கண்ணுள்ள அழகிய வரிகள் வாட்டமுற, உயர்ந்த மலைப்பக்கத்திலே, பொலிவுற்ற அரையை உடைய ஓமை மரங்கள் நிறைந்ததும், புலிகள் உலாவுவதுமான கானத்தின்கண், தெளிவாக நம்மைப் பிரிந்து சென்றார் நம் தலைவர், நாம் செய்யத்தக்கது யாது?’ என்று கூறுவதிலிருந்து ‘அச்சம்’ உணர முடிகிறது. புலிகள் உலாவுவதுமான கானத்தில் தலைவன் சென்றான். இதனால் ஏதேனும் அவனுக்குத் துன்பம் உருவாகக் கூடும் என்ற அச்சம் தலைவிக்கு உருவாவதை தோழி கூறுகிறாள். ‘புலி வழங்கு அதர கானத்தானே’ எனும் பாடலடியானது, அச்ச மெய்ப்பாட்டை உணர்த்துகிறது.

தலைமகன் பிரிவின்கண் தலைமகள் மெலிவுற்றாள். அவன் மீண்டு வந்தது கண்ட தோழி மகிழ்ந்து தலைவிக்கு உரைக்கின்ற,

"*விழுத் தொடை மறவர் வில்லிடத் தொலைந்தோர்*

*எழுத்துடை நடுகல் அன்ன விழுப் பிணர்ப்*

*பெருங் கை யானை இருஞ்சினம் உறைக்கும்*

*வெஞ்சுரம் 'அரிய' என்னார்,*

*வந்தனர் – தோழி! – நம் காதலோரே!*"[65] (ஐங்., பா.எ. 352)

என்னும் இப்பாடலில், 'விழுமிய அம்பு தொடுத்தலை உடைய மறவர் தம் வில்லிலிருந்து விடுத்த அம்பினால் உயிர் நீத்து வீழ்ந்த கரந்தை வீரர் பொருட்டுப் பெயரும் பீடும் பொறித்து நட்ட நடுகல்லை ஒத்த விழுமிய சருச்சரை கொண்ட பெரிய துதிக்கையை உடைய யானை, கடும் சினம் மிக்குத் திரிதற்கு இடமான வெம்மை மிகுந்த காடுகள் கடத்தற்கு அரியன என்று கருதி உள்ளம் சுருங்கி, இடையிலே தங்குதலின்றி நம் காதலர் வந்தனர்' என்று விளக்கத்தில் கொடிய தொழிலைச் செய்கின்ற வீரர்கள் உயிர் மாய்த்துக் கிடக்கும் காட்டின் இயல்பினைக் கூறி அத்தகு காட்டைத் தாண்டி வந்தார் என்பதிலிருந்து விலங்கு நிலைகளன்வழி அச்சம் உணர்த்தப்பட்டுள்ளவற்றை அறியமுடிகிறது.

மேலும், 'யானையின் உடல் போல் கல்லின் புறம் சொரசொரப்பாக இருத்தல் ஈண்டுப் பிணர் எனப்பட்டது. இருஞ்சினமாவது கடிய சினமாகும். தம்மிச்சையாகச் சுரநெறியில் யானைகள் திரியும் என்றது வழியின் கடத்தற்கருமை பற்றியாம். இத்தகு கடிய சுரத்தையும் பெரிதாகக் கருதாது, நம்பொருட்டு வந்தார் தலைவர் என்று அவரது ஊக்கத்தையும் அன்பையும் புலப்படுத்தாள். 'நம் காதலோர்' என்றாள். அவர் காதல் பொங்கும் உள்ளத்தோடு வந்தார்' என்னும் உரை விளக்கம் யானையின் கோபத்தை உணர்த்துகிறது. இவ்வாறு 'விலங்கு' எனும் நிலைக்களன் வழி அச்ச மெய்ப்பாட்டுணர்வு புலப்படுத்துவதை உணரமுடிகிறது.

தலைவன் பிரிந்தபோது தலைவி ஆற்றாது வருந்தினாள். அப்போது தோழி 'தலைவர் கூறிய பருவம் வந்தது ஆதலின் அவர் வருவார்' எனக் கூறி ஆற்றியிருக்குமாறு வற்புறுத்துகின்ற,

"***வான் பிசிர்க் கருவியின் பிடவு முகை தகைய,***

***கான் பிசிர் கற்ப, கார் தொடங்கின்றே***

***இனையல் வாழி, தோழி; எனையதூஉம்***

***நிற் றுறந்து அமைகுவர் அல்லர்***

***வெற்றி வேந்தன் பாசறையோரே***"[66] (ஐங்., பா.எ. 461)

எனும் இப்பாடலில், 'தோழி வருந்தற்க! வானம் சிதறிய மழைத்துளியாலே பிடவம் அழகிய மொட்டுக்களைத் தோற்றுவிக்கவும், அம்மழையை ஏற்றுக் கொண்ட கானம் நீர்த்துளிகளை எங்கும் சிந்தவும் கார்ப்பருவம் தொடங்கிவிட்டது. வெற்றியை உடைய வேந்தனின் பாசறையில் இருக்கும் நம் காதலர் இனிச் சிறிதும் நின்னைப் பிரிந்து வாழ்தலை அமையார் விரைந்து வருவர்' என்ற விளக்கத்தில் அச்ச உணர்வு உணர்த்தியிருக்கிறது.

தலைவியானவள், கார்காலப் பருவம் வந்தது கண்டு, தான் வரவில்லையே என துன்பம் அடைவாள் என்பதைத் தலைவன் உணர்ந்து வருவான் என்பதைத் தோழி கூறும்போது தலைவி அச்சமுறும் உணர்வு உணர்த்தப்படுவதை உணரமுடிகிறது. பாசறையில் தங்கியிருக்கும் தலைவன் நெடுங்காலம் வராது போகக்கூடும். அதனால் துன்பம் நேரிடுவதோடு சமூகத்தாரால் பழிச்சொல்லுக்கு ஆளாகக்கூடும் என்பதை நினைத்து மனத்திற்குள் அச்சமுறுகிறாள். சூழலை உணர்ந்த தோழி தலைவன் வருவான் என்கிறாள். தலைவியின் அச்ச உணர்வைப் போக்கும் தோழியின் கூற்றாதலால் இப்பாடலில் அச்ச மெய்ப்பாடாகிறது. தலைவன் வராது இருந்து விடுவானோ? என அச்சமுறுவது 'நிற்றுறந்து அமைகுவர் அல்லர்' என்ற பாடலடி உணர்த்துகிறது. இதற்கு தமிழண்ணல், "***தோழியின் நிலை இருதலைக்கொள்ளி எறும்பு போன்றது. ஒரு பக்கம் தலைவியின் மெலிவு கண்டு அஞ்சுகிறாள். மறுபக்கம் தாயின் சினத்திற்கு அஞ்சுகிறாள். காதல் உண்மையைச் சொல்லாவிட்டால் தலைவி வருந்துவாள், சொன்னாலோ தாய் வருந்துவாள். யாருக்காக அஞ்சி நடப்பது? மேலும் மேலும் பகைமையைப் பெருக்கும் இரண்டு பெரிய வேந்தர்களுக்கு இடையே ஒற்றுமை ஏற்படுத்த முயலும்***

***சான்றோர்கள், இருவரும் தம்மைத் தவறாக எடுத்துக்கொள்ளக் கூடாதே என்று அஞ்சி வருந்துவது போல, தோழி தானும் வருந்துவதாகக் கூறுகிறாள்***”[67] என்று விளக்கம் கூறுவது தோழியின் நிலைப்பாட்டை எண்ணி வியக்க முடிகிறது. தோழிக்கு அச்சம் உருவாகக்கூடிய சூழலின் மகத்துவத்தை உறுதிப்படுத்துகிறது.

இதேபோல், ‘தலைவன் தான் குறித்துச் சென்ற கார்ப்பருவத்தில், தான் சொற்பிழையாது வந்தமைக்கு மகிழ்ந்து தோழி தலைவியிடம் கூறுகின்ற,

“***பிடவம் மலர, தளவம் நனைய,***
***கார் கவின் கொண்ட கானம் காணின்,***
***‘வருந்துவள் பெரிது’ என, அரும் தொழிற்கு***
***........................................... அகலாது***
***வந்தனரால், நம் காதலர்***
***அம் தீம் கிளவி! நின் ஆய் நலம் கொண்டே***”[68] (ஐங்., பா.எ. 499)

எனும் இப்பாடலில், ‘அழகிய இனிய சொல்லினாய்! நம் காதலர் பிடவம் மலரவும், தளவம் அரும்புகளைத் தோற்றுவிக்கவும் கார் மழையால் புத்தழகு பெற்ற காட்டைக் கண்ணுற்றால் ‘நம் காதலி பெரிதும் வந்தவாள்’ என உட்கொண்டு, தான் மேற்கொண்ட விலக்குதற்கு அரிய போர் செயற்கு மேலும் அகலாமல் நீ இழந்த உன் சிறந்த நலத்தினை மீண்டும் பெறுமாறு உரிய காலத்தில் வந்தார்’ என்பதிலிருந்து அச்ச உணர்வு உணர்த்தப்பட்டுள்ளது. தான் மேற்கொண்டது விலக்கரிய கடமை என்ற போதும் தன் காதலியின் வருத்த மிகுதியை உணர்ந்த பேரன்பினால் வந்தான் தலைவன் என்ற கருத்தானது தலைவி அஞ்சக்கூடும் என்பதை தலைவன் உணரும் உணர்விலிருந்து பெறமுடிகிறது. இதனை, ‘வருந்துவள் பெரிது’ எனும் பாடலடி உணர்த்துகிறது. இதன்வழி தலைவியின் உணர்வு வழி அச்சம் மெய்ப்பாடு உணர்த்தப்பட்டிருக்கிறது.

‘அருந்தொழிற்கு அகலாது எனக்கொண்டால் அஃது அவன் ஆண்மைக்கு இழுக்கு என்பாராய் வருந்தொழிற் எனப்பாடங் கொண்டார்

ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை. வருந்தொழிலாவது, மேல் செய்தல் வேண்டித் தோன்றும் பிறிதுவினை என்பார் அவர். ‘அருந்தொழில்’ என்ற பாடம் கொண்ட பெருமழைப்புலவர், ‘அகலுதலாவது – மேலும் மேலும் செல்லுதல். அங்ஙனம் வருதற்கு ஏது பெருங்காதலே என்பாள், நம் காதலர் என்றாள்’ என்பார் பெருமழைப்புலவர். ஈழத்து உரையாசிரியரும் ‘அரிய போர்த்தொழிறத்கண் நீட்டியாது’ என்றார் என்ற கருத்தானது தலைவி அஞ்சக்கூடும் என்பதை தலைவன் உணரும் உணர்விலிருந்து பெறமுடிகிறது. இதனை, ‘வருந்துவள் பெரிது’ எனும் பாடலடி உணர்த்துகிறது. அதன்வழி தலைவியின் உணர்வுவழி அச்சம் மெய்ப்பாடு உணர்த்தப்பட்டிருப்பதை உய்த்துணர முடிகிறது.

தலைமகன்பால் பரத்தமையொழுக்கம் கண்ட தலைவி வேறுபட்டாள். அவளைத் தேற்றும் பொருட்டு ‘இப்பொழுது என்பால் புறத்தொழுக்கம் இல்லை’ என்று தலைமகன் கூறினான். ஆனால் தலைவி அவன் சொல்லை நம்ப மறுத்து மீண்டும் மனம் வேறுபட்டாள். அது கண்ட தோழி இங்ஙனம் கூறித் தேற்றுகின்ற,

“***முள்ளி நீடிய முது நீர் அடைகரைப்***
***புள்ளிக் களவன் ஆம்பல் அறுக்கும்***
***தண் துறை ஊரன் தெளிப்பவும்,***
***உண்கண் பசப்பது எவன்கொல்? – அன்னாய்***”[69] (ஐங்., பா.எ. 21)

எனும் இப்பாடலில், ‘அன்னையே! முள்ளிச் செடிகள் அடர்ந்து வளர்ந்துள்ள பழைய நீர் நிலைகளின் கரைகளில் வாழும், தம் மேனியில் புள்ளிகளைக் கொண்ட நண்டுகள் ஆம்பல் தண்டுகளை அறுப்பதற்கு இடமான குளிர்ந்த நீர்த்துறைகளைக் கொண்ட ஊரின் தலைவன், ‘இனி என்பால் பரத்தையர் ஒழுக்கம் ஒருபோதும் உளதாகாது’ என உறுதி கூறிய பின்னும் நின்னுடைய மையுண்ட கண்கள் பசலை கொள்வது எக்காரணம்’ என்று கூறும் தோழி விளக்கத்திலிருந்து தலைவியின் ‘அச்சம்’ உணர்த்தப்படுகிறது.

தலைவனின் பரத்தமை ஒழுக்கத்தால் தனக்கு ஏதேனும் தீங்கு நேரக்கூடும் என்பதைத் தலைவி உணர்ந்து கொண்டு துன்புறும் உணர்வு அவளின் மனதில் தோன்றும் அச்சம் இவளது அச்சத்தை தேற்றுகின்ற தோழியின் உரையில் அச்சம் அமைகின்றது. கண்கள் வழி உணர்த்தப்பட்டுள்ளது. இதனை, ‘உண்கண் பசப்பது’ என்ற பாடலடி உணர்த்துகிறது.

தலைமகன் தன் மனைக்கு உரிய காலத்தில் வராது காலந்தாழ்ந்து வந்தான். அதுகொண்டு அவன்பால் பரத்தமை உண்டு எனக் கவலையுற்ற தலைவிக்குத் தோழி இங்ஙனம் கூறித் தலைவன் பிழையில்லாதவன் எனத் தெளிவுறுத்தியதாக,

‘***செந்நெல்அம் செறுவில் கதிர்கொண்டு, களவன்***
***தண்ணக மண் அளைச் செல்லும் ஊரற்கு***
***எல்வளை நெகிழச் சாஅய்,***
***அல்லல் உழப்பது எவன்கொல்? – அன்னாய்!***’[70] (ஐங்., பா.எ. 27)

எனும் இப்பாடலில், ‘அன்னையே! நண்ட செந்நெல் விளையும் அழகிய வயலிற் புகுந்து முற்றிய கதிர்களைக் கொய்து கொண்டு தன் குளிர்ச்சி பொருந்திய உள்ளிடத்தையுடைய தன் மண் வளைக்குச் செல்லுதற்கு இடனான ஊரினை உடைய நம் காதலன் பொருட்டாய் ஒளியுமிழும் வளைகள் கழன்று வீழுமாறு உடல் மெலிவுற்று வருந்துவது எதற்கு?’ என்ற தோழியின் விளக்கத்திலிருந்து தலைவியின் அச்ச உணர்வுக்கும் தேற்றுமொழியில் புலப்படுகிறது.

இவ்வாறு தலைவனின் பரத்தமை ஒழுக்கத்திற்கு அஞ்சக்கூடிய தலைவியின் உணர்வில் ‘அச்சம்’ மெய்ப்பாட்டுணர்வு தெளிவாகிறது.

இடைச்சுரத்துக் கவலுவன கண்டு, ‘நம்மை ஆற்றார்’ என நினைந்து மீள்வர் கொல்?’ எனக் கவன்ற கிழத்திக்குத் தோழி சொல்லியதாகின்ற,

“***அம்சில் ஓதி ஆய்வளை நெகிழ***
***நொந்தும், நம் அருளார் நீந்தோர்க்கு அஞ்சல்***
***எஞ்சினம் வாழி – தோழி – எஞ்சாது;***

***தீய்ந்த மராஅத்து ஓங்கல் வெஞ்சினை***

***வேனில் ஓர்இணர் தேனோடு ஊதி,***

***ஆராது பெயரும் தும்பி***

***நீர்இல் வைப்பின் சுரன் இறந்தோரே***"[71] (குறுந்., பா.எ. 211)

எனும் இப்பாடல், 'அழகிய சிலவாகிய கூந்தலை உடைய உடல் மெலிவைப் பிறர் ஆய்தற்குக் காரணமான வளையல்கள், நெகிழா நிற்ப வருந்தியும் நம்மை அருளாதவராய்ப் பிரிந்து செல்வதற்கு உடன்பட்ட தலைவர் பொருட்டு, யாம் அஞ்சுதலை நீங்கினேம். முற்றிலும், தீய்ந்து காணப்படும் கடம்ப மரத்தின், ஓங்குதலையுடைய, வெவ்விய கிளையில், வேனிற் காலத்தில் மலர்ந்த ஒற்றைப் பூங்கொத்தினைத் தன் கிளையாகிய தேன் என்னும் பெண்வண்டொடு, தும்பி, தேன் உண்பதற்காக ஊதிற்று. அதன்கண் குறைந்த தேனே இருந்தமையால், அது தன் பெடையை அருந்தவிட்டுத் தான் உண்ணாமல் நீங்கிற்று. நீர் இல்லாத இத்தகைய பாலை நிலத்தைக் கடந்து அவர் சென்றார்' என்ற கூற்றிலிருந்து தலைவியினது பய உணர்வினைத் தேற்றும் சூழல், அதாவது கானகத்தின் கொடிய தன்மையை கூறும்போது அச்சம் தோன்றுகிறது. இதேபோல்,

"***படரும் பையப் பெயரும் கடரும்***

***என்றூழ் மாமலை மறையும், இன்று அவர்***

***வருவர் கொல், வாழி – தோழி – நீர் இல்***

***வறுங் கயம் துழைஇய இலங்கு மருப்பு யானை***

***குறும் பொறை மருங்கின் அமர் துணை தழீஇக்***

***கொடுவரி இரும்புலி காக்கும்***

***நெடுவரை மருங்கின் சுன் இறந்தோரே***"[72] (குறுந்., பா.எ. 215)

என்னும் பாடலில், 'தோழி, உன்னுடைய துன்பமும் மெல்ல மெல்ல நீங்கும். ஒளிவிடுகின்ற கதிரவனும், பெரிய மலையின் கண் மறையா நிற்கும். நீரில்லாது வற்றிய குளத்தைத் துழாவிய, விளங்கும் கொம்புகளையுடைய ஆண் யானை, குறுகிய உருண்டைக் கற்களுக்கு அருகில் தன்னுடைய பெண் யானையைத் தழுவி, வளைந்த கோடுகளையுடைய பெரிய புலியின் தாக்குதலினின்றும் பாதுகாக்கும். இத்தகைய உயர்ந்த மலைப்பக்கத்தைச் சார்ந்த பாலை நிலத்தைக் கடந்து

சென்ற அவர் இன்று வருவார்' என்ற விளக்கத்திலிருந்து தலைவியின் அச்ச உணர்வைப் போக்குகின்ற நிலையில் பாடலில் அச்சம் தோன்றுகின்றது.

தலைவனின் வினைவயிற்பிரிவினால் வருந்தி அச்சப்படுவதை தலைவிக்கு எடுத்துரைக்கின்ற தோழியின் கூற்றிலிருந்து அச்சம் தோன்றுகிறது. வினைவயிற் பிரிந்த இடத்துத் தோழி கிழத்திக்கு உரைக்கின்ற,

"***செவ்வி கொள்வரகின் செஞ்சுவற் கலித்த***
***கவ்வை நாற்றின் கார்இருள் ஓர்இலை***
***நவ்வி நாள்மறி கவ்விக்கடன் கழிக்கும்***
***கார்எதிர் தண்புனம் காணின், கைவளை***
***நீர்திகழ் சிலம்பின் ஓராங்கு விரிந்த***
***வெண்கூதாளத்து அம்தூம்பு; புதுமலர்***
***ஆர்கழல்பு உருவ போல,***
***சோர்குவ அல்ல என்பர்கொல் – நமரே?***"[73] (குறுந்., பா.எ. 282)

எனும் இப்பாடலில், 'சிவந்த மேட்டு நிலத்தில் தழைத்த, பருவச் செவ்வியை உடைய வரகின், சில்வண்டின் ஆரவாரமுடைய, கரிய இருள் போன்ற ஓரிலையைக் கவ்விய அளவிலேயே, மானின் குட்டி, நாட்பசி தீர்ந்து, காலை உண்ணுகின்ற தன்னுடைய கடமையை முடித்துக்கொள்ளும் இத்தகைய கார்ப் பருவத்தை எதிர்கொள்ளும் காட்டைத் தாம் இல்லாது நீ மட்டும் காண்பாயாகில், அருவி நீர் விளங்கும் மலைப்பகுதியில், ஒருபடித்தாக மலர்ந்த, வெள்ளிய கூதாளத்தின், உள்ளே துளையையுடைய அழகிய புதிய மலர்கள், காம்புகளிலிருந்து கழன்று உதிர்வன போல் நின் கைவளைகள் கழன்று வீழ்வன அல்ல என்று நம் காதலர் எண்ணுவரோ?' என்பதில் தலைவி அச்சப்படுவதைத் தோழி வாயிலாக வெளிப்படுகின்றது.

"***தாமே செல்ப ஆயின், கானத்துப்***
***புலம்தேர் யானைக் கோட்டிடை ஒழிந்த***
***சிறுவீ முல்லைக் கொம்பின் தாஅய்,***

***இதழ் அழிந்து ஊறும் கண்பனி, மதர்எழில்***

***பூண்அக வனமுலை வனைத்தலும்***

***காணார் கொல்லோ – மாணிழை – நமரே?***"[74] (குறுந்., பா.எ. 348)

என்னும் இப்பாடலில், 'மாட்சிமைப்பட்ட அணிகலன்களை அணிந்த தலைவியே. நம் தலைவர், நம்மைத் தனியே விடுத்துத் தாம் மட்டும் பிரிந்து செல்லத் துணிவாராயின், காட்டின்கண் மேய்புலத்தை நாடிச் செல்லும் யானையினுடைய கொம்பின்கண் தங்கிய, சிறிய மலர்களையுடைய முல்லைக் கொம்பினைப் போல், இமைகளைக் கடந்து ஊறுகின்ற கண்ணீர்த் துளிகள், மதர்த்த, எழுச்சியுடைய, அணிகலன் அணியப்பெற்ற அழகிய முலைகளை நனைத்தலையும் காணாரோ' என்றும் கூறுவதில் தலைவியின் அச்சத்தைப் போக்கக்கூடியவன் தலைவன் என்பதை எடுத்துரைப்பதில் அச்ச உணர்வு கூறப்படுகிறது.

மேலும், 'தாமே செல்ப ஆயின் என்ற தொடர், தலைவர் தனித்துச் செல்லார் என்பதையும் உடன்கொண்டு செல்வர் என்பதையும் குறித்ததாகும். யானையின் கொம்புகளுக்கு இடையே அதனால் உண்ணப்பெற்று எஞ்சிய முல்லையின் கொடிகள் பின்னி, மலர்கள் உதிர்ந்து கிடத்தல், தலைவியின் அணிகள் அணிந்த மார்பில் கண்ணீர்த் துளிகள் உதிர்ந்து கிடந்தமை போன்றதாக உவமிக்கப்பட்டது. யானைக்கோடு, முலைக்கும், முல்லைக்கொடி, அவள் அணிந்த அணிகலன்களுக்கும், அக்கோட்டிடை உதிர்ந்த முல்லையின் மலர்கள், தலைவியின் மார்பில் உதிர்ந்த கண்ணீர்த் துளிகளுக்கும் உவமமாயின. யானையின் கோட்டிடைக் கொண்ட கவளமாகிய முல்லைக்கொடி, அதன் வாயில் புகுதல் தப்பாமை போல, தலைவன் பிரிவினால், தலைவியின் உயிர் நீங்குதலும் தப்பாது எனப் பொருள் உரைத்தலும் கூடும்' என்ற விளக்கத்திலிருந்து தலைவி அஞ்சுவதை தோழி தேற்றக்கூடிய சூழல் அச்ச மெய்ப்பாட்டை உறுதிப்படுத்துகிறது.

கிழவன் வரவுணர்ந்து, தோழி கிழத்திக்கு உரைத்ததாகின்ற,

"***கடல்பாடு அவிந்து, கானல் மயங்கி,***

***துறைநீர் இருங்கழி புல்லென்றன்றே***

***மன்றலம் பெண்ணை மடல்சேர் வாழ்க்கை***

***அன்றிலும் பையென நரலும்; இன்று அவர்***

***வருவர் கொல் வாழி – தோழி – நாம் நகப்***

***புலப்பினும் பிரிவுஆங்கு அஞ்சித்***

***தணப்புஅருங் காமம் தண்டியோரே?***"[75] (குறுந்., பா.எ. 177)

என்னும் இப்பாடலில், 'கடலின் ஆசை அடங்கிற்று. கடற்கரைச் சோலை, இருளினால் இருப்பு அறியப்படாது மயக்கத்தைத் தருவதாயிற்று. துறையையும் நீரையும் உடைய பெரிய உப்பங்கழிகள், பொலிவற்றுக் காணப்பட்டன. ஊர் மன்றத்தின்கண் உள்ள பனை மரங்களில் மடலின்கண் பொருந்தி வாழ்தலையுடைய அன்றில் பறவைகளும் மெல்லெனக் கூவின. இங்ஙனம், இடமும் ஆள்அற்று, காலமும் இருட்பட்டுக் காணப்படுவதால் முன்பு நாம் அவரை நகையாடிப் புலந்தபோதிலும், அப்பொழுது பிரிதலை அஞ்சி, நீங்குவதற்கு அரிய அரிய காம இன்பத்தை விடாது பணிந்து இருந்து பெற்றவர், இப்பொழுது வருவர் போல் உள்ளது' என்ற கூற்றிலிருந்து அச்சம் உணர்வு வெளிப்படுகிறது.

தலைவன், தலைவியை விடுத்துப் பொருள் காரணமாகப் பிரிந்தனன். அவன் பொருள் முற்றி மீண்டனன் என்பதறிந்த தோழி, தலைவியிடம், 'முன்பு நாளும் மாலையில் நம்மை வருத்தும் வாடை இன்றும் வருமோ? அப்படி வரினும் நேரும் தீங்கு ஏதுமில்லை' என மகிழ்ந்துரைத்ததாகின்ற,

"***கொண்டல் ஆற்றி விண்தலைச் செறீஇயர்,***

***திரைப் பிதிர் கடுப்ப முகடு உகந்து ஏறி,***

***நிரைத்து நிறை கொண்ட கமஞ் சூல் மாமழை***

***அழி துளி கழிப்பிய வழி பெயற் கடை நாள்,***

***இரும் பனிப் பருவத்த மயிர்க் காய் உழுந்தின்,***

***அகல் இலை அகல வீசி, அகலாது***

***அல்கலும் அலைக்கும் நல்கா வாடை,***

***பருமம் யானை அயா உயிர்த்தாஅங்கு,***

***இன்னும் வருமே — தோழி! — வாரா***

***வன்கணாளரோடு இயைந்த***

***புன்கண் மாலையும் புலம்பும் முந்துறுத்தே!***"[76] (நற்., பா.எ. 89)

எனும் இப்பாடலில், 'தோழி! கீழைக்காற்று வீசுவதால் வானத்தில் செறிவுற்று, அலையின்கண் உள்ள பிசிர்போல மலையின் உச்சியை மிக விருப்பமாக ஏறி அடைந்து, வரிசையாக அமைந்து நிறைவுற்ற நிரம்பிய சூல்கொண்டது கரிய மேகம். அம்மேகம் மழையை நிரம்பப் பெய்து மழை நீங்கிய கார்ப்பருவமும் வந்தது. அக்கார்காலத்தின் மிக்க முன்பனிப் பருவத்தில் மயிர்களைக் கொண்ட காய்களையுடைய உழுந்தின் அகன்ற இலைகள் எல்லாம் நீங்கும்படியாக வீசி நம்மை விட்டு நீங்காமல் நாள்தோறும் வருத்துகின்ற அன்பு செய்யாத வாடைக்காற்று வந்தது. இதுவரையில் நம்மிடத்து வாராது இருந்த வன்கண்மை மிக்க தலைவரோடு ஒருபடியாய் அமைந்த துன்பத்தைச் செய்யும் மாலைப்பொழுதையும் வருத்தத்தையும் முற்படச் செலுத்திக்கொண்டு அவ்வாடைக் காற்று வந்தது. அக்காற்று, பருமம் பூண்ட யானை பெருமூச்சு விட்டாற்போல அவர் வந்தபிறகு இன்றும் வாராது இருக்குமோ? அவ்வாறு வந்தாலும் யாதொரு தீங்கையும் அவ்வாடை நமக்குச் செய்யாது என்பதை அறிவாயாக!' என்று கூறுவது தலைவியின் அச்சத்தைப் போக்கும் முறையிலான அச்சமாகிறது.

தலைவன் பொருள் காரணமாகப் பிரிய, அவன் செல்லுங்காடு கொடிது என்று தலைவி வருந்தினள். தலைவியின் துயர் கண்ட தோழி, பாலை வழியில் மழை பெய்வதால் கடுமையதன்று என்றுணர்த்தக் கருதினள். அவள் தலைவியிடம் தலைவர் செல்லும் வழியிலமைந்த மலையில் மழை பெய்து விளங்கும்; மான் சென்று தீண்டக் குமிழம் பழம் உதிரும். இத்தகைய காட்டு வழியில் எம்முடன் வருகின்றாயா என அழைத்தனர் என்று பருவம் மாறுபட ஆற்றுவித்ததாகின்ற,

"***நெடு வான் மின்னி, குறுந் துளி தலைஇ,***

***படு மழை பொழிந்த பகுவாய்க் குன்றத்து,***

***உழை படு மான் பிணை தீண்டலின், இழை மகள்***

*பொன் செய் காசின், ஒண் பழம் தாஅம்*
*குமிழ் தலைமயங்கிய குறும் பல் அத்தம்,*
*'எம்மொடு வருதியோ, பொம்மல் ஓதி?' எனக்*
*கூறின்றும் உடையரோ மற்றே – வேறுபட்டு*
*இரும்புலி வழங்கும் சோலை,*
*பெருங் கல் வைப்பின் சுரன் இறந்தோரே?*"[77] (நற்., பா.எ. 274)

எனும் இப்பாடலில், 'கரிய புலி சினமுற்றதால் மாறுபட்டு உலவுகின்ற சோலையினையுடைய பெரிய மலையிடத்து அமைந்த பாலை வழியில் நம் காதலர் பிரிந்து சென்றனர். நெடிய மேகங்கள் மின்னி, சிறிய துளிகளைப் பெய்யத் தொடங்கி, பிளப்புக்களையுடைய குன்றத்தில் பெரிய மழையைப் பெய்தன. அவ்விடத்தில் உழைமானின் அழகிய பிணை உராய்வதால், அணிகள் புனைந்த பெண்ணொருத்தியின் பொன்னாலாகிய கலன்களை விரவியிருத்தியது போல ஒளியுடன் கூடிய பழங்களைக் குமிழமரங்கள் உதிர்க்கும். இத்தகைய குமிழ மரம் நிரம்பிய குறுகிய பலவாய வழிகளையுடைய பாலை வழியில் 'பொலிவுடைய கூந்தலையுடையாய்! எம்முடன் வருகின்றனையோ என வினவிச் சென்றனர் நம் காதலர்; எனவே வருந்தற்க' என்பதிலிருந்து விலங்கின் வழி அச்சம் தோன்றுவதை எண்ணி அச்சமுறுகிற தலைவியின் உணர்வைப் பாடலில் உணரமுடிகிறது.

தலைவன் பொருள்வயிற் பிரிகின்ற காலத்து, காடு கடத்தற்குக் கடிதாக இருப்பினும், இயல்பான காட்சிகளும் உள என்று கூறினான், அவை கண்ட தலைவன், மேற் செல்லாது திரும்பி வருவன் எனத் தோழிக்குக் கூறி எடுத்துரைத்தனள், அதற்கு நிமித்தமும் கூறித் தோழியை ஆற்றுவித்த தலைவியின் கூற்றிலான கீழ்வரும்,

"*..................................................*
*என ஆங்கு*
*இனைநலம் உடைய கானம் சென்றோர்*
*புனைநலம் வாட்டுநர் அல்லர்; மனைவயின்*
*பல்லியும் பாங்கு ஒத்து இசைத்தன;*
*நல் எழில் உண்கணும் ஆடுமால் இடனே*"[78] (கலித்., பா.எ. 11)

எனும் இப்பாடல் வரிகளில், 'தலைவன் மாட்டு அருள் தோன்றுதற்குக் காரணமான, நன்மைகளை உடைய காட்டிடைச் சென்றவர், நமது புனைந்த நலத்தைக் கெடுப்பவர் அல்லர் காண், காரணம் என்னெனில் நம்மனையிடத்துப் பல்லியும் நன்றாகிய இடத்தே அவர் வரவுக்குப் பொருந்திக் கூறின, நல்ல அழகை உடைய மையுண் கண்ணும் இடந்துடியாநிற்கும்' என்று தலைவி தோழிக்குக் கூறினாள்' என்பதிலிருந்து காட்டிடை ஏற்படும் விலங்கு அச்சம் கூறப்படுகிறது.

தலைமகன் பொருள் ஈட்டுவான் பிரிந்து சென்ற காலை, அவன் போகிய காட்டின் கடுமையை நினைந்து, தலைமகள், ஆற்றாதவள் ஆயினள்; தலைமகன் பொருட்டுத் தெய்வங்களைப் பரவுதல் நம் கற்புக்குப் பொருந்துமோ எனத் தோழியிடம் கேட்டனள்; தோழி, தலைவர் திரும்பி வந்தனர், நீ கவலைப் படவேண்டாம் எனக் கூறுகின்ற,

"***...............................................................**

***என ஆங்கு,***
***செய்பொருட் சிறப்பு எண்ணிச் செல்வார் மாட்டு, இனையன***
***தெய்வத்துத் திறன் நோக்கி, தெருமரல் — தேமொழி!***
***'வறன் ஓடின் வையகத்து வான்தரும் கற்பினாள்***
***நிறன் ஓடிப் பசப்பு ஊர்தல் உண்டு' என***
***அறன் ஓடி விலங்கின்று; அவர் ஆள் வினைத் திறத்தே***"[79]

(கலித்., பா.எ. 16)

எனும் இப்பாடல் வரிகளில், 'தேமொழி, செய்வினையாற் பெறுகின்ற பொருளின் சிறப்பை எண்ணிச் சென்றவரிடத்து, தெய்வத்தின் அருளை வேண்டி மனஞ்சுழலுதல் வேண்டாம். வறட்சி மிகுந்து துயருற்ற காலத்தும், வையம் கெட்டதாகில், அவ்வையத்திடத்தே மழையைப் பெய்விக்கும் கற்பினை உடையாளுடைய தன் அழகு கெட்டுப் பசலை பாய்ந்து விடுதலும் நிகழுமோ என்று, அறக் கடவுள் தானே கருதி, அவர் முயற்சி இடத்தே விரைந்து சென்று விலக்கி நின்றது. நீ கவலை அடையாதே, என்றாள்' என்ற விளக்கத்திலிருந்து தெய்வம் வழி அச்சம் தோன்றுகிறது.

தலைவன் இளவேனிற் காலத்தே வருவேன், அதுகாறும் ஆற்றியிருத்தல் வேண்டும் எனத் தலைவி இடத்தே கூறிப் பிரிந்து சென்றனன். முன்பனிக் காலமும் பின்பனிக் காலமும் வந்து, வருத்துகின்றமையின், தலைவி ஆற்றாளாயினள், ஆற்றாத தலைவியைத் தோழி, அவர் வருவது உறுதி என்று வற்புறுத்திக் கூறினள், தோழி கூறியமைக்குத் தலைவி எதிரழிந்தனள். இவ்வகையிலமைந்த,

"...........................................................................................

***பகை வென்று திறை கொண்ட பாய் திண் தேர் மிசையவர்***
***வகை கொண்ட செம்மல் நாம் வனப்பு ஆர விடுவதோ***
***புகை எனப் புதல் சூழ்ந்து, பூ அம்கள் பொதி செய்யா,***
***முகை வெண் பல் நுதி பொர, முற்றிய கடும்பனி?***

........................................................................."[80]

(கலித்., பா.எ. 31)

எனும் இப்பாடல் வரிகளில், 'புகைபோலச் சிறு புதர்களைச் சூழ்ந்துள்ளது பனி. பூவின் தேன்போலக் கள்ளை மூடி மறைத்துக் கொண்டிராத முல்லையரும்புகள் போன்ற வெண்பற்களின் நுனிகள் தம்முள் ஒன்றோடொன்று மோதிக் கொள்ளும்படியான முற்றிய கடும்பனி வந்தது. பகையை வென்று, திறையைப் பெற்று, பாய்ந்துவரும் திண்ணிய தேர் மிசை வருபவருடைய கூறுபாடு கொண்ட தலைமைச் சிறப்புடைய வீரத்தாற் பிறந்த அழகை நாம் காணும் அளவும் முற்றிய கடும் பனி நம் உயிரைக் கொல்லாது விடுமோ? அது கொன்றே விடும்' என்ற தலைவியின் உணர்வு அச்சத்தை புலப்படுத்துகிறது.

வழிப்போக்கரை கொலைபுரியும் ஆறலைக் கள்வர்கள் தங்கும் மலைப்பகுதிக்குச் சென்றால் தீங்கு நேரிடும் என தலைவி அஞ்சுவதை உணர்த்துமாறு அச்சம் தோன்றுகிறது.

தலைவன் தலைவியைப் பொருள்வயிற் பிரிந்தான். பிரிவினை ஆற்றமாட்டாத தலைவி வருந்தி உடல் வேறுபட்டாள். அது கண்ட தோழி, 'நாம் தலைவர்பால் தூதும் அனுப்பியுள்ளோம். அவர் நம் துயரினைக்

கேட்பின் நந்தனின் பெருஞ்செல்வத்தைப் பெறுவதாயினும் அவ்விடம் தங்காது விரைந்து வருவார். அதுகாறும் ஆற்றியிருக்க' எனக் கூறித் தலைவி ஆற்றுவித்ததாகின்ற,

"........................................................

***இலங்குவெள் அருவிய அறைவாய் உம்பர்,***
***மாசுஇல் வெண்கோட்டு அண்ணல் யானை***
***வாயுள் தப்பிய, அருங்கேழ், வயப்புலி***
***மாநிலம் நெளியக் குத்தி, புகலொடு***
***காப்புஇல வைகும் தேக்கு அமல் சோலை***
***நிரம்பா நீள்இடைப் போகி***
***அரம்போழ் அவ்வளை நிலைநெகிழ்த் தோரே***"[81] (அகநா., பா.எ. 251)

எனும் இப்பாடல் வரிகளில், 'அவன்பால் பகைமையை மேற்கொண்டு (கோசர்க்குத் துணையாக) வந்த குதிரைப் படையினையுடைய மோரியர்கள், அழகு செய்யப்பட்ட தம் தேரினது சக்கரங்கள் தடையின்றிச் செல்லும்பொருட்டு மலை வழிகளில் உள்ள பாறைகளை உடைத்துப் பாதையாக்கினர். வெண்மையான அருவிகளைக் கொண்ட அத்தகைய பாறை வழிகளுக்கு அப்பால், தேக்கு மரங்களைச் செறிந்த கானகத்து நெடுவழியில் குற்றமற்ற வெண்மையான கொம்புகளையுடைய தலைமைத் தன்மை வாய்ந்த யானையானது, தன் வாயினின்றும் தப்பிச் சென்ற அரிய நிறம் கொண்ட வலிமையான புலியைப் பெருநிலம் குழியும்படிக் குத்திக் கொன்று, மனச் செருக்கால் பாதுகாவல் ஏதுமின்றித் தனித்துக் கிடக்கும். அத்தகைய சுரவழிகளை நம் தலைவர் கடந்து சென்றுள்ளார்.

நாமும் தலைவர்பால் தூதுவர்களை அனுப்பி இருக்கின்றோம். செறிவாக அணியப்பெற்ற அணிகள் நெகிழ்ந்து வீழப்பெற்றுத் தலைவனைப் பற்றிய நினைவுத் துன்பத்தால் வருந்தி இருக்கும் நம் நிலையை அவர்களுக்கு எடுத்துக் கூறுவார்கள். அரத்தால் அறுத்துச் செய்யப்பட்ட அழகிய வளையல்களை நெகிழச் செய்த நம் தலைவர் அதனைக் கேட்பாராயின், நந்தன் என்பான் தொகுத்துக் குவித்து வைத்துள்ள செல்வத்தைப் பெறுவதாயினும் இனி அவ்விடத்தே

தங்கியிருக்க மாட்டார்' என்று தோழியானவள் தலைவியின் அச்ச உணர்வுக்குப் பதில் கூறித் தேற்றுவதிலிருந்து உணர முடிகிறது. மேலும், "***பொருள் தேடிப்பிரியப் போகும் தலைவனைத் தோழி தடுக்கிறாள். தலைவியின் துன்புறு நிலையை எடுத்துக்கூறி, அப்பிரிவு பெரும்பாலும் தவிர்க்கப்படுகிறது. பிரிதல் துயரின்போது நிமிர்த்தம் பார்த்தல், பெண்மையைப் பேணல், கற்பின் பெருமை, காமத்தின் சிறப்பு, பிரிவுத் துயரிலிருந்து மீளச் செய்யத் தோழி ஆற்றுவித்துப் பேசுவது, இளமையும் காமமும், பொருளும் நிலையற்றவை என்ற நிலையாமை பேசப்படுகின்றன***"[82] என்ற பா. அருள் மனோகிரி கருத்து தோழியின் ஆற்றுவிக்கும் மாண்பினைப் போற்றுகிறது.

மேலும், தலைவன் பொருள்வயிற் பிரிந்தானாக, குறித்த பருவத்தில் வாராமையின் பெரிதும் வருந்திய தலைவிக்குத் தோழி சொல்லியதாகின்ற,

"*பனிவார் உண்கணும் பசந்த தோளும்*
*தனிபிறர் அறியச் சாஅய், நாளும்*
*கரந்தனம் உறையும் நம்பண்பு அறியார்,*
*நீடினர் மன்னோ காதலர் எனநீ*
*எவன்கை யற்றனை? — இகுளை – அவரே*
*வான வரம்பன் வெளியத்து அன்னநம்*
*மாண்நலம் நம்மொடு கொண்டனர் — முனாஅது,*
*அருஞ்சுரக் கவலை அசைஇய கோடியர்*
*பெருங்கல் மீமிசை இயம்எழுந் தாங்கு*
*வீழ்பிடி கெடுத்த நெடுந்தாள் யானை*
*சூர்புகல் அடுக்கத்து மழைமாறு முழங்கும்*
*பொய்யா நல்லிசை மாவண் புல்லி*
*கவைக்கதிர் வரகின் யாணர்ப் பைந்தாள்*
*முதைச்சுவல் மூழ்கிய கான்சுடு குரூஉப்புகை*
*அருவித் துவலையொடு மயங்கும்*
*பெருவரை அத்தம் இயங்கி யோரே*"[83] (அகநா., பா.எ. 359)

எனும் இப்பாடலில், ‘தோழி! அழுது நீர் சொரியும் மையுண்ட கண்களும், பசலை பாய்ந்த தோள்களும் பிறர் அறியும்படி வாடி மெலியவும், நாம் நாள்தோறும் அவற்றைப் பிறர் அறியாவண்ணம் மறைத்து வாழ்கின்ற தன்மையினை அறியாராய் நம் தலைவர் குறித்து பருவத்து வாராது மிகவும் காலம் தாழ்த்தினர் என்று நீ பெரிதும் வருந்திச் செயல் இழந்ததுகளை முடிகின்றது.

‘முன்னே உள்ள பாலை நிலத்துக் கவர்த்த வழிகளில் தங்கியிருக்கின்ற கூத்தர்கள் முழக்கிய வாத்திய ஒலி பெரிய மலையில் எதிரொலித்தாற்போல, தான் பெரிதும் விரும்பும் பிடியினைக் காணமாட்டாமல் களிறானது தெய்வம் விரும்பி வாழும் மலைப்பக்கத்தே இடியாடு மாறுபட பேரொலி எழுப்பும். அதற்கு இடனான, உண்மையான நல்ல புகழை உலகிலே நிலைநிறுத்தியவனும், பெரிய வள்ளலுமாகிய புல்லி என்பானது கிளைத்த கதிர்களையுடைய வரகங்கொல்லையாகிய மேட்டு நிலத்தைச் சுற்றியுள்ள காட்டுப் பகுதியைச் சுட்டு எரித்தமையால் எழும் புகையானது, அருவியின் நுண்ணிய துளிகளுடன் கலந்து தோன்றும் பெரிய மலைகளையுடைய காட்டினைக் கடந்து நம் தலைவர் சென்றுள்ளார்’ என்பதிலிருந்து தலைவியின் அச்சத்தை தெளிவுறுத்துவதாகப் பாடல் அமைகின்றது.

தோழி தலைவியின் கூற்று நிகழ்த்துகின்ற பாடல்கள் அச்சம் உணர்ச்சியில் அமைந்துள்ளது. தோழியானவள் தலைவியின் மனதில் உருவாகும் அச்சத்தை உணர்ந்து அவளைத் தேற்றுகின்றாள். இம்முறையில் அச்சம் உணர்த்தப்படுகிறது. தலைவன், தலைவியைப் போர் காரணமாக, பொருள்வயிற் காரணமாக, பரத்தையரிடம் செல்லுதல் காரணமாகப் பிரிகிறான். பிரிந்தபோது அவன் சொன்ன ‘உரிய காலத்தில் வருவேன்’ என்ற உறுதிமொழியானது தவறுகிறது.

இதனால் சமூகத்தில் ஏதேனும் பழிச்சொல் உருவாகும் என்பதை எண்ணி வேதனையுறும்போது உருவாகும் அச்சத்தைத் தோழியானவள் தீர்த்து வைக்கின்றாள். அதன்வழியாக அச்ச உணர்ச்சி உருவாவதை உணர்ந்துகொள்ள முடிகிறது. மேலும், தலைவன் சென்ற காட்டிடை

நிகழ்வினைக் கூறும்போது கள்வர், விலங்கு போன்ற நிலைகளன் வழி அச்சம் தோன்றுகிறது. தலைவிக்கு அச்சம் தோன்றுவதற்கு காட்டிடை நிகழ்வே நிலைக்களனாகிறது. அதோடு சமூகத்தாரால் உருவாகக் கூடிய பழிச்சொல் அலர், பசலை போன்ற காரணிகள் அச்சமாகிறது.

**தோழி – தலைவனிடம் கூற்று**

பொருள் தேடப் பிரிய விரும்பிய தலைமகன், தன் மனைவியின் உடன்பாட்டைப் பெற்றுத் தருமாறு, அவள் தோழியை வேண்டிய பொழுது, அவள் சொல்லியதாகின்ற,

"***அரும்பொருள் செய் வினை தப்பற்கும் உரித்தே;***
***பெருந் தோள் அரிவை தகைத்தற்கும் உரியன்;***
***செல்லாய் ஆயினோ நன்றே –***
***மெல்லம் புலம்ப! – இவள் அழப் பிரிந்தே***"[84] (ஐங்., பா.எ. 302)

எனும் இப்பாடலில், 'மென்புல நாட்டின் தலைவனே! ஈட்டுவதற்குரிய அரிய பொருளை ஈட்டும் முயற்சி வெற்றி பெறாது போதற்கும் உரியது; பெரிய தோள்களை உடைய நின் காதலி, நின் பிரிவிற்கு உடம்படாமல் நின்னைத் தடுத்தற்கும் உரியள்; இந்நிலையில், இவள் துன்புற்று அழுமாறு பிரிந்து சேறலைத் தவிர்த்தால் அது மிக நன்றாகும் என்றும், 'இவள் அழப் பிரிந்து' என்றாள். அவள் அழுவதும் அதனால் மேனிவாட்டம் எய்துதலும் உறுதியென்பதும் புலப்பட, 'இவள் அழுமாறு பிரிந்து சென்று ஈட்டும் பொருளும் பொருளாகுமோ?' எனத் தலைவனை வினவினதாகக் கொள்க' என்றும் தோழி கூறுவதில் அச்சம் மெய்ப்பாடு உணர்வு கூறப்படுகின்றது. பொருள் தேடப் பிரியும் தலைவன் மீண்டும் எப்பொழுது வருவானோ? என தன் மனதிற்குள் அச்சப்படும் உணர்வைத் தோழி கூறுகிறாள்.

பொருள் தேடப் பிரிய ஒருப்பட்ட தலைவனிடம் தானும் உடன் வருவதாகத் தலைவி கூறினாள். சுரத்தின் கடத்தற்கு அருமை கூறித் தலைவன் அவ்வேண்டுகோளை மறுத்தான். அதற்கு விடையாகத் தோழி கூறுகின்ற,

"***புதுக் கலத்தன்ன கனிய ஆலம்***
***போகில்தனைத் தடுக்கும்வேனில் அருஞ் சுரம்***

***தண்ணிய இனிய ஆக***

***எம்மொடும் சென்மோ, விடலைநீயே***"[85] (ஐங்., பா.எ. 303)

என்ற இப்பாடலில், 'தலைவ! புதிய மட்பாண்டம் போன்ற செந்நிறப் பழங்களைக் கொண்ட ஆலமரம், தன் கனிகளின் இனிமையால் தன்னை வந்தடைந்த போகில் என்னும் பறவையினைத் தன்னைவிட்டுச் செல்லாமல் தடுக்கும் வேனிலால் வெப்பமுற்ற, கடத்தற்கு அரிய பாலை வழிகள், தண்ணியவாகவும் இனியவாகவும் அமையும்படி எம்மையும் உடன் அழைத்துச் செல்வாயாக!' என்கிறாள். தம்மோடும் சென்றால், அத்தகு கொடுமைகள் மிகுந்த சுரநெறியும் இனிமையாகவும், தண்மையாகவும் தலைவனுக்குத் தோன்றும் என்பதோடு, தலைவனொடு சேறலின், அவன் அஞ்சும் சுரத்தின் கொடுமைகள் யாவும் தமக்கும் இல்லையாய் மறையும் என்பதையும் உணர்த்துகிறது. 'தலைவனைப் பிரிந்திருத்தல், அச்சுரநெறியின் கொடுமையினும் பெருங்கொடுமை மிக்கது எனக் குறித்தாள் என்க. துயரத்தினைப் பங்கிட்டுக் கொள்வார் உடன் இருக்கையில், அதன் கடுமை அவ்வளவாத் தோன்றாது ஆதலின் தோழி இங்ஙனம் மொழிகிறாள்'. இவற்றில் துயரம் என்பது காட்டிடை உருவாகும் அச்சத்தை உணர்த்துகிறது.

'சுரம் தண்ணிதாகவும் இனியதாகவும் அமையக் காரணத்தை விளக்கும் பெருமழைப்புலவர், 'கருத்தொத்த காதலர் இருவர் அன்பின்வழி அச்சம் ஒத்துக் கூடியவழி அவரை வெதுப்புதற்கு இவ்வுலகில் ஒரு பொருளுமில்லை; அஃதெங்ஙனம் எனின், மனமொத்த காதலர் இருவர் பிரிந்துறையும் கால் அவருள்ளத்தும் உடனலினும் தோன்றும் வெப்பத்தை மாற்றும் பண்புடைய பொருள் ஒன்றேனும் இல்லையானாற் போன்றென்க" என்றும், "இன்னும், நீ எம்மொடும் செல்லின் அருஞ்சுரம் தண்ணிதும் இனிதுமாகும் என்றமையால், எம்மொடும் செல்லாது எம்மைக் கைவிட்டுப் பிரிந்து போவையாயின், இந்த நன்மனையே ஒரு நொடிப் பொழுதில் எமக்கு வெய்யதும் கொடியதுமாகிவிடும் காண் என்றாளாயிற்று' என்ற உரை நுட்பம் அச்சமும் தோன்றும் சூழலை எண்ண முடிகிறது.

தலைவன் செல்லுகின்ற வழியிடைப் பகுதியினால் உண்டாகும் தீங்கு அவனை அழித்துவிடக்கூடும் என்று தலைவி அஞ்சுவதைத் தோழி உணர்த்துவதிலிருந்து அச்சம் மெய்ப்பாடு உணர்த்தப்பட்டிருப்பதை உணரமுடிகிறது.

பொருள்தேடத் தலைவியைப் பிரிந்து செல்ல விரும்பிய தலைவனுக்கு, அவன் செல்லாமை வேண்டித் தோழி கூறியதாகின்ற,

"***கல்லாக் கோவலர் கோலின் தோண்டிய***
***ஆன் நீர்ப் பத்தல் யானை வௌவும்***
***கல்லதர்க் கவலை செல்லின், மெல் இயல்***
***புயல் நெடும் கூந்தல் புலம்பும்;***
***வயமான் தோன்றல்! வல்லாதீமே***"[86] (ஐங்., பா.எ. 304)

எனும் பாடலில், 'விரைந்தோடும் குதிரையைக் கொண்ட தலைவர் தம் குடித்தொழிலில், கடும் உழைப்பின்றியே இயல்பாகத் தேர்ச்சி பெற்ற அயர், தம் நிரைகள் உண்டற் பொருட்டுத் தம் கோல்களாலே தோண்டிய நீர்ப்பந்தலில் உள்ள நீரை, காட்டு யானைகள் கவர்ந்துண்ணும் கற்கள் நிரம்பிய கவர்த்த வழியில் நீ பிரிந்து செல்லுவையாயின், மெல்லிய இயல்புடையவளும் மேகம் போல் கரிய கூந்தலையுடையவளும் ஆகிய இவள் தனிமைத் துயரால் வாடுவள். ஆதலால் பிரிந்து போகும் இச்செயலைச் செய்தலைத் தவிர்ப்பாயாக' என்று தோழி உணர்த்துகிறாள்.

கால்கள் பாவ இயலாத வண்ணம் சூடு மிக்க பரல்களும், பாறைகளும் நிலைந்திருந்ததோடு, செல்நெறியாதென வழிச்செல்வார் மயங்கித் தடுமாறும் வண்ணம் கவர்த்த வழிகளைக் கடந்து செல்லும் உள்ள வன்மையும், உடல் வன்மையும் படைத்துள்ளாய் நீ எனினும், இத்தகு வழியின் கொடுமைகளைக் கேட்ட அளவிலேயே அஞ்சும் இயல்பின் என்தோழி' என்று கூறுகிறாள். இவ்வாறு தலைவனுக்கு கள்வர்களால் துன்பம் வரக்கூடும் என்பதை அறிந்தவள் தலைவி என்பதைத் தோழி கூறுவதிலிருந்து 'அச்சம்' மெய்ப்பாடு உணர்த்துவதை தெளிய முடிகிறது. இவ்வுணர்வை 'கல்லதர்க் கவலை' என உணர்த்தியிருப்பதன் வழி தலைவனுக்கு வரும் கள்வர்களால் உண்டாகும் தீங்கு புலப்படுகிறது.

“***கோவலர் நிரைகளின் பொருட்டுத் தோண்டிய பத்தலை யானை வௌவும் என்றமையால், நீ நுகர்தற்குரித்தாய்ச் சிறந்த இவள் நலம் பசலையுண்ணப்பட்டுக் கழியும்’ என்றாளாம்***”[87] என்று ஔவை. சு. துரைசாமிப்பிள்ளை உரையும், “***நீ இவளைப் பிரிந்து செல்லின் இவளது ஒப்பற்ற பேரெழில் பசலைபாய்ந்து அழியும்; இவள் இளமையும் வறிதேபோம் என்பாள், கோவலர் கோல்கொண்டு அரிதின் முயன்று தோண்டிய குழியின் நீரை அயன்மை உடைய காட்டு யானைகள் கவர்ந்து கொள்ளுதற்கு இடனான கல்லதர் என்றாள்***”[88] என்ற பெருமழைப்புலவர் உரையும் அரண் சேர்க்கிறது.

தலைமகன் தன்னையும் உடன் கொண்டு செல்லுமாறு தலைவனை வேண்டியபொழுது, சுரத்தருமை கூறி மறுத்துத் தான் தனியே செல்வதாகக் கூறினான் தலைவன். அதுகேட்ட தோழி விலங்கினால் வரும் அச்சம் குறித்துக் கூறுகின்ற,

“***களிறு பிடி தழீஇப் பிற புலம் படராது,***
***பசி தின வருந்தும் பைது அறு குன்றத்து,***
***சுடர்த்தொடிக் குறுமகள் இனைய,***
***எனைப் பயம் செய்யுமோ – விடலை! நின் செலவே?***”[89]

(ஐங்., பா.எ. 305)

எனும் இப்பாடலில், ‘தலைவ களிறுகள் தம் பிடிகளைத் தழுவி, கோடை வெப்பம் தெறுதலால், உணவு பெறாது, அதனைப் பெறுதற் பொருட்டு வேற்று நிலங்களை நாடிச் செல்லாமல், கடும்பசி, வாட்ட வருந்திக் கிடக்கும், பசுமை சிறிதுமில்லாத குன்றம் கடந்து, ஒளிவிடும் வளைகளை அணிந்த இளமை பொருந்திய இவள் நின் பிரிவினை ஆற்றாது அழுது புலம்புமாறு நீ பிரிந்து செல்லும் செலவு என்ன பயனைத் தரும்’ என்கிறாள்.

தோழி, களிறு தன்னைப் பசித்துன்பம் வருத்தும் நிலையிலும் தன் பிடியைப் புணர்ந்து, பசுமையற்ற குன்றம் சூழ்ந்த சுரநெறியில் வருந்தும் என்பதிலிருந்து யானையினால் தலைவனுக்கு துன்பம் வரும் எனபதைத்

தலைவி உணர்ந்து வருந்துகிறாள் என்று அச்சம் மெய்ப்பாட்டை உணர்த்துகிறது. 'எனைப்பயம்' என்ற சொல் இதனை உணர்த்துகிறது.

பொருள்வயிற் பிரியக் கருதிய தலைமகன் அதன் சிறப்புக் கூறிய வழி, தோழி அதனை இழித்துக் கூறுகின்ற,

"***ஞெலி கழை முழங்கு அழல் வயமா வெரூஉம்***
***குன்றுடை அருஞ் சுரம் செலவு அயர்ந்தனையே;***
***நன்று இல, கொண்க! நின் பொருளே***
***பாவை அன்ன நின் துணைப் பிரிந்து வருமே***"[90] (ஐங்., பா.எ. 307)

எனும் இப்பாடலில், 'கடற்கரைக்குத் தலைவனே! ஒன்றோடொன்று உராய்ந்து அதனால் தீப்பற்றியெரியும் மூங்கிலின்கண் தோன்றிய அழல் முழக்கம் கேட்டு வலிமை மிக்க விலங்கான புலி அஞ்சியோடும் குன்றுகளைக் கொண்ட கடத்தற்கு அரிய சுரநெறியில் பிரிந்து செல்ல விழைகின்றாய். இச்செலவினால் நீ ஈட்ட விழையும் பொருள் நல்ல தன்மையுடையதன்று. ஏனெனில், அது கொல்லிப்பாவை போலும் கண்டாரை மயக்குறுத்தும் பேரழகு வாய்ந்த நின் துணைவியைப் பிரிவதனால் வருவதாகும்' என்று விலங்கினால் உருவாகும் 'அச்சம்' மெய்ப்பாடு கூறப்பட்டுள்ளது. "***மூங்கிற் புதரையே புகலிடமாகக் கொண்டு அதன்கண் இனிதே உறங்கும் புலி, அதன் கோலிலேயே தோன்றிய திக்கு அஞ்சுதல் போன்று, நின்னையே புகலிடமாகக் கொண்டு நின்னருளிலேயே இனிது வாழும் எம்பெருமாட்டி நின்னெஞ்சத்தே தோன்றிய இக்கருத்தினை உணரின் வருந்துவள்***"[91] என்ற பெருமழைப்புலவர் உரையும் அரணாகிறது.

தலைமகன் பிரிவதாகத் தோழியிடம் சொன்னான். அதற்கு அவள் 'நீ பிரியாது எம்முடன் வாழ்ந்தால் மிக நன்று. அப்படிப் பிரிவதானால், இம்மாபெரும் மலை, எங்களை விட்டுப் பிரிவதாயின், நீயும் பிரியாம்' என்று, அவள் பிரியலாகாது என்பதுபடச் சொல்லியதாகின்ற பாடலில் தெய்வத்தால் வருகின்ற அச்சம் மெய்ப்பாடானது,

"***பல் இருங் கூந்தல் மெல்லியலோள்வயின்***
***பிரியாய் ஆயினும் நன்றே; விரி இணர்க்***

***கால் எறுழ் ஒள் வீ தாஅய***

***முருகு அமர் மாமலை பிரிந்தெனப் பிரிமே***”[92] (ஐங்., பா.எ. 308)

எனும் இப்பாடலில், ‘பலவாகிய கரிய கூந்தலையுடைய மெல்லிய இயல்புடைய தலைவியுடன் என்றும் பிரியாது வாழ்வாயாயின் அது மிக நன்றாகும். அன்றி இவளைப் பிரிதலை விரும்புவையாயின், விரிந்த கொத்துக்களாக அமைந்த, வலிய காம்புகளில் உள்ள, ஒள்ளிய மலர்கள் உதிர்ந்து பரந்த, முருகப்பெருமான் விரும்பி உறைகின்ற இப்பெரிய மலையை அவர் விட்டுப் பிரியும்பொழுது நீயும் எம்மைப் பிரிவாயாக’ என்று தோழி கூறுவதிலிருந்து உணரமுடிகிறது.

முருகப்பெருமானாகிய கடவுள் உறைகின்ற இடத்தைவிட்டுப் பிரிந்தான் தெய்வக்குற்றம் ஆகிவிடும் என்ற சிந்தனைவழி அச்ச மெய்ப்பாடு அமைகிறது. “***தலைவன் தலைவியை முதற்கண் சந்தித்த பொழுது முருகப்பெருமான் மேல் ஆணையிட்டு, ‘நின்னைப் பிரியேன்’ எனச் சூள் உரைத்தான். ஆதலால், தோழி தலைவனிடம், “நீ தலைவியைப் பிரிவதெனில், அப்பிரிவு முருகப்பெருமானுக்கு ஏற்புடைத்தாகாது. முருகனைப் பொருட்படுத்தாது பிரிதல் அறிவுடைமையன்று. அதனால் நினக்குத் தெய்வக்குற்றம் சாரும்’ என எச்சரித்ததாகக்கொள்வது சிறப்பாகும். இனி ‘முருகன் இம்மலையைப் பிரிவது இல்லையாவது போல நீயும் இவளைப் பிரியாது வாழ்தல் நன்று’ என்றாள் எனினும் பொருந்தும்***”[93] என்ற பெருமழைப்புலவர் கருத்து அரணாகிறது.

தலைவன் பரத்தையிற் பிரிவின்கண் நிகழும் கூற்றில் தலைவியிடம் செய்த சூள் பொய்யானால் ‘தெய்வப்பழியாகும்’ என்று கூறுவதாகின்ற பாடல்களில் அச்சம் வெளிப்படுகிறது.

தலைவி தன்னுடன் போய்ப் புனலாடிய வழி, ‘இது பரத்தையருடன் ஆடிய துறை’ என நினைந்து பிறந்த மெலிவை மறைத்தமையை உணர்ந்த தலைமகன், மனைவயிற் புகுந்துழி, ‘தெய்வங்கள் உறையும்

துறைக்கண்ணே நாம் ஆடியவதனால் பிறந்தது கொல், நினக்கு இவ்வேறுபாடு?' என்று வினாவிற்கு அவள் சொல்லியதாகின்ற,

"***துறை எவன் அணங்கும், யாம் உற்ற நோயே?***
***சிறை அழி புதுப் புனல் பாய்ந்தெனக் கலங்கிக்***
***கழனித் தாமரை மலரும்***
***பழன ஊர! – நீ உற்ற சூளே***"[94] (ஐங்., பா.எ. 53)

எனும் இப்பாடலில், 'புதுப்புனல் கரையை உடைத்துப் பாய்ந்ததாகக் கழனியில் உள்ள தாமரை மலர் கலக்கமுற்று மலர்வதற்கு இடனான ஊர! இத்துறை எனக்குத் துன்பமளிக்கக் காரணம் யாது? ஒன்றும் இல்லை. யான் அடைந்த துயர்க்கு நீ என்பாற் செய்த சூளுரையே காரணமாகும்' என்பதிலிருந்து தெய்வ 'அச்சம்' புலப்படுகிறது. ஏனெனில் பழங்காலத்தில் தெய்வத்தின் மீது மக்கள் நம்பிக்கை வைத்து வாழ்ந்துள்ளனர் என்பதை சங்கப் பாடல்கள் வழி அறிய முடிகிறது. தெய்வம் ஏதேனும் துன்பம் செய்து விடக்கூடும் என்று கருதுகிற சூழல் அச்சத்தை வெளிப்படுத்துகிறது. "***மக்கள் தெய்வங்களை நம்பிக்கையுடனும், அச்சம் கலந்த உணர்வுடனும் வழிபடுகின்றனர். நல்லது நடந்தால் தெய்வ அருள் என்றும், தீயவை நடந்தால் தெய்வத்தின் கோபம் என்றும் நம்புகின்றனர். பலர் கூடும் இடத்திலுள்ள செங்கடம்பு மரத்தில் உறையும் தெய்வமானது, கொடியவர்களைக் கண்டால் சும்மா விடாது. அவர்களைத் தண்டிக்கும் என பண்டைய மக்கள் நம்பியதாகக் குறுந்தொகை சுட்டும்***"[95] என்று க. அழகர் குறிப்பிடுகிறார். இக்கருத்தானது தெய்வத்தின் முன் செய்த சூளுரையால் துன்பம் நேரிடக்கூடும் என்பதை நினைத்து அச்சமுறுவதை உறுதிப்படுத்துகிறது.

'துறை அணங்குதலாவது, துறைக்கண் உறையும் தெய்வங்கள் துன்புறுத்தலாம். நீர்த்துறைகள் தெய்வங்கள் உறையும் இடங்கள் என்பது பண்டையோர் நம்பிக்கை. சங்க இலக்கியத்தில் இது பரவலாக இடம்பெறும் செய்தியாம். 'யாமுற்ற நோய்' என்பது, நோய்க்குக் காரணம் என்ற பொருள் தருவதாம். தன் கலக்கத்திற்குக் காரணமாவது தலைவன் பண்ட, 'நின்னைப் பிரியேன். பிரியின் உயிர் தரியேன்' என்று செய்த

சூளை அருளின்றிப் பொய்த்துப் பரத்தையரோடு உறவு கொண்டமையே என்று அவன் உணர்ந்து வருந்துமாறு கூறினாள் என்க. 'நின் சூளை நீ மறந்தமையின் நினக்கு ஏதம் வருமேயெனக் கலங்கினேன்' என்றாளாம். பழனமாவது யாவரும் சென்று பயன்கொள்ளத் தக்க பொது நிலமாதலின், 'பழன ஊரன்' என்றாள், பரத்தையர் பலரும் அணைந்து இன்புறுவது தலைவன் மார்பு என்னும் குறிப்பில், தெய்வத்தின்வழி உண்டாகும்' என்ற உரைவிளக்கம் அச்ச மெய்ப்பாட்டை புலப்படுத்துகிறது.

பரத்தையர் மனை நீங்கி வந்து வாயில் வேண்டினான் தலைவன். தலைவி அவன் கொடுமையொழுக்கம் கருதி அவனுக்கு இணங்க மறுக்கிறாள் எனபதனைக் குறிப்பால் உணர்ந்த தோழி, தலைவனுக்கு வாயில் மறுத்துக் கூறியதாக வருகின்ற,

"***திண் தேர்த் தென்னவன் நல் நாட்டு உள்ளதை***
***வேனில் ஆயினும் தண்புனல் ஒழுகும்***
***தேனூர் அன்ன இவள் தெரிவளை நெகிழ,***
***ஊரின் ஊரனை நீ தர வந்த***
***பைஞ்சாய்க் கோதை மகளிர்க்கு***
***அஞ்சுவல், அம்ம! அம் முறை வரினே***"[96] (ஐங்., பா.எ. 54)

இப்பாடலில், 'ஊரனே! திண்ணியனவாய்ச் செய்யப் பெற்ற தேர்களைக் கொண்ட பாண்டியனுடைய நல்ல நாட்டகத்தே உள்ளதும், கோடைக் காலமாயினும் குளிர்ந்த புனல் ஒழுக்கம் கொண்டதுமான தேனூரைப் போன்ற பேரழகுடையவளாகிய இவளுடைய, ஆராய்ந்து தேரப்பட்ட வளையல்கள் நெகிழுமாறு நீ இவளைப் பிரிந்து பரத்தையர் சேரிக்குத் தேரூர்ந்து செல்குவையாயின், தலைவி பொருட்டுச் செவ்வணி அணிந்து அங்கு யான் உலகியல் மரபுப்படி வரலாமெனில், அங்கு நின்னால் கொணரப்பட்டு அதனால் உன்னைச் சார வந்த, பஞ்சாய்க் கோரையாற் தொடுக்கப்பட்ட மாலையை அணிந்த மகளிரை யான் அஞ்சுகின்றேன்' என்று கூறுவதிலிருந்து அச்சம் உணரப்படுகிறது. தலைவியானவள் பரத்தையிர் பிரிவின்கண் அச்சமுறுவதை 'அஞ்சுவல்' அம்ம என்பதிலிருந்து உணரமுடிகின்றது. இதேபோல், தலைமகனுக்குப்

பரத்தையற் உறவு உண்டு எனக் கேள்வியுற்ற தோழி, அவன் தலைவியைப் பிரிந்து போகும் அளவில் அத்துணை அழகியோ நின்பரத்தை என வினவுவதாக வரும்,

"***பகலில் தோன்றும் பல் கதிர்த் தீயின்***

***ஆம்பல் அம் செறுவின் தேனூர் அன்ன***

***இவள் நலம் புலம்பப் பிரிய,***

***அனை நலம் உடையளோ — மகிழ்ந! – நின் பெண்டே?***"[97]

(ஐங்., பா.எ. 57)

என்னும் இப்பாடலில், 'ஞாயிற்றைப் போலத் தோன்றும் பல கதிர்களையுடைய தீயினையும், ஆம்பல் நிறைந்த வயல்களையும் உடைய தேனூர் என்னும் நகரைப் போலும் இவளுடைய பெண்மை நலம் தனிமையால் கெட்டொழியுமாறு நீ பிரிதற்கு, நின்னால் விரும்பப்பட்ட அப்பரத்தை அத்துணைப் பேரழகியோ? கூறுக' என்று தோழி கூறுகிறாள். இவற்றில் பரத்தை பிரிவினால் தலைவி வருத்தமுற்று உடல்நலம் அழியக்கூடும் என்பதை உணர்த்துவதிலிருந்து அறியமுடிகின்றது. இவற்றிற்கு, "***நின் பெண்டு என்றது நின் மனையோளினும் சிறந்தவளாக நீ கருதும் பரத்தை என்னும் பொருளிலாம். நின் மனையாளை அயலாள் ஆக்கும் வண்ணம் அத்துணைப் பெரியவளோ அவள் என்றாளாம். 'கற்பும் காமமும் நற்பால் ஒழுக்கமும், பொறையும் எனப் பல சிறப்பும் கொண்ட என் தோழியை மறந்து பொய்மையும் பகட்டும் கயமையும் அணியாகக் கொண்ட பரத்தையை நச்சினை' என இகழ்ந்தவாறு. இனி, தலைவனுடைய அயன்மை தோன்றப் பரத்தையை நின்பெண்டு என்றாள்***"[98] என்ற பெருமழைப்புலவர் கருத்து அரணாகிறது.

தலைவனின் பரத்தையிற் பிரிவினால் தலைவிக்கு பசலை நோய் ஏற்படும் என அஞ்சுவதாக வரும் பாடலில் அச்சம் புலப்படுகிறது. நெடுநாள் பரத்தமை மேற்கொண்டு வாழ்ந்த தலைமகன் மீண்டு வந்த வாயில் வேண்டிய பொழுது, தோழி, அவன் பிரிவால் தலைவி பசலையுற்றதைச் சொல்லி இடித்துரைக்கின்ற,

"***கூதிர் ஆயின் தண் கலிழ் தந்து,***

***வேனில் ஆயின் மணி நிறம் கொள்ளும்***

***யாறு அணிந்தன்று, நின் ஊரே,***

***கசப்பு அணிந்தனவால் — மகிழ்ந! — என் கண்ணே***"[99]

(ஐங்., பா.எ. 45)

இப்பாடலில், 'மருத நிலத் தலைவ! நின் ஊர் கூதிர்காலத்தில் குளிர்ந்த கலங்கல் நீரைத் தருவதும், கோடைக் காலமாயின் நீலமணி போலும் தெளிந்த நீரைக் கொண்டதும் ஆகிய ஆற்றால் அழகு பெறுதலைத் தனக்கு இயல்பாகக் கொண்டது. ஆனால் என் கண்ணோ பசலையால் அணி பெறுகின்றது' என்று தலைவிக்கு பசலை நோய் உருவாகுமென அஞ்சுவது கூறப்படுகிறது.

தலைவியின் நெஞ்சமானது அலர் தூற்றுவதானாலும் தலைவனின் செயலை நினைத்து வருந்தும் பாடல்களில் அச்சம் வெளிப்படுகிறது. பரத்தையரோடு புனலாடித் தன் இல்லம் திரும்பின தலைவன் வாயில் வேண்டிய பொழுது தோழி மறுத்தாள். தலைவன் தான் புனலாடவில்லை என்று பொய் புகன்றான். அவனுக்கு மறுமொழியாகத் தோழி கூறியதாகின்ற,

"***பலர் இவண் ஒவ்வாய், மகிழ்ந! — அதனால்,***

***அலர் தொடங்கின்றால் ஊரே — மலர***

***தொல் நிலை மருதத்துப் பெருந் துறை,***

***நின்னோடு ஆடினள், தண் புனல் அதுவே***"[100] (ஐங்., பா.எ. 75)

எனும் இப்பாடலில், 'மகிழ்நனே! நீ பரத்தையரோடு நீராடியதனை இங்கு ஒத்துக்கொள்ள மாட்டாய். மலர்களை மிகுதியாகக் கொண்ட, மிகவும் பழைமையான மருத மரம் நிற்கும் பெரிய நீர்த் துறையின் கண்ணே, நின் காதலி நின்னோடு ஆடி மகிழ்ந்ததனைக் கண்டோர் பலராவர். அதுபற்றி ஊர் முழுதும் அலர் பரவிற்று என்பதனை அறிவாயாக. ஈண்டு பழியை மறைத்தலை ஒழிக' என்பதிலிருந்து தலைவிக்குத் தோன்றும் அச்சம் மெய்ப்பாடு உணரப்படுகிறது. 'அலர்' தூற்றுவதனால் தலைவிக்கு மனதில் அச்சம் உருவாகிறது.

தலைவியின் ஊடலை நீக்கி அவளைக் கூட விரும்பிய தலைவன் தன் தூதுவர்களை அனுப்பினான். தலைவனும் அவர்களுடன் வந்து

புறத்தே நின்றான். அப்போது தோழி அவன் கேட்கும் வகையில் வாயில் வந்தார்க்குக் கூறியதாகின்ற,

"***வெள்ளாங்குருகின் பிள்ளை செத்தென,***
***காணிய சென்ற மடநடை நாரை***
***உளர, ஒழிந்த தூவி குவவு மணற்***
***போர்வில் பெறூஉம் துறைவன் கேண்மை***
***நல்நெடுங் கூந்தல் நாடுமோ மற்றே?***"[101] (ஐங்., பா.எ. 153)

இப்பாடலில், 'வெள்ளைக் கொக்கின் குஞ்சு இறந்ததாக அதன் தாய்க்கு ஆறுதல் கூறும் பொருட்டுச் சென்ற மடப்பம் பொருந்திய நடையைக் கொண்ட நாரை, தன் அலகினால் கோதிபொழுது உதிர்ந்த இறகுகளைக் காற்றால் குவிந்த மணற்குன்றுகளிடத்தே மக்கள் பெறத்தக்க துறைவன் நட்புறவை நீண்ட கூந்தலையுடைய என் தோழி விரும்புவாளோ? விரும்பாள் காண்!' என்ற விளக்கத்திலிருந்து தலைவனின் செயல்பாடு தலைவிக்கு அச்சத்தை உருவாக்குவதாகிறது.

தலைவியிடம் உரைத்த சூளுரைக்கு அஞ்சுகின்ற நிலையை எடுத்துரைக்கின்றபோது அச்சம் புலப்படுகிறது. தலைமகன் பரத்தையின் மறுத்தந்து, வாயில் வேண்டித் தோழியிடைச் சென்று, தெளிப்பான் புக்காற்குத் தோழி சொல்லியதாகின்ற,

"***பாசவல் இடித்த கருங்காழ் உலக்கை***
***ஆய்கதிர் நெல்லின் வரம்புஅணைத் துயிற்றி***
***ஒண்தொடி மகளிர் வண்டல் அயரும்***
***தொண்டி அன்ன என்நலம் தந்து***
***கொண்டனை சென்மோ – மகிழ்ந! – நின் சூளே***"[102]

(குறுந்., பா.எ. 238)

எனும் இப்பாடலில், மகிழ்ந, பசிய அவலை இடிப்பதற்குப் பயன்படுத்திய, கரிய வயிரம் பாய்ந்த உலக்கையை தேர்ந்த கதிர்களையுடைய, நெற்பயிரையுடைய வயலின் வரப்புகளாகிய கரையில், கிடக்கச் செய்து, ஒள்ளிய வளையலை அணிந்த பெண்கள் வண்டற்பாவை செய்து விளையாடுவதற்கு உரிய இடனாகிய தொண்டி என்னம் பட்டினத்தைப்

போன்ற என்னிடம் பெற்ற, என்னுடைய பெண்மையின் நன்மையை என்னிடம் தந்துவிட்டு, நீ தந்த சூளுறவினைப் பெற்றுக்கொண்டு செல்வாயாக' என்றும், 'அவல் இடிப்பவர், தம் உலக்கையை வயல் வரப்புகளில் கிடத்திச் செல்லுதல், தாயர், தம் குழந்தைகளைப் படுக்கையில் கிடத்தித் துயிலச் செய்வதுபோல் இலக்கணையாகக் கூறப்பட்டுள்ளது. தான் பரத்தையை அறிந்திலேன் என்பது தலைவன் செய்த சூளுறவாகும். சூள் பெற்றார் சூளை விட்டோம் எனக் கூறாது ஒழியின், 'சூள் பொய்த்தார்க்கு ஏதும் வரும் ஆதலால் தோழி, தலைவனிடம், நீ செய்த சூளுறவினைப் பெற்றுச் செல்லுக எனக் கூறினள்' என்றும் கூறுவது தெய்வம் நிலைக்களன்வழி அச்சமாகிறது.

தோழி தலைவியிடம் கூற்று நிகழ்த்தும்போது தலைவன் செல்லும் காட்டிடையில் விலங்கு, கள்வரினால் ஏற்படும் தீங்கினைக் கூறும் போது அச்சம் தோன்றுகிறது. ஊரார், பழி கூறுதல், பரத்தையர் பிரிவின் உணர்வு இவற்றை எடுத்துரைக்கும் அச்சம் தோன்றுகிறது.

கற்பு வாழ்வில் தலைவன் பிரியக் கருதுகின்றான். தோழிக்குக் களவின் கண் நிகழ்ந்த உடன்போக்கு நினைவிற்கு வருகின்றது. 'தலைவியை உடன்கொண்டு செல்லும்போது எதிர்த்தவரைப் போரில் வென்றாய். எம் உறவினர் அப்போது அங்கு வந்து விடவே நீ காட்டினுள் உன்னை மறைத்துக் கொண்டாய். அக்காட்சி என் கண்ணெதிரில் சுற்றி வருவது போல் உள்ளது. அத்தகு காட்டிடையே நீவிர் எப்படிச் செல்லுவீர்?' என்று கேட்டதாக அமைகின்ற,

***"அன்றை அனைய ஆகி, இன்றும் எம்***
***கண் உளபோலச் சுழலும்மாதோ***
***புல் இதழ்க் கோங்கின் மெல் இதழ்க் குடைப் பூ***
***வைகுறு மினின் நினையத் தோன்றி,***
***புறவு அணி கொண்ட பூ நாறு கடத்திடை,***
***கிடின்என இடிக்கும் கோல் தொடி மறவர்***
***வடி நவில் அம்பின் வினையா அஞ்சாது***

*அமரிடை உறுதர, நீக்கி, நீர்*

***எமரிடை உறுதர ஒளித்த காடே*"[103]** (நற்., பா.எ. 48)

என்னும் இப்பாடலில், 'புல்லிய புறவிதழ்கொண்ட கோங்கினது மெல்லிதழ் கொண்டு குடை போன்று மலரும் மலர்களெல்லாம் வைகறைக் காலத்தில் வானத்திற் பூத்த மீன்களென நினைக்குமாறு கானகத்தில் தோன்றின. இத்தகு மலர்கள் மணம் வீசும் காட்டில் கல் பரந்த வழியில், 'கிடின்' என்னும் ஓசை உண்டாகுமாறு மோதும் மறக்குணமிக்க வீரவளை அணிந்த மறவர்கள் கூர்மைமிக்க அம்பினாற் செய்யும் கொடுந் தொழிலை உடையவர். அம்மறவர் அஞ்சாது உம்மோடு போர் செய்தலைக் கருதி வந்தனர். அவர்களை அமரில் நீவிர் அஞ்சாது பொருது வென்றீர். அதன்பின் எம் உறவினர் எம்மைத் தேடிவந்தார்கள். அதனைக் கண்ட நீவிர் காட்டகத்துச் சென்று ஒளித்துக் கொண்டீர்! மன்பு அந்த நாளில் நிகழ்ந்த அத்தன்மையதாகிய நிகழ்ச்சி இன்றும் என் கண்ணெதிரே நிகழ்வது போலச் சுழல்கின்றது. அத்தகைய காட்டிடத்தே இப்போது நீங்கள் எப்படி ஏகுவீர்கள்?' என்பதிலிருந்து கள்வர் வழி அச்சம் உணர்த்தப்படுகிறது.

பொருள்வயிற் பிரியும் தலைவனிடம் தோழி, தலைவனே! உன் பிரிவினை அறிந்த தலைவியின் கண்களில் நீர் பெருகுவதைக் கண்டும், நீ பிரிய எண்ணுவது தகுமோ? தகாது என்று செலவு தடுத்துக் கூறிய

"***கவிதலை எண்கின் பரூஉ மயிர் ஏற்றை***
***இரை தேர் வேட்கையின் இரவில் போகி,***
***நீடு செயல் சிதலைத் தோடு புனைந்து எடுத்த***
***அர வாழ் புற்றம் ஒழிய, ஒய்யென***
***முர வாய் வள் உகிர் இடப்ப வாங்கும்,***
***ஊக்கு அருங் கவலை நீந்தி, மற்று – இவள்***
***பூப்போல் உண்கண் புதுநலம் சிதைய,***
***வீங்கு நீர் வாரக் கண்டும்,***
***தகுமோ? – பெரும! தவிர்க நம் செலவே*"[104]** (நற்., பா.எ. 325)

எனும் இப்பாடலில், ‘இத்தலைவியின் நீலமலர் போன்ற மையுண்ட கண்களின் புதுமை தாம் மாறாத அழகு கெடும்படியாக அக்கண்களிலிருந்து நீர் வடியக் கண்டாய். அவ்வாறு கண்டும், நீ சுரவழியில் செல்வது தகுமா? நீ செல்லுகின்ற சுரவழியில் தொடர்ந்து விடாது செயல்படும் கறையான்களின் தொகுதி முயன்று புற்றுகள் சமைத்திருக்கும். அப்புற்றுகளில் பாம்புகள் வாழும். அப்புற்றுகளில் கவிந்து தலையையும் பருத்தி மயிரையுமுடைய ஆண் கரடி தான் இரைதேடி உண்ணும் விருப்பத்தில் இரவின் கண் சென்று, அங்கு வாழும் கறையான்கள் முழுவதும் ஒழியுமாறு வேகமாக, அப்புற்றுக்களைத் தன் ஒடிந்த முனையை உடைய பெரிய நகங்களால் பறித்து அவற்றின் உள்ளமைந்த புற்றாஞ்சோறு முதலியவற்றை உறிஞ்சி இழுக்கும். உள்ளத்தால் கருதிப் பார்ப்பதற்கும் அரிய கவர்த்த வழிகளுடைய சுரத்தில் செல்லுவதும் தக்கதாகுமோ?’ என்பது விலங்குவழி அச்சம் தோன்றுகிறதை புலப்படுத்துகிறது. மேலும், தலைமகனால் பிரிவு உணர்த்தப்பட்ட தலைமகள் வருந்துகிறாள். அந்நிலையில் தோழி வேறு நாடு செல்லும் தலைவன் நீட்டியாது கூறிய பருவத்து வருதலை எண்ணி அவனை எதிர்ப்பட்டு ‘நின்பிரிவு கேட்டுப் பேசாமல் அழுகின்ற இவள் நீ வருமளவும் எப்படி ஆற்றியிருப்பாள்’ எனக் கூறுவதாகின்ற,

“*படு சுடர் அடைந்த பகு வாய் நெடு வரை,*
*முரம்பு சேர் சிறுகுடி, பரந்த மாலை,*
*புலம்பு கூட்டுண்ணும் புல்லென் மன்றத்து,*
*கல்லுடைப் படுவில் கலுழி தந்து,*
*நிறை பெயல் அறியாக் குறைத்து ஊண் அல்லில்,*
*துவர்செய் ஆடைச் செந் தொடை மறவர்*
*அதர் பார்த்து அல்கும் அஞ்சுவரு நெறியிடை,*
*இறப்ப எண்ணுவர் அவர் எனின், மறுத்தல்*
*வல்லுவம்கொல்லோ, மெல்லியல்! நாம்?’ என*
*விம்முறு கிளவியள் என் முகம் நோக்கி,*
*நல் அக வன முலைக் கரை சேர்பு*
*மல்கு புனல் பரந்த மலர் ஏர் கண்ணே*”[105] (நற்., பா.எ. 33)

எனும் இப்பாடலில், ‘தலைவனே! தலைமகள் என்னை நோக்கி ‘மெல்லியலே! மேற்கில் செல்லும் சூரியன் மறையவே மாலைப் பொழுது பரவும். அப்பொழுதில் பிளவுபட்ட நீண்ட மலைச்சாரலில் வன்னிலத்தில் அமைந்த சிறுகுடியில் அச்சம் மிக்கு இருக்கும். அங்குப் பொலிவழிந்த பொதியிலிற் கல்லையுடைய குழிகளில் கலங்கல் நீர் இருக்கும். அக்கலங்கல் நீரைக் கொண்டு வந்து கொடுத்து, நிறைந்த மழைநீரைக் கண்டறியாதவரும், குறைந்த உணவையுடையவரும், இரவுப்பொழுதில் துவர்நிற ஆடையை அணிந்தவரும், செவ்விய அம்புத் தொடையை உடையவருமான ஆறலைக் கள்வர் நெறி நோக்கியிருப்பர். அத்தகைய அச்சம் தோன்றும் வழியில் அவர் செல்லக் கருதுவார் எனில், யாம் மறுக்க வலிமை உடையோமோ என்று, வெளியிற் போதாமல், விம்மிய சொல்லை உடையவளாய் என் மகத்தை நோக்குவாள். அவ்வளவில் அவளுடைய மலர் போன்ற கண்களிலிருந்து நல்ல மார்பின் கண் உள்ள அழகிய முலை முகட்டில் விழுந்து பரக்கும்படியாகக் கண்ணீர் மல்கிற்று. இந்நிலையில் நீ வருமளவும் அவள் எங்ஙனம் ஆற்றியிருப்பாள்?’ என்பதிலிருந்து தலைவி தன் மனத்தில் நினைத்து பயமுறுகிறாள் என்பதை தோழி குறிப்பால் எடுத்துரைக்கும் சூழல் கள்வர்வழி அச்சம் உருவாவதை உணரமுடிகிறது. இதேபோல், ஊரார் பேசும் பழிச்சொல்லுக்கு அச்சப்படுவதும், பரத்தையர் பிரிவால் உண்டாகும் தீமை குறித்து அச்சப்படுவதும் பாடல் உணர்த்துகிறது.

தலைமகளைத் தலைவன் கொண்டு நீங்கிய செய்தி கேட்ட செவிலி புலம்பிப் பின்பு நற்றாய்க்குக் கூற அவள் அஃது அறநெறியே என்று கொண்டாள். ஆயினும், ‘என்னைச் சிறிது பொழுது பிரியினும் நொந்து வருந்துபவள் எவ்வாறு அஞ்சாது பாலை நிலதிற் செல்ல முடிந்தது’ என அஞ்சிக் கூறுவதாகின்ற,

“***நின்ற வேனில் உலந்த காந்தள்***
***அழல்அவிர் நீள் இடை, நிழலிடம் பெறாஅது,***
***ஈன்று கானம் மடிந்த பிணவுப் பசி கூர்ந்தென,***
***மான்ற மாலை, வழங்குநர்ச் செகீஇய,***

*புலி பார்த்து உறையும் புல் அதர்ச் சிறு நெறி*

*யாங்கு வல்லுநள்கொல்தானே – யான், 'தன்*

*வனைந்து ஏந்து இள முலை நோவகொல்!' என*

*நினைந்து, கைந்நெகிழ்ந்த அனைத்தற்குத் தான் தன்*

*பேர் அமர் மழைக் கண் ஈரிய கலுழ,*

*வெய்ய உயிர்க்கும் சாயல்,*

*மை ஈர் ஓதி, பெரு மடத்தகையே?*"[106] (நற்., பா.எ. 29)

என்னும் இப்பாடலில், 'அவளுடைய தொய்யில் வனைந்து பருத்த இளைய மார்பகங்கள் நோகுமோ என்று நான் அவளை அணைத்திருந்த கையை நெகிழ்த்தினேன். அவள் அதனைப் பொறுக்காது தான் தன்னுடைய பெரிய அமர்த்த குளிர்ந்த கண்கள் நீரை வடிக்கக் கலங்கினாள். வெம்மையாய்ப் பெரு மூச்செறிந்தாள். அத்தகைய மென்மையும் கமரிய பெரிய கூந்தலும் பெரிய மடப்பமும் உடைய தகுதி மிக்கவள் என்மகள். ஏனைய பருவம் ஒன்றும் எய்தாமல் வேனிற் பருவம் ஒன்றனையே எய்துகின்ற காய்ந்து வாடிய காந்தளையுடைய அழல் வீசுகின்ற நீண்ட சுரம். அங்கு நிற்கவும் நிழலிடம் பெறாமல் குட்டிகளை ஈன்று காட்டில் காவல் செய்திருந்த பெண் புலி மிகவும் பசியுடையது என்று அதன் பசியைப் போக்க மாலைப் பொழுதில் வழியினிடையில் செல்வாரைக் கொல்லும் பொருட்டு ஆண்புலி நோக்கி நிற்கும். அத்தகைய புன்மைமிக்க சிறிய வழியில் என்மகள் எங்ஙனம் செல்ல வல்லவள்?' என்பதிலிருந்து ஊரார் கூற்றும் அவிச்சொல் ஒரு அச்சப்படுவதை உணரமுடியும்.

தலைவன், பொருள் தேடுதல் பொருட்டுப் பிரிய இருக்கிறேன் என்றனன். தோழி தலைவியின் உள்ளக் குறிப்பு அறிந்தவாறும் அவளது அற்றாமையும், தலைவனுக்கு உணர்த்திச் செலவினை ஒழிவாயாக எனக் கூறுகின்ற,

"*..........................................................................*

*என ஆங்கு*

*கழிபெரு நல்கல் ஒன்று உடைத்து' என, என்தோழி*

***அழிவொடு கலங்கிய எவ்வத்தள்; ஒருநாள், நீர்,***
***பொழுது இடைப்பட நீப்பின், வாழ்வாளோ?***
***ஒழிக இனி, பெரும! நின் பொருட்பிணிச் செலவே***"[1107]

(கலித்., பா.எ. 4)

எனும் இப்பாடல் வரிகளில், 'புணர்ச்சிக்குப் பின்னர் மிகப்பெரிய தலையளி ஒரு பிரிவை உடையது என்று உட்கொண்டு, என்தோழி நெஞ்சழிவாலே கலங்கிய வருத்தத்தை உடையளாயினள். இத்தன்மை உடையாள் நீர் ஒருநாள் பொழுது கூட்டம் இடையீடுபடப் பிரிவீராயின் உயிர் வாழ்வாளோ? உயிர் வாழாள். ஆதலின் பெரும! பொருளிடத்து நின் நெஞ்சு பிணித்தலாற் கொண்ட செலவைத் தவிர்வாயாக என்றாள்' என்று கூறுவது தலைவிக்கு சமூகத்தாரால் ஏற்படக்கூடிய, தலைவன் பொருள் தேடச் சென்று திரும்பி வருகின்ற காலம் தாழ்த்தக்கூடும் என்பதை உணர்கிறாள். தோழி இந்நிலையில் சமூகத்தாரால் ஏதேனும் பழிச் சொல் கூறக்கூடும் என்பதைத் தலைவி உணர்கிறாள். இதனால் தலைவிக்கு அச்சம் உருவாகிறது.

தலைவன் பொருள் வயிற்பிரிவேன் எனக் கூறக் கேட்ட தோழி, ஆற்றாளாய், நீர் ஈட்டும் பொருளைக் காட்டிலும் நாங்கள் உமக்குச் சிறந்துள்ளோம் என்று எண்ணின் உம் செலவை நாளும் புள்ளும் விலங்கும் நீக்கும், நீ பிரிந்திருக்க இவள் உயிர் வாழாள். பிரிந்த அன்றே இறந்துபடுவள் எனக் கூறிச் செலவைத் தவிர்க்கின்றதாக வரும்,

'..........................................................................
***கல்லெனக் கவின்பெற்ற விழவு ஆற்றுப்படுத்த பின்,***
***புல்லென்ற களம் போலப் புலம்புகொண்டு, அமைவாளோ?***

***ஆள்பவர் கலக்குற அலைபெற்ற நாடு போல்,***
***பாழ்பட்ட முகத்தோடு, பைதல் கொண்டு, அமைவாளோ?***

***ஓர்இரா வைகலுள், தாமரைப் பொய்கையுள்***
***நீர் நீத்த மலர் போல, நீ நீப்பின், வாழ்வாளோ?***
***என ஆங்கு***
***பொய்ந்நல்கல் புரிந்தனை புறந்தரல் கைவிட்டு,***

*எந் நாளோ, நெடுந்தகாய்! நீ செல்வது,*
*அந் நாள் கொண்டு இறக்கும், இவள் அரும்பெறல் உயிரே*"[108]

(கலித்., பா.எ. 5)

எனும் இப்பாடலில், 'கல்லென்னும் ஓசை உண்டாகும்படி, அழகுபெற்ற திருவிழாவை வழிப்படுத்திவிட்ட பிற்றை நாள் பொலிவற்ற இடத்தினைப் போலத் தனிமை கொண்டு ஆற்றியிருப்பளோ? நாட்டை ஆளுகின்ற அரசன், தாம் பின்னர்க் கலக்கம் உறும்படி, அவரால் அலைத்தலைப் பெற்ற நாடு பாழ்பட்டாற்போல், அழகுகெட்ட முகத்தோடு துன்பத்தைக் கொண்டு ஆற்றியிருப்பாளோ? ஓர் இரவுப் பொழுதில், தாமரையை உடைய பொய்கையுள் நீரினின்றும் நீக்கப்பட்ட மலர் வாடாமற் கிடந்தாற் போல, நீ பிரிவையாயின் ஒரு இராப் பொழுதேனும் உயிர் கொண்டு வாழ்வாளோ? என்று யாம் நினக்குச் சொல்லா நிற்க. நெடுந்தகாய்! பொய்யே இவளுக்கு அருளுதலை விரும்பிப் பாதுகாத்தலைக் கைவிட்டு நீ விரும்பிய அச்சுரத்தில் எந்நாளில் நீ செல்வையோ அந்நாள், இவளுடைய பெறுதற்கரிய உயிரைக் கொண்டுபோம்' என்ற விளக்கத்திலிருந்து உணரமுடிகிறது.

தலைவன் பொருள்வயிற் பிரிவான் என உணர்ந்த தோழி அதனைத் தலைவியின்பால் கூறி அவளை ஆற்றுவிக்கச் சென்றாள். அச்செய்தியை முன்னரே அறிந்த தலைவியோ வருந்தி உடல் வேறுபட்டிருக்கக் கண்ட தோழி, தலைவனிடம் சென்று அவள் நிலையை எடுத்துக்கூறித் தலைவன் செல்லுதலைத் தடுத்து நிறுத்தியதாக வருகின்ற,

"*வினைவயிற் பிரிதல் யாவது ? – வணர்கூரி*
*வடியாப் பித்தை, வன்கண், ஆடவர்*
*அடிஅமை பகழி ஆர வாங்கி*
*வம்பலர்ச் செகுத் அஞ்சுவரு கவலை,*
*படுமுடை நசைஇய வாழ்க்கைச் செஞ்செவி*
*எருவைச் சேவல் ஈண்டுகிளை பயிரும்*
*வெருவரு கானம் நீந்தி, பொருள்புரிந்து*
*இறப்ப எண்ணினர் என்பது சிறப்பக்*

***கேட்டனள் கொல்லோ தானே? தோள்தாழ்பு***
***கரும்புஉண ஒலிவரும் இரும்பல் கூந்தல்,***
***அம்மா மேனி, ஆய்இழை, குறுமகள்***
***கணங்குசூழ் ஆகத்து அணங்குஎன உருத்த***
***நல்வரல் இளமுலை நனைய;***
***பல்இதழ் உண்கண் பரந்தன பனியே்***"[109] (அகநா., பா.எ. 161)

எனும் இப்பாடலில், 'இளைய தலைவி தோளினின்றும் தாழ்ந்து கிடக்கும், வண்டுகள் தேனை உண்ணும்படி தழைத்த கரிய பலவாய கூந்தலையுடையவள். மாந்தளிர் போன்ற அழகிய நிறமுடைய மேனியையும், ஆராய்ந்து எடுத்தணிந்த அணிகலன்களையும் உடையவள். அவளது தேமல் படர்ந்த மார்பகத்து, வீற்றுத் தெய்வம் போன்று தோற்றம் செய்து எழுந்த நல்ல வளர்ச்சியையுடைய இளைய முலைகள் நனையுமாறு, பல இதழ்களையுடைய குவளை மலர் போன்ற மையுண்ட கண்கள் நீரைச் சொரிந்தன.

நீவிர் செல்லவிருக்கும் காடோ, வளைந்த சுருண்ட திருத்தம் பெறக் கோதப்படாத மயிரினையுடைய தறுகண்மையினையுடைய ஆறலை கள்வர், குதையினை உடைத்தாகிய அடியினையுடைய அம்பினை முழுவதும் இழுத்து எய்து வழி வழிப்போவாரைக் கொல்லுவதால் அச்சம் தோன்றுவதற்குக் காரணமான சுர வழிகளைக் கொண்டது. வழிப்போவாரைக் கொன்றதனால் உண்டான முடை நாறும் புலாலை விரும்பியுண்ணும் வாழ்க்கையினையுடைய சிவந்த காதுகளையுடைய ஆண் பருந்து நெருங்கிய தன் சுற்றத்தினை அழைக்கும். அத்தகைய அச்சம் தோன்றும் கானகத்தைக் கடந்து செல்ல நீவிர் கருதினீர் என்பதை எம் தலைவி முன்னரே அறிந்தனள் போலும்.

அவ்வாறாயின், நீவிர் கருதியபடி பொருளீட்டும் வினையின்கண் அவளைப் பிரிந்து செல்லுதல் எங்ஙனம் இயலும்? இயலாது' என்று தோழி கூறுகிறார். காட்டிடைப் பகுதியில் உள்ள விலங்குகளினால் தீங்கு

வரக்கூடும் என்பதை நினைத்து அச்சப்பட்டு துன்பநிலைக்கு ஆட்பட்டிருப்பதை தலைவனிடம் உணர்த்துவதிலிருந்து உணர முடிகிறது.

மற்றொரு பாடலில், தலைவன் பரத்தையரிடம் கூறுகின்ற நிலையினை ஊரார் அலர் தூற்றுவதை நினைத்து அச்சப்படும் உணர்வை தலைவனிடம் தோழி கூறுகிறாள்.

தலைவன் தன்னால் விரும்பப் பெற்ற பரத்தையுடன் சோலை சூழ்ந்த ஆற்றின்கண்ணே புனலாடினான் என்ற செய்தியைக் கேட்டுத் தலைவி ஊடி இருந்தாள். மீண்டும் தலைவன் தலைவியிடம் வந்தபொழுது தலைவி ஊடி இருந்தமை அறிந்து தோழியிடம் வாயில் வேண்டினான். அதற்குத் தோழி பரத்தையுடன் நீராடியதனால் உண்டான அலர் குறித்து எடுத்துக் கூறி வாயில் மறுக்கின்ற,

"*..........................................................*

***காய்சின மொய்ம்பின் பெரும்பெயர்க் கரிகால்***
***ஆர்கவி நறவின் வெண்ணி வாயில்,***
***சீர்கெழு மன்னர் மறலிய ஞாட்பின்***
***இமிழ்இசை முரசம் பொருகளத்து ஒழிய,***
***பதினொரு வேளிரொடு வேந்தர் சாய,***
***மொய்வலி அறுத்த ஞான்றை,***
***தொய்யா அழுந்தூர் ஆர்ப்பினும் பெரிதே***"[110] (அகநா., பா.எ. 246)

எனும் இப்பாடல் வரிகளில், 'கரிகால் வளவன் பெரும்புகழ் கொண்டவன் எரிகின்ற சினத்தையும், வலிமையினையும் உடையவன்; அவன், ஆரவாரத்தையுடைய கள்வளம் மிக்க வெண்ணிவாயில் என்னுமிடத்து, புகழ் பொருந்தின் பகை மன்னர்கள் மாறுகொண்டெழுந்தபோது, முழங்குகின்ற ஓசையினையுடைய அவர்தம் வீர முரசம் போர்க்களத்தே வீழ்ந்துபடப் போரிட்டான். பதினொரு வேளிருடன் இருபெரும் வேந்தரும் போரிலே நிலைகுலைய, அவரது மிக்க வலிமையைக் கெடுத்து அவரை வென்ற நாளில், அட்ட மள்ளரால் அழுந்தூரில் எழுந்த குறையாத ஆரவாரத்தினும் நீ புனலாடியபோது அன்றெழுந்த அலர் மிகவும்

பெரியதாகும்' என்று தோழி கூறுவதிலிருந்து அச்சம் அறிய முடிகிறது. ஊரார் பழிதூற்றிப் பேசுவதை நினைத்து வருந்தும் தலைவிக்கு ஏற்படுவதை தோழி உணர்த்தும்போது அச்ச உணர்வு புலப்படுகிறது.

தோழி தலைவியிடம் போகிறாள். அதேபோல், தலைவனிடம் கூற்று நிகழ்த்துகிறாள். தலைவன் பொருள் தேடப் பிரிகின்றபோது அவனது பிரிவால் அவனுக்கும் தனக்கும் துன்பம் ஏற்படக்கூடும் என்ப உணர்வால் அச்சமுறுகிறாள். அவ்வச்சத்தை வருத்தமாக தன் முகத்தின்வழி வெளிக்காட்டுகிறாள். இதனை உணர்ந்த தலைவன் தோழியிடம் சென்று பொருள்வயிற்பிரிவுக்குத் தன்னை விடுக்குமாறு வேண்டுகிறான். அப்போது தோழி தலைவனிடம் தலைவியின் உணர்வை எடுத்துச் சொல்லும்போது, தலைவியின் அச்ச உணர்வு தலைவனுக்குப் புலப்படுத்தப்படுகிறது.

தலைவிக்கு உண்டாகும் அச்சத்தின் மிகுதியால் வேதனையடைகிறாள். வேதனைப்படுவதும் கோபப்படுவதும் தன் உள்ளத்தில் தோன்றும் பயத்தின் மிகுதிதான். அச்சமானது காட்டிடையே விலங்குகளால் ஏற்படக்கூடும் துன்பம், கள்வர்களின் அச்சுறுத்தல், தலைவனின் பரத்தையர் பிரிவு சூளுரை பொய்த்தல் போன்றவை அச்சத்தின் நிலைக்களன்களாக உள்ளார்ந்து அமைகின்றது. இதுபோக சமூகத்தாரால் பழிச்சொல், அலர் மற்றும் தலைவியின் உடலில் ஏற்படும் பசலை நோய் போன்றவை அச்சத்திற்குரிய நிலைக்களனாகிறது. இவ்வுணர்வுகள் தோழி கூற்றில் அமைகின்றதே தவிர தோழிக்கு அச்சம் மிகுதி உருவாவதில்லை. ஆனால் தலைவியின் ஆற்றாமையையும், தலைவன் வேண்டி நிற்கும் சூழலும் தோழிக்கு அச்சம் தோன்றுகிறது. இது மனதளவில் தலைவி தலைவன் வாழ்க்கை நிகழ்வுக்கு உறுதுணைக்கு ஆற்றக்கூடிய கடமையின் மிகுதியால் உண்டாகும் அச்சம் தோழியின்பால் உருவாகிறது.

## தொகுப்புரை

தலைவன் வரைவு நீட்டிக்கின்ற நிலையினை உணர்ந்த தோழி, ஊராரால் அலர் ஏற்படக்கூடும் என்பதை நினைக்கின்றபோது அச்சம் உண்டாகிறது. தலைவன் மடலேறுவேன் என்ற சூழலை நினைத்து வருத்தமுறுகின்றபோது தோழியின் உள்ளத்தில் பயமுறக்கூடிய உணர்வைக் கூற்றுவழி உணர முடிகிறது.

தலைவன் இரவுக்குறி வருகின்றபோது அவனுக்கு காட்டின் தன்மையால் உயிருக்குத் துன்பம் நேரிடக்கூடும் என நினைத்துத் தலைவி அச்சமுறுகிறாள். இரவு நேரத்தில் காட்டிடையே வாழுகின்ற விலங்குகள் நடமாடக்கூடும். தலைவனின் உயிருக்கு ஆபத்து நேரிடும். தலைவன் இருந்தால்தான் தலைவி இன்புறுவாள். இல்லையானால் பெரும் துன்பம் அடைவாளே என்பதை உள்ளத்தில் நினைத்து அஞ்சுவதைக் காணலாம்.

தலைவன் சிறைப்புறமாக நிற்கின்ற சூழலில், தோழி தலைவனை காலம் தாழ்த்தாது வரைவு செய்ய வேண்டும். ஏனெனில் நீ கூறச் செல்கின்ற நிகழ்வை அறிந்த ஊரார் தலைவியைப் பழிதூற்றிப் பேசுவர். அதனைத் தாங்காது கடும் துன்பமடைவாள். அத்துன்பத்தை என்னால் பொறுக்க இயலாது என்பதை உணர்த்துகின்றபோது தோழிக்கு அச்சம் தோன்றும்.

தலைவியின் துன்ப உணர்வைத் தலைவனுக்கு எடுத்துரைக்கின்றபோதும், தலைவியின் உடல் மாறுபாடு கண்ட நற்றாய், இற்செறிப்பு செய்து வைக்கக்கூடும். தலைவனிடம் இற்செறிப்பு கூறுமிடத்து அச்சம் தோன்றுகிறது. தலைவியின் மடப்பக் குணத்தினைத் தலைவனுக்கு எடுத்துரைக்கும் நிலையில் தோழிக்கு மனதளவில் பய உணர்வு உண்டாகிறது. தலைவியை இற்செறிப்புச் செய்தலால் உண்டாகும் துன்பத்தை உன்னால் தடுக்க முடியாததை நினைக்கும்போது துன்பம் உண்டாகிறது.

தலைவிக்கு, தாய் வெறியாட்டு எடுக்க முற்படுகிறாள், வெறியாட்டின் தன்மையில் தலைவி எவ்வளவில் துன்புறுவாள் என்று எண்ணி உயிர் வாழாள் என்பதைத் தலைவனிடம் எடுத்துரைக்கும்போது தோழிக்கு அச்சம் உண்டாகிறது.

தலைவனிடம், தலைவியை விரைந்து வரையாதுபோனால் அவளுக்குப் பசலை வரக்கூடும். மேலும், பசலை நோயால் வருத்தமடைவாள் என்பதைத் தலைவனிடம் எடுத்துரைக்கும் முறையில் தோழிக்கு அச்சம் உருவாகுகிறது. தலைவனின் பிரிவுத்துயர் ஆற்றாத தலைவி துன்புறுவதை நினைத்து தேற்றுகின்ற சூழலில் உள்ளத்து அளவில் பயமுறுகிறாள் தோழி. தலைவன் செய்த சூளுரைத்தன்மை பொய் என்பதை உணர்ந்து தலைவி வறுத்தமுறுகின்றபோது அவளை ஆற்றுப்படுத்தும் சூழலில் அச்சம் தோன்கிறது.

தலைவியின் உடல் மாற்றம் உணர்ந்த செவிலி, நற்றாய் போன்றோர்க்கு தலைவியின் நிலையை எடுத்துரைக்கும் சூழலில் தோழி அஞ்சக்கூடிய உணர்வு புலப்படுகிறது. தோழி, தலைவன் சென்ற காட்டினில் விலங்குகளினால் கொடும் துன்பம் நேரிடக்கூடும் என்பதைத் தலைவியிடம் கூறுகின்ற போது தோழிக்கு அச்சம் உண்டாகின்றது. தலைவன் பருவம் நீட்டித்ததை உணர்ந்து வருத்தமுறுவதைத் தலைவிக்கு எடுத்துரைக்கும் சூழலில் அச்சம் உண்டாகிறது.

தலைவன் பருவநிலையைக் கடந்தும் வராததால் தோழி தலைவியின் துன்பம் நிலையை எண்ணுகின்ற சூழலில் வருத்தமுறக்கூடிய அச்சம் நிலைக்களன் அச்சமாகிறது. பொருள்வயிற்பிரிவின் முன்னர் நீங்குவதற்கு அரிய காம இன்பத்தை விட்டொழிந்து விடுவாரோ என்பதைத் தலைவிக்கு கூறும் நிலையில் தோழிக்கு அச்சம் தோன்றுகிறது.

தலைவன் பொருள்வயிற் பிரியும்போது தலைவியானவள் பிரிவைத் தாங்கமாட்டாள். ஏனெனில் நீவிர் பிரிந்து செல்லக்கூடிய காட்டின் இயல்பினை நினைக்கும்தோறும் அச்சப்படக்கூடியதாக உள்ளது. எனவே செலவினைத் தவிர்க என்று உரைக்கும் சூழலினாலான பாடல்கள் அச்ச உணர்வைப் புலப்படுத்துகிறது.

இவள் துன்புறுமாறு நீவிர் சென்று ஈட்டிவரும் பொருளானது பொருளாகுமோ என்று கூறுகின்றபோதும் தலைவன் எப்பொழுது வருவாள்? எனத் தலைவி அச்சப்படக்கூடும் என்பதைத் தோழி கூறுகின்றபோதும் தோழிக்கு அச்சம் உருவாகிறது.

## குறிப்புகள்

1. ஔவை துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), ஐங்குறுநூறு மூலமும் விளக்கவுரையும், ப. 433.
2. கு. பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), நற்றிணை மூலமும் உரையும், பக். 617–618.
3. வி. நாகராஜன் (உ.ஆ.), குறுந்தொகை மூலமும் உரையும், ப. 173.
4. அ. விசுவநாதன் (உ.ஆ.), கலித்தொகை மூலமும் உரையும், பக். 206–207.
5. பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் (உ.ஆ.), நற்றிணை நானூறு மூலமும் உரையும், பக். 229–230.
6. அ. தட்சிணாமூர்த்தி (உ.ஆ.), ஐங்குறுநூறு மூலமும் உரையும், ப. 508.
7. இராம. சண்முகம் (ஆய்வேடு), சங்க இலக்கியத்தில் வரைவுகடாதலும், அறத்தொடு நிற்றலும், ப. 32.
8. மு. இராகவையங்கார், தொல்காப்பிய பொரளதிகார ஆராய்ச்சி, ப. 80
9. கு.வெ. பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), நற்றிணை மூலமும் உரையும், ப. 621–622.
10. பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் (உ.ஆ.), நற்றிணை மூலமும் உரையும், ப. 471.
11. ஔவை துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), ஐங்குறுநூறு மூலமும் உரையும், ப. 665.
12. அ. விசுவநாதன் (உ.ஆ.), கலித்தொகை மூலமும் உரையும், பக். 217–220.
13. கு.வெ. பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), நற்றிணை மூலமும் உரையும், பக். 308–309.
14. வி. நாகராசன் (உ.ஆ.) குறுந்தொகை மூலமும் உரையும், ப. 125.
15. உ.வே. சாமிநாதையர் (உ.ஆ.), குறுந்தொகை மூலமும் உரையும், ப. 105.

16. மேலது., ப. 494.

17. உ.வே. சாமிநாதையர் (உ.ஆ.), குறுந்தொகை மூலமும் உரையும், ப. 495.

18. ஔவை. துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), ஐங்குறுநூறு மூலமும் விளக்கவுரையும், ப. 632.

19. இரா. செயபால் (உ.ஆ.), அகநானூறு மூலமும் உரையும், பக். 341–343.

20. கு.வெ. பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), நற்றிணை மூலமும் உரையும், ப. 8.

21. பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் (உ.ஆ.), நற்றிணை நானூறு மூலமும் உரையும், ப. 21.

22. மேலது., ப. 21.

23. மேலது., ப. 47.

24. வி. நாகராசன் (உ.ஆ.), குறுந்தொகை மூலமும் உரையும், ப. 935.

25. மேலது., ப. 262.

26. தமிழண்ணல் (வி.உ.), தொல்காப்பியம் மூலமம் கருத்துரையும், பக். 352–354.

27. கு.வெ. பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), நற்றிணை மூலமும் உரையும், ப. 680.

28. மேலது., பக். 184–185.

29. மேலது., பக். 700–701.

30. பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் (உ.ஆ.), நற்றிணை நானூறு மூலமும் உரையும், பக். 321–322.

31. ஔவை துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), ஐங்குறுநூறு மூலமும் விளக்கவுரையும், ப 431.

32. வி. நாகராசன் (உ.ஆ.), குறந்தொகை மூலமும் உரையும், ப. 720.

33. மேலது., ப. 819.

34. இரா. செயபால் (உ.ஆ.), அகநானூறு மூலமம் உரையும், பக். 177–178.

35. ஔவை துரைசாமிப்பிள்ளை (உ.ஆ), ஐங்குறுநூறு மூலமும் விளக்கவுரையும், ப. 551.
36. மேலது., பக். 552–553.
37. இரா.செயபால் (உ.ஆ.), அகநானூறு மூலமும் உரையும், பக். 295–297.
38. ஔவை துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), ஐங்குறுநூறு மூலமும் விளக்கவுரையும், ப. 593.
39. மேலது., ப. 595.
40. அ. தட்சிணாமூர்த்தி (உ.ஆ.), ஐங்குறுநூறு மூலமும் உரையும், ப. 346.
41. ஔவை துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), ஐங்குறுநூறு மூலமும் விளக்கவுரையும், ப. 346.
42. அ. விசுவநாதன் (உ.ஆ.), கலித்தொகை மூலமும் உரையும், பக். 549–550.
43. மேலது., பக். 553–554.
44. தொல்.பொருள்., நூற்.எ. 985:2.
45. அ. தட்சிணாமூர்த்தி (உ.ஆ.), ஐங்குறுநூறு மூலமும் உரையும், ப. 795.
46. பின்னத்தூர் அ. நாராயணசாமி ஐயர் (உ.ஆ.), நற்றிணை நானூறு மூலமும் உரையும், ப. 276.
47. மேலது., பக். 442–443.
48. வி. நாகராசன் (உ.ஆ.), குறுந்தொகை மூலமும் உரையும், ப. 184.
49. மேலது., ப. 829.
50. உ.வே. சாமிநாதையர் (உ.ஆ.), குறுந்தொகை மூலமும் உரையும், ப. 624.
51. வி. நாகராசன் (உ.ஆ.), குறுந்தொகை மூலமும் உரையும், ப. 331.
52. கு.வெ. பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), நற்றிணை மூலமும் உரையும், ப. 663.
53. கொ. இராமசாமி (ஆய்வேடு), சங்க இலக்கியத்தில் தோழி, ப. 55.
54. வி. நாகராசன் (உ.ஆ.), குறுந்தொகை மூலமும் உரையும், ப. 767.

55. உ.வே. சாமிநாதையர் (உ.ஆ.), குறுந்தொகை மூலமும் உரையும், ப. 585.
56. ஔவை துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), ஐங்குறுநூறு மூலமும் விளக்கவுரையும், ப. 788.
57. மேலது., ப. 291.
58. ந.மு. வேங்கடசாமி நாட்டார் (உ.ஆ.), அகநானூறு மூலமும் உரையும், ப. 142.
59. தொல்.பொருள்., நூற்.எ. 1060:39.
60. வி. நாகராசன் (உ.ஆ.), குறுந்தொகை மூலமும் உரையும், ப. 493.
61. அ. தட்சிணாமூர்த்தி (உ.ஆ.), ஐங்குறுநூறு மூலமும் உரையும், பக். 446–447.
62. மேலது., ப. 433.
63. ஔவை துரைசாமிப்பிள்ளை (உ.ஆ.), ஐங்குறுநூறு மூலமும் விளக்கவுரையும், ப. 385.
64. அ. தட்சிணாமூர்த்தி (உ.ஆ.), ஐங்குறுநூறு மூலமும் உரையும், பக். 698–699.
65. மேலது., ப. 773.
66. மேலது., பக். 999–1000.
67. தமிழண்ணல், குறிஞ்சிப்பாட்டு இலக்கியத்திறனாய்வு விளக்கம், பக். 112–113.
68. அ. தட்சிணாமூர்த்தி (உ.ஆ.), ஐங்குறுநூறு மூலமும் உரையும், பக். 1072–1073
69. மேலது., பக். 50–51.
70. மேலது., பக். 62–63.
71. வி. நாகராசன் (உ.ஆ.), குறுந்தொகை மூலமும் உரையும், பக். 486–487.
72. மேலது., ப. 496.
73. மேலது., ப. 666.
74. மேலது., ப. 833.
75. மேலது., ப. 408.

76. கு.வெ. பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), நற்றிணை மூலமும் உரையும், பக். 160–161.
77. மேலது., பக். 505–506.
78. அ.விசுவநாதன் (உ.ஆ.), கலித்தொகை மூலம் உரையும், பக். 38–41.
79. மேலது., பக். 58–61.
80. மேலது., பக். 111–114.
81. இரா. செயபால் (உ.ஆ.), அகநானூறு மூலமும் உரையும், பக். 751–752.
82. பா. அருள் மனோகரி, கலித்தொகையில் கைகோள், சங்க இலக்கியக் கட்டுரைகள், தொகுதி 1, ப. 78.
83. இரா. செயபால் (உ.ஆ.), அகநானூறு மூலமும் உரையும், பக். 1049–1050.
84. அ. தட்சிணாமூர்த்தி (உ.ஆ.), ஐங்குறுநூறு மூலமும் உரையும், பக். 663–664.
85. மேலது., ப. 665.
86. மேலது., பக். 668–669.
87. மேலது., ப. 670.
88. மேலது., பக். 670–671.
89. மேலது., ப. 671.
90. மேலது., பக். 675–676.
91. மேலது., ப. 677.
92. மேலது., பக். 677–678.
93. மேலது., ப. 679.
94. மேலது., ப. 116.
95. க. அழகர், குறுந்தொகை காட்டும் நம்பிக்கை இலக்கியத்திறன் அன்றும் இன்றும் கட்டுரைத் தொகுதி, ப. 42.
96. அ. தட்சிணாமூர்த்தி (உ.ஆ.), ஐங்குறுநூறு மூலமும் உரையும், பக். 118–119.
97. மேலது., ப. 125.
98. மேலது., ப. 126.

99. மேலது., ப. 96.

100. மேலது., பக். 165–166.

101. மேலது., ப. 322.

102. வி. நாகராசன் (உ.ஆ.), குறுந்தொகை மூலமும் உரையும், ப. 552.

103. கு.வெ. பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), நற்றிணை மூலமும் உரையும், பக். 84–85.

104. மேலது., பக். 599–600.

105. மேலது., பக். 57–58.

106. மேலது., பக். 50–51.

107. அ. விசுவநாதன் (உ.ஆ.), கலித்தொகை மூலமும் உரையும், பக். 14–17.

108. மேலது., பக். 18–20.

109. இரா. செயபால் (உ.ஆ.), அகநானூறு மூலமும் உரையும், பக். 487–488.

110. மேலது., பக். 737–738.

**இயல் – 5**

# சங்க அக இலக்கியத்தில் பிற மாந்தர்கள் கூற்றில் அச்சம்

## முன்னுரை

தலைவியின் தாய், தலைவியை இற்செறிப்பு செய்கின்றபோதும், வெறியாட்டு நிகழ்த்தும்போதும். உடன்போக்குச் சென்ற காட்டின் தன்மையை நினைத்தும் வருந்துகிறாள். செவிலி தலைவியைத் தன் மகளாகக் கருதுபவள்; தலைவிக்கு உறுதுணையாக நிற்பவள்; செவிலி தலைவியை இற்செறிப்பு செய்கின்ற காலத்திலும்; வெறியாட்டு நிகழ்த்தும்போதும் தலைவியை நினைத்து வருந்துகிறாள். அறத்தொடு நிற்கும் காலத்தில் பல்வேறு வினாக்களை எழுப்பி தலைவியின் காதல் ஒழுக்கங்களை அறிந்து நற்றாய்க்கு எடுத்துரைப்பவள். கற்பு நிலையில் பாணன், உழத்தி போன்றோர் தலைவியின் பிரிவுத்துயருக்கு வருந்தும் தன்மை உடையவர்களாக அமைகின்றனர். இம்மாந்தர்கள் களவு, கற்பு என்ற இருநிலைகளில் கூற்றுகள் நிகழ்த்துவதன் மூலம் அச்சம் எங்ஙனம் வெளிப்படுகின்றது என்பதை ஆய்வதாக இவ்வியலின் அமைகின்றது.

## களவுப் பாடல்களில் அச்சம்

### நற்றாய் கூற்று

தொல்காப்பிய உரையாசிரியர் உடன்போக்கின்கண் தலைமகளின் பிரிவுக்கு ஆற்றாது நற்றாய் புலம்பலுக்கு உரியவள். அவ்வகையில் தலைவனுடன் உடன் சென்ற தலைவியின் பிரிவுக்கு ஆற்றாது நற்றாய் புலம்புமிடத்து அச்சம் வெளிப்படுகின்றது.

தலைமகள் உடன்போய்வழி நற்றாய் 'நீர்வேட்கை மீதூர்ந்து வருந்தும் யானை துதிக்கையினை உயர்த்திப் பிளிறும் வழியின்கண் என் மகள் பந்தும், பாவையும் கழங்கு முதலாகப் பல விளையாட்டுப்

பொருள்களையும் யான் கண்டு வருந்துமாறு விட்டு வைத்துச் சென்றனள்' எண்ணிப் புலம்புவதை,

"***நீர்நசைக்கு ஊக்கிய வுயவல் யானை***
***இயம்புனர் தூம்பி னுயிர்க்கு மத்தம்***
***சென்றனன் மன்றவென் மகளே***
***பந்தும் பாவையும் கழங்குமெமக் கொழித்தே***"[1] (ஐங்., பா.எ. 377)

என்னும் பாடலடிகள் உணர்த்தும். இவற்றில், 'என் மகள், தான் வைத்து விளையாடிய பந்து, பாவை, கழங்கு ஆகியவற்றை யான் கண்டு வருந்துமாறு இங்கே விட்டு, நீர் வேட்கை மீதூரப்பட்டு, அதனைப் பெற்று வேட்கை தணித்தற்கு முயன்றாள். வருத்தம் மிகுந்த யானை, தன் துதிக்கையை மேலே தூக்கி நின்று, வேறுபல இசைக்கருவிகளோடு சேர்ந்து இசைக்கும் நெடுவங்கியம் போலப் பிளிறும் சுரநெறிக்கண் செல்லத் துணிந்தாள், தெளிவாயாக!' என்பதில் அச்சம் உணர்த்தப்படுகிறது. இதில் நற்றாய் தலைவியின் வழித்தன்மைக்கு அஞ்சி வருந்துமிடத்து அச்சத்தை உணர்த்துகின்றது.

இதேபோல், நற்றாய், 'பொய்ம்மொழியே தனக்குப் பற்றுக்கோடாகக் கொண்டு முருந்துபோன்ற தன் வெளிய எயிறுகளிலே தோன்று நகையைத் தோற்றவித்து உடன்பட்டுச் செல்லுதற்குரிய சுரத்தின் கண்ணே சென்றொழிந்தனள்' என்று வருந்துவதை,

"***இல் எழு வயலை ஈற்று ஆ தின்றென,***
***பந்து நிலத்து எறிந்து, பாவை நீக்கி,***
***அவ் வயிறு அலைத்த என் செய் வினைக் குறுமகள்***
***மான் அமர்ப்பள் மையல் நோக்கிமொடு,***
***யானும் தாயும் மடுப்ப, தேனொடு***
***தீம்பால் உண்ணாள் வீங்குவனள் விம்மி,***
***பெருநலும் அனையள்மன்னே : இன்றே,***
***மை அணற் காளை பொய் புகலாக,***
***அருஞ் சுரம் இறந்தனள் என்ப – தன்***
***முருந்து ஏர் வெண் பல் முகிழ் நகை திறந்தே***"[2] (நற்., பா.எ. 179)

என்ற இப்பாடல்வழி அறியலாம். இவற்றில், 'இல்லத்தினிடத்தே முளைத்துப் படர்ந்த வயலைக் கொடியைக் கன்றினை ஈன்ற பசு தின்றதாக, அதனைக் கண்டவுடன் தான் விளையாடிக் கொண்டிருந்த பந்தை நிலத்திலே எறிந்துவிட்டு ஓரை ஆடும் பாவையையும் நீக்கிவிட்டுத் தனது அழகிய வயிற்றிலே அடித்துக் கொண்ட, செய்யும் செயல்கள் வல்ல என் இளமகள் மான்போலும் பொருந்திய மையலைச் செய்யும் பார்வையோடு நானும் செவிலித்தாயும் 'தேனோடு கலந்த பாலைப் பருகுவாய்' என்று கூற உண்ணாமல் அழுபவளாகி, நேற்றும் அத்தன்மையே உடையவளாயிருந்தாள். அங்ஙனம் அவள் செய்வதெல்லாம் நீங்கிற்று. இன்று கருத்த தாடியையுடைய காளையாகின்றவனின் பொய் மொழியே தனக்குப் பற்றுக்கோடாகக் கொண்டு முருந்து போன்ற தன் வெண்மையான பற்களிலே தோன்றும் சிரிப்பை வரவழைத்துக் கொண்டு, உடன்பட்டுச் செல்லுதற்கு இயலாத காட்டு வழியே சென்று நீங்கினள். இத்தகையவள் எங்ஙனம் மனையறம் பூண்டு ஒழுகுவாள் என்று யான் அஞ்சுகின்றேன் நான் எவ்வண்ணம் ஆற்றியிருப்பேன்?' என்பது அச்ச உணர்வைத் தருகிறது. இதில் கொடியத்தன்மைக்கு நற்றாய் அஞ்சி வருந்துவதை அறியமுடிகின்றது. மேலும், தலைவன் கோண்டு தலைக்கழிதலும், அவ்வுடன்போக்கினை அறிந்த நற்றாய் உடன் மகிழ்வோடும், கொடிய அரத்திற் செல்லுதலாலே மலர் போன்ற அவளுடைய கண்கள், சிவந்து ஒளி மழுங்கிய அலமருங் கொல்லென மனையகத்து மருண்டு வருந்திக் கூறுவதாகின்ற,

"***மிளகு பெய்தனைய சுவைய புன் காய்***
***உலறு தலை உகாஅய்ச் சிதர் சிதர்த்து உண்ட***
***புலம்பு கொள் நெடுஞ் சினை ஏறி, நினைந்து தன்***
***பொறி கிளர் எருத்தம் வெறிபட மறுகி,***
***புன் புறா உயவும் வெந் துகள் இயவின்,***
***நயந்த காதலற் புணர்ந்தளள்ஆயினும்***
***சிவந்து ஒளி மழுங்கி அமர்த்தனகொல்லோ***
***கோதை மயங்கினும், குறுந்தொடி நெகிழினும்,***
***காழ் பெயல் அல்குல் காசு முறை திரியினும்,***

*மாண் நலம் கையறக் கலுழும் என்*

*மாயக் குறுமகள் மலர் ஏர் கண்ணே?*”[3] (நற்., பா.எ. 66)

தலைமகனுடன் தலைவி உடன்போனவழிச் செவிலி ஆற்றாமை கண்ட நற்றாய், மிக்க துயரம் காரணமாகத் தோன்றும் அவலத்தால் உயிர் நீங்குமாறு மெலிந்த பாழ்படும் என்னெஞ்சம், தன்னை நினைத்தலால் வருத்தம் மிக்குக் கலக்க மெய்த, நம்மாற் காதலிக்கப்பட்ட அவள், நாடுகள் பல இடையிட்ட இடத்தினையுடைய காடுகளைக் கடந்து சென்றனள். அவள்மேற் சென்ற என் காதல் துன்புறத்துவ தாயிற்று' என்று கூறுமிடத்தில் அவளின் தன்மைக்கு அஞ்சி வருந்துமிடத்து அச்சம் சுட்டப்படுகின்றது.

தலைமகளைத் தலைவன் கொண்டுதலைக் கழிந்தமை கேட்ட செவிலி புலம்பிக் பின்பு நற்றாய் 'குட்டிகளை யீன்று காட்டிற் காவல் செய்திருந்த பெண்புலி மிகவும் பசியுடையதென்று அதன் பசியைப் போக்கக் கருதி மயங்கிய மாலைப்பொழுதில் நெறியில் செல்லுபவரைக் கொல்லும் பொருட்டு ஆண்புலி அந்நெறியை நோக்கியிருக்கும் புல்லிய ஆதாரமாகிய சிறிய நெறியில் யாங்ஙனம் நடக்கவல்லுநளோ' என்று கூறுகிறாள். இதனை,

“*நின்ற வேனில் உலந்த காந்தள்*

*அழல் அவிர் நீள் இடை நிழலிடம் பெறாஅது*

*ஈன்று கான் முடிந்த பிணவுப் பசி கூர்ந்தேன*

*மான்ற மாலை வழங்குநர்ச் செக்கிய*

*புலி பார்த்து உறையும் புல் அதர்ச் சிறு நெறி*

*யாங்கு வல்லுநள் கொல்தானே – யான் தன்*

*வனைந்து ஏந்து இள முலை நோவகோல்! என*

*நினைந்து, கைஞ்நெகிழ்ந்த அனைத்தற்குத் தான் தன்*

*பேர் மேர் மழைக் கண் ஈரிய இலுழ*

*வெய்ய உயிர்க்கும் சாயல்*

*மை ஈர் ஏதி பெரு மடத்தகையே?*”[4] (நற்., பா.எ. 29)

என்னும் அகநானூற்றுப்பாடல் மூலம் விலங்குகள்வழி அச்சம் வருவதை அறிய முடிகிறது. இவற்றில் நற்றாய் ‘தலைவி சென்ற கொடிய பாலையின் அச்சத் தன்மைக்கிரங்கி கூறுமிடத்து அச்சம் வெளிப்படுகின்றது.

புணர்ந்துடன் போன தலைமகட்கு இரங்கி நற்றாய். அயலாரிடத்து, ‘வெம்மையுற்றுச் செல்லுதலையுடைய ஞாயிறு மலை பிளக்கக் காய்ந்திடலால் கடந்து செல்லும் பறவைகள் இணைதற்கு ஏதுவாகிய வெப்பமிக்க நீண்டவிடத்து உளிபோலும் வாயையுடைய கொடிய பரற்கற்கள் உள்ள காட்டில் வலிய களிற்றினை யொத்த காளையுடன் என் மகள் உடன் போனதற்கு வருந்தினேன். அவள் பிரிவு உலைக் கண் ஊதும் துருத்திபோல மெய்துயிர்த்து உள் மெலிந்து தீயில் வேவது போலும் வெவ்விய நெஞ்சமொடு கண் துயிலேனாய் வாய் வெருவிப் புலம்ப..... இவ்வுலகத்து ஆசையை விரும்பி என்னை விட்டுப் பிரிந்து போதலைச் செய்யாத என் உயிரோடு நொந்ததை,

“.....................................................................

***கரிகால் வளவனோடு வெண்ணிப் பறந்தலைப்***
***பொருது புண் நாணிய சேரலாதன்***
***அழி கள மருங்கின் வாள் வடக்கிருந்தென,***
***இன்னா இன் உணர கேட்ட சான்றோர்***
***அரும் பெறல் உலகத்து அவனோடு செலீஇயர்***
***பெரும்பிறிது ஆகியாங்கு, பிரிந்து இவண்***
***காதல் வேண்டி, ஏற் துறந்து***
***போதல்செல்லா என் உயிரோடு புலந்தே***”[5] (அகநா., பா.எ. 55)

இப்பாடலில், நற்றாய் தலைவியின் உடன்போன தன்மைக்கு அஞ்சி வருந்துமிடத்து அச்சம் வெளிப்படுகின்றது.

### செவிலி கூற்று

தொல்காப்பியர் ‘ஊர்ச்சேரியின் கண்ணும், ஊரினின்றும் நீங்கிய சுரத்தின் கண்ணும் தாமே செல்லும் தாயரும் உளர்’ தாமே செல்லும்

தாயார் என்பதனால் செவிலியாகும். ‘உடன்போக்கின் தலைமகளின் பிரிவுக்கு ஆற்றாத செவிலியும் இப்புலம்பலுக்கு உரியவள்’ தலைவனுடன் உடன்சென்ற தலைவியின் பிரிவுக்கு ஆற்றாது செவிலி புலம்புமிடத்து அச்சம் வெளிப்படுகின்றது.

மகட்போக்கிய செவிலித்தாய், ‘பாலையும் உண்ணாளாகி பந்தையும் விரும்பாளாகி முன்னர்த் தன்னோடு விளையாடும் மகளிர் கூட்டத்தோடு விளையாடிய தலைவி இப்பொழுது உலர்ந்த கிளைகளையுடைய ஓமை மரத்தினைக் குத்திய உயர்ந்த கொம்பையுடைய ஆண் யானை வேனிலின் தன்மையையுடைய மலையினிடத்துள்ள.......... மூங்கில் உலர்ந்த செல்லுதற்கரிய இடத்திலே அத்தலைவனோடு செல்லுதல் எளிமையையுடையதென்று அறிந்தாளோ’ என்று கூறுவதை,

“***பாலும் உண்ணாள், பந்துடன் மேவாள்,***
***விளையாடு ஆயமொடு அயர்வோள் இனியே,***
***எளிது என வுணர்ந்தனள் கொல்லோ முளிசினை***
***ஓமைக் குத்திய உயர்கோட்டு ஒருத்தல்***
***வேனிற் குன்றத்து வெவ் அரைக் கவாஅன்***
***மழைமுழங்கு கடுங்குரல் ஓர்க்கும்***
***கழைதிரங்கு ஆர்இடை அவனொடு செலவே***”[6] (குறுந்., பா.எ. 396)

என்ற பாடல் குறிப்பிடும். இப்பாடலில், ‘பசியும், தாகமும் ஒருங்கே நீக்க வல்ல பாலினைத் தனித்து உண்ணமாட்டாள், பந்தினைத் தனித்து விளையாடமாட்டாள். பாலுண்டலையும், பந்து விளையாடலையும் தன்னோடு கூடி விளையாடும் ஆய மகளிருடன் செய்யாமல், காய்ந்த கிளைகளையுடைய ஓமை மரத்தினைத் தன்னுடைய உயர்ந்த கொம்பினால் குத்திய ஆண்யானை, வேனிலின் தன்மையுடைய மலையின் வெம்மையையுடைய பாறைகளின் பக்க மலைக்கண், மேகங்கள் முழங்கும் கடிய இடியோசையை உற்றுக் கேட்டு உயிர் தரிக்கின்ற, மூங்கில்கள் வாடி உலரும் கடத்தற்கு அரிய வழியில், அவனுடன் செல்லுதல், இப்பொழுது தனக்கு எளிய செயல் என்று துணிந்தனளோ?’ என்ற உணர்வு விளக்கம் அச்சமாகிறது. இதில் செவிலி

தலைவியின் இளமைத் தன்மைக்கும் பாலையின் வெம்மைக்கும் அஞ்சி வருந்துமிடத்து அச்சத்தை உணர்த்துகின்றது.

தலைவனுடன் தலைவி சென்றபின் செவிலித்தாய் அவளது இளமைத் தன்மைக்கும், பாலையின் வெம்மைக்கு வருந்துவதை,

"*நிழல் ஆன்று அவிந்த நீர்இல் ஆர்இடைக்*
*கழலோன் காப்பக் கடுகுபு போகி*
*அறுசுனை மருங்கின் மறுகுபு வெந்த*
*வெவ்வெவ் கலுழி தவ்வெனக் குடிக்கிய*
*யாங்கு வல்லுநள் கொல் தானே – ஏந்திய*
*செம்பொற் புனைகவத்து அம்பொரிக் கலந்த*
*பாலும் பலஎன உண்ணாள்*
*கோல்அமைக் குறுந்தொடித்தளிர் அன்னோளே!*"[7] (குறுந்., பா.எ. 356)

என்ற பாடலடிகள் சுட்டும். இவற்றில், 'நிழல் செய்யக்கூடிய பொருள்கள் ஏதும் இல்லையாய்ப் போகிய நீரில்லாத, கடத்தற்கு அரிய நிலத்தில் கழல் அணிந்த தன்னுடைய காதலன் காத்து, உடன்வருதலால் அச்சமின்றி அவனுக்குத் தக்கவாறு விரைந்து சென்ற, நீர் அற்ற சுனையின் பக்கத்தில், நன்னீர் காணாது மயங்கி நின்று வெயிலால் வெந்த வெறுத்தற்குரிய நீரினை விரைந்து குடிப்பதற்கு எங்ஙனம் ஒருவர் கற்பியாமல் வல்லவள் ஆனாளோ? என் மகள் செம்பொன்னால் புனைந்து செய்யப்பட்ட உண் கலத்தில் தாயர் ஏந்தி நின்ற அழகிய பொரிகள் கலந்த பாலினையும் மிக்கது என உண்ணாதவள், திரட்சி அமைந்த குறிய தொடியினை அணிந்தவள் போன்ற மெல்லியள்.

'மலையிடத்தே பொருந்தி சிறுகுடியையுடைய கானவன் மகளாகிய என் மகள் தனது குற்றத்தினை நான் அறிந்தமைக்கு அஞ்சி மிக்க ஒளி பொருந்திய எங்கள் நல்ல இல்லின் அரிய காவலைக் கடந்து வலையினை முன்னர்க் காணும் பெண் மான் அதனை தப்பியோடுமாறு சென்று தோற்றல் இல்லாத வெள்ளிய வேலினையுடைய ஒரு தலைவனொடு இச்சுரத்தே இந்நெறியில் சென்றனள். அவர்கள் பின் சென்றும் செய்யும் போரினைப்போலப் பின்னே தொடர்ந்து

செல்லுமிடங்களில் எல்லாம் ஓடி அவள் மேனியை அணுகப் பெற்றிலேன்' என்று இடைச்சுரத்தினிடையே சென்ற செவிலி புலம்புமிடத்து அச்சத்தைச் சுட்டுகின்றது. இதனை,

"*..................................................*

***ஒண் சுடர் நல் இல் அருங்கடி நீவி***

***தன் சிதைவு அஞ்சி இன்சிலை***

*..................................................*

***தொலைவு இல் வெள்வேல் விடலையோடு என் மகள்***

***இச்சுரம் படர்தந்ததோளே, ஆயிடை***"[8] (அகநா., பா.எ. 7)

என்ற பாடல் புலப்படுத்துகிறது.

**கண்டோர் கூற்று**

"***காலமும், நெறியும் அச்சம் வருமாறு தோன்ற வழுவுதலினாகிய குற்றம் காட்டலும், ஊரது அணிமையும் செல்லும் தேயத்தின் சேய்மையும் ஆர் நெஞ்சமொடு செப்பிய திறத்தினும், புணர்ந்து செல்கின்றோர் மாட்டு விரும்பின நெஞ்சத்தோடு மனம் அழிந்து எதிர்மொழி கூற விடுத்தற்கண்ணும், ஆண்டுப் பின்சென்ற அச்செவிலித்தாயது நிமையைக் கண்டு போகலாம் தடுத்தற்கண்ணும், போக விடுத்தற் கண்ணும், சேமைக்கண் அகன்தேர் செல்லுதற்கண்ணும், வரவின்கண்ணும் இவ்விடங்களில் எல்லாம் கண்டோர் செல்லுதல் வழக்கிற் காணப்பட்டது***"[9] என்பர் தொல்காப்பியர். உடன்போக்கில் தலைவனும் தலைவியும் செல்லும் வழியின் தன்மைக்கு ஆற்றாது கண்டோர் புலம்புமிடத்து அச்சம் வெளிப்படுகின்றது. இவற்றில் தலைவனும், தலைவியும் கொடிய சுரத்தில் செல்லுவதை கண்டு குறிப்பாக அஞ்சி கண்டோர் கூறுமிடத்து அச்சம் சுட்டப்படுகின்றது.

உடன்போக்கின்போது, கண்டோர், 'சிறிய பிடி போன்றவளுக்குத் துணையாகியவனே சூரியனும் விளக்கம் இலனானான் வணிகர் கூட்டம் வந்து அடைந்ததாக பகைப்புலத்தே கொள்ளும் பகைமையைப் போல வளையை பணிந்து நெடிய வேலை ஏந்தி காவற்காட்டத்தே வந்தும்

பெயரும் கண்ணுமையென்னும் வாத்தியத்தினுடைய முழக்கத்தினது ஒலியையும் கேள் ஆதலின் நீவிருவரும் போதலை ஒழிமின் என்பதை,

"***எல்லு மெல்லின்று; பாடுங் கேளாய் –***

***செல்லாதீமோ சிறுபிடி துணையே –***

***வேற்றுமுனை வெம்மையிற் சாத்துவந்து இறுத்தென,***

***வளையணி நெடுவேல் ஏந்தி***

***மிளைவந்து பெயரும் தண்ணுமைக் குரலே***"[10] (குறுந்., பா.எ. 390)

என்ற இக்குறுந்தொகைப் பாடல் சுட்டும். இப்பாடலில், 'வேறுபட்ட பகைப்புலத்தில் உள்ளவர்கள், தமக்கு இயல்பாகிய கொடுமையால், வணிகர்திரள் இடைவழியில் வந்து தங்கியதாக எண்ணி, வளையம் இடப்பட்ட நெடிய வேலைத் தாங்கி, எம் ஊர்க் காவற்காடு வரை வந்து, அவர்களைக் காணாது மீண்டு செல்வதால், அவர்கள் எழுப்பும் தண்ணுமையின் ஒலியைக் கேளாய். பகற்பொழுது கழிந்து இருள் சூழ்வதாயிற்று. இளம்பிடி போன்ற தலைவியை உடன் அழைத்துச் செல்லற்க' என்பது அச்சமாகிறது. இதில் தலைவனுக்கும், தலைவிக்கும் ஆறலை கள்வரால் ஏதம் நிகழும் என்று குறிப்பாக அஞ்சி கண்டோர் கூறுமிடத்து அச்சம் பெறப்படுகின்றது.

உடன்போக்கின் போது, கண்டோர் அவள் தாயிடம் கூறுவதனை,

"***புன்கண் யானையொடு புலி வழங்கு அத்தம்***

***நயந்த காதலற் புணர்ந்து சென்றனளே –***

***நெடுஞ் சுவர் நல் இல் மருண்ட***

***இடும்பை உறுவி நின் கடுஞ் சூல் மகளே***"[11] (ஐங்., பா.எ. 386)

என்னும் பாடல் சுட்டும். இப்பாடலில், 'நெடிய சுவர்களைக் கொண்ட அழகிய இல்லத்தில் மகளை இழந்தமையால் மதி மருண்டு அதனால் துன்பம் மிகுதியும் கொண்டு உறைபவளே! நின் முதற்சூலில் தோன்றிய நின் மகள், தன்னை விரும்பிய காதலனுடன் புணர்ந்து துன்பத்தையுடைய யானைகளோடு புலிகளும் சுற்றித் திரிதற்கு இடனான சுரநெறியில் சென்றனள். இதனை நீ அறிக என்று கூறுகின்றனர்.

இதில் தலைவன் தலைவியை யானைகளும், புலிகளும் வாழும் பகுதியில் அழைத்துச் சென்றமையால் அச்சம் ஏற்படுகிறது.

"***நெருப்பு அவிர் கனலி உருப்புச்சினம் தணியக்***
***கருங்கால் யாத்து வரிநிழல் இரீஇ,***
***சிறு வரை இறப்பின், காண்குவை – நெறிதொடிப்***
***பொன் ஏர் மேனி மடந்தையொடு***
***வென்வேல் விடலை முன்னிய சுரனே***"[12] (ஐங்., பா.எ. 388)

என வரும் இப்பாடல், 'நெருக்கமாக அணிந்த தொடியும் பொன்போற் பொலியும் அழகிய மேனியையும் உடைய மடந்தையுடன் வெற்றி விளைவிக்கும் வேலையேந்திய விலையாகிய தலைவன் முன்னிச் சென்ற சுர வழியை, நெருப்பு விளங்கும் ஞாயிற்றின் கொடிய வெம்மை தணியும் அளவும், கரிய அடிப்பாகத்தைக் கொண்ட யா மரத்தின் செறிவில்லாத குறை நிகலின்கண் தங்கியிருந்து, சிறு மலைகளைக் கடந்து சென்றாயெனில் காண்பாயாக' என்று தலைவியின் தன்மைக்கு அஞ்சி வருந்தி கூறுகின்றாள்.

## கற்புப் பாடல்களில் அச்சம்

### பாணன் → தலைவனிடம் கூற்று

தலைமகன் வினைமுடியாமையின் பாசறையில் தங்கினான். தலைவி ஆற்றாது வருந்தினாள். பாணனைத் தூதனுப்பினாள். அவன் பாசறைக்கு ஏகித் தலைவனிடம் இங்ஙனம் வெறுத்துப் பேசியதாகின்ற,

"***நினக்கு யாம் பாணரேம் அல்லேம்; எமக்கு***
***நீயும் குரிசிலை அல்லை மாதோ –***
***நின் வெம் காதலி தன் மனைப் புலம்பி***
***ஈர் இதழ் உண்கண் உகுத்த***
***பூசல் கேட்டும் அருளா தோயே!***"[13] (ஐங்., பா.எ. 480)

என்னும் இப்பாடலில், 'தலைவ! நினக்கு இனி யாம் பாணராக இருத்தலை விரும்பேம். நின்னையும் யாம் எம் தலைவனாகக் கருதியொழுகேம். ஏனெனில், நின்பால் பெருங்காதல் கொண்ட நின் மனையாள் தன் மனையில் தனித்துக் கிடந்து அதன் காரணமாகத் தன் ஈரிய இதழ்களைக்

கொண்ட மையுண்ட கண்கள் உகுத்த கண்ணீரைப் பற்றிக் கேட்டும் நீ அருள்செய்யாய் ஆதலின்' என்று கூறுவதிலிருந்து தலைவியை விட்டுப் பிரிந்த உன்னால் அவளுக்கு துன்பம் என்று பாணன் கூறும்போது சமூகத்தில் தலைவிக்குத் துன்பம் நேரிடும் என்பதை எண்ணம்வழி உணர முடிகிறது. தலைவன் பாசறையின்கண் பிரிந்திருக்கும் பிரிவால் இனிவாரான் எனத் தலைவி அஞ்சி துன்புறுகிறாள் என்று பாணன் கூறுவதிலிருந்து அச்சம் மெய்ப்பாடு தோன்றுகிறது.

**பரத்தை → தலைவனிடம் கூற்று**

காதற்பரத்தை தலைவனிடம் கூறுமிடத்து அச்சப்படும் உணர்வைப் பாடல் புலப்படுத்துகிறது.

"***செல்லல், மகிழ்ந! நிற் செய்கடன் உடையென்மன் –***
***கல்லா யானை கடிபுனல் கற்றென***
***மலிபுனல் பொருத மருதுஓங்கு படப்பை,***
***ஒலிகதிர்க் கழனி, கழாஅர் முன்துறை,***
***கலிகொள் சுற்றமொடு கரிகால் காண,***
***நண்பதம் கொண்டு, தவிர்ந்த இன்இசை***
***ஒண்பொறிப் புனைகழல் சேவடிப் புரள,***
***கருங்கச்சு யாத்த காண்பின் அவ்வயிற்று,***
***இரும்பொலம் பாண்டில், மணியொடு தேளிர்ப்ப,***
***புனல்நயந்து ஆடும அத்தி அணிநயந்து,***
***காவிரி கொண்டுஒளித் தாங்கும் அன்னோ!***
***நும்வயின் புலத்தல் செல்லேம், எம்வயின்***
***பசந்தன்று, காண்டிசின் நுதலே; அசும்பின்***
***அம்தூம்பு வள்ளை அழற்கொடி மயக்கி,***
***வண்தேட்டு நெல்லின் வாங்குபீள் விரிய,***
***துய்த்தலை முடங்குஇறாத் தெறிக்கும், பொற்புடைக்***
***குரங்குஉளைப் புரவிக் குட்டுவன்***
***மரந்தை அன்னஎன் நலம்தந்து சென்மே!***"[14] (அகநா., பா.எ. 376)

என்னும் இப்பாடலில், ‘தலைவனே! செல்லாதே! பாகனால் பழக்கப்படாத யானையானது காவலையுடைய நீரில் இறங்கி விளையாடியது. அதனால் அலைபாய்ந்து மேலெழுந்த மிகுந்த நீர் மோதிய மருத மரங்கள் உயர்ந்து வளர்ந்த தோட்டத்தினையும், தழைத்த கதிர்கள் கொண்ட வயல்களையும் உடைய கழார் என்னும் ஊரின் முன்பு கரிகால்வளவன் ஆரவாரம் மிக்க தன் சுற்றத்துடன் புனல் விழாவினைக் கண்டு மகிழ்ந்தவண்ணம் இருந்தான்.

அப்போது, அத்தி என்பான் சிவந்த காலடியில் கழலினையும், வயிற்றில் மணியினையும் கட்டிக்கொண்டு, கஞ்சதாளம் ஒலிக்கப் புனலின்கண் விரும்பி ஆடினான்; அவனது அழகினை விரும்பிய காவிரிப் பெண்ணாள் அவனை வெளவிக்கொண்டு கடலிற்சென்று மறைந்து கொண்டாள்; அதுபோன்று சேரிப்பரத்தை நின்னைக் கவர்ந்து சென்றாள். அதுகொண்டு யாம் நும்மை வெறுத்தோம் இல்லை. அப்படியிருந்தும் எம் நெற்றியில் பசலை படர்ந்தது காண்பாயாக.

சேற்றிலுள்ள அழகியத் துளையையுடைய வள்ளைக் கொடி பின்னமாறும், வளைந்த நெற்கதிர் விரியுமாறும் துய்யினைத் தலையில் உடைய இறால் மீன் பாய்ந்து திரிதற்கு இடனான அழகிய வளைந்த பிடரியினைக் கொண்ட குதிரையையுடைய குட்டுவனது மரந்தை என்னும் ஊர் போன்ற எம் அழகினை எம்மிடத்தே தந்துவிட்டு நீவிர் செல்வீராக!’ என்று கூறுவதிலிருந்து பசலை நோய்க்கு வருத்தப்படுகின்ற அச்சம் தோன்றுகிறது.

காமக்கிழத்தி தலைவியிடம், தலைவனுடன் ஊடல் கொண்ட காமக்கிழத்தி அவனுக்குச் சொல்லிய,

“...............................................................

***நெடுநீர்க் காவிரி கொண்டுஒளித் தாங்கு, நின்***
***ஆரியர் அலறத் தாக்கி, பேர்இசைத்***
***தொன்றுமுதிர் வடவரை வணங்குவில் பொறித்து,***

*வெஞ்சின வேந்தரைப் பிணித்தோன்*

*வஞ்சி அன்ன, என் நலம்தந்து சென்மே*"[15]

(அகநா., பா.எ. 396: 14–18)

என்னும் இப்பாடலில், 'தலைவனே! யான் நின்னைப் பற்றிக்கொண்டேன். என்னை விடுத்துச் செல்லாதே. கொடியாற் பொலிந்த தேரினையும், பொன்னாலான பூண்களையம் உடைய நன்னன் என்பான் புன்னாடு என்னும் நாட்டில் உள்ளோரைச் சினந்து எழுந்தான். அதனை அறிந்த ஆய் எயினன் என்பான், யாழின் இசை ஒலிக்கும் தெருக்களையுடைய பாழி என்னும் நகரிடத்தே எழுந்து நின்று புன்னாட்டு மக்களை நோக்கி, 'அஞ்சாதீர்' என்று கூறினான். கூறிய அவன், தான் கூறிய சொற் பிழையாது நன்னனின் நண்பனாகிய மிஞிலி என்பானோடு போர் செய்து அயலார் பொருட்டுத் தன் உயிரையும் தந்தான்.

ஆனால் நீயோ, வெல்லுதற்கரிய தெய்வத்தின் முன்னின்று என்னைத் தெளிவித்தாய். என் முன்கையைப் பற்றி, 'இனி நின்னிற் பிரியேன்' என்று சூள் உரைத்தாய். இன்றோ, நீ சொல்லிய சொல்லையும் மீறினாய். என் நெஞ்சின்கண் விரும்பிப் பொருந்திய நீயோ நின் மார்பினை எனக்குத் தாராது அயலான்போல் ஆகிவிட்டாய்.

ஆதிமந்தி என்பாள் நீர் சொரியும் கண்களை உடையவளாய் யாவற்றையும் வெறுத்திருக்க, காவிரிப் பெண்ணாள் அவனது ஆடல் அழகில் ஈடுபட்டு அவனை விரும்பிக் கவர்ந்து கொண்டுபோய் ஒளித்தாற்போன்று, நின் மனையாளும் நின்னைக் கவர்ந்துகொண்டு போய்த் தன்பால் இருத்தி வைத்துக்கொள்வாள் என யான் பெரிதும் அஞ்சுகின்றேன்' என்று கூறுவதில் அச்ச உணர்த்தப்படுகிறது. மேலும், பரத்தை வீட்டிலிருந்து திரும்பி வந்த தலைவனது வருகை கண்டு காமக்கிழத்தி ஊடல் கொண்டாள். அவள் ஊடியவாறு கண்டு சென்று சார்ந்தனன் தலைவன். அவனுடன் அவள் ஊடல் தீர்கின்றாள். இதனை,

"*விரி கதிர் மண்டிலம் வியல் விசும்பு ஊர் தர*

*புரி தலை தளை அவிழ்ந்த பூ அங்கண் புணர்ந்து ஆடி,*

*வரி வண்டு வாய்சூழும் வளம்கெழு பொய்கையுள்*
*துனி சிறந்து இழிதரும் கண்ணின் நீர் அறல் வார,*
*இனிது அமர் காதலன் இறைஞ்சித்தன் அடி சேர்பு,*

*நனிவிரைந்து அளித்தலின், நகுபவள் முகம்போல,*
*பனி ஒருதிறம் வார, பாசடைத் தாமரைத்*
*தனிமலர் தளைவிடூஉம் தண்துறை நல் ஊர!*

*'ஒருநீ பிறர் இல்லை, அவன் பெண்டிர்' என உரைத்து,*
*தேரொடும் தேற்றிய பாகன் வந்தீபான் கொல்*
*ஓர் இல் தான் கொணர்ந்து உய்த்தார் புலவிபுள் பொறித்த புண்*
*பாரித்துப் புணர்ந்து நின் பரத்தமை காணிய?*

*'மடுத்து அவன் புகுவழி மறையேன்' என்று யாழொடும்*
*எடுத்துச் சூள்பல உற்ற பாணன் வந்தீயான் கொல்*
*அடுத்துத் தன் பொய் உண்பார்ப் புணர்ந்த நின் எருத்தின் கண்*
*எடுத்துக் கொள்வது போலும் தொடி வடுக் காணிய?*

*'தணந்தனை' எனக்கேட்டு, தவறு ஓராது, எமக்கு நின்*
*குணங்களைப் பாராட்டும் தோழன் வந்தீபான்கொல்*
*கணங்குழை நல்லவர் கதுப்பு அறல் அணைத் துஞ்சி,*
*அணங்கு போல் கமழும் நின் அலர் மார்பு காணிய?*

*என்று நின்*

*தீரா முயக்கம் பெறுநர்ப் புலப்பவர்*
*பார்? – நீ வருநாள் போல் அமைகுவம் பாம்; புக்கீமோ!*
*மாரிக்கு அவாவுற்றுப் பீள்வாடும் நெல்லிற்கு, ஆங்கு,*
*ஆராத் துவலை அளித்தது போலும் நீ*
*ஓர் பாட்டு ஒரு கால் வரவு*"[16] (கலித்., பா.எ. 71)

என்னும் இப்பாடலில், 'விரிந்த கதிர்களை உடைய இளஞாயிறு, அகன்ற விசும்பின்கண் தன் கதிர்களைப் பரப்பி வந்தனன். விடியற்காலத்தே,

முறுக்குண்ட தலைகளை உடைய முகைகள் முறுக்கவிழ்ந்து மலரத்தொடங்கின. நெகிழ்ந்த செவ்விப்பூவிடத்தே அழகிய தேனை வரியினை உடைய வண்டுகள் அனைத்தும் கூடி நுகர்ந்தன. அதனினும் அமையாது, பின்னும் நுகர்தற்கு அவ்விடத்தைச் சூழ்ந்து திரிந்தன. அளவிறந்த ஊடல் கொண்டாள் ஒருத்தியின் கண்ணின் நீர்மிக்கு வீழ்கின்றது. காமத்தீயால் கண்ணின் நிர் சுவறி, அற்று அற்று வீழ்ந்தது. அவ்வருத்தத்தைக் கண்டு, இனிதாக அமர்ந்த கணவன் அவளது அடியைச் சேர்ந்து இறைஞ்சி நின்றனன். மிக விரைந்து அளித்ததாலே, சிறிது முகம் மகிழா நின்றாள். செல்வம் மிக்க அப்பொய்கை இடத்தே, பசிய இலைகளுக்கு இடையே நின்ற தாமரையினது தனித்த ஒரு மலரில் கதிர் ஒளி படாததால், வருத்தத்தைச் செய்யும் பனி ஒரு கூற்றிலே வடியாநின்றது. கதிரவன் ஒளிக்கதிர் அதன் மேல் படவும் அத்தனிமலர் ஊடல் தீர்ந்தாள் முகம் போல அலர்ந்தது. அத்தகைய குளிர்ந்த துறைகள் பலவும் உடைய வளமுள்ள நல்ல ஊரனே!

'உன் ஒருத்தியேயன்றி அவனுக்கு உரிய பெண்டிர் பிறர் இல்லை. அதனை ஓர்ந்து பார்' எனக் கூறி, தனக்குத் தெய்வமாகிய தேரைத் தொட்டுச் சூள் உரைத்தனன் நின்பாகன். அவன் இப்பொழுது ஈண்டு வந்தானில்லையே? தான் கொண்டு வந்த பரத்தையர் எல்லோரும் வருதற்கு அமைந்ததோர் இல்லிலே விட்டனன். விடப்பெற்ற பரத்தையர் புலவியான் செய்த நகக்குறி, பற்குறி முதலிய வடுக்கள், நாணமின்மையான், இவை கிடக்க வேண்டுமென்று பரப்பி வைத்தலினாலே, அவை மறையாமல் விளங்கிக் கிடந்த நின் பரத்தமையைக் காண்பதற்கு அவன் இங்கில்லையே என்றாள்.

உன்னைவிட்டு அவன் பரத்தையர் எவரிடத்தும் செல்வதில்லை. சென்றால் அவன் போகும் இடத்தை உனக்குச் சொல்லாது மறையேன் என்று கூறி, யாழாகிய தெய்வத்தோடும் பல தெய்வங்களையும் கூட்டிப் பல சூளும் சூளுற்றனன் பாணன். அப்பாணன் இப்பொழுது ஈண்டு வந்தானில்லையே? அவன் கூறியது முழுதும் பொய்யே. அப்பொய்யைப்

பலகாலும் அனுபவித்தவர்களைக் கூடின, நின் கழுத்தின் கண்ணே எடுத்துக் கொள்ளலாம்படி, பரத்தையர் தழுவின வளைத்தழும்புகள் மறையாமற் கிடக்கின்றன. அவற்றைக் காண்பதற்கு அப்பாணன் இங்கில்லையே என்றாள்.

நின் தீய குணங்களை யான் உணர்ந்துள்ளேன். நீ எங்களைப் பிரிந்தாய் என்று பலர் கூறக் கேட்டிருந்தும் நின் தவறுகளை ஓராதே, நின் நற்குணங்களை, உளவாகக் கொண்டு பாராட்டும் தோழன் ஈண்டு வந்தானில்லையே? திரண்ட குழையினை அணிந்த மகளிருடைய புணர்ச்சியாற் குலைந்து வீழ்ந்த, அறலையுடைய கூந்தலாகிய அணையிலே தூங்குகையில் அணங்குபோல மணம் வீசுகின்ற நின் அலர்ந்த மார்பைக் காணுதற்கு நின் தோழன் இங்கில்லையே என்றாள்.

இங்ஙனம் நின் இடைவிடாத தழுவுதலைப் பெற்று இன்புறும் பரத்தையரை வெறுப்பார் யார்? ஓர் யாண்டுக்கு ஒரு முறை வருகின்ற நின் வரவு பெருமழைக்கு விரும்பி வாடிய நெற்பயிருக்குச் சிறு தூறல்கள் போன்றது என்ன பயனைத்தரும்? வெப்பத்தைக் கிளப்பி விட்டு அதிக துயரத்தைத் தானே தரும். நின் வரவும் அதிக வருத்தத்தைத் தருவதாகும். ஆதலான், நீ முழுதும் மனந்திருந்தி வரும் வரையும் யாம் ஆற்றியிருப்பேம். நீ, அவர் வருந்தா வண்ணம் அவர் மனைக்கண் செல்வாயாக' என்பதிலிருந்து அச்சம் உணரப்படுகிறது. தெய்வத்தின் முன் சூளுரைக்கப்பட்ட சூழலை முன்னிறுத்திக் கூறுவதால் 'தெய்வ அச்சம்' வெளிப்படுவதால் அறியமுடிகிறது. இதேபோல்,

"***கண்டேன், நின் மாயம் களவு ஆதல்; பொய்ந் நகா,***
***மண்டாத சொல்லித் தொடாஅல்; தொடீஇய நின்***
***பெண்டிர் உளர் மன்னோ, ஈங்கு?***

***தலைவன்***

***ஒண்தொடி! நீ காண்பது எவனா தவறு***

***தலைவி***

***கண்டது நோயும் வடுவும் கரந்து, மகிழ் செருக்கி,***

*பாடு பெயல் நின்ற பானாள் இரவில்*
*தொடி பொலி தோளும், முலையும், கதுப்பும்,*
*வடிவு ஆர் குழையும், இழையும், பொறையா*
*ஒடிவது போலும் நுகப்போடு, அடி தளரா,*
*ஆராக் கவவின் ஒருத்தி வந்து — அல்கல்தன்*

*சீர் ஆர் ஞெகிழம் சிலம்ப, சிவந்து, நின்*
*போர் ஆர் கதவம் மிதித்தது அமையுமோ?*
*ஆய்இழை ஆர்க்கும் ஒலிகேளா, அவ் எதிர்*
*தாழாது எழுந்து நீ சென்றது அமையுமோ?*
*மாறாள் சினைஇ அவள் ஆங்கே, நின் மார்பில்*
*நாறு இணர்ப் பைந்தார் பரிந்தது அமையுமோ?*
*'தேறு நீ; தீயேன் அலேன்' என்று மற்று அவள்*
*சீறடி தோயா இறுத்தது அமையுமோ?*
*கூறு இனி; காபேமோ, பாம்?*

*தலைவன்*

*தேறின், பிறவும் தவறு இலேன் பான்;*
*அல்கல் கனவுக் கொல் நீ கண்டது?*

*தலைவி*

*'கனைபெயல் தண்துளி வீசும் பொழுதில் குறிவந்தாட்*
*கண்ட கனவு' என, காணாது, மறு உற்று –*
*பண்டைய அல்ல, நின் பொய்ச் சூள், நினக்கு; எல்லா!*
*நின்றாய்; நின் புக்கில் பல*

*தலைவன்*

*மென் தோளாய்! நல்கு, நின் நல் எழில்; உண்கு,*

*தலைவி*

*ஏடா, குறை உற்று நீ எம் உரையல்! நின் – தீமை*
*பொறை ஆற்றேம் என்றல் பெறுதுமோ, பாழ*
*நிறை ஆற்றா நெஞ்சு உடையேம்?*"[17] (கலித்., பா.எ. 90)

எனும் இப்பாடலில் ‘நின் பரத்தமை இக்காலத்துக் களவொழுக்கத்தே ஆதலைக் கண்டேன்; பொய்யாக நீ ஏதும் சிரிக்க வேண்டாம்; விரும்பாதனவற்றைச் சொல்லி, இங்கு என்னைத் தொடவும் செய்யாதே; நீ தொட்டு இன்புறுவதற்குரிய பெண்டிர் இவ்விடத்து இருப்பார் உளரோ? இல்லையே’ என்றாள்.

**தலைவன்**

அதுகேட்ட தலைவன், ஒள்ளிய நொடியினை உடையாய், நீ என்னுடைய தவறாகக் கண்டது எவன் என்றான்.

**காமக்கிழத்தி**

யான் கண்டது; கேள்; உன்னால் நான் பெற்ற நோயையும் ஊரிலே எழுந்த அலரையும் பிறர் அறியாமல் மறைத்துக் கொண்டேன். பருவமழை போல் வந்து நீ அருள, அதனால் மகிழ்வு மிகுதி உடையவளாக இருந்தேன்; ஒருநாளின் பாதியாகிய இராப் பொழுதிலே தொடி பொலிவு பெற்ற தோளும், முலையும், கூந்தலும், மகர மீனின் வடிவு நிறைந்த குழையும், ஏனை அணிகலன்களும் தனக்குச் சுமையாக ஒடிந்து விழும் வஞ்சிக் கொடி போன்ற நுண்ணிய இடையும் உடைய ஒருத்தி நின் முயக்கத்தாலே அடி தளர்ந்து இங்கே வந்தாள்; தலைமை சிறந்த சிலம்பு ஒலிப்ப, சினந்து நின்னுடைய வீட்டுப் பலகை பொருந்திய பெருங்கதவை மிதித்தாள், அது பொருந்துமோ?

அந்த ஆராய்ந்த இழையினை உடையவள், ஆர வாரிக்கும் ஆரவாரத்தைக் கேட்டு, பெறாத நிலையினால் எழுந்திருந்து நீட்டியாது நீ சென்றாய். நீ எழுந்து சென்றது தவறாதற்கு அமையுமோ? அவள் சினம் மாறாதவளாக உன்மார்பிற் கிடந்து நாறுகின்ற இழையினை உடைய செவ்வி மாலையைப் பறித்தாள்; அதுவேனும் பொருந்துமோ? அவளுடைய சிறிய அடியைச் செறிந்த யான் தீமையையுடையேன் அல்லேன், அதனை நீ தெளியென்று கூறி அவளிடத்தே தங்கினது தவறாக அமையுமே? இனிச் சொல்லுக, யாம் நின்னைச் சினவாமல் இருகக் வேண்டுமோ? என்றாள்.

**தலைவன்**

அதுகேட்ட தலைவன், எண்ணிப் பார்த்தால் யான் தவறுடையேன் அல்லேன், இரவு வேளையிலே நீ அன்று கண்டதென்ன? கனவு போல் இருந்தது என்றான்.

**காமக்கிழத்தி**

அதுகேட்ட தலைவி, செறிந்த மழை தண்ணிய துளியைப் பெய்கின்ற இராக் காலத்தே, ஒருவன் செய்த குறியிடத்தே வந்தாள். ஒருத்தியை நாள் கண்ட பின்னரும், நீ உனக்கு நிகழ்ந்த கனவு இதுவெனக் கூறினை, நீ செய்ததை நினையாதே, திருத்தி மாற்றிக் கூறுகின்றாயே? நீ உன் பழைய நிலையில் இப்போதில்லை, நீ சூளுற்ற நின்னுடைய போயயாகிற சூளுறகூ யாம் நுண்மையாகக் கண்டமையின நினக்குப் பண்டுபோல் பயன் தரும் தன்மை உடையன அல்ல, ஆதலால், ஏடா நீ போக வேண்யே வீடுகள் பலவாயிற்றே? அங்கேயே இனிப் போய்விடு என்றாள்' என்பதிலிருந்து தெய்வச் சூளுரையின்பால் அச்சம் தோன்றுவதை உணரமுடிகிறது.

**பரத்தை → தோழியிடம் கூற்று**

தலைவன் தன்னைப் பிரிந்து தலைவி பால் மீண்டும் 'இனிப் பிரியேன்' என உறுதிமொழிகள் பலவும் கூறித் தேற்றினான் என்பது கேட்ட காதற் பரத்தை, தலைவியின் தோழியர் கேட்கும் வண்ணம் அவன் சூள்பொய்க்கும் இயல்பினன் என்பதுபடத் தன் தோழிக்குச் சொல்லியதாகின்ற,

"***அம்ம வாழி, தோழி! மகிழ்நன்***
***நயந்தோர் உண்கண் பயந்து, பனி மல்க***
***வல்லன் வல்லன் பொய்த்தல்;***
***தேற்றான், உற்ற சூள் வாய்த்தல்லே***"[18] (ஐங்., பா.எ. 37)

இப்பாடலில், 'தோழியே, நீ வாழ்க! யான் கூறுவதனைக் கேள். மகிர்நன் தன்னை விரும்பி வாழும் பெண்டிரின் மையுண்ட கண்கள் பசப்புற்று நீர் நிறையுமாறு பொய்த்தலில் மிக மிக வல்லனாவான். அவன் தான் செய்த

சூளை மெய்ப்பித்தலை ஒரு போதும் அறியான்' என்பதலிருந்து அச்சம் மெய்ப்பாடு குறிப்பிடப்படுகிறது. காதற் பரத்தையானவள் பெறாத மகளாகப் பலர்க்கு உரிமை பூண்டாளன்றி, பரத்தையின் மகளாகப் பிறப்பினும் ஒருவன் தனக்கே உரிமை பூண்டு வாழ்பவள். தன் காதலன் தனக்குக் கூறிய உறுதிமொழிகளை மறந்து இப்பொழுது தன் மனைவிபால் மீளலின், தனக்கு நேர்ந்த துன்பத்தினைப் பட்டறிவால் அறிந்தவளாதலின் 'பொய்த்தல் வல்லன் வல்லன்' என்றாள் என்க' என்பதிலிருந்து 'சூள்' பொய்த்தலில் தெய்வத்தினால் துன்பம் உண்டாகும் என்பதைத் தலைவன் உணரவில்லை என்று அச்சம் உணர்த்தப்படுகிறது.

## தொகுப்புரை

தலைவி, தலைவனுடன் உடன்போக்கு செல்கிறாள். இதனையறிந்த நற்றாய் அவர் சென்ற வழியானது மிகத் துன்பத்தைத் தரக்கூடியது, விலங்குகளால் தீமை விளைவிக்கக்கூடும் என்று உரைக்கின்ற உணர்வில் அச்சம் உணர்த்தப்படுகிறது. தலைவி பிரிந்து சென்ற பிரிவுத்துயர் தாங்காது வருந்துகின்ற சூழல் அச்ச உணர்வை நற்றாய் கூற்றுப் பாடல் உணர்த்துகின்றது.

பாணன், உழத்தியர் போன்ற பிற மாந்தர்கள் கூறும் பாடல்களில் தலைவனைப் பிரிகின்ற தலைவிக்கு உண்டாகும் துன்ப நிலை உணர்த்துகின்ற சூழலினாலான உணர்வு அச்சம் மெய்ப்பாடாகிறது.

## குறிப்புகள்

1. அ. தட்சிணாமூர்த்தி (உ.ஆ.), ஐங்குறுநூறு மூலமும் உரையும், பக். 826–827.
2. கு.வெ. பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), நற்றிணை மூலமும் உரையும், பக். 328–329.
3. மேலது., ப. 117.
4. கு.வெ. பாலசுப்பிரமணியன் (உ.ஆ.), நற்றிணை மூலமும் உரையும், ப. 298.
5. இரா.செயபால் (உ.ஆ.), அகநானூறு மூலமும் உரையும், பக்.162–163.
6. வி. நாகராசன் (உ.ஆ.), குறுந்தொகை மூலமும் உரையும், ப. 943.
7. மேலது., ப. 851.
8. இரா.செயபால் (உ.ஆ.), அகநானூறு மூலமும் உரையும், பக். 19–20.
9. தொல்.பொருள்., நூற். 167.
10. வி. நாகராசன் (உ.ஆ.), குறுந்தொகை மூலமும் உரையும், ப. 927.
11. அ.தட்சிணாமூர்த்தி (உ.ஆ.), ஐங்குறுநூறு மூலமும் உரையும், ப.846.
12. மேலது., பக். 850–851.
13. அ.தட்சிணாமூர்த்தி (உ.ஆ.), ஐங்குறுநூறு மூலமும் உரையும், ப.1038.
14. இரா. செயபால் (உ.ஆ.), அகநானூறு மூலமும் உரையும், பக். 1092–1093.
15. மேலது., பக். 1141–1142.
16. அ. விசுவநாதன் (உ.ஆ.), கலித்தொகை மூலமும் உரையும், பக். 301–303.
17. மேலது., பக். 382–384.
18. அ.தட்சிணாமூர்த்தி (உ.ஆ.), ஐங்குறுநூறு மூலமும் உரையும், ப. 80–81.

# முடிவுரை

தொல்காப்பியர் மெய்ப்பாட்டியலில் அச்சம் மெய்ப்பாட்டு வரிசை முறையும் அவை தோன்றும் நிலைக்களன் குறித்தும் விளக்கமுற உணர்த்துகிறார். எண்வகை மெய்ப்பாடுகளுள் ஐந்தாவதாக அமைவது அச்சம் மெய்ப்பாடு எனவும் இம்மெய்ப்பாடு அணங்கே, விலங்கே, கள்வர், இறை என்ற நான்கு நிலைக்களன்கள் வழிதோன்றும் எனவும் மெய்ப்பாட்டியலுக்கு உரை எழுதிய உரையாசிரியர்கள் விளக்கம் தருகின்றனர்.

அம்பல், அலர் போன்ற சமூகக் காரணிகளால் தலைவன், தலைவி, தோழி, செவிலி, நற்றாய் போன்றோருக்கு 'அச்சம்' தோன்றுகிறது. இது தொல்காப்பியர் கூறும் நான்கு நிலைக்களன் தவிர்த்து, சமூகத்தின் காரணிகள் அடிப்படையிலும் அச்சம் உருவாகின்றவற்றை அறியமுடிகின்றது.

மெய்ப்பாட்டியல் தவிர அகத்திணையியல், களவியல், கற்பியல், பொருளியல், உவமையியல், செய்யுளியல் போன்ற இயல்களில் குறிப்பிட்ட சில நூற்பாக்களில் மட்டுமே 'அச்சம்' தொடர்பான கருத்தை உணர்த்துகிறார். இவ்வியலில் அச்சம் என்பது 'பயம்' மனதளவில் தோன்றும் மனவருத்தமுற்று தோன்றும் உணர்ச்சி என்பதை உணரமுடிகின்றது.

தொல்காப்பியத்திற்கு பின் வந்த ஐந்திலக்கண நூல்களில் தொல்காப்பியர் உணர்த்திய விளக்கத்தின் அளவைக்காட்டிலும் மிகுதியாக உணர்த்தவில்லை. சுவை எனவும், மெய்ப்பாடானது திணைகளில் ஒன்றாகவும் குறிப்பிட்டுச் செல்கின்றனர். 'அச்சம்' மெய்ப்பாட்டின் வரிசை முறையும் மாற்றம் பெறுகிறது. பொருள் இலக்கண நூல்களில் மெய்ப்பாடு, அச்சம் என்ற சொல்லாட்சி முறைகள் மட்டுமே விளக்கப்படுகிறது.

அகராதிகள் அச்சம் என்பது பயம். இது மனதில் தோன்றும் உணர்வு என்கிறது. களஞ்சியங்கள், மனிதனுக்கு எதிர்பாராத சூழலில் இன்னல்கள் தோன்றும்போது அவற்றிலிருந்து மீள்வதற்குரிய உடனடித்தீர்வு ஏற்படாத சூழலில் தோன்றும் உணர்ச்சியின் மிகுதி என விளக்கம் தருகின்றது. நிகண்டுகள் அச்சம் என்பது மனதளவில் உருவாகக்கூடிய பய உணர்ச்சியின் பல்வேறு வெளிப்பாட்டு வடிவங்களின் உடல் பிரதிபலிப்பு என விளக்கம் தருகின்றது. இலக்கியத் திறனாய்வாளர்கள் மெய்யின்கண் தோன்றும் வெளிப்பாட்டு உணர்ச்சி என்று குறிப்பிடுகின்றனர்.

களவு வாழ்க்கையில் தலைவன், தலைவியிடமும் தோழியிடமும் நெஞ்சிடமும் கூற்று நிகழ்த்துகின்றான். இவ்வுணர்வில் அமைந்துள்ள களவுத்துறையிலமைகின்ற பாடல்களில் ‘அச்சம்’ மெய்ப்பாட்டுணர்வு தோன்றுகிறது. தலைவியிடம் எந்நாளும் உன்னைப் பிரியேன். அவ்வாறு பிரிந்து வாழும் சூழல் ஏற்படுமாயின் உயிர் வாழமாட்டேன் என கூற்று நிகழ்த்திப் பின் சந்திக்கின்ற காலம் தாழ்த்துகின்ற சூழலிலான பாடல்களில் தலைவிக்கு மனதிற்குள் பயமாகிய அச்சம் தோன்றுகிறது.

தலைவன் தலைவியின் அன்பிலிருந்து விடுபட்டு பிரிய நேரிடும் உணர்வு அவனுக்கு அச்சம் (மனதிற்குள்ளான பயம்) தோன்றுகிறது. தோழியிடம், தலைவி மீது வைத்துள்ள எனது அன்பு நிலை அவளால் உணரப்படாது போனாலும், அவளது பெற்றோரால் சம்மதிக்காத சூழலிலும், அவள் கிடைக்காத சூழல் அவனுக்குள் அச்சத்தை உணர்த்துகிறது.

தலைவனுடன், தானும் வருவேன் என்று தலைவி உரைக்கின்ற ஒழுக்கத்தில், காட்டிடையே விலங்குகளாலும், கள்வர்களாலும் ஏற்படும் துன்பத்தை நினைத்துக் கூறுகின்றபோது அவனுக்கு அச்ச உணர்வு வெளிப்படுகிறது. தலைவன், வினைமுடித்து மீண்டும் வந்து வரைவு செய்யும் காலம் நீட்டிக்கின்ற போது, சமூகத்தால் உண்டாகும் அம்பல், அலர் போன்ற காரணிகளால் பழி தூற்றக்கூடும் என தலைவி நினைக்குந்தோறும் அச்சம் தோன்றுகிறது.

தலைவி, தலைவனிடமும் தோழியிடமும் மிகுதியாகக் கூற்று நிகழ்த்துகின்றாள். தலைவி, தோழியிடம் தான் தலைவன் மீது வைத்துள்ள காதல் அளப்பரியது. அவன் கிடைக்காது போனால் பலரால் பழிதூற்றும் சூழல் உருவாகி துன்புறுவேன் என்று தோழியிடம் கூறுகின்றபோது அச்சம் மெய்ப்பாடு தோன்றுகிறது. தலைவன் களவு நீட்டிக்கின்றவிடத்து, தன்னை மனஞ்செய்யாது போவானோ என்பதைத் தோழியிடம் உரைக்கின்ற நிலையில் அச்ச உணர்வு உருவாகிறது. தலைவன் இரவில் தன்னைச் சந்தித்துக் களவு ஒழுக்கம் புரிய வருகின்றபோது காட்டில் வாழும் விலங்குகளினால் உண்டாகக்கூடும் துன்ப நிலையை தோழியிடம் குறிப்பிடும்போது அச்சம் வெளிப்படுகின்றது. சிறைப்புறத்தானாக தலைவன் நிற்கின்றபோது, இரவில் தொடர்ந்து சந்திக்க வரும் தலைவன், தன்னை மணம் செய்துகொள்ளாது காலம் நீட்டிக்கும் சூழலால் ஊரார் அலர்தூற்றக் கூடும் என்பதைத் தோழியிடம் கூறுகின்றபோது தலைவிக்கு அச்சம் உண்டாகின்றவற்றைப் பாடல்கள் உணர்த்துகின்றன.

தலைவியின் உடல் வேறுபாட்டை உணர்ந்த தாய் வெறியாட்டு எடுக்க முற்படுவதை நினைக்குந்தோறும் தலைவிக்கு அச்சம் உண்டாகிறது. தலைவன் களவுக்காலத்தில் தலைவியின் முன்னர் தெய்வத்தின் மீது ஆணையிட்டு விரைவில் வரைவு செய்வேன் என உறுதியிட்டு வரைவு நீட்டிக்கும்போது அவனுக்கு தெய்வத்தால் துன்பம் வரும் என நினைக்கும் தலைவிக்கு அச்சம் உண்டாகிறது.

பொருள்வயிற் பிரிவினால் தலைவனின் பிரிவை நினைக்கும் தலைவிக்குப் பிரிவுத்துயர் வழி அச்சம் தோன்றுகிறது. பிரிவுத் துன்பத்தால் தலைவிக்குப் பசலைநோய் உருவாகி உடல்மெலிந்து போகும் என்ற நிலையை தலைவனுக்கு எடுத்துரைக்கும் தலைவிக்கு அச்சம் தோன்றுகிறது.

பருவகாலம் வந்தவுடன் மீண்டும் வருவேன் என்று கூறிச் சென்ற தலைவன் இன்னும் வரவில்லையே என்பதைத் தோழிக்குச் சுட்டிக்காட்டுகின்றபோது தலைவிக்கு அச்சம் உண்டாகியது.

தலைவன் வரைவு நீட்டிக்கின்ற நிலையினை உணர்ந்த தோழி, ஊரார் அலர் தூற்றக் கூடும் என்பதால் தலைவிக்கு ஏதேனும் துன்பம் ஏற்பட்டு விடக்கூடாது என்னும் நோக்கில் தலைவனிடம் கூறுகின்ற சூழலில் அச்சம் உண்டாகிறது. தலைவியின் இல்லத்தார் தலைவனுக்கு வரவு செய்ய மறுக்கும்போது தலைவன் மடலேறுவேன் என்கிறான். அதனை நினைக்கும் தோழிக்கு தலைவியின் நிலை என்னாகுமோ என்ற போது அச்சம் உண்டாகிறது. தலைவன், தலைவியின் வாழ்க்கைக்கு உரியவன் என்பதால் தலைவனுக்கு ஏதேனும் துன்பம் வரக்கூடாது என்கிற சூழலில் தோழி அச்சமுறுகிறாள். அதேபோல் சமூகத்தாரால் பழிச்சொல் பேசக்கூடினால் தலைவிக்குத் துன்பம் வரும் என்பதை நினைக்குந்தோறும் அச்சம் தோன்றுகிறது.

சங்க இலக்கியத்தில் அச்சம் நிகழ்த்தவில்லை என்பதைத் தெளிவாக உணர முடிகின்றது. இலக்கண ஆசிரியர்கள் மெய்ப்பாட்டியலில் வலியுறுத்துவதாக தலைவன் கூற்று இருப்பதாகக் கருதலாம்.

மெய்ப்பாட்டியலில் ஐந்தாவதாக அச்ச உணர்வு குறிப்பிடப்பட்டுள்ளது. அகப்பாடல்களில் அகமாந்தர்களின் இயல்பு நிலையில் ஒழுக்கம் சார்ந்தும் பொதுவெளியில் பண்பாடு சார்ந்த மையமாகவே இலக்கியங்கள் அச்ச உணர்வை முன்னிலைப்படுத்துகின்றன என்பதைத் தெளிவாக உணர முடிகின்றது.

தலைவியின் தாய், தலைவியை இற்செறிப்பு செய்கின்றபோதும், வெறியாட்டு நிகழ்த்தும்போதும் தலைவியை நினைத்து அச்சமுறுகிறாள். நற்றாய், தலைவி உடன்போக்கு சென்ற காட்டின் தன்மையை நினைத்துக் கூறும் கூற்று அச்ச உணர்வைத் தருகிறது. கற்பு நிலையில் பாணன், உழத்தி, போன்றோர் தலைவியின் பிரிவுத்துயர் கூறும் ஐழலில் அச்சம் வெளிப்படுவதை உணரமுடிகிறது.

தலைவன், தலைவி, தோழி, செவிலித்தாய், நற்றாய், பாணன், உழத்தியர், காமக்கிழத்தி போன்றோர் கூற்றுக்களில் அமைகின்ற அகப்பாடல்களில் தொல்காப்பிய நிலைக்களன் வழியும், பிற உணர்வுகளின் வழியும் அச்ச உணர்வு பாடலுக்குள் அமைந்து இலக்கியச் சுவையாகிறது.

இவ்வியலில் அமைகின்ற இயல் தலைப்புக்களில் விரிவான முனைவர் பட்ட ஆய்வு மேற்கொண்டால் வருங்காலங்களில் அச்சம் மெய்ப்பாடு குறித்த புதிய ஆய்வுகள் மிகுதியாக வெளிவந்து இலக்கிய உலகிற்கு துணை நிற்கும்.

# துணைநூற்பட்டியல்

## முதன்மை ஆதாரங்கள்


1. ஔவை துரைசாமிபிள்ளை, ஐங்குறுநூறு மூலமும் உரையும், அண்ணாமலை பல்கலைக்கழகம், சிதம்பரம், 1978.

2. சோமசுந்தரனார், பொ.வே., குறுந்தொகை மூலமும் உரையும், சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம், சென்னை–01, 1957.

3. பின்னத்தூர் நாராயணசாமி அய்யர், நற்றிணை மூலமும் உரையும், திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், திருநெல்வேலி, 1/140 பிரகாசம் சாலை, சென்னை–01.

4. வேங்கடசாமி நாட்டார்,நா.மு., வேங்கடாசலம்பிள்ளை, அகநானூறு மணிமிடைப் பவளம், திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், திருநெல்வேலி, 1/140 பிரகாசம் சாலை, சென்னை–01.

5. விசுவநாதன், அ., கலித்தொகை மூலமும் உரையும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பி. லிட்., 41பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், சென்னை – 600 098.

6. சாமிநாத ஐயர், உ.வே.சா., குறுந்தொகை மூலமும் உரையும், அருண்டேல் கடற்கரை சாலை, சென்னை, 2000.

7. வேங்கடசாமி நாட்டார்,நா.மு., அகநானூறு நித்திலக்கோவை,
வேங்கடாசலம்பிள்ளை, திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், திருநெல்வேலி, 1/140 பிரகாசம் சாலை, சென்னை–01.

8. வேங்கடசாமி நாட்டார்,நா.மு., அகநானூறு களிற்றியானை நிரை,
வேங்கடாசலம்பிள்ளை, திருநெல்வேலி சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், திருநெல்வேலி, 1/140 பிரகாசம் சாலை, சென்னை–01.

9. தட்சிணாமூர்த்திர், அ., ஐங்குறுநூறு மூலமும் உரையும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பி. லிட்., 41பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், சென்னை – 600 098.

10. நாகராஜன், வி., குறுந்தொகை மூலமும் உரையும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பி. லிட்., 41பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், சென்னை – 600 098.

11. பாலசுப்பிரமணியன், கு.வெ., நற்றிணை மூலமும் உரையும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பி. லிட்., 41பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், சென்னை – 600 098.

12. செயபால், இரா., அகநானூறு மூலமும் உரையும், நியூ செஞ்சுரி புக் ஹவுஸ் பி. லிட்., 41பி, சிட்கோ இண்டஸ்டிரியல் எஸ்டேட், சென்னை – 600 098.

13. நச்சினார்க்கினியர் (உ.வி.), சங்கமருவிய எட்டுத்தொகை நூல்களுள் ஆறாவதாகிய கலித்தொகை, திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் லிட்., திருநெல்வேலி.

**துணைமைச் சான்றாதாரங்கள்**

1. அருணாசலம்பிள்ளை, மு. (உ.ஆ.), தொல்காப்பியம் – பொருளதிகாரம் அகத்திணையியல் உரைவளம், பதிப்புத்துறை–1975, மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை–21.

2. இராமானுஜ ஐயங்கார், கி. (ப.ஆ.), மாறன் அகப்பொருளும் திருப்பதிக்கோவையும், செந்தமிழ்ப் பிரசுரம்–55, மதுரை, 1932.

3. இராமானுஜ ஐயங்கார், கி. (ப.ஆ.), திருக்குருகைப் பெருமாள் கவியராயர் இயற்றிய மாறன் அகப்பொருளும் திருப்பதிகைக்கோவையும், செந்தமிழ்ப் பதிப்பகம், மதுரை, 1932.

4. இராமலிங்கத் தம்பிரான், (ப.ஆ.), தண்டியாசிரியர் இயற்றிய தண்டியலங்காரம் சுப்பிரமணிய தேசிகர் உரையுடன், திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் லிட்., சென்னை–01, 1969.

5. இராமகிருட்டிணன், ஆ., அகத்திணை மாந்தர்கள் – ஓர் ஆய்வு,
சரவணா பதிப்பகம்,
மதுரை.
1958

6. இராகவையங்கார், மு., தொல்காப்பிய பொருளதிகார ஆராய்ச்சி,
தமிழ்ச்சங்க முத்திரைச்சாலை பதிப்பு,
மதுரை.
இரண்டாம் பதிப்பு: 1929

7. இலக்குவனார், சி., தொல்காப்பிய ஆராய்ச்சி,
வள்ளுவர் பதிப்பகம்,
புதுக்கோட்டை.

8. இளங்குமரன், இரா. (ப.ஆ.), களவியற்காரிகை,
திருநெல்வேலி தென்னிந்திய சைவ
சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் லிட்.,
சென்னை–01, 1973.

9. குழந்தை, புலவர்., தொல்காப்பியக் காலத் தமிழர்,
பாரி நிலையம்,
பிராட்வே, சென்னை–600 009.

10. கோபாலையர், தி.வே. (ப.ஆ.), இலக்கண விளக்கம் – பொருளதிகாரம்
அகத்திணையியல்,
செல்வி பதிப்பகம்,
காரைக்குடி, 1972.

11. பெருந்தேவனார் (ப.ஆ.), பொன் பற்றி காவலர் புத்தமித்திரனார்
இயற்றிய வீரசோழியம்,
திருநெல்வேலி தென்னிந்திய சைவ
சித்தாந்த நூற்பதிப்புக் கழகம்,
மதுரை, 1970.

12. கோவிந்தராச முதலியார், கார. (ப.ஆ.), அகப்பொருள் விளக்கம் பழைய உரையுடன், திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிட்., சென்னை.

13. சங்குப்புலவர், தி., (அறுவர் சொற்பொழிவு) ஐங்குறுநூற்றுச் சொற்பொழிவுகள், திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம், சென்னை – 1.

14. சண்முகம், செ.வை. (ப.ஆ.), சுவாமிநாதம், அண்ணாமலை பல்கலைக்கழக வெளியீடு, அண்ணாமலை நகர், சிதம்பரம், 1975.

15. சாமிநாதையர், உ.வே. (உ.ஆ.), தமிழ் நெறி விளக்கம், கபீர் அச்சுக்கூடம், சென்னை. இரண்டாம் பதிப்பு: 1947

16. சிவராஜ், டி., சங்க இலக்கிய உளவியல், சிவா பதிப்பகம், சென்னை, 1994.

17. சுப்புரெட்டியார், ந., தொல்காப்பியர் காட்டும் வாழ்க்கை, பழனியப்பா பிரதர்ஸ், சென்னை, 1974.

18. சுப்புரெட்டியார், ந., அகத்திணைக் கொள்கைகள், பாரிநிலையம், சென்னை, 1981.

19. சோமசுந்தரனார் (வி.உ.), கடியலூர் உருத்திரங்கண்ணனார் இயற்றிய பட்டிணப்பாலை, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் லிட்., திருநெல்வேலி, 1967

20. தமிழண்ணல் (வி.உ.), தொல்காப்பியம் மூலமும் கருத்துரையும், மீனாட்சி பதிப்பகம், மயூரா காம்ப்ளக்ஸ், மதுரை–02.

21. தமிழண்ணல், குறிஞ்சிப்பாட்டு இலக்கியத் திறனாய்வு விளக்கம், பாரி நிலையம், 59, பிராட்வே, சென்னை–1.

22. திவாகர முனிவர், திவாகர நிகண்டு, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிட்.,

23. நக்கீரர் (உ.ஆ.), களவியல் என்ற இறையனார் அகப்பொருள், திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் லிட்., சென்னை–01.

24. நச்சினார்க்கினியர் (உ.வி.), குறிஞ்சிப்பாட்டு, திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் லிட்., திருநெல்வேலி.

25. நச்சினார்க்கினியர் (உ.வி.), முல்லைப்பாட்டு, திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் லிட்., திருநெல்வேலி.

26. நாராயணையங்கார், (உ.ஆ.), மாறனலங்காரம் மூலமும் உரையும், செந்தமிழ்ப்பிரசுரம்–37, மதுரை, 1929.

27. நாராயணன் ஐயங்கார், அகராதி நிகண்டு, செந்தமிழ் பிரசுரம், மதுரைத் தமிழ்ச் சங்க முத்திராச்சாலை. 1921

28. பிங்கல முனிவர், பிங்கல நிகண்டு, திருநெல்வேலி. 1968

29. பொன்னுச்சாமி, மு., சங்க இலக்கியத்தில் காதல் மெய்ப்பாடுகள், இந்து பதிப்பகம், கோவை, 1990.

30. மீனாட்சி சுந்தரம்பிள்ளை, தெ.பொ. (கு.உ.), (அறுவர் சொற்பொழிவு) நற்றிணை சொற்பொழிவுகள், திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம், சென்னை – 1.

31. மீனாட்சி சோமசுந்தரம், ச.மெ. (ப.ஆ.), சங்க இலக்கியக் கட்டுரைத்தொகுதி, மெய்யப்பன் பதிப்பகம், 53, புதுத்தெரு, சிதம்பரம் – 608001.

32. மோகன், இரா., இலக்கிய வளம்,
சிதம்பர மாணிக்கவாசகர் பதிப்பகம்,
மதுரை.
1989

33. திரிசிரபுரம் உறையூர் வித்துவான் முத்துவீர உபாத்தியார், முத்துவீரியம்,
திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் லிட்.,
சென்னை–01, 1972.

34. வீரமாமுனிவர், தொன்னூல் விளக்கம்,
திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழகம் லிட்.,
சென்னை, 1984.

35. வெள்ளைவாரணன், க. (உ.ஆ.), தொல்காப்பியம் – பொருளதிகாரம் களவியல் உரைவளம்,
பதிப்புத்துறை–1975,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை–21.

36. ” தொல்காப்பியம் – பொருளதிகாரம் கற்பியல் உரைவளம்,
பதிப்புத்துறை–1975,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை–21.

37. ” தொல்காப்பியம் பொருளியல் உரைவளம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை–21.

38. ” தொல்காப்பியம்–மெய்ப்பாட்டியல் உரைவளம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை–21.

39. ” தொல்காப்பியம்–உவமையியல் உரைவளம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை–21.

40. ” தொல்காப்பியம் – செய்யுளியல் உரைவளம்,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை.

**அகராதி நூல்கள்**

1. கதிரைவேற்பிள்ளை, ஸ்ரீ., தமிழ்ச் சொல்லகராதி (முதல் பாகம்),
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
தரமணி, சென்னை.

2. கழக புலவர் குழுவினர், தமிழ் அகராதி
திருநெல்வேலி தென்னிந்திய சைவ சித்தாத
நூற்பதிப்புக் கழகம் லிட்.,
சென்னை–01.

3. சந்தியா நடராஜன், தமிழ்ப் பெயரகராதி (முதல் பாகம்),
சந்தியா பதிப்பகம்,
அசோக் நகர், சென்னை.

4. ------- பெரும் சொல்லகராதி (தொகுதி 1),
உலகத் தமிழாராய்ச்சி நிறுவனம்,
தரமணி, சென்னை – 600 113.

**களஞ்சிய நூல்கள்**

1. பாலுச்சாமி, நா. (ப.ஆ.), வாழ்வியல் களஞ்சியம் (தொகுதி 1),
தமிழ்ப் பல்கலைக்கழகம்,
தஞ்சாவூர்.

2. பாலுச்சாமி, நா. (ப.ஆ.), கலைக்களஞ்சியம் (தொகுதி 1), தமிழ் வளர்ச்சிக் கழகம், சென்னை.

3. ------- அறிவியல் களஞ்சியம் (தொகுதி 1)

## ஆய்வேடுகள் மற்றும் கட்டுரைகள்

1. இராமசாமி, கொ., சங்க இலக்கியத்தில் தோழி (ஆய்வேடு), அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி – 3. 1989

2. சண்முகம், இராம., சங்க இலக்கியத்தில் வரைவுகடாதலும் அறத்தொடு நிற்றலும் (ஆய்வேடு), மதுரை காமராசர் பல்கலைக்கழகம், மதுரை — 21. 1981

3. அழகர், க., குறுந்தொகை காட்டும் நம்பிக்கைகள் இலக்கியத்திறன் அன்றும் இன்றும் கட்டுரைத்தொகுதி, ஞாலத்தமிழ்ப் பண்பாட்டு ஆய்வு மன்றம், பல்கலை நகர், மதுரை — 21.

4. அழகப்பன், வை.சு., வள்ளுவரும் அகத்துறையும், ஐந்தாவது கருத்தரங்க ஆய்வுக்கோவை

5. ஆரோக்கியநாதன், எஸ்., இலக்கியச்சாரல் (கட்டுரைத்தொகுதி), காவ்யா — பெங்களூர் இரண்டாம் பதிப்பு: 1996

# பிற்சேர்க்கை

## 1. 'அச்சம்' மெய்ப்பாடு அமைந்துள்ள களவுப் பாடல்கள்

| *அக இலக்கியங்கள்* | *தலைவன் கூற்று* | *தலைவி கூற்று* | *தோழி கூற்று* | *பிற மாந்தர் கூற்று* | |
|---|---|---|---|---|---|
| ஐங்குறுநூறு | 2 | 3 | 14 | 3 | |
| குறுந்தொகை | 5 | 13 | 10 | 3 | |
| நற்றிணை | 4 | 6 | 15 | 2 | |
| அகநானூறு | 1 | 4 | 4 | 2 | |
| கலித்தொகை | – | – | 6 | | |
| **மொத்தம்** | **12** | **26** | **49** | **10** | **97** |

## 2. 'அச்சம்' மெய்ப்பாடு அமைந்துள்ள களவுப் பாடல்களை விளக்கும் கருத்துப்படம்



### 3. ‘அச்சம்’ மெய்ப்பாடு அமைந்துள்ள கற்புப் பாடல்கள்

| *அக இலக்கியங்கள்* | *தலைவன் கூற்று* | *தலைவி கூற்று* | *தோழி கூற்று* | *பிற மாந்தர் கூற்று* | |
|---|---|---|---|---|---|
| ஐங்குறுநூறு | 10 | 9 | 19 | 2 | |
| குறுந்தொகை | 2 | 10 | 6 | | |
| நற்றிணை | 6 | 5 | 6 | | |
| அகநானூறு | 12 | 11 | 4 | 2 | |
| கலித்தொகை | | 5 | 5 | 2 | |
| **மொத்தம்** | **30** | **40** | **40** | **6** | **116** |

### 4. ‘அச்சம்’ மெய்ப்பாடு அமைந்துள்ள கற்புப் பாடல்களை விளக்கும் கருத்துப்படம்



## 5. ‘அச்சம்’ மெய்ப்பாடு உணர்த்தும் களவுப்பாடல்கள்

| அக இலக்கியங்கள் | தலைவன் கூற்று | தலைவி கூற்று | தோழி கூற்று | பிற மாந்தர் கூற்று |
|---|---|---|---|---|
| ஐங்குறுநூறு | 197 | – | 187, 239, 296, 282, 245, 266, 168, 364, 366, 106, 210, 205, 168 | 377, 386, 388, 480 |
| குறுந்தொகை | 14, 17, 32, 137, 300 | 87, 36 | 69, 47, 268, 393, 109, 74, 346, 143, 358, 321, 214 | – |
| நற்றிணை | 9, 162, 377, 319 | – | 334, 183, 336, 383, 168, 4, 15, 36, 368, 373, 379, 259, 186, 359, 220 | 179, 66 |
| அகநானூறு | 257 | – | 112, 60, 98, 48 | 29, 55, 7 |
| கலித்தொகை | – | – | 61, 52, 499, 44, 126, 125 | – |

## 6. ‘அச்சம்’ மெய்ப்பாடு உணர்த்தும் கற்புப் பாடல்கள்

| அக இலக்கியங்கள் | தலைவன் கூற்று | தலைவி கூற்று | தோழி கூற்று | பிற மாந்தர் கூற்று |
|---|---|---|---|---|
| ஐங்குறுநூறு | 426, 422, 425, 449, 486, 487, 330, 443, 444, 239 | 64, 65, 311, 314, 320, 337, 22, 31, 41, 131, 12 | 316, 352, 461, 499, 21, 302, 303, 304, 305, 307, 308, 53, 34, 57, 45, 79, 183 | 37 |
| குறுந்தொகை | 99, 237 | 34, 77, 79, 218, 243, 276, 283, 329, 103, 254 | 211, 215, 232, 348, 177, 236 | -- |
| நற்றிணை | 162, 106, 371, 103, 103, 137 | 214, 266, 314 | 89, 274, 48, 325, 33, 29 | -- |
| அகநானூறு | 39, 84, 86, 34, 64, 51, 57, 109, 131, 149, 297, 327 | 196, 36, 97, 103, 113, 375, 155, 227, 147, 146 | 359 | 376, 396 |
| கலித்தொகை | -- | 20, 23, 83, 16, 24, 21 | 11, 16, 31, 251, 4, 5 | 71, 90 |

முனைவர் **சு. செயராம்,** எம்.ஏ., எம்ஃ.பில்., பிஎச்.டி.,
இணைப்பேராசிரியர் & மேனாள் தமிழ்த்துறைத் தலைவர்,
விருதுநகர் இந்து நாடார் செந்திக்குமார நாடார் கல்லூரி,
விருதுநகர்.

## மேற்பார்வையாளர் சான்றிதழ்

**“அக இலக்கியத்தில் (சங்க இலக்கியம்) அச்சம் – ஓர் ஆய்வு”** என்னும் தலைப்பில் மதுரை காமராசர் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்கான இவ்ஆய்வு, என் மேற்பார்வையில் **திரு. அ. அமல்ராஜன்** அவர்கள் தம் சொந்த முயற்சியில் தன்னியலாகச் செய்யப்பட்டது என்றும், இவ்வாய்வின் மீது ஆய்வாளருக்கு வேறு எந்தப் பட்டமும் அளிக்கப்பெறவில்லை என்றும் சான்றளிக்கின்றேன்.

(முனைவர் **சு. செயராம்)**
மேற்பார்வையாளர்

இடம் : விருதுநகர்
நாள் :

**அ. அமல்ராஜன்**
பதிவு எண்: P9053
(பகுதி நேர முனைவர் பட்ட ஆய்வாளர்)
தமிழ்த்துறை உதவிப் பேராசிரியர்,
ஆறுமுகம்பிள்ளை சீதை அம்மாள் கல்லூரி,
திருப்பத்தூர் – 630 211,
சிவகங்கை மாவட்டம்.

# ஆய்வாளர் உறுதிமொழி

**"அக இலக்கியத்தில் (சங்க இலக்கியம்) அச்சம் – ஓர் ஆய்வு"** என்னும் தலைப்பில், மதுரை காமராசர் பல்கலைக்கழக முனைவர் (பிஎச்.டி.) பட்டத்திற்காகச் செய்யப்பட்ட இவ்வாய்வு எனது சொந்த முயற்சியால் உருவானதேயாகும். இவ்வாய்வு, இதற்கு முன் வேறு எந்த ஆராய்ச்சிப் பட்டத்திற்கும் அளிக்கப் பெறவில்லை என்று உறுதியளிக்கின்றேன்.

**(அ. அமல்ராஜன்)**
ஆய்வாளர்

இடம் : மதுரை

நாள் :

**உறுதிக்கையொப்பம்**

**(முனைவர் சு. செயராம்)**

# நன்றியுரை

**"அக இலக்கியத்தில் (சங்க இலக்கியம்) அச்சம் – ஓர் ஆய்வு"** என்னும் தலைப்பில் பகுதி நேர முனைவர் பட்ட ஆய்வு மேற்கொள்ள அனுமதியளித்த மதுரை காமராசர் பல்கலைக்கழகத்திற்கு நன்றி. கல்லூரியில் பணியாற்ற வாய்ப்பு நல்கி, தொடர்ந்து ஆய்வு மேற்கொள்வதற்கும் அனுமதியளித்த **திருப்பத்தூர், ஆறுமுகம்பிள்ளை சீதை அம்மாள் கல்லூரி நிர்வாகத்தினர் மற்றும் கல்லூரி** முதல்வர் ஆகியோருக்கும் எனது நெஞ்சார்ந்த நன்றிகளை உரித்தாக்குகின்றேன்.

ஆய்வில் என்னை முழுமையாக ஈடுபடுத்தி இலக்கியத்தில் முனைவர் பட்டம் பெற முறையாக நெறிப்படுத்தி, வழிநடத்திய என் ஆய்வு நெறியாளர் விருதுநகர் இந்து நாடார் செந்திக்குமாரநாடார் கல்லூரியின் தமிழ்த்துறை மேனாள் இணைப்பேராசிரியர் **முனைவர் சு. செயராம்** அவர்களுக்கு என் மனமார்ந்த நன்றி என்றும் உரித்தாகுக.

ஆய்விற்கு அவ்வப்போது உதவிபுரிந்த, உடன் பணியாற்றிவரும் தமிழ்த்துறைப் பேராசிரியர்கள் அனைவருக்கும் என் நன்றியை உரித்தாக்குகின்றேன். ஆய்வுக்குத் தேவையான தகவல்களையும், ஆலோசனைகளையும் வழங்கி உதவி புரிந்த மதுரை, தியாகராசர் கல்லூரியின் தமிழ்த்துறை இணைப்பேராசிரியர் **முனைவர் சு. காந்திதுரை** அவர்களுக்கு உளமார்ந்த நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

முனைவர் பட்டப்படிப்பு வரை பயிலச்செய்த என்னைப் பெற்றெடுத்த தாய், தந்தையருக்கும், முனைப்போடு ஆய்வுசெய்து முடிப்பதற்கு முழு ஒத்துழைப்புக் கொடுத்த பாசமிகு மனைவி **ரா. கோகிலா**, குழந்தைச் செல்வங்கள் **அ.கோ. ஆகாஷ், அ.கோ. ஆராதனா** ஆகியோர்களுக்கும் நெஞ்சார்ந்த நன்றிகளைக் காணிக்கையாக்குகின்றேன். உயர்கல்வி பெற இலட்சிய உணர்வுகளை அளித்த என் மாமா, அத்தை **திரு. ச. ராஜசேகரன் – ரா. செல்லாயி** ஆகியோருக்கு நன்றி.

ஆய்வேட்டைப் பொறுமையுடன் கணினித் தட்டச்சு செய்து கொடுத்த அன்பு நண்பர் **மு. மாடசாமி** அவர்களுக்கு நெஞ்சார்ந்த நன்றி.

**அ. அமல்ராஜன்**

## சுருக்கக் குறியீட்டு விளக்கம்

| | | |
|---|---|---|
| அகத்.நூ.எ. | – | அகத்திணையியல் நூற்பா எண் |
| கள.நூ.எ. | – | களவியல் நூற்பா எண் |
| தொல்.கள.நூ.எ. | – | தொல்காப்பியக் களவியல் நூற்பா எண் |
| கற்.நூ.எ. | – | கற்பியல் நூற்பா எண் |
| பொருள்.நூ.எ. | – | பொருளியல் நூற்பா எண் |
| மெய்.நூ.எ. | – | மெய்ப்பாட்டியல் நூற்பா எண் |
| உவ.நூ.எ. | – | உவமவியல் நூற்பா எண் |
| செய்யு.நூ.எ. | – | செய்யுளியல் நூற்பா எண் |
| வீரசோழி.நூ.எ. | – | வீரசோழியம் நூற்பா எண் |
| இ.வி.நூ.எ. | – | இலக்கண விளக்கம் நூற்பா எண் |
| தொன்.வி.நூ.எ. | – | தொன்னூல் விளக்கம் நூற்பா எண் |
| முத்து.வீ.நூ.எ. | – | முத்துவீரியம் நூற்பா எண் |
| சுவாமி.நூ.எ. | – | சுவாமிநாதம் நூற்பா எண் |
| இறை.கள.நூ.எ. | – | இறையனார் களவியல் நூற்பா எண் |
| நம்பி.அகம்.நூ.எ. | – | நம்பியகப்பொருள் நூற்பா எண் |
| நம்பி.கள.நூ.எ. | – | நம்பியகப்பொருள் களவியல் நூற்பா எண் |
| நம்பி.வரைவு.நூ.எ. | – | நம்பியகப்பொருள் வரைவியல் நூற்பா எண் |
| நம்பி.ஒழி.நூ.எ. | – | நம்பியகப்பொருள் ஒழியியல் நூற்பா எண் |
| தமிழ்.விள.நூ.எ. | – | தமிழ்நெறி விளக்க நூற்பா எண் |
| கள.காரி.நூ.எ. | – | களவியல் காரிகை நூற்பா எண் |
| மாறன்.நூ.எ. | – | மாறனகப்பொருள் நூற்பா எண் |
| தண்டி.நூ.எ. | – | தண்டியலங்காரம் நூற்பா எண் |
| மாறன்.நூ.எ. | – | மாறனகப்பொருள் நூற்பா எண் |
| மாறன்.அல.நூ.எ. | – | மாறனலங்காரம் நூற்பா எண் |
| குறுந். பா.எ. | – | குறுந்தொகை பாடல் எண் |
| நற். பா.எ. | – | நற்றிணை பாடல் எண் |
| அகநா.பா.எ. | – | அகநானூறு பாடல் எண் |
| ஐங்.பா.எ. | – | ஐங்குறுநூறு பாடல் எண் |

| | | |
|---|---|---|
| கலித்.பா.எ. | – | கலித்தொகை பாடல் எண் |
| அகத். | – | அகத்திணை |
| அகநா. | – | அகநானூறு |
| உ.ஆ. | – | உரை ஆசிரியர் |
| உ.வி. | – | உரை விளக்கம் |
| உ.வே.சா. | – | உ.வே. சாமிநாதய்யர் |
| த.உ. | – | தமிழ் உரை |
| வி.உ. | – | விளக்க உரை |
| தொல். | – | தொல்காப்பியம் |
| நூற்.எ. | – | நூற்பா எண் |
| நூ.ஆ. | – | நூல் ஆசிரியர் |
| ப. | – | பக்கம் |
| ப.ஆ. | – | பதிப்பு ஆசிரியர் |
| பக். | – | பக்கங்கள் |
| பா.எ. | – | பாடல் எண் |
| மெய்ப். | – | மெய்ப்பாடு |
| மேலது. | – | மேலே உள்ள நூல் |

# பொருளடக்கம்


| இயல் | தலைப்பு | பக்கம் |
| --- | --- | --- |
| | முன்னுரை | 1 – 7 |
| 1. | அக இலக்கணங்களில் அச்சம் | 8 – 61 |
| 2. | சங்க அக இலக்கியத்தில் தலைவன் கூற்றில் அச்சம் | 62 – 110 |
| 3. | சங்க அக இலக்கியத்தில் தலைவி கூற்றில் அச்சம் | 111 – 181 |
| 4. | சங்க அக இலக்கியத்தில் தோழி கூற்றில் அச்சம் | 182 – 273 |
| 5. | சங்க அக இலக்கியத்தில் பிற மாந்தர்கள் கூற்றில் அச்சம் | 274 – 295 |
| | முடிவுரை | 296 – 300 |
| | துணைநூற்பட்டியல் | i – x |
| | பிற்சேர்க்கை | xi – xiv |